# முகவுரை

இண்டோ-யூரோபீயன்மொழிகள் எல்லாவற்றிலும் வெவ்வேறு காலங்களில் இயற்றப்பட்ட இலக்கியங்களை நன்கு படித்து, அவற்றிலிருந்து அம்மொழிகளின் வெவ்வேறு நிலைகளை அறிந்து, அவற்றை ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்த்தவரே இந்நூலை இயற்றத் தகுந்தவர் ஆவர். அவ்வாறுள்ள தகுதி எனக்குச் சிறிதும் இல்லை. ஸம்ஸ்கிருத மொழியில் வைதிககாலந் தொடங்கி ப்ராகிருதகாலம் முடிய உள்ள பல இலக்கியங்களைப் படித்துள்ளேன். தற்போது வடஇந்தியாவில் பேசப்படும் மொழிகளில் இயற்றப்பட்ட இலக்கியங்களை நான் படிக்கவில்லை. ஆங்கிலத்தில் சாஸர் காலந் தொடங்கித் தற்காலம் வரையில் உள்ள இலக்கியங்களிற் சிலவற்றைப் படித்துள்ளேன். ஆகலின் இந்நூலிற் கூறப்பட்ட கருத்துக்கள் பெரும்பாலும் பல புலவர்களின் நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டனவே ஆகும். ஸம்ஸ்கிருதத்தில் வைதிகமொழிநிலை, இதிஹாஸமொழிநிலை இவற்றிற் சில கருத்துக்கள் என்னுடையன. அவற்றிற்குச் சான்றுகள் அஷ்டாத்யாயீ, மஹாபாஷ்யம், தந்த்ரவார்த்திகம், தொல்காப்பியம் முதலிய நூல்களிலிருந்து கொடுக்கப்பட்டன. மொழிநூல்வல்லோர் கூறிய கருத்துக்களுக்கு இணங்க, ருக்வேதஸம்ஹிதை, தைத்திரீயஸம்ஹிதை, தைத்திரீய-ஆரண்யகம், கடோபநிஷத், ஈசாவாஸ்யோபநிஷத், ராமாயணம், மஹாபாரதம் முதலிய நூல்களிலிருந்து உதாரணங்களைப் பொறுக்கிக் கூறியுள்ளேன். மொழிநூல் வல்லோர்கொள்கைகளைச் சிலவிடத்து விரித்துள்ளேன். சிலவிடத்து அவற்றிலிருந்து மாறுபட்டுள்ளேன். சுமார்

நாற்பது ஆண்டுகளாக இந்த சாஸ்திரத்தை ஊக்கத்துடன் படித்துப் பல்வகைப்பட்ட மாணவர்களுக்குப் பல ஆண்டுகள் கற்பித்த காரணம்பற்றி இந்நூலை எழுதத் துணிந்தேன். குற்றங்குறைகளை ஆராய்ச்சியாளர் தக்க சான்றுகளைக் கொண்டு திருத்திக்கொள்ள வேண்டுகின்றேன்.

அண்ணாமலையுனிவர்ஸிடியிலிருந்து ஓய்வுபெற்றபின்னர் இந்நூலை எழுதுமாறு என்னைத் தூண்டியவரும், அண்ணாமலை யுனிவர்ஸிடி அதிகாரிகள் இதனைப் பதிப்பிக்குமாறுச் செய்தவருமான வைஸ்சான்ஸலர் ச்ரீமான் M. ரத்னஸ்வாமி அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைச் செலுத்துகின்றேன்.

நாற்பது ஆண்டுகளாக நான் கல்வித்துறையில் ஈடு படுவதற்கு உற்ற துணையாயிருந்த என் வாழ்க்கைத்துணை ச்ரீமதீ **சம்பூர்ணத்திற்கு** இந்நூல் உரித்தாகுக.

**12,** வடக்கு மடவிளாகம்,
திருவையாறு
10—5—1950

P. S. சுப்பிரமணிய சாஸ்திரி

# பொருளடக்கம்

# இங்கு ஆளப்பட்ட நூல்களும் குறியீடுகளும்

## ஆங்கில நூல்கள்


1. Bloomfield L. — Introduction to the study of Language.
2. Breal — Semantics
3. Brugmann — Comparative Grammar of the I. G. Languages.
4. Caldwell — Comparative Grammar of the Dravidian Languages.
5. Graff — Language and Languages.
6. Jespersen Otto — Language, its nature, Development and Origin.
7. MacDonell A.A.— A Vedic Grammar for students.
8. Richard J. A. — Practical Criticism.
9. Shakespeare — Corialanus.
10. Stern G. — Meaning and Change of Meaning.
11. Tucker T. G. — Introduction to the Natural History of Language.
12. Uhlenbeck C.C. — Sanskrit Phonetics.
13. Vendreyes J. — A Linguistic Introduction to History.
14. Webster — New International Dictionary.
15. Whitney — Oriental and Linguistic Studies.
16. Wright — Comparative Grammar of the Greek Language.
17. Zipf — Psycho-Biology of Language.
18. Indian Antiquary Vol. 32.


| | | |
|---|---|---|
| 1. | Anglo-saxon | .. A. saxon<br>Ang. saxon<br>Ang. Sax. |
| 2. | English | .. Eng. |
| 3. | High German | . High. Ger. |
| 4. | Keilhorn Edition | .. Keil. Edn. |
| 5. | Modern | .. Mod. |
| 6. | Old | .. O. |

## ப்ராக்ருத வடமாகாணமொழி இலக்கணங்கள்

1. Pandita Sivananda, Tripāṭhī — Hindi Vyākaraṇa.
2. Appaji Kasinast Kher — A Higher Marathi Grammar.
3. Woolner A. C. — Introduction to Prakrit.

## வடமொழி நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | ருக்வேதஸம்ஹிதை | ... | ऋ. वे. |
| 2. | அதர்வவேதஸம்ஹிதை | ... | अ. वे. |
| | | | अथ. वे. |
| 3. | தைத்திரீயஸம்ஹிதை | ... | तै. सं |
| 4. | வாஜஸநேயிஸம்ஹிதை | ... | वा. सं. |
| | | | वाज. सं. |
| 5. | தைத்திரீய-ஆரண்யகம் | ... | तै. आ. |
| 6. | தைத்திரீய-ப்ராம்மணம் | ... | तै. ब्रा. |
| 7. | தைத்திரீய-உபநிஷத் | | |
| 8. | ருக்வேதப்ராதிசாக்யம் | ... | ऋ. प्रा. |
| 9. | தைத்திரீய-ப்ராதிசாக்யம | ... | तै. प्रा. |
| 10. | அதர்வவேதப்ராதிசாக்யம் | ... | अ. प्रा. |
| 11. | யாஸ்க-நிருக்தம் | | |
| 12. | சாந்தோக்ய-உபநிஷத் | ... | छान्दो. |
| 13. | கடோபநிஷத் | ... | कठोप. |
| 14. | ஈசாவாஸ்யோபநிஷத் | ... | ईशावा. |
| 15. | வால்மீகி ராமாயணம் | ... | रामा. |
| | அயோத்யாகாண்டம் | ... | अ. |
| 16. | வ்யாஸ-மஹாபாரதம் | ... | म. भा. |
| | ஆதிபர்வம் | ... | आदि. |
| | வனபர்வம் | ... | वन. |
| | த்ரோணபர்வம் | ... | द्रो. |
| 17. | பாணினி-அஷ்டாத்யாயீ | ... | पा. अ. |

| | | | |
|---|---|---|---|
| 18. | பாணினிசிக்ஷை | ... | पा॰ शिक्षा॰ |
| 19. | காத்யாயனவார்த்திகம் | | |
| 20. | பதஞ்சலி-மஹாபாஷ்யம் | | |
| 21. | மநுஸ்மிருதி | | |
| 22. | குமாரஸம்பவம் | ... | कुमा॰ |
| 23. | மாளவிகாக்னிமித்ரம் | ... | मालवि॰ |
| 24. | ரகுவம்சம் | ... | रघु॰ |
| 25. | சாகுந்தளம் | ... | शाकु॰ |
| 26. | மிருச்சகடிகை | ... | मृच्छ॰ |
| 27. | வாக்யபதீயம் | | |
| 28. | நீதிசதகம் | | |
| 29. | காதம்பரீ | | |
| 30. | குமாரிலபட்டரின் ச்லோகவார்த்திகம் | | |
| 31. | வேணீஸம்ஹாரம் | | |
| 32. | கையடம் | | |
| 33. | ப்ராகிருதப்ரகாசம் | | |
| 34. | தத்துவபோதினி | | |
| 35. | பாமினீவிலாஸம் | | |

## தமிழ் நூல்கள்

---

| | | | |
|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் | ... | தொல். |
| | எழுத்ததிகாரம் | ... | எழுத். |
| 2. | புறநானூறு | ... | புறநா. |
| 3. | திருக்குறள் | | |

# இண்டோயூரோப்யன்மொழிகளின் பரம்பரைக்குறிப்பு



குறிப்பு — 36, 49, 50, 51, 56—59, 64 இப்பக்கங்களிலுள்ள ḷ, ṇ என்ற மெய்யுயிர்க்குறிகளை ḷ̥, ṇ̥ ஆக மாற்றுக.

34 ஆம் பக்கம் 10 ஆம் வரியின் இறுதியில் ô ஐச் சேர்க்க.

சொல்லமைப்புமூலகமொழிப்பொயர்ப்பு (பக். 15), द्विष्य: (19), மர்றுபாட்டையும் (32), ṇ̥ (36 f.n.), दन्त्य (40), qutuōres (50), स्वासा (56), ōktōu (56), g (72), kh, gh (74), आलानतस्तम्भः (85), பிரதயம் (128), சிலவுடத்தில் (154), தாய்மொழியில் (170), qetuores (197), ஸிச்ப்ரத்யயாங்கஎத்ததாநாம்ப்ரக்ருதி (265), अन्यथ (343) என்பவற்றை, சொல்லமைப்புமூலகமொழிப்பிரிப்பு, द्विष्वः, மாறுபாட்டையும், ṇ̥, दन्त्यं, qetuōres, स्वसा, oktōu, g, kh gh, आलानस्तम्भः, பிரத்யயம், சிலவிடத்தில், தாய்மொழியில், qetuōres, ஸித்ப்ரத்யயாங்கஎத்ததாநாம் பகுதி, अन्यथा, எனத் திருத்துக.

# வடமொழிவரலாறு

## நூன்முகம்

### மொழியிலக்கணம்

உலகத்தில் மக்கள் ஒன்றுகூடி சேர்ந்தே வாழ்கின்றனர். வாழ்க்கையில் ஒருவருடைய மனத்திலுள்ள கருத்தை மற்றொருவருக்குக் கூறவேண்டியது அவசியம். அவர்கள் அப்போது வாயைத்திறந்து பலவாறாக ஒலிகளை ஒலிக்கின்றனர். ஒரு நாட்டில் ஒலிகளை எவ்வாறாக ஒலிக்கின்றனரோ, அவ்வாறே மற்றொரு நாட்டில் ஒலிப்பது இல்லை. ஒரு நாட்டிலுங்கூட பலவகைப்பட்ட ஜாதிகள் இருப்பின், அவர் வெவ்வேறு வகையாகவே ஒலிக்கின்றனர். இவ்வாறு தம்முடைய கருத்தை வெளியிட மக்கள் வழங்கும் ஒலிக்கூட்டத்தை மொழி அல்லது பாஷை[1] எனப் பெயரிட்டுக் கூறுவர். இதனால் சிறியோரும் பெரியோரும், குருடும் நொண்டியும், இருட்டிலிருப்போரும் வெளிச்சத்திலுள்ளோரும், அண்மையிலிருப்போரும் சேய்மையிலுள்ளோரும் தத்தங்கருத்துக்களைப் பிறர்க்கு வெளியிடுவதை நாம் பார்க்கிறோம்.[2]

மொழிகளின் பயன், கூறுவோன் தன் கருத்தைக் கேட்போனுக்குக் கூறுதலும், அவன் அதனை அறிதலும், கூறுவோனின் மனநிகழ்ச்சியை அதனால் ஊஹித்தலும், அதன்படி தான் நடத்தலும் ஆகும்.[3]

1. மொழி = भाषा = Language.
2. Zipf. p. 16.
3. G. Stern — Meaning and Change of Meaning, p. 172.

மொழிகளே நாம் நமது முன்னோருடனும், உடனிருப்போருடனும் கருத்துக்களைக் கலந்துகொள்ளவும் முன்னோரின் ஆத்யாத்மிகக்கொள்கைகளை அறிந்துகொள்ளவும் சாதனம் ஆகின்றன.[1]

## மொழியுற்பத்தி[2]

இம்மொழிகள் எவ்வாறு உண்டாயின என மொழிநூல்-வல்லோர்[3] பலவாறாக ஆராய்ந்தும் இன்னும் ஒரு முடிவிற்கு வரவில்லை. உலகம் எப்போது எவ்வாறு யாரால் படைக்கப் பட்டது என்பதைப்பற்றி எப்போது முடிவு ஏற்படுமோ, அப்போதுதான் மொழிகள் எவ்வாறு உண்டாயின என்பதைப் பற்றியும் முடிவு வரும். ஆயினும் அதனைப்பற்றி மொழிநூல் வல்லோர் பலர் கூறிய கூற்றுக்களை அறிந்துகொள்ளுதல் நன்கும்.

உலகம் உண்டானவுடன் மக்கள் கூடி இச்சொல் இப் பொருளை உணர்த்தும் எனத் தீர்மானித்தனர் என்பர் ரூஸோ.[4] மொழியை ஆக்கவேண்டும் என்ற எண்ணம் அவர்க்கு எவ்வாறு உதித்தது என்பதற்கும், அவர் கூடிய கூட்டத்தில் எம் மொழியை வழங்கினர் என்பதற்கும் விடை அளித்தல் இயலாதது ஆகும்.

வாழ்க்கையில் ஆணும் பெண்ணும் சேர்ந்திருத்தலைக் காண்கிறோம். படைப்புக்காலத்தில் அவ்விருவரும் பேசத் தெரியாதிருப்பினும் அவருடைய வாழ்க்கையில் அவர் கோப

1. J. A. Richard's Practical Criticism, p. 321.
2. *Cf.* Jespersen — Language, its Nature, Development and Origin, pp. 27, 61, 412–442.
   Whitney — Oriental and Linguistic Studies, p. 288.
   J. Vendryes — Language — A Linguistic Introduction to History, p. 38.
3. Philologists.
4. Rousseau.

தாபங்களால் தாம் அறியாது சில ஒலிகளை ஒலித்திருக்க வேண்டும். அவ்வொலிகளிலிருந்து மொழி உண்டாயிற்று என்பர் காண்டிலக்.[1] தாம் அறியாது தம்முடைய வாயிலிருந்து வந்த ஒலிகள் முதன்முதலில் தம் கருத்தைப் பிறர்க்கு நன்றாய் வெளிப்படுத்தாமல் இருக்கும்; காலக்கிரமத்தில் வெளிப் படுத்தும்; ஆகலின் இடையில் நீண்டகாலம் தடுமாற்றத் துடன் இருந்திருக்கும் என்பர் ப்ரீல்.[2]

மக்களைப் படைத்த கடவுளே மொழிகளை இயற்றியிருக்க வேண்டும் என்பர் ஸ்விஸ்மில்க்.[3]

கடவுளே மொழிகளை இயற்றினர் எனக் கொள்ளின் மொழிகளில் குறைவுபாடே இல்லாமல் இருக்கவேண்டும்; ஒவ்வொரு மொழியிலுமோ பல குறைகள் இருக்கின்றன; ஆகலின் ஸ்விஸ்மில்க் கூறியது பொருத்தமின்று; மக்கள் புத்திபூர்வமாய் மொழிகளை இயற்றினர் எனக் கொள்வதும் பொருத்தமின்று; அவர் அறியாது அவரிடமிருந்து மொழிகள் தோன்றின எனவே கொள்ளல் வேண்டும் என்பர் ஹர்டர்.[4]

க்ரிம்[5] கி. பி. 1851-இல் மொழியின் உற்பத்தியைப் பற்றி எழுதிய கட்டுரையில், ஹர்டரின் கொள்கையோடு ஒன்றுபட்டு தமக்குத் தோன்றிய சில புதுக்கருத்துக்களை வெளியிட்டனர். மொழிகள் உண்டான காலத்தில் அ, இ, உ என்ற மூன்று உயிர்களும் சில மெய்களுமே இருந்தன; ஒவ்வொரு சொல்லும் ஓரெழுத்தொருமொழி ஆகவே இருந்தது; குணம், நிறம், தன்மை இவற்றைக் குறிக்குஞ்

1. Condillac.
2. Breal — (Breal's Semantics, pp. 6–7.)
3. Süssmilch.
4. Herder. இவர் இவ்வாறு கூறியது கி. பி. 1772-இல்.
5. Grimm.

சொற்கள் இல்லை; பண்டைய மொழிகளில் காணப்படும் ஆண்பால்விகுதி பெண்பால்விகுதி இவை பெண்டிர்களாலே வந்திருக்கவேண்டும்; காலம், இடம், எண் முதலியவற்றைக் குறிக்க, தாதுக்களோடு சேர்க்கப்பட்ட ஸர்வநாமங்கள் காலக்கிரமத்தில் வினைவிகுதிகளாய்க் கொள்ளப்பட்டன. ஒவ்வொரு மொழியும் ஆரம்பத்தில் தனிமொழிநிலையிலும், பின்னர் ஒட்டறிமொழிநிலையிலும், இறுதியில் ஒட்டறியாமொழிநிலையிலும் இருந்திருக்கவேண்டும்[1] என்பன ஆகும்.

மொழிகள் கடவுளால் இயற்றப்படாது மக்களாலே இயற்றப்பட்டது என்ற தீர்மானம் வந்தவுடன், அம்மக்கள் எவ்வாறு அவற்றை இயற்றினர் எனப் பலர் ஆராயப் புகுந்தனர். மிருகங்கள், பறவைகள் இவை செய்யும் ஒலியைக் கேட்டு, அவ்வொலிகளை அவற்றைக் குறிக்க வழங்கினர். அவற்றிலிருந்து மொழிகள் உண்டாயின என்றனர் சிலர். உதாரணமாக நாயின் ஒலியைக் கேட்டு நாயை பௌ-வௌ[2] எனவும், பின்னர் மிருகங்களை பௌ-வௌ எனவும், பறவைகளை க்ளக்-க்ளக்[3] எனவும் வழங்கினர் என்பர். இக்கொள்கைக்கு பௌ-வௌ கொள்கை[4] என்றும் விலங்கொலிமொழிக் கொள்கை[5] என்றும் பெயர். விலங்கு முதலியவற்றின்

1. தனிமொழிநிலை = धात्वात्मिका स्थितिः = Isolating Stage.
   ஒட்டறிமொழிநிலை = ज्ञातप्रकृतिप्रत्ययसन्धिस्थितिः = Agglutinative Stage.
   ஒட்டறியாமொழிநிலை – अज्ञातप्रकृतिप्रत्ययसन्धिस्थितिः = Inflexional Stage.
2. பௌ-வௌ = Bow-Vow (animal, small animal Zipf, p. 269).
3. க்ளக்-க்ளக் = Kluck-Kluck (Bird.)
4. Bow-Vow theory.
5. Onomotopæic theory = मृगादिध्वन्यनुकृतिमूलको मार्गः

ஒலிகளிலிருந்து அவற்றினும் மேன்மையுற்ற மக்கள் மொழிகளை இயற்றினர் எனக் கூறுதல் பொருந்தாது என்பர் ரேனன்.[1] ஆயினும் சிலசொற்கள் இம்முறையில் வந்திருத்தல் கூடும் எனக் கொள்ளுதல் தவறாகாது.

ஆங்கும் இயற்கையாய் விலங்கு முதலியன ஒலித்த ஒலிகளை அவ்விலங்குகளையே குறிக்க மக்கள்வழங்கினர் என்பது கவனித்தற்கு உரியது.

பெருமகிழ்ச்சியாலும், பெருந்துன்பத்தாலும், கோப தாபத்தாலும் மக்கள் அறியாது அவருடைய வாயிலிருந்து ஒலிகள் வருகின்றன. இவ்வொலிகளே மொழிகள் ஆயின என்பர் சிலர். இதற்கு பூ–பூ கோள்கை[2] எனப் பெயர். மக்கள் பிறருடைய கூற்றில் வெறுப்பைக் காட்ட பூ-பூ என ஒலித்தலை இப்போதுங் காணலாம். இவ்வாறுஞ் சில சொற்கள் உண்டாயிருக்கலாமேயன்றி மொழிகள் முழுவதும் இவ்வாறே உண்டாயின எனக் கூறுதல் தவறாகும்.

இரண்டு மணிகள் இருக்குமிடத்து ஒன்றன்பின்னர் மற்றொன்றை அடித்தால், முன்மணியின் ஒலியின் பின்னர் பின்மணியின் ஒலி இடைவிடாது உண்டாகுமாறு மக்களுக்கு ஒன்றைப்பற்றி ஓர் உணர்ச்சி உண்டாகுமானால் இயற்கையாய் அவ்வுணர்ச்சியைக் குறிக்க அவர்களுடைய வாயிலிருந்து ஒலிகள் உண்டாகும். இவ்வாறே மொழிகள் உண்டாயின என்பர் மோக்ஷமூலர்.[3] இக்கொள்கைக்கு டிங்-டாங் கோள்கை[4] எனப் பெயர். இக்கொள்கையைப் பின்னர் ஒருவரும் ஆதரிக்கவில்லை.

1. Renan.
2. Pooh–Pooh theory = धिग्धिगादिमूलको मार्गः
3. Max-müller.
4. Ding–Dong theory = नियतानुसृतिमूलको मार्गः

மக்கள் ஒன்றுகூடி கடிய வேலையைச் செய்யும்போது வேலையின் கடுமையை உணராததற்காகச் சில ஒலிகளை ஒலிப்பது வழக்கம். இவற்றால் மொழிகள் உண்டாயின என்பர் நோயர்;[1] இக்கொள்கைக்கு யோ-ஹே-ஹோ கோள்கை[2] எனப் பெயர்.

முற்கூறப்பட்ட கொள்கைகளை அனுசரித்து மொழிகளில் சில சொற்கள் உண்டாயிருக்கலாம். அவையும் அப்பிரதானமான சொற்களே ஆகும். மொழிகளுக்கு அவசியமான சொற்கள் எவ்வாறு உண்டாயிருக்கும் என்பதை அவற்றைக்கொண்டு கூற இயலவில்லை. ரேனனுடைய கொள்கையைத்தவிர்த்து மற்றோருடைய கொள்கைகளில் மக்கள் ஒன்றுசேர்ந்த விடத்து ஒருவரது கருத்தை மற்றொருவருக்குக் கூறும்போது உண்டான ஒலிகளைப்பற்றி யாதும் கூறப்படவில்லை. அன்றியும் தொடக்கத்தில் மக்கள் ஊமையாக இருந்தனர் எனவும் கொள்ளவேண்டியிருக்கிறது. அதுவும் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆகலின் இவற்றைக்கொண்டு மொழிகளின் உற்பத்தியைக் கூறுதல் இயலாது எனவே கூறவேண்டும்.

மிகச்சிறுகுழந்தைமொழிகளிலிருந்தும், காட்டுமனிதர் மொழியிலிருந்தும், மொழிவரலாற்றினின்றும் மொழியின் உற்பத்தியை ஒருவாறு அறிதல் கூடும் என்பர் யெஸ்பர்ஸன்.[3]

குழந்தைகள் பேசும் முறையிலிருந்து மொழியின் உற்பத்தியை அறியலாம் எனச் சிலர் கூறினர். தற்போதுள்ள குழந்தைகள் தாய்தந்தையரின் பேச்சைக் கவனித்துத் தாம் பேசுகின்றமையால், அக்கூற்று பொருந்தாது. பெற்றோர் பேசுவதைக் கவனியாதிருக்கும் ஒரு வயதிற்குக் குறைந்த வயதுள்ள குழந்தைகள் செய்யும் ஒலிகளிலிருந்து மக்கள்

1. Noire.
2. Yo-he-ho theory = श्रमकर्षणध्वनिमूलको मार्गः
3. Jespersen.

தொடக்கத்தில் எவ்வாறு பேசினர் என்பதைச் சிறிது அறியலாம். அக்குழந்தைகள் எவ்வாறு புதிதுபுதிதாகச் சொற்களை உண்டாக்குகின்றன என்பதும் அர்த்தமில்லாத ஒலிகளுக்குப் பொருளைத் தருகின்றன என்பதும் நோக்கத்தக்கன.

நாகரிகஜனங்கள் வழங்கும் மொழிகளைக்காட்டிலும் காட்டுமனிதர்கள் வழங்கும் மொழி செப்பனிடாமல் இருக்கும் என்பதில் தடை இல்லை. ஆதலால் நாகரிகமொழிகளின் முற்பட்ட நிலையை அறிய அம்மொழிகளின் அறிவு பயன்படும். ஆயினும், அவை பல ஆண்டுகளாக அவராலே வழங்கப்பட்டமையான், அவற்றினறிவால் தொடக்கத்தில் நாகரிகபாஷைகள் எவ்வாறு இருந்தன என்பதை அறிதலும் எளிதன்று.

மொழிவரலாறே மொழியின் முன்னிலையை அறியச் சிறந்த ஸாதனம் ஆகும். ஆகலின் மொழியிற் காணப்படும் இலக்கணவிலக்கியங்களாலும், சாஸனங்களாலும், நாணயம் முதலியவற்றாலும், அம்மொழியைப்பற்றிய பிறநாட்டுச்செய்திகளாலும் ஒவ்வொரு மொழியின் வரலாற்றை மக்கள் இயற்ற முன்வர வேண்டும். மொழிகளின் அந்நியோந்நியஸம்பந்தத்தை அறிய மொழிவரலாற்றினறிவு அவசியம் வேண்டும். இருமொழிகளின் தற்போதுள்ள நிலையைக்கொண்டு அவ்விரண்டும் ஓரினத்தனவா இல்லையா என ஆராய்தல் தவறுகும்; ஏனெனில் பேச்சு மொழிகள் எல்லாம் காலக்கிரமத்தில் உருவம், பொருள், அமைப்பு முதலியவற்றில் மாறுபடுகின்றன.

பல மொழிகளின் வரலாற்றிலிருந்து சில உண்மைகள் அறியப்படுகின்றன என்பர் யெஸ்பர்ஸன். அவையாவன :

(1) தொடக்கத்தில் கஷ்டமான பல ஒலிகள் உச்சரிக்கப்பட, பின்னர் அவை சுலபமாக உச்சரிக்கப்பட்டன. ஆதலால் ஒலிகள் வரவர எண்ணிக்கையில் குறைவு பட்டன.[1]

1. வேதங்களிலுள்ள मीळ्हुषे முதலியவற்றில் ஒலிக்கப்பட்ட ह्ळ्-உம், ईळे முதலியவற்றிலிள்ள ळ्-உம் पलिक्क्नीः முதலியவற்றிலுள்ள யமங்களும் பிற்காலத்தில் இல்லை.

(2) முன்னர் கஷ்டமான ஒலிகளால் ஆக்கப்பட்ட நீண்ட தொடர்களே இசையுடன் வழங்கப்பட்டன; பின்னர் சிறிய தொடர்கள் இசையின்றி வழங்கப்படுகின்றன.

(3) முன்னர் ஒலிக்கப்படும் முறையாலே சொற்கள் கூறுவோரின் மனத்திலுள்ள மகிழ்ச்சி, துன்பம், கோபம் முதலியவற்றை வெளிப்படையாய்க் காட்டின; பின்னர் அவ்வாறு இல்லை.

(4) முன்னர்ச் சொற்களின் ரூபங்கள் பலவகைப்பட்டன; பின்னர் அவை எண்ணிக்கையிற் குறைந்தன.[1]

1. गन्तुम् என்ற பொருளில் வேதங்களில் गन्तवे, गन्तोः, गमध्यै முதலிய ரூபங்கள் வழங்கப்பட்டு பின்னர் வழக்கொழிந்தன.

Cf. तुमर्थे सेसेनसे असेन्क्सेकसेनध्यै अध्यैन् कध्यैकध्यैन्शध्यैशध्यैन्-तवैतवेङ्तवेनः (पा. अ. 3, 4, 9)

வேதத்தில் வழங்கப்பட்ட देवासः देवाः, देवा देवौ, देवेभिः देवैः என்பனவற்றுள் देवासः, देवा, देवेभिः என்பன பிற்காலத்தில் வழக்கொழிந்தன.

வினைகளிலும் வேதத்தில் வழங்கப்பட்ட लेट् ரூபங்கள் பிற்காலத்தில் இல்லை.

பின்னர் ஒரே விகரணத்தில் வழங்கப்பட்ட தாதுக்கள் வேதத்தில் பல விகரணங்களில் வழங்கப்பட்டன.

பரஸ்மைபதவிகுதிகளையும் ஆத்மனேபதவிகுதிகளையும் சில தாதுக்கள் வேதத்திற் கொண்டிருக்கப் பின்னர் ஒரு பதவிகுதிகளையே கொண்டன.

कथा, प्रत्नथा, पूर्वथा, विश्वथा, इमथा, पश्चातात्, उदक्तात् போன்ற வைதிகநிபாதங்கள் பிற்காலத்து இல்லை.

पाहि என்பது குடி, காப்பாற்று என்ற இரண்டு பொருளிலும் வந்தது; பின்னர் காப்பாற்று என்ற பொருளையே கொண்டது.

இதுபோன்ற மாறுபாடுகள் பல உள.

(5) முன்னர்ச் சொற்களை ஆக்கும் முறை பல்லாறாகவும், அவற்றை வாக்கியங்களில் தொடுக்கும் முறை பல்லாறாகவும் இருந்தன ; பின்னர் அவை சீர்திருத்தம் பெற்றன.[1]

(6) ஒவ்வொரு மொழியும் தனிமொழிநிலை, ஒட்டறிமொழிநிலை, ஒட்டறியாமொழிநிலை என மூன்று நிலைகளை முறையே கொண்டன என்பதும், தனிமொழிநிலையிலிருந்து ஒட்டறி

1. த்வந்த்வஸமாஸத்தில் வேதத்தில் பலவகை ரூபங்கள் இருப்பதையும், பின்னர் அவை ஒரே முறையாக ஆக்கப்படுவதையும் கவனிக்க. ஆங்கே இருபகுதிகளுக்கு நடுவில் வேறு சொற்கள் வழங்கப்படுதலையுங் காண்க.

*Cf.* प्रमित्रयोर्वरुणयोः स्तोमो न एतु शूष्यः (ऋ. वे. 7, 66, 1)

मित्रावरुणयोर्भाग स्थ (अ. वे. 10, 5, 12)

सूर्याचन्द्रमसौ धाता (ऋ. वे. 10, 190, 3)

इन्द्रवायू वरुणो मित्रो अर्यमा (ऋ. वे. 10, 65, 9)

द्यावा चिदस्मै पृथिवी नमेते (ऋ. वे. 2, 12, 13)

वृत्राय हन्तवे (ऋ. वे. 8, 12, 12) என்றவிடத்தில் இரண்டாம்வேற்றுமைக்கு நான்காம்வேற்றுமை வழங்கியிருத்தலைக் காண்க.

**रक्षणे** धर्मराजस्य ध्रुवो हि विजयो मम (म. भा. द्रो. 111, 16) என்றவிடத்தில் ஐந்தாம்வேற்றுமைக்கு ஏழாம்வேற்றுமை வழங்கப்பட்டது.

विशेविशे वस्तोर्वस्तोर्हूमानम् (ऋ. वे. 10, 40, 1)

हतो राजा हतो राजेत्यूचिरे च भयार्दिताः (म. भा. द्रो. 102, 34) முதலிய இடங்களில் சொற்களும் வாக்கியமும் இரட்டிக்கப்பட்டதைக் காண்க.

वन्द्य पाण्डवम् (म. भा. द्रो. 83, 7) ; अभिवन्द्याग्रतः स्थितम् (*ibid* 84, 2) என்றவிடத்திலுள்ள वन्द्य, अभिवन्द्य என்பன இக்காலத்து இறந்தன.

மொழிநிலை வந்தது என்பதும், ஒட்டறிமொழிநிலையிலிருந்து ஒட்டறியாமொழிநிலை வந்தது என்பதும் பொருந்தா. ஏனெனில் இம்முறையில் அகப்படாத பல மொழிகள் உலகத்தில் காணப் படுகின்றன; ஒரே காலத்தில் ஒரு மொழியிலே மூன்று நிலை களும் காணப்படுகின்றன.

(7) முன்னர்க் குணிவாசகமான சொற்களும், வ்யக்தி வாசகமான சொற்களுமே உள்ளன; பின்னரே குணவாசக மான சொற்களும் ஜாதிவாசகமான சொற்களும் வந்தன.[1]

(8) இந்திரியங்களுக்கு விஷயமான பொருள்களைக் குறிக்கும் சொற்களே முன்னர் இருந்தன.

(9) மக்கள் அறியாது விளையாட்டாகச் சொற்கள் அவர்க ளுடைய வாயிலிருந்து வந்திருத்தல் கூடும். தொடக்கத்தில் பொருளைக் குறிக்காது இசையோடு ஒலிக்கப்பட்டிருத்தல் கூடும். பின்னரே அவை தம் கருத்தை அறிவிக்க மக்களால் வழங்கப்பட்டிருக்க வேண்டும்.

(10) பெரும்பான்மையும் சொற்களுக்கும் அவை தற்போது குறிக்கும் பொருள்களுக்கும் சம்பந்தத்தைக் காணமுடியவில்லை. கூறுவோனுடைய கருத்தைக் கேட்போன் விளக்கமாய் அறிய இயலாது மயங்கி மயங்கிப் பின்னர் ஒவ்வொரு சொற்களின் பொருளைத் தீர்மானித்திருக்கவேண்டும்.

1. அமெரிக்காகண்டத்தில் பல மொழிகளில் குணத்தோடு கூடிய குணியைக் குறிப்பதற்கும், செயலோடுகூடிய பொருளைக் குறிப்பதற்கும் சொற்கள் இருக்கின்றனவே யன்றிக் குணம், செயல் இவற்றைத் தனியாய்க் குறிக்கச் சொற்கள் இல்லை.

(L. Bloomfield — Introduction to the Study of Language, pp. 63–64.)

(11) தொடக்கத்தில் மொழிகளுள் வாக்கியங்களே உள்ளன. அவற்றிற்கே பொருள் உண்டு. பின்னரே வாக்கியங்கள் சொற்களாகவும், சொற்கள் எழுத்துக்களாகவும் பிரிக்கப்பட, சொல், பகுதி, விகுதி இவற்றின் பொருள்கள் நிர்ணயிக்கப் பட்டன.

(12) கலைகள் வளர்வதுபோல் மொழிகளும் வளர்கின்றன; ஆகலின் மொழிகளையும் சிறந்த கலைகள் என்னலாம்.

## மொழிவளர்ச்சி[1]

மொழிகள் நாளடைவில் மாறுபடுகின்றன எனக் கூறப் பட்டது. அதனை மொழிவளர்ச்சி என்பர் மொழிநூல் வல்லோர். அவ்வளர்ச்சி எவ்வாறு நிகழ்ந்தது என்பதைக் கவனிப்போம்.

ஓர் ஊரில் பல வீடுகள் இருக்கும். ஒவ்வொரு வீட்டிலும் ஒரு தலைவனும் ஒரு தலைவியும் இருப்பர். அவர் பெரும்பாலும் பெற்றோர் ஆகவே இருப்பர். அவ்விருவரும் பேசும்போது வழங்குஞ் சொற்களைக் கேட்டு குழந்தைகளும் அவற்றை வழங்கும். அவர் எம்முறையில் அவற்றை ஒலிக்கின்றனரோ அவ்வாறே குழந்தைகளும் ஒலிக்கும். பலகுழந்தைகள் சேர்ந்து விளையாடும். அப்போது அவருள் சிறந்த குழந்தை சொற்களை வழங்குமாறு மற்ற குழந்தைகளும் வழங்கும். இம்முறையில் ஒருவீட்டுவழக்கு வேறுவீட்டிற்குச் செல்லும். சிறந்தோர்வீட்டுவழக்கு ஊர் முழுமையும் பரவும். அவ்வாறே வேறோரூரில் அதே மொழி சில மாறுபாடுகளுடன் வழங்கப்படலாம். அவ்வாறு மாறுபட்ட மொழிகளை ஒரு மொழியின் கிளைகள்[2] என்னலாம். ஒரு மொழிக்குப் பல

1. T. G. Tucker — Introduction to the Natural History of Language, pp. 278–286.

2. கிளைகள் = भाषाशाखाः = Dialects.

கிளைகள் இருப்பினும், அவற்றுள் ஒன்றே இலக்கணவிலக்கியங்களில் வழங்கப்படலாம். அப்போது அதனை நூன்மொழி[1] என்னலாம். இவ்வாறு ஒவ்வொரு கிளையிலும் நூல்கள் இயற்றப்படின், ஒவ்வொன்றையும் நூன்மொழி என்றே கூறல் வேண்டும். இவையெல்லாம் ஒருமொழியிலிருந்து வந்தமையான், இவற்றைப் பின்னர் ஓரினமொழிகள்[2] என்னலாம்.

அவற்றுள் ஒரு பொருளைக் கொண்ட சொற்கள் உருவத்தில் பெரும்பாலும் ஒத்திருக்கும்; சிறுபான்மை மாறுபட்டும் இருக்கும். அச்சொற்களையே இனச்சொற்கள்[3] என்னலாம். இவ்வாறுள்ள மொழிகளில் ஒரு சொல் ஒன்றில் இருக்குமாறே மற்றொன்றில் இருக்குமாயின், அச்சொல் ஒன்றிலிருந்து மற்றொன்றில் கடன்வாங்கப்பட்டிருக்கவேண்டும். அவ்வாறுள்ள சொற்களைக் கடன்சொற்கள்[4] என்னலாம்.

## மொழிப்பிரிப்பு

மூலமொழியுடைமொழிப்பிரிப்பு: ஒருமொழி பேசுவோர் வேறு இனத்தைச் சார்ந்த மொழியைப் பேசுவாரோடு பலநாள் சேர்ந்து வாழ்ந்தால், பிறருடைய மொழியின் கலப்பினால், அவருடைய மொழியிலுள்ள ஒலிகளின் உச்சாரணம் மாறலாம்; இம்மொழிவாக்கியத்தில் அம்மொழிச்சொற்கள் கலக்கலாம்; இதனுடைய சொற்களின் முறை மாறுபடலாம்.[5]

1. நூன்மொழி = ग्रन्थीयशाखा = Literary dialect.
2. ஓரினமொழிகள் = दायादभाषाः = Cognate languages.
3. இனச்சொற்கள் = दायादपदानि = Cognate words.
4. கடன்சொற்கள் = ऋणीकृतपदानि = Loan words.
5. இக்காலத்தில் இந்தியாவின் தெற்குப்பகுதியில் உள்ளோர் வடமொழிப்பதங்களுடைய ஈற்றில் உள்ள அகரத்தை விவ்ருதமாக ஒலிக்கின்றனர். பாணினி அஷ்டாத்யாயியில் அதனை ஸம்விருதமாகக் கூறப்பட்டது. வடநாட்டார்

ஒரு மொழி தன் இனமொழிகள் வழங்கும் இடத்திற்கு வெகுதூரத்திலுள்ள நாடுகளிற் சென்று வழங்கப்படின், அவற்றிலிருந்து பல மாறுபாடுகளைக் காலக்கிரமத்தில் அடையும். இருப்பினும் பல ஒற்றுமைகள் இருந்தே தீரும். தாய்தந்தையர் நெருங்கிய உறவினர் இவரைக் குறிக்குஞ் சொற்களிலும், உண்ணுதல், உறங்குதல் முதலிய இயற்கையாய்ப் பொதுவாயுள்ள செயல்களைக் குறிக்குஞ் சொற்களிலும், ஸர்வநாமங்களிலும், பெயர் உருபேற்கும் முறையிலும், வினை விகுதியேற்கும் முறையிலும் ஒற்றுமை இராமல் இராது. இவற்றில்

அதனை அவ்வாறே இன்றும் ஒலிக்கின்றனர். வடமொழியிலுள்ள ऐ औ இவற்றைத் தென்னாட்டார் அஇ, அஉ என ஒலிக்கின்றனர். இம்மாறுபாடு மஹாபாஷ்யகாரராகிய பதஞ்சலியின் காலத்திற்கு முன்னரே வந்திருக்க வேண்டும். मात्रा अकारस्य मात्रा इकारस्य என एओङ् ஸூத்ரபாஷ்யத்திற் கூறுகின்றார். அவற்றை ஆஇ, ஆஉ என ஒலித்தல் வேண்டும். கவர்க்கத்தின் பிறப்பிடம் கண்டம் எனப் பாணினி கூறியிருக்க, தற்போது அண்ணத்தின் முதலும் நாவின் முதலும் சேருமிடத்தில் அவை ஒலிக்கப்படுகின்றன. இம்மாறுதல்களெல்லாம் திராவிடமொழிக்கலப்பால் நேர்ந்திருத்தல் இயலும். தமிழ்மொழியில் பண்டை இலக்கணவாசிரியரான தொல்காப்பியனார்,

| | |
|---|---|
| அ ஆ வாயிரண் டங்காந் தியலும் | (தொல். எழுத். 85) |
| அகர இகர மைகார மாகும் | ( ,, 54) |
| அகர உகர மௌகார மாகும். | ( ,, 55) |
| ககார ஙகார முதனா வண்ணம் | ( ,, 89) |

எனக் கூறியிருத்தல் காண்க.

குமாரிலபட்டர் தான் இயற்றிய ச்லோகவார்த்திகத்தில் சோறு, அதர் முதலிய திராவிடச்சொற்கள் வடமொழியில் கலந்துள்ளன என்பர்.

*Cf.* आर्याश्च म्लेच्छभाषाभ्यः कल्पयन्तः स्वकं पदम् ।
पदान्तराक्षरोपेतं कल्पयन्ति कदा चन ।
न्यूनाक्षरं कदाचिच्च प्रक्षिपन्त्यधिकाक्षरम् ॥

ஒத்திருக்கும் இரண்டு மொழிகள் ஓரினமொழிகள் எனத் தீர்மானம் செய்யவேண்டும். இவ்வாறு மொழிகளை மூல மொழியினின்று வளர்ந்துவந்ததாகப் பிரிப்பதை மூல-மொழியுடைமொழிப்பிரிப்பு[1] என்னலாம். இனமொழிகளின் வரலாற்றினால் அவ்வவற்றின் பழைய நிலையைக் கண்டுபிடித்து, அந்நிலையிலுள்ள பல மொழிகளுக்கு ஒற்றுமை இருப்பின் அவை ஒரு தாய்மொழியினிடமிருந்து வந்திருக்கவேண்டும் என நாம் ஊஹிக்கிறோமேயன்றி, அத்தாய்மொழியிலுள்ள நூல்களோ, அதனைப்பற்றிய செய்தியோ நமக்கு நேரில் தெரியாமையின் அப்பிரிவை வரலாற்றுப்பிரிவு[2] என்ற பெயராலே கூறல் தகும் என்பர் கிராப்.[3]

तद्यथा **द्राविडादिभाषायामेव** तावद् व्यञ्जनान्तभाषापदेषु स्वरान्तविभक्तिस्त्रीप्रत्ययादिकल्पनाभिः स्वभाषानुरूपान् अर्थान् प्रतिपद्यमाना दृश्यन्ते । तद्यथा ओदनं **चोर्** इत्युक्ते **चोर**-पदवाच्यं कल्पयन्ति ; पन्थानम् **अतर्** इत्युक्ते **अतर** इति कल्पयित्वा आहुः सत्यं दुस्तरत्वात् अतर एव पन्था इति ...... तद्यदा द्राविडादिभाषायामीदृशी स्वच्छन्दकल्पना तदा **पारसी-बर्बरयवनरौमकादिभाषासु** किं विकल्प्य किं प्रतिपत्स्यन्त इति न विद्मः (तन्त्रवार्तिके 1, 3 under चोदितं तु ... )

यत्तु वेदतदङ्गेषु पदं दृष्टमविप्लुतम् ।
म्लेच्छभाषासु तद्रूपमर्थे क्वचन चोदितम् ॥
तत्तथैव प्रतीयेत प्रमाणेनाविरोधितः ।
पिकनेमादि तद्धयेवं निपुणैरवधारितम् ॥

மீன், நீர் என்ற தமிழ்ச்சொற்கள் வடமொழியில் मीन, नीर என வழங்குகின்றன. தென்னாட்டில் வடமொழிப் புலவர் கூறும் வடமொழிவாக்கியங்களிற் பல அமைப்பில் தமிழ்மொழித்தொடர்களின் அமைப்பை ஒத்துள்ளன.

1. மூலமொழியுடைமொழிப்பிரிப்பு = मूलभाषाकभाषाविभागः = Genealogical classification.

2. வரலாற்றுப்பிரிவு = चरितमूलको विभागः = Historical classification.

3. Graff — Language and Languages.

சொல்லமைப்புமூலகமொழிப்பெயர்ப்பு : [1] அப்பகுப்பைத் தவிர்த்து மற்றோர்வகைப் பகுப்பும் உண்டு. அது சொற்களின் அமைப்பைக்கொண்டு வந்தது. சில மொழிகளில் வாக்கியங் களுக்கு அங்கமான ஒவ்வொரு பதமும் ஒரு தாதுவே ஆகும்; பகுதி, விகுதி என்ற பிரிவினையே இல்லை. அந்நிலையைத் தனிமொழிநிலை என்பர். காலக்கிரமத்தில் சில தாதுக்கள் தனிமையாய் வழங்கப்படுந் தன்மையை இழந்து, வேறு சில தாதுக்களுடனே கூடி வழங்கப்படுந்தன்மையைப் பெறும்; அப்போது அவற்றை விகுதி என்றும், எவற்றோடு அவை சேர்ந்து வருகின்றனவோ அவற்றைப் பகுதி என்றுங் கூறுவர்; அவ்விரண்டும் எங்கு சேர்க்கப்படுகின்றன என்பது எல்லோருக்கும் தெரியும். அந்நிலையை ஒட்டறிமொழிநிலை என்பர்; இன்னுஞ் சில காலம் செல்ல, அவ்விரண்டும் எங்குச் சேர்க்கப்பட்டன என்பதை அறிதல் இயலாது. அந்நிலையை ஒட்டறியாமொழிநிலை என்றனர். ஒருகாலத்தில் உலகத்திலுள்ள எல்லாமொழிகளும் இம்மூன்று நிலைகளுள் ஒன்றில் இருந் திருக்கவேண்டும் என மொழிநூல்வல்லோர் நினைத்தனர்.

இக்கொள்கையைக் குறித்து யெஸ்பர்ஸன் பின் வருமாறு கூறினர்: இக்கொள்கையைக் கொண்டதற்குக் காரணம் சீனபாஷை தனிமொழிநிலையில் உள்ளது என்பதே. பழைய சீனபாஷையில் தன்மையில் நான்கு ஸர்வநாமம் இருக்கின்றன என்றும், அவற்றுள் ஒன்று எப்போதும் முதல்வேற்றுமையே என்றும், மற்றொன்று இரண்டாம்வேற்றுமையே என்றும் கார்ல்க்ரேன் [2] கண்டுபிடித்தனர். ஆகலின் இக்கொள்கையை மூன்று திருத்தத்துடன் ஒத்துக்கொள்ளவேண்டும். அவை யாவன :— (1) தற்போது ஒட்டறியாமொழிநிலையிலுள்ள

1. Tucker, pp. 70, 73, 76, 92, 95-104.
Jespersen — Language.... pp. 372-375.
Graff, pp. 323-351.

2. Karlgren.

மொழிகள் ஒட்டறிமொழிநிலையில் ஒரு குறித்த காலத்தில் இருந்தன எனக் கொள்ளல் இயலாது. (2) விகுதியாய் மாறினவை சொற்களேயன்றித் தாதுக்கள் இல்லை. (3) விகுதியாக ஆவதற்கு இவ்வழியைத் தவிர்த்து வேறு வழிகளும் உள.

வேறுவகைப்பிரிப்பு : மொழிகளை மூவகையாகவே பிரிப்பதிற் சில குறைவு இருப்பதால், மொழிகள் எல்லாவற்றையும் ஆர்கானிக்,[1] இனார்கானிக்[2] என இருவகையாகப் பிரிக்கலாம் என்பர் டக்கர்.[3] அர்த்தத்தின் மாறுபாட்டினையும் வேற்றுமை முதலியவற்றையும் சொற்கள் இருக்கும் இடத்தைக் கொண்டு அறிவிப்பது இனார்கானிக் மொழிகள் ஆகும். சீனமொழி, பர்மன்மொழி, அன்னம்மொழி முதலியன இவ்வகுப்பைச் சார்ந்தன. தாதுக்களின் உருவவேறுபாட்டால் வேற்றுமையையும், வினையின் காலம் இடம் முதலியவற்றையும் உணர்த்தும் சொற்களைக் கொண்ட மொழிகள் ஆர்கானிக் மொழிகள் ஆகும்.

சொல்லமைப்புமூலகப்பிரிப்பின் மறுப்பு : பிற்காலத்து மொழிநூல்வல்லோர் சொற்களின் அமைப்பைக் கொண்டு மொழிகளை வகுத்தல் நேரிதன்று என்றனர். அதற்கு அவர் கூறுங் காரணங்களாவன :—அக்கொள்கையின்படி மொழிகள் ஒருகாலத்தில் ஒரே நிலையில் இருந்திருக்கவேண்டும் ; அவ்வாறு ஒருமொழியும் இல்லை ; ஒரு மொழியில் ஒரே காலத்தில் எல்லா நிலைகளும் இருக்கின்றன. ஒரு நிலையிலிருந்து மற்றோர் நிலைக்கு மாறும் மொழிகள் திடீரென்று அவ்வழியை விட்டு வேறு வழியே செல்லலாம். வெகுதூரத்திலுள்ள மொழிகள் ஒன்றுக்கொன்று யாதொரு ஸம்பந்தமும் இல்லாமல் ஒரே நிலையில் இருக்கலாம்.

1. Organic = (अर्थभेदकविकृत्यादिकः)
2. Inorganic = (अर्थभेदकपदक्रमकः)
3. Tucker.

## மொழிவரலாற்றின் இன்றியமையாமை

முற்கூறப்பட்ட மூலமொழியுடைமொழிப்பிரிப்பினைக் கொண்டு, வடமொழி, இரான்மொழி, ஆங்கிலமொழி, லத்தீன்மொழி, கிரேக்மொழி முதலிய மொழிகளின் பழைய நிலையை ஆராய்ந்து, அவற்றையெல்லாம் ஓரினமொழிகள் எனக் கூறினர் மொழிநூல்வல்லோர். இவ்வாறு இரண்டு மொழிகள் ஓரினத்தைச் சார்ந்தனவா இல்லையா என்பதை அறிய அவ்வம்மொழியின் வரலாற்றினை அறிதல் வேண்டும். ஆகலின் வடமொழிவரலாறு என்ற இந்நூலின் இன்றியமையாமை பெறப்படும். அவ்வாறே ஆங்கிலமொழிவரலாறு, கிரேக்மொழிவரலாறு முதலியன காணப்படுகின்றன. இவற்றிலிருந்து வடமொழி, இரான்மொழி, ஆங்கிலமொழி, கிரேக்மொழி, லத்தீன்மொழி முதலியவற்றிற்குத் தாய்மொழி ஒன்று இருக்கவேண்டும் என்று மொழிநூல்வல்லோர் தீர்மானித்திருக்கின்றனர்.

## தாய்மொழி

**தாய்மொழியின் பெயர் :** அத்தாய்மொழிக்கு ஆரியன், இண்டோ-ஜர்மானிக், இண்டோ-யூரோபீயன் முதலிய பெயர்களை இட்டனர். இந்நூலுள் இண்டோ-யூரோபீயன் என்ற பெயரே ஆளப்படும்.

**இண்டோ-யூரோபீயன்மொழியியல்பு :** [1] தொடக்கத்தில் அம்மொழி ஒட்டாநிலைமொழிநிலையில் இருந்தது. சொற்கள் பகுதி [2] விகுதிகளாய்ப் [3] பிரிக்கப்பட்டன. விகுதிகள் பகுதிகளை விட்டு தனிமையாக வழங்கப்படா. விகுதிகளுக்குப் பொருள்

1. T. G. Tucker — Introduction to the Natural History of Language, pp. 177–184.
2. பகுதி = प्रकृतिः
3. விகுதி = विकृतिः



S.L.—3

உண்டென நினைத்துச் சொற்களை அம்மொழியை வழங்கியோர் உபயோகித்திருக்கமாட்டார். பின்னர் அம்மொழியிலிருந்து கிளைத்த மொழிகள் எல்லாம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முறையாக வளர்ச்சியுற்றன. ஆங்கிலமொழி பிற்காலத்தில் வேற்றுமையின் பொருளைக் குறிக்கப் பெயரின் பின்னர் விகுதிகளைச் சேர்க்காது, முன்னர்ச் சில சொற்களைச் சேர்த்தனர். முன்னர் எட்டு வேற்றுமைகள் இருந்தவிடத்து மூன்று வேற்றுமைகளே இருக்கின்றன. கிரேக்மொழியில் ஐந்து வேற்றுமைகளும், லத்தீன்மொழியில் ஆறும் உள்ளன. பல மொழிகளில் பெயர் ஸர்வநாமம் வினை இவற்றின் இருமையுருவம் இறந்தன. கிரேக், லத்தீன் இவற்றில் பல வேற்றுமையுருபுகள் ஒரு வேற்றுமையின் உருபுகளாகக் கொள்ளப்பட்டன. இதற்கு ஸிங்க்ரீடிஸம்[1] எனப் பெயரிடப்பட்டது இதனைப் பல்வேற்றுமையொருவேற்றுமையாகுகை எனவுங் கூறலாம். பல வேற்றுமைகள் ஒரே வேற்றுமையாகக் கூறப்படினும், அவ்வவ்வுருபுகள் முன்னர் வழங்கப்பட்ட பொருள்களிலே வழங்கப்பட்டு வந்தன. பின்னர் அவற்றிலும் மயக்கம் ஏற்பட்டது. அம்மயக்கத்திற்குக் கண்டாமினேஷன்[2] எனப் பெயரிட்டனர்; அதனை வேற்றுமைப்பொருள்மயக்கம் எனக் கூறல் தகும்.

இண்டோயூரோபியன்மொழிகளிலெல்லாம் தாதுக்கள் ஓருயிர்கள்.[3] அவற்றைப் பகுதியாக்க சில விகுதிகளும், அப்பகுதிகளைச் சொற்களாக்க வேற்றுமையுருபு, வினைவிகுதி இவையும் சேர்க்கப்பட்டன. பகுதியைத் தனியாகவோ,

1. Syncretism = பல்வேற்றுமையொருவேற்றுமையாகுகை = विभक्त्येकीभवनम्
2. Contamination = வேற்றுமைப்பொருள்மயக்கம் = विभ्रमविभक्तिप्रयोगः
3. ஓருயிர் = एकाच् = Monosyllable.

விகுதியைத் தனியாகவோ வழங்க முடியாது.[1] சிலவிடத்து தாதுக்களுக்கே நேரில் வேற்றுமையுருபுகளும் வினைவிகுதிகளுஞ் சேர்க்கப்படும்.[2] வேற்றுமையுருபுகளோ பகுதியின் முன்னர்ச் சேர்க்கப்படவில்லை.[3] வினைகளில் தாதுக்களின் முன்னர் அ, ஆ இவை ஆகமங்களாக இறந்தகாலத்தைக் குறிக்க வழங்கப்படுகின்றன. அவை சுட்டுப்பெயரே ஆகும். சொற்களோ பகுதிகளோ பகுதிகளின் ஏகதேசமோ இரட்டிக்கப்பட்டன. இதற்கு இரட்டித்தல்[4] எனப் பெயர் வழங்கப்பட்டது. இம்முறை ஒவ்வொரு மொழியில் ஒவ்வொரு வகையாக ஆளப்படும். ஆங்கிலத்தில் மிகுதியாக ஆளப்படவில்லை. கிரேக் பகுதிகளை முழுமையும் இரட்டிக்கின்றது. லத்தீன் சிறிது இரட்டிக்கின்றது. ஜர்மன் பகுதிகளை ஒரு முறை இரட்டித்து அவற்றை மறுமுறையும் இரட்டிக்கின்றது. பேச்சுமொழிகளில் பல்வகைப்பொருளைக் குறிக்க இரட்டித்தல் வழங்கும். வடமொழியின் வேதங்களிலும் இதிஹாஸங்களிலும் அது பல்லாறுகக் கையாளப்பட்டது. பன்மை,[5]

1. न केवला प्रकृतिः प्रयोक्तव्या न च केवलः प्रत्ययः
(महाभाष्ये. under 2, 3, 1.)
2. *Cf.* द्विष्यः, द्विष्मः ; लिहौ लिहः etc.
3. தற்போது ஆங்கிலத்தில் வேற்றுமைப் பொருளை உணர்த்துஞ் சொற்கள் (prepositions) பெயரின் முன்னர் வைக்கப்படுகின்றன.
4. இரட்டித்தல் = द्विरुच्चारणम् = Reduplication.
5. **विशेविशे वस्तोर्वस्तोर्**वहमानम् (ऋ. वे. 10, 40, 1)
विशेविशे = सर्वेषु मनुष्येषु ; वस्तोर्वस्तोः = अन्वहम्
**वृक्षेवृक्षे** नियतामीमयद्गौः (ऋ वे. 10, 27, 22)
वृक्षेवृक्षे = वृक्षेषु அல்லது प्रतिवृक्षम्
प्रत्यणाद् भारतीं सेनां निघ्नन् पार्थो **वरान् वरान्**
(म. भा. द्रो. 93, 26)
**सज्यं सज्यं** धनुश्चास्य चिच्छेदास्य स सात्यकिः (*ibid* 98, 38)

ஒரு பொருளின் ஒவ்வொரு வ்யக்தி,[1] மிகுதி,[2] பரபரப்பு,[3] அச்சம்,[4] விரைவு,[5] ஆச்சர்யம்,[6] சந்தோஷம்,[7] எஞ்சாமல்-தழுவுதல்,[8] அடிக்கடிசெய்தல்,[9] சமீபத்தில் இருத்தல்,[10] அஸூயை,[11] கோபம்,[12] நிந்தை,[13] பயமுறுத்தல்[14] முதலிய

1. See previous page foot note 5.
2. सूर्याह्वा नो वस्यसा वस्यसोदिहि (ऋ. वे. 10, 37, 9)
   वस्यसा वस्यसा = अत्यन्तश्रेयस्करेण
3. पार्थ पार्थ महाबाहो न नः कालात्ययो भवेत्
   (म. भा. द्रो. 91, 32)
   हतो राजा हतो राजा भारद्वाजेन मारिष (*ibid* 106, 45)
   सम्भ्रमेण प्रवृत्तौ यथेष्टमनेकधा प्रयोगो न्यायसिद्धः (वार्त्तिकम्)
4. हतो राजा हतो राजेत्यूचिरे च भयार्दिताः (*ibid* 102, 34)
5. पार्थ पार्थ महाबाहो न नः कालात्ययो भवेत् (*ibid* 91, 32)
   विव्याध दशभिर्बाणैस्तिष्ठ तिष्ठेति चाब्रवीत् (*ibid* 90, 34)
6. नवो नवो भवति जायमानः ... चन्द्रमाः (ऋ. वे. 10, 85, 10)
   नव्या नव्या युवतयो भवन्ति (*ibid* 3, 55, 16)
7. नमस्कृत्य वृषाङ्काय साधु साध्वित्यथाब्रुवन् (म. भा. द्रो. 84, 7)
8. अस्माँ अस्माँ इदुदव (ऋ. वे. 4, 32, 4)
   अस्मानस्मान् = सर्वानस्मान्
9. पिबापिबेदिन्द्र शूर सोमम् (*ibid* 10, 22, 15)
   प्रेहि प्रेहि पथिभिः पूर्व्येभिर्यत्रा नः (*ibid* 10, 17, 4)
   नित्यवीप्सयोः (पा. अ. 8, 1, 4)
10. वाक्यादेरामन्त्रितस्यासूयासंमतिकोपकुत्सनभर्त्सनेषु (पा. अ. 8, 1, 8)
11. असूयायम् — सुन्दरसुन्दर वृथा ते सौन्दर्यम्
12. कोपे — यो यः शस्त्रं बिभर्ति (वेणीसंहारे. 3, 32)
13. कुत्सने — शोभनं शोभनं कर्ण सनाथः कुरुपुङ्गवः
    (म. भा. द्रो. 156)
    युधिष्ठिर युधिष्ठिर ... ते किमनेनापकृतम्
    (वेणीसंहारे. 3, 23- )
14. भर्त्सने — चोर चोर घातयिष्यामि त्वाम्

வற்றைக் குறிக்க முழுச்சொற்களே இரட்டிக்கப்பட்டுள்ளன. இறந்தகாலம், அடிக்கடி நிகழ்தல், விருப்பம் முதலியவற்றைக் குறிக்கப் பிற்காலத்தில் தாதுக்களின் ஏகதேசம் இரட்டிக்கின்றது.[1] பிற்காலத்தில் சில தாதுக்கள் இரட்டித்தே நிகழ்காலம் முதலியவற்றில் வழங்கப்படுகின்றன.[2] சில இரட்டித்து வழங்கப்படினும் அவற்றை இரட்டித்ததாக இலக்கணக்காரர் கொள்ளவில்லை.[3] ஒரு தாதுவிலிருந்து வந்த சொற்களிலுள்ள உயிர்கள் ஒன்றுயிராது வேறுபட்டிருக்கும்; இதற்குக் காரணம் பெரும்பாலும் அவற்றுள் உதாத்தவுயிர் இருக்கும் இடமே.[4] உயிரின் வேறுபாடு காலமாறுபாட்டினையோ, பெயர்வினைமாறுபாட்டினையோ குறிக்கவில்லை என்பது உணரத் தக்கது. பெயர்கள் வேற்றுமையுருபு ஏற்கும் விதம் பல்வகைப் பட்டது: அவ்வாறே வினைகள் காலம், இடம், எண் முதலிய வற்றைக் குறிக்க வினைவிகுதிகளை ஏற்கும் விதமும் பல்வகைப் பட்டது. ஒவ்வொரு மொழியிலும் அதிதேசத்தால் பல பழைய ரூபங்கள் கெட்டு புதிய ரூபங்கள் வந்தன. சொற்களைத் தொகுத்தல் ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு வகையாகப் பின்னர் வந்தது காண்க.

அன்றியும் அம்மொழிகளிலுள்ள வாக்கியங்களின் சொற்கள் எல்லாம் ஒரே வகையாக ஒலிக்கப்படா. சொற்களிலும் எல்லா உயிர்களும் ஒருவாறே ஒலிக்கப்படா. ஒரு சொல்லில் ஓருயிர்

1. இறந்தகாலம்: बभूव
அடிக்கடி நிகழ்தல் = पौनःपुन्यम् — बोभूयाञ्चक्रे
விருப்பம்: पिपठिषति

2. बिभर्ति

3. जागर्ति, दरिद्राति, चकासति; ஈண்டு जागृ, दरिद्रा, चकास् இவற்றைத் தாதுக்களாகக் கொண்டனர் பாணினியாசிரியர்; இவற்றை गृ, द्रा, कास् இவற்றின் இரட்டித்த நிலையில் உள்ளதாக மொழிநூல்வல்லோர் கொள்வர்.

4. अद्राक्षीन् द्रक्ष्यति, दृष्टः, दर्शनम्
Sit, sat, seat.

மற்ற உயிர்களைக்காட்டிலும் உயர்த்தியோ, உரப்பியோ ஒலிக்கப்படும். சில மொழிகளில் உயர்த்தி ஒலிக்கப்படும்; வேறு சிலவற்றில் உரப்பி ஒலிக்கப்படும். ஒரு மொழியிலேயே ஒரு காலத்தில் உயர்த்தியும் மற்றொரு காலத்தில் உரப்பியும் ஒலிக்கப்படும். இவ்வாறு ஒரு வாக்கியத்தில் சில சொற்களையோ, ஒரு சொல்லில் ஒருயிரையே உயர்த்தியோ உரப்பியோ ஒலிப்பதற்கு ஸ்வரம்[1] எனப் பெயர். ஒன்றை உயர்த்தி ஒலிப்பின் மற்றொன்றைத் தாழ்த்தியும் சிலவற்றை நடுத்தரமாயும் ஒலித்தல் நேரும். இவ்வாறு உயர்த்தித் தாழ்த்தி ஒலிக்கும் ஸ்வரத்திற்கு பிட்ச் ஸ்வரம்[2] என்று பெயர். ஒன்றை உரப்பி ஒலித்தால் மற்றவற்றைக் குறைந்த வலியோடு ஒலித்தல் நேரும்; இவ்வாறு ஒலித்தற்கு ஸ்ட்ரேஸ் ஸ்வரம்[3] எனப் பெயர்.

பிட்ச் ஸ்வரம் உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என மூவகைப்படும். ஒலியை உண்டாக்கும் கருவிகளின் உயர்ந்த பாகத்தில் உண்டாவது உதாத்தமாகும்;[4] தாழ்ந்த பாகத்தில் உண்டாவது அநுதாத்தமாகும்;[5] நடுத்தரமாயுள்ளது ஸ்வரிதம் ஆகும்.[6]

இண்டோயூரோபியன்தாய்மொழி ஒருகாலத்தில் ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தைக் கொண்டிருந்தது என்றும், பின்னர் பிட்ச் ஸ்வரத்தைக் கொண்டது என்றும் மொழிநூல்வல்லோர் கூறுவர்.

லத்தீன்மொழி ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தைக் கொண்டது. ஆதியில் மொழியின் முதலுயிரை உரப்பி ஒலித்தது. பின்னர் இறுதியுயிர்க்கடுத்த உயிரையோ அதன் முன்னருள்ள

1. ஸ்வரம் = Accent.
2. Pitch Accent = उदात्तादिस्वरः
3. Stress Accent = दृढलघूच्चारणस्वरः
4. उच्चैरुदात्तः
5. नीचैरनुदात्तः
6. समाहारः स्वरितः

உயிரையோ உரப்பி ஒலிக்க ஆரம்பித்தது. ஆங்கிலமொழி
கோயில்களுள் வாழ்த்துக்களில் பிட்ச் ஸ்வரத்தோடும், ஏனைய
இடங்களில் ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தோடும் ஒலிக்கப்படுகின்றது.
தற்காலத்துப் பேச்சிலிருக்கும் ஆங்கிலத்தில் மொழியின்
முதலுயிரே உரப்பி ஒலிக்கப்படுகின்றது. பழைய கிரேக்
மொழி பிட்ச் ஸ்வரத்தைக் கொண்டது; தற்போது அது
ஸ்ட்ரஸ் ஸ்வரத்தைக் கொண்டுவிட்டது. பிரஞ்சுமொழி[1]
முதலில் ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தையும் பின்னர் பிட்ச் ஸ்வரத்தையுங்
கொண்டது. வடமொழியும் வேதங்களில் பிட்ச் ஸ்வரத்தையே
கொண்டது; இக்காலத்தில் இந்தியாவிலுள்ள தேசிய
மொழிகள் ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தையே கொண்டன. தென்
னாட்டில் தற்போது பேசப்படும் வடமொழி பிட்ச் ஸ்வரத்
தையும் கொள்ளவில்லை; தெளிவான ஸ்ட்ரெஸ் ஸ்வரத்தையுங்
கொள்ளவில்லை; எல்லாம் ஒரே ஸ்வரத்துடன் ஒலிக்கப்
படுகின்றன என்று கூறவும் இயலவில்லை.

மொழிகளில் எது சிறந்த பகுதியோ அஃதே உதாத்தத்
துடனே, மிக்க உரத்துடனே ஒலிக்கப்படுகின்றது. அவ்வாறு
இல்லை என்பர் சிலர்.[2] பெரும்பாலும் ஒருமொழியில் ஓருயிரே
உதாத்தமாகவோ[3] மிக்க உரத்துடனே ஒலிக்கப்படுகின்றது.
ஆகலின் மற்ற உயிர்கள் அநுதாத்தத்துடனே, குறைந்த
உரத்துடனே ஒலிக்க நேரிட, காலக்கிரமத்தில் அவை ரூபத்திற்
குறைவையோ, அழிவையோ உறுகின்றன. வாக்கியங்களில்
எச்சொற்கள் அடிக்கடி வழங்கப்படுகின்றனவோ அவை
பெரும்பாலும் உரப்பி ஒலிக்கப்படவில்லை.[4] வடமொழியில்
வேதங்களில் எட்டாம் வேற்றுமைப் பெயர்களும்,[5] முற்று

1. French.
2. Graff — Language, pp. 165, 167.
3. अनुदात्तं पदमेकवर्जम् (पा. अ. 6, 1, 158)
4. Zipf — Psycho-Biology of Language, pp. 131–2.
5. आमन्त्रितस्य (पा. अ. 8, 1, 19)

வாக்கிய முற்றுவினைகளும்[1] பதத்தின் ஆரம்பத்தில் இல்லாதிருந்தால், அச்சொற்களின் எல்லா உயிர்களும் அநுதாத்தமே ஆகும். ஸர்வநாமங்களில் இரண்டுருவம் கொண்டவிடத்து பின்னர் வரும் அந்வாதேசச்சொற்கள் அநுதாத்தமாகும்.[2] ஆகலின் ஒவ்வொரு மொழியும் எம்முறையில் ஒலிக்கப் படுகின்றது என்பதைக் கவனித்தல் வேண்டும்.

**இண்டோ-யூரோபியன்மொழி முதன்முதலில் வழங்கிய இடம் :** தாய்மொழி ஒருகாலத்தில் ஓரிடத்தில் வழங்கியிருத்தல் கூடும். பின்னர் அம்மொழி பேசுவோர் பல இடங்களுக்குச் சென்றிருத்தல் கூடும். அவர்கள் சென்ற இடத்தில் அவர்கள் தம் மொழியையும் பேசியிருக்கலாம்; தம்மொழி பேசுவோர் மிகுதியாக இல்லாமலிருப்பின், தம்மொழியைவிட்டு அந்நாட்டு மொழியைப் பேசியிருந்தாலும் இருக்கலாம். தம்மொழிபேசுவோர் மிகுதியாகவும், சென்றநாட்டிலுள்ளோர் குறைவாகவும் இருந்தாலும், அந்நாட்டார் சிறந்த மொழியைப் பேசாவிட்டாலும், காலக்ரமத்தில் குடியேறினவரின் மொழியே அங்கு வழங்கப்படுதல் கூடும். ஆகலின் இனமொழிகளைப் பேசுவோர் ஓரினமாக இருத்தல் வேண்டும் என்றும், ஓரினத்தார் ஓரின மொழிகளைப் பேசவேண்டும் என்றும் ஒரு நியதி இல்லை.

இண்டோயூரோபியன்மொழி எக்காலத்தில் எந்நாட்டில் முதன்முதல் வழங்கப்பட்டது என்பதை நிச்சயமாகக் கூற இயலவில்லை. அதற்கு வேண்டிய ஸாதனங்கள் இல்லை. ஆகலின் சிலவற்றைக்கொண்டு அதன் மூலஸ்தானம் யாது எனப் பலர் பலவாறாக ஊஹித்தனர். அதனை நிர்ணயிக்க ஸாதனங்களைத் தேட மக்கள் முயலவேண்டும். தாய்மொழியிலிருந்து வந்த மொழிகளில் இயற்றப்பட்ட நூல்களை ஆய்ந்து, அங்குள்ள சில சொற்களுக்குப் பொருள் விளங்காவிடின், அவற்றை நிர்ணயித்து

1. तिङ्ङतिङः (*ibid* 8, 1, 28)

2. मा, नौ, नः, मे, त्वा, वाम्, वः, ते

அப்பொருள்கள் எங்குள்ளன எனத் தீர்மானித்தல் வேண்டும். ஒவ்வொரு மொழியும் எங்கிருந்து தற்போது பேசப்படும் இடத்திற்கு வந்தது என்பதைச் சரித்திரவாயிலாகவும் மக்களின் உடலமைப்புவாயிலாகவும் அறிதல் கூடும். அப்போது பல இனமொழிகள் சேருமிடமே தாய்மொழி வழங்கப்பட்ட இடம் என்னலாம்.

தாய்மொழியின் மூலஸ்தானம் மத்தியஆசியா எனச் சிலரும், ஐரோப்பாவில் நார்வே, ஸ்வீடன் எனச் சிலரும், ஜர்மனி எனச் சிலரும், டான்யூப்நதிக்கரை எனச் சிலரும், காகஸஸ்மலை எனச் சிலரும், துருக்கியின் பக்கம் எனச் சிலருங் கூறுவர்.

வடமொழியும் இரான்மொழியுமே இண்டோயூரோபீயன் மொழிகளுள் மிகப் பழமையன எனவும், ஐரோப்பாவின் நாகரிகம் ஆசியாநாகரிகத்திலிருந்து கொள்ளப்பட்டது எனவுங் கொண்டு, தாய்மொழியின் மூலஸ்தானம் மத்தியஆசியா என ஷ்லீஷர் [1] கி. பி. 1808இல் கூறினர். அங்கிருந்து இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து ஒன்று ருஷியா, ஜர்மனி முதலிய தேசங்களுக்கும், மற்றொன்று இந்தியா, பர்ஸியா, கிரீஸ், இடலி முதலியவற்றிற்கும் சென்றன என்றனர். தனிமொழிகளில் உள்ள மாறுபாட்டிற்குக் காரணம் தாய்மொழி வழங்கும் ஊரிலிருந்து வெகு தூரத்தில் உள்ளமையே எனக் கருதினர். வேறு காரணங்களும் உண்டு என்பதை அவர் நினைக்கவில்லை. அன்றியும் ருஷியா, ஜர்மனி இங்குச் சென்ற பிரிவில் உள்ள சொல்வழக்கு மற்ற பிரிவில் உள்ள சொல்வழக்குக்களைக் காட்டிலும் மிகவும் மாறுபட்டன எனக் கூறவும் இயலாது.

லிதுவேனியன் [2] பாஷைக்கும் இண்டோஇரானியன் [3] பாஷைக்கும் பல ஒற்றுமைகள் உள்ளன எனப் பின்னர் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்தனர். அன்றியும் ஜெர்மானிக்பாஷைகள்

1. Schleicher.
2. Lithuanian.
3. Indo-Iranian.

லிதுவேனியன்பாஷையைக்காட்டிலும் இடாலிக், கெல்டிக் இப்பாஷைகளை ஒத்துள்ளன என்றுங் கண்டனர். இக் காரணங்களைக் கொண்டு ஷ்லீஷரது கொள்கையை விட்டு விட்டனர்.

மொழிகள் நேர்க்கோட்டில் ஒன்றோடொன்று பிரியாது வட்டத்தில் பிரிந்தன என்றனர் ஷ்மிட்.[1] தற்போது அம் மொழிகள் பேசப்படும் இடத்திலே பண்டையகாலத்திலும் அவை பேசப்பட்டன என்பதை அடிப்படையாகக் கொண்டு இவ்விரண்டு கொள்கைகளும் பிறந்தன.

இண்டோயூரோபியன் மொழிகளுள் பல ஐரோப்பாவில் இருக்கின்றமையாலும், ஆசியாவில் வடமொழியும் இரானுமே இருக்கின்றமையாலும், தாய்மொழியின் மூலஸ்தானம் ஐரோப்பாவில்தான் இருந்திருக்கும் என, கி.பி. 1851இல் லாடம்[2] கூறினர். அவர்க்குப் பின் வந்தவர் அவருடைய கொள்கையோடு ஒன்றுபட்டு, லிதுவேனியன் மொழியில் மிகப் பழைய சொற்கள் உள்ளன என்ற மற்றொரு காரணத்தையுங் கூறி அக் கொள்கையை நிலைநாட்டினர்.

தாய்மொழி பேசியோர் கடல், எருது, ஆடு, பன்றி, நாய், ஓநாய், தேன், புல்தரை, சக்கரம், நுகத்தடிகொண்ட வண்டிகள் முதலியவற்றை அறிந்திருத்தல் வேண்டும். இவற்றால் அவர் மலைப்பிரதேசத்தில் இல்லை என்பதும் பல்லிடங்களில் இருந்தனர் என்பதும் அறியப்படும் என்பர் ஷ்ரேடர்.[3]

## வடமொழி

இந்தியாவின் வடக்குப்பாகத்தில் வழங்கிய மொழிக்குத் தமிழிலக்கணக்காரர் வடமொழி எனப் பெயரிட்டனர். அதனைத் தற்போது ஸம்ஸ்கிருதம் என்பர். அம்மொழியைப் பேசுவோர் ஒரு நாட்டிலே நிலைத்திராமையால், நாட்டைக்கொண்டு அதற்குப் பெயர் வரவில்லை.

1. Schmidt. 3. Latham. 3. Schrader.

தற்போது உள்ள நூல்களிலிருந்து அது வளர்ச்சி உற்ற நிலை நான்கு என்னலாம். வேதங்களில் வழங்கப்பட்ட நிலை ஒன்று; அதற்கு வைதிகமொழி எனப் பெயர் கொடுக்கலாம்; ராமாயணமஹாபாரதங்களில் வழங்கப்பட்ட நிலை இரண்டாவது; அதற்கு இதிஹாஸமொழி எனப் பெயரிடலாம்; இதனைப் பாணினியாசிரியர் பாஷா[1] என்பர். பதஞ்சலிமுனிவர் லௌகிகீ[2] என்பர். அம்மொழியே பெரும்பாலும் காளிதாஸன் முதலிய மஹாகவிகளால் ஆளப்பட்டு, இன்றும் புலவர்களால் சாஸ்திரவிசாரங்களில் பேசப்பட்டு வருகிறது. ப்ராகிருதங்களை மூன்றும் நிலையில் உள்ளன என்னலாம். ப்ராகிருதச்சிதை வாய்த் தற்போது வட இந்தியாவிலுள்ள பல மாஹாணங்களில் வழங்கும் ஹிந்தி, பஞ்சாபி, காஷ்மீரி முதலியன நான்காம் நிலையில் உள்ளன என்னலாம். அவற்றை வடமாகாணமொழி எனப் பெயரிடலாம்.

இரான்மொழிக்கும் வைதிகமொழிக்கும் பல ஒற்றுமைகள் இருப்பதால், அவ்விரண்டும் பிரியாத நிலை ஒன்று இருந்திருத்தல் வேண்டும். அதற்கு முன்னர் அது இண்டோ-யூரோபியன் என்ற தாய்மொழியாய் இருந்திருக்கும். ஆகலின் வடமொழி வரலாற்றில் இண்டோ-யூரோபியன் மொழியிலிருந்து ஹிந்தி முதலிய மொழிவரையில் மொழி எவ்வாறு மாறிற்று என்பதை விரிவாய்க் கூறல் வேண்டும்.

தேவதைகளைக் குறித்து மக்கள் வழங்கிய ஸ்தோத்திரங்களை முதன்முதலில் ருக்வேதஸம்ஹிதையில் ருஷிகள் தொகுத்தனர் என்பது வெளிப்படை. அவை இருக்கும் விதத்தைப் பார்த்தால் அக்காலத்தில் அது பேச்சுமொழியாகவே இருந்திருத்தல் கூடும். பின்னர் அது இலக்கியமொழி ஆயிற்று. இலக்கியத்தில் அம்மொழி மாறுபடாமலே வழங்கப்படினும்,

1. भाषा — **भाषायां** सदवसश्रुवः (पा. अ. 3, 2, 108)

2. केषां शब्दानाम्? **लौकिकानां** वैदिकानाञ्च (महाभाष्ये)

காலக்கிரமத்தில் பேச்சில் அம்மொழி மாறுபடுதல் கூடும். அம் மாறுபாட்டிற்குக் காரணங்கள் அதனைப் பேசுவோர் வேறு நாட்டிற்குச் செல்லுதலும், அந்நாட்டின் சீதோஷ்ணஸ்திதிக்குத் தக்கவாறு ஒலிக்கருவி மாறுபடுதலும், ஆங்கு முன்னரே இருந்த மக்களோடு அவர் பழகி அவர் பேசும் மொழிகளைத் தாம் கற்றலும் முதலிய பல ஆகும். அன்றியும் விரைவாய்ப் பேசும் போது கேட்போனுக்குப் பொருள் விளங்குமாறு பிரதானமான பகுதிகளை உரக்க ஒலித்தலானும் அப்பிரதானமான பகுதிகளை உரமில்லாது ஒலித்தலானும், காலக்கிரமத்தில் அப்பிரதானப் பகுதிகள் தேய்ந்தும் மாய்ந்தும் போகலாம். அதிதேசத்தால்[1] புதிய சொற்கள் ஆக்கப்படலாம். நாட்டின் சிற்சில பகுதிகளில் சில வழக்கு பெருகியிருக்கலாம்; சில மாய்ந்திருக்கலாம். ஆகலின் இலக்கியமொழி சிறிதுகாலம் ஒன்றுகவே இருப்பினும், பேச்சுமொழி மாறிக்கொண்டே வரும். மாறுதல் மிகுதியாய் வந்து பேச்சுமொழியின் அறிவைக்கொண்டு இலக்கியமொழியை அறிதற்குப் பொதுமக்களுக்கு ஆற்றல் இல்லாதபோது, அப் பேச்சுமொழியில் இலக்கியங்கள் எழுதல் வேண்டும். அம் மொழி பேச்சில் பின்னரும் மாறுதல் அடையலாம்; சில ஆண்டுகளின் பின்னர் அஃதும் இலக்கியமொழி ஆகலாம். ஆகலின் ஒவ்வொரு காலத்திலும் இலக்கியமொழிக்கும் பேச்சு மொழிக்கும் மாறுபாடு இருக்கும். புலவர்களே இலக்கியத்தை வழங்கும்போது ஒருவகையாகவும், பேச்சுவழக்கில் வேறு வகையாகவும் வழங்குவதை அறியலாம். இதனைப் பதஞ்சலி முனிவர் மஹாபாஷ்யத்தில் குறிப்பிடுவது நோக்கத்தக்கது. யத்வாந:, தத்வாந: என்ற இலக்கியச்சொற்களைப் பேச்சில் யர்வாண:, தர்வாண: எனச் சில பெரியார் வழங்கினராம்.[2]

1. Analogy.

2. एवं हि श्रूयते — यर्वाणस्तर्वाणो नाम ऋषयो बभूवुः प्रत्यक्षधर्माणः परावरज्ञाः विदितवेदितव्या अधिगतयाथातथ्याः । ते तत्रभवन्तो यद्वानस्तद्वान इति प्रयोक्तव्ये यर्वाणस्तर्वाण इति प्रयुञ्जते । याज्ञे कर्मणि पुनर्नापभाषन्ते (महाभाष्ये)

கௌ: என்ற இலக்கியச்சொற்குப் பிரதியாக காவீ, கோணீ, கோதா, கோபோதலிகா என்ற சொற்களை வழங்கினராம்.[1] ஆகலின் ஒரே மொழி காலவேறுபாட்டினால் பல்வகையில் மாறுபடுகின்றது :—எழுத்துக்கள் ஒலிக்கும் விதத்தில் மாறுபாடு அடைகின்றன ; சொற்கள் உருவத்தில் மாறுபடுகின்றன ; பொருளில் மாறுபடுகின்றன ; சில சொற்கள் மிகுதியாக வழங்கப்பட்டு நிற்கின்றன ; சில வழக்கில் இறக்கின்றன ; வேற்றுமொழிக்கலப்பாலும் சில மாறுபாடுகள் வருகின்றன. ஆகலின் அந்தந்த நிலையில் அம்மொழியின் தன்மையை விளக்க இலக்கணநூல்களும் நிகண்டுகளும் வேண்டும். அவற்றின் உதவியால்தான் அவ்வக்காலத்து இலக்கியங்களை அறிதல் கூடும். இக்காரணம்பற்றி மொழிவரலாற்றின் பயன் வெளியாகும். அன்றியும் செய்மையில் வழங்கப்படும் இரண்டு மொழிகள் ஓரினமொழிகளா அல்லவா என்பதை அவற்றின் பண்டைய நிலையைக்கொண்டே அறிதல் வேண்டுமாகலான், அதற்கும் மொழிவரலாறு அவசியம் வேண்டும்.

இது பின்னர் எழுத்துப்பிரகரணம்,[2] பதப்பிரகரணம்,[3] தொடர்ப்பிரகரணம்,[4] பொருட்பிரகரணம்[5] என நான்கு பகுதிகளில் உணர்த்தப்படும்.

---

1. गौरित्यस्य गावी गोणी गोता गोपोतलिका इत्येवमादयो अपभ्रंशाः
2. Phonology = अक्षरप्रकरणम्
3. Morphology = पदप्रकरणम्
4. Syntax = वाक्यप्रकरणम्
5. Semasiology = अर्थप्रकरणम्

## எழுத்துப்பிரகரணம்[1]

எழுத்தின் இலக்கணமும், உற்பத்தியும்: மக்கள் தங் கருத்தைப் பிறர்க்கு வெளிப்படுத்த ஒலிக்கும் ஒலி எழுத்து எனப்பட்டது. அது உடலிலிருந்து எழுப்பப்பட்டு பல் இடங்களில் மாறுபட்டு வெளிவரும் காற்றே ஆகும். அது மார்பு, கழுத்து, தலை இவற்றின் வழியாய் வாயிற் சென்று ஆங்குள்ள நாக்கு, அண்ணம்,[2] பல், உதடு இவற்றால் மாறுபட்டும், மூக்கிற் சென்றும் வெளிவருகின்றது எனப் பாணினிசிக்ஷையிலும்,[3]

1. *Cf.* Brugmann's Comparative Grammar of the I. G Languages Vol. i.

   C. C. Ublenbeck's Sanskrit Phonetics.

   Wright's 'Comparative Grammar of the Greek Language'.

2. அண்ணம் = तालु = Hard Palate.

3. आत्मा बुद्धया समेत्यार्थान् मनो युङ्क्ते विवक्षया ।
   मनः कायाग्निमाहन्ति स प्रेरयति मारुतम् ॥

   मारुतस्तूरसि चरन् मन्द्रं जनयति स्वरम् ।
   प्रातःसवनयोगं तं छन्दो गायत्रमाश्रितम् ॥

   कण्ठे माध्यन्दिनयुगं मध्यमं त्रैष्टुभानुगम् ।
   तारं तार्तीयसवनं शीर्षण्यं जागतानुगम् ॥

   सोदीर्णो मूर्ध्न्यभिहतो वक्त्रमापद्य मारुतः ।
   वर्णाञ्जनयते तेषां विभागः पञ्चधा स्मृतः ॥

   स्वरतः कालतः स्थानात् प्रयत्नादनुप्रदानतः ।

   .....................

   अष्टौ स्थानानि वर्णानामुरः कण्ठः शिरस्तथा ।
   जिह्वामूलं च दन्ताश्च नासिकोष्ठौ च तालु च ॥ (पा. शिक्षा.)

தமிழிலக்கணமாகிய தொல்காப்பியத்திலும்[1] கூறப்பட்டது. அது கொப்பூழிலிருந்து[2] புறப்படும் எனவுந் தொல் காப்பியம் கூறும். ஒருவன் சக்தியற்றநிலையில் இருக்கும்போது பேசினால், பேச்சு அடிவயிற்றிலிருந்து வருவதை உணரக் கூடும். அக்காற்று தலைக்குச் சென்று வாய்க்கு வருகின்றது என்பது எவ்வாறு என விளக்கமாய்த் தெரியவில்லை. நுரை யீரல்களிலிருந்து காற்று புறப்பட்டு குழாய்கள் வழியாக மூச்சுக் குழாயை அடைந்து, அங்கிருந்து நெஞ்சுக்குழிவழியாய் வாயை யும் மூக்கையும் அடைந்து வாயிலுள்ள நா, அண்ணம், பல், உதடு இவற்றின் உதவியால் பேச்சொலியாக மாறுகின்றது என்பர் மொழிநூல்வல்லோர். அடிவாயில் ஒரு கதவுபோன்ற கருவி இருக்கின்றது. அது வாய்ப்புறம் திறந்தால் மூக்கின்புறம் மூடும்; மூக்கின்புறம் திறந்தால் வாய்ப்புறம் மூடும்; இரு புறமும் சிறிது திறந்தும் மூடியும் இருக்கும். இதன் உதவியால் காற்று முழுதும் வாயாலோ, முழுதும் மூக்காலோ, சிறிது வாயாலும் சிறிது மூக்காலுமோ வெளியில் வர முடியும். நெஞ்சுக்குழிக்குமேல் இரண்டு நரம்புகள் உள்ளன. அவற்றை ஒலிநரம்புகள்[3] என்பர். அவ்விரண்டும் ஒன்றுக்கொன்று நெருங்கின், அவற்றில் காற்றுப்படும்போது நாதமும், அதனால் கோஷமும்[4] உண்டாகும். அவை நெருங்காது இருப்பின்,

1. உந்திமுதலா முந்துவளி தோன்றித்
தலையினு மிடற்றினு நெஞ்சினு நிலைஇப்
பல்லு மிதழு நாவு மூக்கும்
அண்ணமு முளப்பட வெண்முறை நிலையான்
உறுப்புற் றமைய நெறிப்பட நாடி
எல்லா வெழுத்துஞ் சொல்லுங் காலைப்
பிறப்பி னுக்கம் வேறுவே றியல
திறப்படத் தெரியுங் காட்சியான (தொல். எழுத். 83)

2. கொப்பூழ் என்பது தற்போது தொப்புள் என வழங்கு கின்றது.

3. Vocal chords.

4. கோஷம் = घोषः = Voice,

காற்றுத் தடையின்றிச் செல்லுதலால் நாதமும் கோஷமும் உண்டாகா. காற்று எழுத்தாக மாறுவதற்கு மாறுபாட்டையும் முதலிடம் இவ்விடமேயாகும். வாயிலுள்ள நாக்கு, அண்ணம் பல் இவற்றைப் பலவிதமாக ஒற்றியோ, ஒற்றியும் ஒற்றாமலும் இருந்தோ, நெருங்கியோ நின்று பலவிதமான எழுத்துக்களை உண்டுபண்ணுகின்றது. மேல்வாய்ப் பற்களும் கீழுதடும் சேர்ந்தும், உதடுகள் இரண்டும் நெருங்கியும், சேர்ந்தும் பலவிதமாக நின்று பல எழுத்துக்களை உண்டுபண்ணுகின்றன. வாயிலுள்ள உறுப்புக்கள் வேலை செய்யுங்காலத்திலே சிறிது காற்று மூக்குவழிச் செல்ல, அப்போது சில எழுத்துக்கள் உண்டாகின்றன.

இவ்வெழுத்துக்கள் ஒலிக்கும் முறையில் காலக்கிரமத்தில் சிறிது மாறுபாடு அடையும். அக்காரணம்பற்றியே ஓர் ஒலியைக் குறிக்க ஒரு காலத்திற் கொள்ளப்பட்ட வடிவெழுத்து[1] மற்றொரு காலத்திற் பயன்படுவதில்லை. உதாரணமாகத் தமிழ் மொழியில் இப்போது க என்ற எழுத்தை[2] க, ஹ, ஙு என மூன்றுவிதமாக ஒலிக்கிறோம். அக்குறி ஏற்பட்ட காலத்தில் க என்றே ஒலிக்கப்பட்டது. ஆகலின் ஒவ்வொரு மொழியை யும் அம்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டாரிடமே கற்றல் நன்று.

**எழுத்தின் வகை:** வாய் முழுவதும் திறக்கப்பட, சில எழுத்துக்கள் உண்டாகும். அவற்றிற்கு உயிரெழுத்து[3] எனப் பெயர். அவற்றை வடமொழியில் ஸ்வரம் என்பர். ஸ்வரம்

1. Symbol.
2. எழுப்பப்படுவதால் எழுத்து எனவும், எழுதப்படுவதால் எழுத்து எனவும் எழுத்து என்ற சொல்லின் வ்யுத்பத்தி நிமித்தம் இருவகைப்படும். முன்னது ஒலியெழுத்திற்கும் பின்னது வடிவெழுத்திற்கும் பொருந்தும்.
3. உயிரெழுத்து = स्वरः = Sonant.

என்பதற்குப் பிற உதவியின்றித் தானே ஒலிப்பது என்பது பொருள்.[1] அவ்வாறு இல்லாமல் வாய் முழுவதும் மூடப்படவோ சிறிது மூடப்பட்டு சிறிது திறக்கப்படவோ சில எழுத்துக்கள் உண்டாகும். அவற்றிற்கு மெய்யெழுத்து[2] எனப் பெயர். அவற்றை வடமொழியில் வ்யஞ்சனம் என்பர். வ்யஞ்சனம் என்பதற்குப் பிற உதவியால் வெளிப்படுத்தப்படுவது என்பது பொருள்.[1] பாணினியாசிரியர் தம் நூலில் சூத்திரங்களைச் சுருக்கிக் கூறக்கொண்ட உபாயத்தால் ஸ்வரம், வ்யஞ்சனம் இவற்றை அச்,[3] ஹல்[4] என்ற குறிகளால் வழங்குகின்றனர்.

**உயிரின் வகை:** உயிர்களைத் தனியுயிர்,[5]

1. स्वयं राजन्ते इति स्वराः, अन्वग्भवति व्यञ्जनमिति (महाभाष्ये — उच्चैरुदात्तः इत्यत्र)
2. மெய்யெழுத்து = व्यञ्जनम् = Consonant.
3. अच्
4. हल्
5. தனியுயிர் = समानाक्षरम् = Simple vowel.
   अ, आ, इ, ई, उ, ऊ, ऋ, ॠ, ऌ, ॡ, இவையத்தனையும் ஸமானாக்ஷரம் எனக் கூறினர் என்று கையடர் एओङ् ஸூத்ர-மஹாபாஷ்ய உரையிற் கூறினர். ஆனால் சௌனக ப்ராதிசாக்யத்தில் முதல் எட்டுமே ஸமானாக்ஷரம் எனப் பட்டது.

   [*Cf.* अष्टौ समानाक्षराण्यादितः (ऋ. प्रा.)]

   அவ்வாறு அவர் கொண்டதற்குக் காரணம் ऌ மொழிக்கு முதலிலும் இறுதியிலும் வாராமையால் ஸந்திகார்யம் பெறாது என்ற கருத்தேபோலும்.

   [*Cf.* पदाद्यन्तयोर्न ऌकारः स्वरेषु (ऋ. प्रा.)]

   தைத்திரீய ப்ராதிசாக்யம் முதல் ஒன்பதை ஸமானாக்ஷரம் என்கின்றது.

   [*Cf.* अथ नव आदितः समानाक्षराणि 1, 1, 2]

   இங்கு ऋ முதலிய நான்கும் மெய்யுயிர் எனக் கூறப் பட்டமையான், அவற்றைத் தவிர்த்து ஏனைய எழுத்துக் களே அக்குறியால் வழங்கும்.

ஸந்தியுயிர்,[1] மெய்யுயிர்,[2] என மூவகையாகவும், ஒவ்வொன்றையும் நெடில், குறில் என இருவகையாகவும் பிரிக்கலாம். அவை ஒவ்வொரு நிலையிலும் (இண்டோயூரோபியன்மொழிநிலை, வைதிகமொழிநிலை, இதிஹாஸமொழிநிலை, ப்ராகிருதமொழிநிலை, தற்காலமொழிநிலை) எவ்வாறு இருந்தன என்பதும், அவை ஒரு நிலையிலிருந்து வேறொரு நிலையில் எவ்வாறு மாறுபட்டன என்பதும் பின்னர்க் கூறப்படும்.

### இண்டோயூரோபியன்மொழிநிலை :[3]

*தனியுயிர் :—*

குறில் a, i, u, e, o[4] ŏ
நெடில் ā, ī, ū, ē, ō[5]

1. ஸந்தியுயிர் = सन्ध्यक्षरम् = समाहारवर्णः = Diphthong.
வாயினுள் ஓரிடத்தில் தொடங்கி மற்றோரிடத்தில் முடிவு பெற ஒலிக்கப்படும் எழுத்திற்கு ஸந்தியுயிர் எனப் பெயர் என்பர் கிராப். (Graff-Language p. 70). இரண்டு உயிர்கள் சேர்ந்து ஒலிக்கப்பட ஸந்தியுயிர் உண்டாகும் எனக் கொண்டனர் மஹாபாஷ்யகாரர் என்பது ऐ, औ இவற்றை समाहारवर्णौ என அவர் கூறுவதால் விளங்கும். பிராதிசாக்யங்களில் ऐ, औ இவற்றின் முற்பகுதி அரை மாத்திரை கொண்ட अ என்றும் பிற்பகுதி ஒன்றரை மாத்திரை கொண்ட इ என்றும் கூறப்பட்டது காண்க.
अकारार्धमैकारौकारयोरादिः (तै. प्रा. 2, 26).
इकारोध्यर्धः पूर्वस्य शेषः, उकारस्तूत्तरस्य (*ibid* 2, 28.)
ऐचोश्चोत्तरभूयस्त्वात् (वा. प्रा. & महाभाष्ये – ए ओङ्)
2. மெய்யுயிர் = व्यञ्जनस्वरम् = Vocalic.
மெய்யின் ஒரு பகுதி கலந்த உயிர் மெய்யுயிர் எனப்படும்.
3. இந்நிலையில் இருந்த எழுத்துக்களுள் பல வைதிகமொழிநிலையில் இல்லாதிருப்பதால் அவற்றைக் குறிக்க ரோமன் (Roman) எழுத்துக்களே இங்கு வழங்கப்பட்டன.

4 & 5. See the next page foot note.

ஸந்தியுயிர் :—

குறில் ai, ei, oi, au, eu, ou [1]

நெடில் āi, ēi, ōi, āu, ēu, ōu [2]

4. a = அ = अ

i = இ = इ

u = உ = उ

e = எ

o = ஒ

ə = ஒருவர்க்கு மனத்துள்ள கருத்திற்குத் தகுந்த சொற்கள் வாராதபோது ஒலிக்கும் ஒலி. அதனை ந்யூட்ரல் வௌவல் (**neutral vowel**) என்பர்.

5. ā = ஆ = आ

ī = ஈ = ई

ū = ஊ = ऊ

ē = ஏ

இதனை வடமொழி ए ஆல் குறித்தல் தகாது, அது தனியுயிரல்லாததால்.

ō = ஓ

இதனை வடமொழி ओ ஆல் குறித்தல் தகாது, அதுவும் தனியுயிரல்லாததால்.

1. ai = அஇ = ए

ei = எஇ

oi = ஒஇ

au = அஉ = ओ

eu = எஉ

ou = ஒஉ

2. āi = ஆஇ = ऐ

ēi = ஏஇ

ōi = ஓஇ

āu = ஆஉ = औ

ēu = ஏஉ

ōu = ஓஉ

*மெய்யுயிர் :—*

குறில் ṛ, ḷ, ṃ, ṇ[1]

நெடில் ṝ, ḹ, ṃ̄, ṇ̄[2]

**வைதிகமொழிநிலை :**

*தனியுயிர் :—*

குறில் अ, इ, उ

நெடில் आ, ई, ऊ

*ஸந்தியுயிர் :—*

நெடில் ए, ओ[3] ऐ, औ[1]

1. ṛ = ऋ = ரேபப்பகுதியோடு கூடிய உயிர்.
   *Cf*. रेफोस्त्यृकारे च ... (ऋ प्रा॰ 13)
   ḷ = ऌ = லகரப்பகுதியோடு கூடிய உயிர்.
   ṃ = மகரப்பகுதியோடு கூடிய உயிர்.
   ṇ = நகரப்பகுதியோடு கூடிய உயிர்.

2. ṝ = ॠ
   ḹ = ॡ
   ṃ̄ = மகரப்பகுதியோடு கூடிய நெட்டுயிர்.
   ṇ̄ = நகரப்பகுதியோடு கூடிய நெட்டுயிர்.

3. ए, ओ இவற்றிற்கு இரண்டு மாத்திரையே [illegible] பெரும்பான்மையும் இருத்தலின், அவற்றை நெடிலாகவே கொண்டனர் இலக்கணக்காரர். ए, ओ [illegible] தின் ஸாத்யமுக்ரி ராணாயனீய சாகையினர் ஒரு [illegible] யாகவும் ஒலிக்கப்படும் என்பர் மஹாபாஷ்யகாரர்.
   छन्दोगानां सात्यमुग्रिराणायनीया अर्द्धमेकारमर्द्धमोकारं चाधीयते (महाभाष्य 1—1—2 एओङ्)
   இவை ஸந்திகார்யங்களில் अय्, अव् என மாறுவதால் அவற்றை ஸந்தியுயிர் எனக் கொள்ளவேண்டியிருப்பினும்,

மெய்யுயிர் :—

குறில் ऋ, ऌ

நெடில் ॠ, ॡ

**உயிர் பிறக்கும் இடம்** : இவ்வுயிர்கள் வெவ்வேறு இடங்களிற் பிறக்கும் என்பர். अ, आ[1] இவ்விரண்டும் கண்டத்திலும்

உச்சாரணத்தில் அவை தனியுயிர் போன்றே உள்ளன. அக்காரணம்பற்றியே ऐ, औ இவற்றை ஸமாஹார வர்ணங்கள் எனக் கூறிய மஹாபாஷ்யகாரர் ए, ओ இவ் விரண்டையும் அவ்வாறு கூறவில்லைபோலும்.

4. ऐ, औ இவ்விரண்டின் உச்சாரணம் பலவகையாய் இருந்தது எனத் தெரிகிறது. ஸந்திகார்யத்தில் அவை आय्, आव् எனத் திரிகின்றமையான், அவை தொடக்கத்தில் आइ, आउ என ஒலிக்கப்பட்டிருத்தல் வேண்டும். அக்காரணம் பற்றியே மொழிநூல்வல்லோர் இண்டோயூரோபீயன் āi āu என்பனவும் வடமொழி ऐ, औ என்பனவும் ஒன்றெனக் கொண்டனர்.

ப்ராதிசாக்யங்களில் அவை अ $(\frac{1}{2})$ इ $(1\frac{1}{2})$, अ $(\frac{1}{2})$ उ$(1\frac{1}{2})$ ஆக ஒலிக்கப்பட்டன எனக் கூறப்பட்டது: அதாவது அகரம் அரை மாத்திரையாகவும் இகர உகாரங்கள் $1\frac{1}{2}$ மாத்திரையாகவும் ஒலிக்கப்பட்டன என்பது. மஹாபாஷ்யத்தில் அக்கொள்கையைக் கூறுவதுடன், அகரம் ஒரு மாத்திரையாகவும், இகரவுகாரங்கள் ஒரு மாத்திரையாகவும் ஒலிக்கப்பட்டன எனக் கூறப்பட்டுளது. இறுதியிற் கூறப்பட்ட உச்சாரணம் திராவிடமொழிக்கலப்பால் உண்டாயிற்றோ என ஐயம் உண்டாகின்றது. ஏனெனில் தமிழில் ஐ, ஔ என்பன அஇ, அஉ என ஒலிக்கப் பட்டன என.

அகர இகர ஐகார மாகும் (தொல். எழுத்.)

அகர உகர ஔகார மாகும் (*ibid.*)

என்ற தொல்காப்பியச்சூத்திரங்கள் கூறும்.

1. कण्ठ्यः आकारः (ऋ. प्रा. 1, 8)

इ, ई, ए, ऐ இவை இடையண்ணமும் இடைநாவும் நெருங்கும் இடத்திலும்[1] उ, ऊ, ओ, औ[2] இவை குவிந்த இதழின் கண்ணும் பிறக்கும் எனப் பிராதிசாக்கியங்கள் கூறும். ஆனால் ए, ऐ இவ்விரண்டிற்கும் இடம் கண்டதாலு[3] என்றும், ओ, औ இவ்விரண்டிற்கும் கண்டோஷ்டம்[4] என்றும் பாணினிசிக்ஷை கூறும்.

ஸ்வரம் : ஒவ்வொரு உயிரும் உயர்த்தியும், நடுத்தரமாகவும், இறக்கியும் ஒலிக்கப்படலாம். அவற்றிற்கு உதாத்தம்[5] ஸ்வரிதம்,[6] அநுதாத்தம்[7] எனப் பெயர். ஒவ்வொன்றும் மூக்கோடு கலந்தும் கலவாதும் ஒலிக்கப்படலாம்; அப்போது அவற்றிற்கு அநுநாஸிகம்,[8] அநநுநாஸிகம்[9] எனப்பெயர்.

உயிரின் மாத்திரை : अ, इ, उ, ऋ, ऌ இவ்வைந்தும் ஒலிக்குங் காலத்தை மாத்திரை என்பர். அது கண்ணிமைக்குங் காலம் விரல் நொடிக்குங் காலமும் ஆகும் என்பர் இலக்கணக் காரர். அக்காலத்தைப்போல் இரண்டு பங்கு காலம் आ, ई, ऊ, ॠ, ए, ऐ, ओ, औ கொள்ளும் என்பர். அக்காரணத்தாலே

1. तालव्या एकारचकारवर्गाविकारैकारः शकारः (*ibid* 1, 19)
तालौ जिह्वामध्यमिवर्णे (तै. प्रा. 2, 22)
एकारे च (*ibid* 2, 23)
2. ओष्ठोपसंहार उवर्णे (*ibid* 2, 24)
ओकारे च (*ibid* 2, 23)
औष्ठौ तूपसंहततरौ (2, 13-14)
3-4 ए, ऐ तु कण्ठतालव्या ओ औ कण्ठोष्ठजौ स्मृता (18)
5. उदात्तः
6. स्वरितः
7. अनुदात्तः
8. अनुनासिकः = Nasal sound
9. अननुनासिकः

இவற்றிற்கு நெடில் எனப் பெயர். தூரத்திலுள்ளோரைக் கூப்பிட நேரின், உயிர்கள் மூன்று மாத்திரையும் நான்கு மாத்திரையும் பெறும் என்பர்.[1] அவற்றிற்கு ப்லுதம்[2] எனப் பெயர்.

இண்டோயூரோபியன்மொழிநிலையில் 31 உயிர்கள் இருந்திருக்க, வைதிகமொழிநிலையில் 13 உயிர்களே உள்ளன. அப்போது மற்ற உயிர்கள் வைதிகமொழிநிலையில் எவ்வாறாக மாறின என்பதை அறிதல் அவசியமாகும். அதனைக் கூறுவதற்கு முன்னர் மெய்யின் வகையைக் கூறுதல் பொருந்தும்.

**மெய்யின் வகுப்பு :** மெய்களைப் பல்வகையாய் வகுத்தல் கூடும். அவை பிறக்கும் இடத்தைக்கொண்டு வகுப்பது ஒன்று ; அவற்றை ஒலிக்கும்போது வாய் முற்றும் திறவாதிருத்தல், சிறிது திறவாதிருத்தல், சிறிது திறந்திருத்தல் முதலியவற்றைக்கொண்டு வகுப்பது இரண்டாவது ; இவ்வாறு இருத்தலை உள்முயற்சி அல்லது ஆப்யந்தரப்ரயத்னம்[3] என்பர். அவற்றை ஒலிக்கும்போது ஒலிநரம்புகள் நெருங்கியிருத்தலும் விட்டிருத்தலும் கொண்டு வகுப்பது மூன்றாவது ; அவற்றை ஒலிக்கும்போது வெளிப்படுங் காற்றின்மிகுதி, குறைவு இவற்றைக்கொண்டு வகுப்பது நான்காவது ; அவற்றை ஒலிக்கும்போது காற்றின் ஒரு பகுதி வாய்வழியாகவும் மற்றொரு பகுதி மூக்கு வழியாகவும் செல்லுதலைக்கொண்டு வகுப்பது ஐந்தாவது.

**பிறக்குமிடவகுப்பு :** இரண்டு இதழ்களும் ஒன்றுக்கொன்று இயைந்து பிறப்பனவற்றை இதழ்மெய்[4] என்றும், மேல்வாய்ப்

1. इष्यत एव चतुर्मात्रः प्लुतः (महाभाष्ये Keil. Edn. 3, 421, 13 & 14)
2. प्लुतः
3. आभ्यन्तरप्रयत्नः
4. இதழ்மெய் = ओष्ठ्यम् व्यञ्जनम् = Labial consonant.

பல்லும் கீழுதடும் இயையப் பிறப்பனவற்றை பல்லிதழ்மெய் [1] என்றும், நாநுனி பரந்து மேல்வாய்ப்பல்லின் பின்புறத்தை ஒற்றப் பிறப்பனவற்றைப் பல்மெய் [2] என்றும், நாநுனி அண்ணத்தின் நுனியை ஒற்றப் பிறப்பனவற்றை அண்ணநுனிமெய் [3] என்றும், நா வளைந்து நுனிமடித்து அண்ணத்தின் உச்சியை ஒற்றப் பிறப்பனவற்றை உச்சியண்ணமெய் அல்லது தலைமெய் [4] என்றும், நாவின் இடை அதற்கு நேராயுள்ள அண்ணத்தின் இடையில் ஒற்றப் பிறப்பனவற்றை இடையண்ணமெய் [5] என்றும், நாவின் அடி அண்ணத்தின் அடியை ஒற்றப்பிறப்பனவற்றை கண்டமெய் [6] என்றும், உள்நாக்கின் பக்கத்திற் பிறப்பனவற்றை உள்நாமெய் [7]

1. பல்லிதழ்மெய் = दन्तोष्ठ्यम् व्यञ्जनम् = Labio-dental consonant.
2. பல்மெய் = दन्त्य व्यञ्जनम् = Dental-consonant.
   *Cf.* जिह्वाग्रेण तवर्गे दन्तमूलेषु (तै. प्रा. 2, 38)
   दन्त्यानां जिह्वाग्रं प्रस्तीर्णम् (*ibid*, 1, 24)
3. அண்ணநுனிமெய் = Alveolar consonant.
4. தலைமெய் = मूर्धन्यं व्यञ्जनम् = Cerebral consonant. இதனைப் பண்டையமொழிநூல்வல்லோர் Lingual consonant என்ற குறியால் வழங்கினர். அண்ணத்தின் உச்சி தலைக்குப் பக்கத்தில் உள்ளதால் தலைமெய் எனப் பெயரிட்டனர் என்னலாம்.
   *Cf.* जिह्वाग्रेण प्रतिवेष्ट्य मूर्धनि टवर्गे (तै. प्रा. 2, 37)
5. இடையண்ணமெய் = तालव्यं व्यञ्जनम् = Palatal consonant நாக்கு அண்ணத்தின் பல்லிடங்களை ஒற்ற. பல மெய்கள் உண்டாயினும், ஏனையவற்றிற்குச் சிறப்புப்பெயர் இட்டமையால், இம்மெய்களை அண்ணமெய் என்றே கூறினர்.
   *Cf.* तालौ जिह्वामध्येन चवर्गे (तै. प्रा. 2, 36)
   तालव्यानां मध्यजिह्वम् (अ. प्रा. 1, 21)
6. கண்டமெய் = कण्ठ्यं व्यञ्जनम् = Guttural consonant.
7. உள்நாமெய் = Velar consonant.

என்றுங் கூறல் தகும். உள்நாமெய் இதழ் குவிந்தும் இதழ் குவியாமலும் பிறக்கலாம். அவற்றை முறையே இதழ்குவியுள் நாமெய்[1] என்றும், இதழ்குவியாவுள்நாமெய்[2] என்றுங் கூறலாம். சில மெய்கள் இடையண்ணமெய்க்குச் சிறிது பின்னரும் கண்ட மெய்க்கு முன்னரும் பிறக்கும். அவற்றிற்கு நடுகண்டமெய்[3] எனப் பெயர் கூறுவர்.

உள்முயற்சிவகுப்பு : சில மெய்களை ஒலிக்கும்போது வாய் முற்றிலும் மூடியிருக்கும். அதற்குக் காரணம் வாயிலுள்ள இரண்டு உறுப்புக்கள் நெருங்கி இயைவதே ஆகும். ஆகலின் அவற்றிற்கு ஸ்பர்சம்[4] எனப் பெயரிட்டனர் வடமொழியிலக்கண வாசிரியர். அப்போது காற்று முற்றிலும் தடைபடும்; அக் காரணம்பற்றி அவற்றிற்கு ஸ்டாப்[5] எனப் பெயரிட்டனர் மொழிநூல்வல்லோர். அப்போது அவ்வொலி பிறர்க்குப் புலன் படாது; அக்காரணம்பற்றி அவற்றை ம்யூட்[6] எனக்குறித்தனர். அவற்றின்பின்னர் உயிர் ஒலிக்கப்படும்பொழுது அடைபற்ற காற்று படேர் என வெளியில் வருமாகையால், அவற்றை எக்ஸ்ப்ளோஸிவ்[7] எனவுங் குறித்தனர். அதன் ஏகதேசமாகிய ப்ளோஸிவ்[8] என்பதாலும் அவற்றைக் குறித்தனர். தற்போது எக்ஸ்ப்ளோஸிவ் என்பதே பெரும்பாலும் வழக்கில் உள்ளது. வாய் அதிகமாய்த் திறந்தும் சிறிது திறவாமலும் இருக்கச் சில ஒலிகள் உண்டாகும். அவை உயிர்க்கும் ஸ்பர்சத்திற்கும்

1. இதழ்குவியுள்நாமெய் = Labialised velar consonant.
2. இதழ்குவியாவுள்நாமெய் = Pure velar consonant.
3. நடுகண்டமெய் = Middle guttural consonant.
4. ஸ்பர்சம் = स्पर्श:
5. Stop.
6. Mute.
7. Explosive.
8. Plosive.

இடையில் இருக்கின்றமையான், அவற்றை இடைமெய்[1] எனக் கூறலாம். அவற்றை அந்தஸ்தம் என வடமொழியிலக்கண வாசிரியரும், ஸெமிவோவல் என மொழிநூல்வல்லோருங் கூறுவர். வாய் பெரும்பாலும் மூடப்பட்டு சிறிது திறந் திருப்பின், காற்று வாயுறுப்புக்களில் உராய்க்கொண்டு வெளி வரும்; அக்காரணம்பற்றி அவற்றிற்கு ப்ரிகேடிவ்[2] எனப் பெயரிட்டனர் தற்காலத்து மொழிநூல்வல்லோர்; அவற்றை ஸிபிலேண்ட்[3] என்ற குறியாற் கொண்டனர் பழையமொழிநூல் வல்லோர். உராயும்பொழுது சூடு உண்டாகுமாகையால், அவற்றை ஊஷ்மா[1] என்ற குறியாற் கொண்டனர் வடமொழி யிலக்கணவாசிரியர். இவற்றைச் சூடுமெய் அல்லது உராய்மெய் எனக் கூறல் தகும். இடைமெய், உராய்மெய் இரண்டையும் ஒலிக்கும்போது உயிரை ஒலிப்பதுபோல் வாய் திறந்தும் ஸ்பர்சத்தை ஒலிப்பதுபோல் வாய் மூடியும் இருக்குங் காரணம்பற்றி இரண்டையும் இடைமெய் எனக் குறியிடத்தகு மாயினும், உராய்தல்சிறப்புநோக்கி அவற்றுள் சிலவற்றிற்கு உராய்மெய் எனச் சிறப்புப்பெயர் இட்டமையால், அவற்றை நீக்கி ஏனைய மெய்களிற்கே இடைமெய் எனக்குறி இடப்பட்டது என்க.

1. இடைமெய் = अन्तस्थं व्यञ्जनम् = Semi-vowel.
   இடைமெய் என்பதை உயிர்ப்பாதிமெய் என்பதன் ஏகதேசம் எனக் கொள்ளல்வேண்டும். அதற்கு semi-consonant எனக் கூறாது semi-vowel என்று ஆங்கில வாசிரியர் கூறினர் எனின், மெய் தனிமையாய் ஒலிக்கப் படாமையானும் உயிர் தனிமையாய் ஒலிக்கப்படுகின்றமை யானும், இம்மெய்கள் தனிமையாய் ஒலிக்கப்படச் சிறிது தகுதியுடைமையானும் அவ்வாறு கூறினர் என்னலாம்.
2. Fricative.
3. Sibilant.
4. ऊष्मा

ஒலிநரம்புநிலைவகுப்பு : ஒலிநரம்புகள் நெருங்கியிருப்பின் காற்று அவற்றில் அடிக்க நாதமும் கோஷமும் உண்டாகும். அம்மெய்களைக் கோஷமெய் [1] எனக் கூறலாம். அவை இடைவிட்டிருப்பின் கோஷம் உண்டாகாது. கோஷமற்ற மெய்களை அகோஷமெய் [2] என்னலாம். இவற்றை முறையே வாய்ஸ்ட் மெய் [3] வாய்ஸ்லெஸ் மெய் [4] என்று மொழிநூல்வல்லோர் கூறுவர்.

காற்றுமிகுதிக்குறைவுவகுப்பு : சில மெய்களை ஒலிக்கும் போது மிகுதியான காற்றும், சிலவற்றை ஒலிக்கும்போது குறைவான காற்றும் வேண்டியிருக்கும். அவற்றை முறையே மஹாப்ராணன், [5] அல்பப்பிராணன் [6] என்ற குறிகளால் வழங்குவர்.

காற்றுசெல்வழிப்பகுப்பு : சிறிது காற்று வாயாலும், சிறிது காற்று மூக்காலுஞ் செல்லுமாறு ஒலிக்கப்படும் மெய்யை அநுநாஸிகமெய் என்பர். அம்மெய்கள் கண்ட்யாநுநாஸிகம், [7] தாலவ்யாநுநாஸிகம், [8] மூர்த்தந்யாநுநாஸிகம், [9] தந்த்யாநுநாஸிகம் [10] ஓஷ்ட்யாநுநாஸிகம் [11] என ஐவகைப்படும்.

1. घोषवद्व्यञ्जनम्
2. अघोषवद्व्यञ्जनम्
3. Voiced consonant. (Medium consonant.)
4. Voiceless consonant. (Tenue consonant.)
5. महाप्राणः = Aspirated consonant.
6. अल्पप्राणः = Unaspirated consonant.
7. कण्ठ्यानुनासिकः
8. तालव्यानुनासिकः
9. मूर्धन्यानुनासिकः
10. दन्त्यानुनासिकः
11. ओष्ठ्यानुनासिकः

மொழிநிலை : இண்டோயூரோபீயன்மொழிநிலையிலுள்

மெய்வகை :

| | இதழ்மெய் | பல்லிதழ் மெய் | பல்மெய் | இடையண்ண மெய் | உள்நாமெய்: இதழ்குவியா மெய் | உள்நாமெய்: இதழ்குவி மெய் |
|---|---|---|---|---|---|---|
| **ஸ்பர்சம் —** | | | | | | |
| அகோஷமல்பப்பிராணன் : | p | | t | k̂ | q | $q^w$ |
| அகோஷமஹாப்பிராணன் : | ph | | th | k̂h | qh | $q^wh$ |
| கோஷமல்பப்பிராணன் : | b | | d | ǵ | Ç | $Ç^w$ |
| கோஷமஹாப்பிராணன் : | bh | | dh | ǵh | Çh | $Ç^wh$ |
| **ஊஷ்மா —** | | | | | | |
| அகோஷம் : | | | s, þ, þh | | γ | |
| கோஷம் : | | v, | z, ð, ðh | j | | |
| அநுநாஸிகம் : | m | | n | ñ | ŋ | |
| இடைமெய் : | u̯ | | l, r[1] | i̯ | | |

1. **l, r** இவற்றை லிக்விட் (**liquid**) என்ற குறியாற் கூறுவர்.

## வைதிகமொழிநிலை :

| | இதழ்மெய் | பல்லிதழ் மெய் | பல்மெய் | உச்சியண்ண மெய் | இடையண்ண மெய் | கண்டமெய் |
|---|---|---|---|---|---|---|
| **ஸ்பர்சம் —** | | | | | | |
| அகோஷமல்பப்பிராணன் : | प्(p) | | त् (t) | ट् (ṭ) | च् (c) | क् (k) |
| அகோஷமஹாப்பிராணன் : | फ् (ph) | | थ् (th) | ठ् (ṭh) | छ् (ch) | ख् (kh) |
| கோஷமல்பப்பிராணன் : | ब् (b) | | द् (d) | ड् (ḍ) | ज् (j) | ग् (g) |
| கோஷமஹாப்பிராணன் : | भ् (bh) | | ध् (dh) | ढ् (ḍh) | झ् (jh) | घ् (gh) |
| **ஊஷ்மா —** | | | | | | |
| அகோஷம் : | | | स् (s) | ष् (ṣ) | श् (ś) | |
| கோஷம் : | | | | | | ह् (h) |
| அநுநாஸிகம் : | म् (m) | | न् (n) | ण् (ṇ) | ञ् (ñ) | ङ् (ṅ) |
| இடைமெய் : | | व्(v) | ल् (l) | र्(r) [1]<br>ळ् (ḷ)<br>ळ्ह् (ḷh) [2] | य् (y) | |

1. ரேபத்தைப் பல்மெய்யாகச் சிலரும் உச்சியண்ணமெய்யாகச் சிலருங் கொண்டனர்.

   *Cf.* (दन्तमूलीयस्सु) सकाररेफलकाराश्च (ऋ. प्रा.)
   रेफे जिह्वाग्रमध्येन प्रत्यग्दन्तमूलेभ्यः (तै. प्रा. 1, 1, 41)
   रेफं वर्त्स्यमेके (ऋ. प्रा.)

2. दृळ्हं चिदरुजो गव्यमूर्वम् (ऋ वे. 3, 32, 16)

இவற்றைத் தவிர்த்து அநுஸ்வாரம்,[1] விஸர்க்கம்,[2] விஸர்க்கத்தை ஒத்த ஜிஹ்வாமூலீயம்[3] உபத்மானீயம்[4] என்பன, ஐந்துவர்க்கங்களின் முதல் நான்கு மெய்களின் மாத்திரை நீட்டத்தைக் குறிக்க வழங்கும் யமம்[5] என்பன வைதிக மொழியில் புதிதாய்த் தோன்றிய எழுத்துக்கள் ஆகும்.[6] இவ்விரு-அட்டவணைகளிலிருந்து இண்டோயூரோபியன்மொழி நிலையிலும் வைதிகமொழிநிலையிலும் இதழ்மெய், பல்லிதழ்மெய், பல்மெய் இவை இருந்தன என்பதும், வைதிகமொழிநிலையில் உச்சியண்ணமெய் புதிதாய்த் தோன்றின என்பதும், இடையண்ணமெய் முன்னிலையிலிருந்து பின்னிலையிற் சிறிது மாறுபட்டன என்பதும், உள்நாமெய் வைதிகமொழிநிலையில் மறைந்தன என்பதும் அவற்றின் இடத்தில் கண்டமெய் தோன்றின என்பதும் அறியப்படும். ஊலன்பெக்[7] என்பவர் நடுக்கண்டமெய்[8] என்பவற்றைக் கொள்கின்றனர். அவற்றை ப்ரூக்மன்னும்[9] ரைட்டும்[10] கொள்ளவில்லை.

1. अनुस्वारः
2. विसर्गः
3. जिह्वामूलीयः
4. उपध्मानीयः
5. यमः
6. அநுஸ்வாரத்தை உயிராகவும் மெய்யாகவும் கொண்டு ஏனைய வற்றை மெய்யாகவே கொண்டு நான்கனையும் ஊஷ்மாக்களாகக் கொண்டனர் சௌனகர்.

   *Cf.* अनुस्वारो व्यञ्जनं वा स्वरो वा ।
   सर्वः शेषो व्यञ्जनान्येव ।
   उत्तरे अष्टा ऊष्माणः । (ऋ प्रा.)

   ஆனால் அநுஸ்வாரத்தையும் விஸர்க்கத்தையும் ஊஷ்மாக்களாகத் தைத்திரீயப்ராதிசாக்யம் கொள்ளவில்லை.

   *Cf.* परे षडूष्माणः (तै. प्रा. 1, 1, 9)
7. Uhlenbeck.
8. Middle gutturals k, kh, g, gh.
9. Brugmann.
10. Wright.

உயிர்மாறுபாடு: இண்டோயூரோபியன்மொழிநிலையிலுள்ள உயிர்கள் வைதிகமொழியில் எவ்வாறு மாறும் என்பதைக் கூறல் வேண்டும். அப்போது இரான், லத்தீன், கிரேக், முதலிய வற்றிலும் அவை எவ்வாறு மாறுபடுகின்றன என்பதைச் சிறிதேனும் அறிதலும் பயன்படும் என அவையும் இங்குக் கூறப்படும்.

குற்றுயிர்மாறுபாடு:

| இண்டோ யூரோபியன். | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன். | கிரேக். |
|---|---|---|---|---|
| a | अ | a | a | a |

உதாரணம்:

| | | | | |
|---|---|---|---|---|
| agró-s [1] | अज्र॑ः [2] | | ager | agròs |
| aĝō' | अजा॑मि [3] | agim | agō | agō |
| áks | अक्ष॑ः | | axis | agōn |
| ákro-s | अश्र॑ः | | | axros |
| añĝho-s | अंह॑ः [4] | | angus in angustus | |

1. உப்பியோ தாக்கியோ ஒலிக்கப்படும் एकाच् இண்டோ யூரோபியன் முதலிய மொழிகளில் ' என்ற குறியாற் குறிக்கப்படும். வைதிகமொழியில் அது ஒரு குறியாலுங் குறிக்கப்படாது; அநுதாத்தம் _ என்ற குறியாலும் ஸ்வரிதம் । என்ற குறியாலுங் குறிக்கப்படும்.
2. *Cf.* अज्रे॑ चिदस्मै कृणुथ (ऋ. वे. 8, 27, 18)
3. जा உதாத்தமாய் இருக்கவேண்டியிருக்க, अ வேதத்தில் உதாத்தமாயிற்று.
4. *Cf.* नैनमंहो॑ अश्नोति (ऋ. वे. 3, 59, 2)

| இண்டோ யூரோபியன். | வைதிக மொழி | பழைய இரான். | லத்தீன். | கிரேக். |
|---|---|---|---|---|
| anò | अनिति अनिलः | anim (soul) | animus | anemos (wind) |
| anti | अन्ति[1] (near) | | ante | anti |
| apò | अप[2] | | | apò |
| ĝhans | हंसः | | anser | |
| mad | मदामि | | madeō | madau |

i, u இவற்றோடு ஒரே ஸிலபில்[3] ஆகும் a வைதிகமொழியில் ए, ओ ஆகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| aidh | एधस् | | aedes | aitō |
| aug | ओजस् | | augustus | |
| i | इ | i | i(e) | i |
| i-més } i-mén } | इमः | | | i'men |
| diui' | दिवि | | | difi' |
| i-d | इदम् | | id | |
| óui-s | अविस् | | ovis | ois |
| esti | अस्ति | | est | esti |
| qi-s } qi-d } | चि चिद् | cith | quis | |
| idhi | इहि | | | iti |

1. *Cf.* अन्ति चित्सन्तमह यज्ञं मर्तस्य रिपोः (ऋ. वे. 8. 11. 4)
2. अपामीवां बाधते (ऋ. वे. 1, 35, 9)
3. ஸிலபில் = Syllable = एकाच्
   ஒரே ஸிலபில் = Tautosyllable.

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| u | उ | o(u) | u | u |
| dhug$^{ə}$tē(r) | दुहिता | | | tujátēr |
| jugó-m | युगम् | | jugum | |
| k̂unó-s | शुनः | | | xuon |
| k̂lutó-s | श्रुतः | | | xlutòs |
| rudhərò-s | रुधिरः | | | erutrós |
| suādù-s | स्वादुः | | | |

வைதிகமொழியில் श्रुणु என்பது शृणु என மாறியிருக்க வேண்டும் என்றும், அக்காரணம்பற்றி உகரத்தால் தொடரப் பட்ட रु, ऋ ஆக மாறும் எனக் கொள்ளவேண்டும் என்பர் ப்ருக்மன். शृणोति என்பதற்குச் சரியாய் இண்டோயூரோபியன் மொழியில் k̂-l̥neu-ti என இருந்திருக்கலாமாகலின் அவ்வாறு கொள்ளவேண்டாம் என்பர் ஊலன்பெக்.

| | | | | |
|---|---|---|---|---|
| e | अ | e, (i) | e, (o, i) | e |
| esti | अस्ति | | est | esti |
| é-bherom | अभरम् | | | eperon |
| bhérō | भरामि | | ferō | ferō |
| ĝénos | जनः [1] | | genus | |
| n$_{e}$bhos | नभः | | nebula | nepos |
| réǵo-s | रजस् [2] | | | |
| pé$_{ŋ}$qe | पञ्च [1] | | quinque | pente |

1. मित्राय पञ्च येमिरे जना अभिष्टिशवसे (ऋ. वे. 3, 59, 8)
2. विष्णोर्नु ...... यः पार्थिवानि विममे रजांसि (*ibid* 1, 154, 1)

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| qe | च | | que | te |
| qeru-s | चरुस् | | | |
| qutu̯ō'res | चत्वारः | | quatuor | |
| u̯eĝhō | वहामि | | vehō | fexō |
| u̯l̥'qos | वृकः | | | luke |

i̯, u̯ இவற்றோடு ஒரே ஒலியில் ஆகும் e வைதிக மொழியில் ए, ओ ஆகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| è̯iti | एति | | | eizi |
| ĝhei̯men | हेमन्[1] | | | xeima |
| bhéudhō | बोधामि | | | |
| o | a | a | o | o |
| ok̂tōu̯ } | अष्टौ[2] | | octō | oxtō |
| ok̂tō } | अष्टा | | | |
| opos | अपः[3] | | | |
| pótis | पतिः | | | pózis |
| pótnī | पत्नी | | | pótnia |

1. हेमतश्चक्षुषी वियात् (तै. आ. 1, 4, 2)
   हेमन् = மழைக்காலம்.
2. अष्टौ व्यख्यत्ककुभः पृथिव्याः (ऋ. वे. 1, 35, 8)
3. धत्त इन्द्रो नर्यपांसि कर्तवे (*ibid* 1, 85, 9)

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| próti | प्रति [1] | | | proti' |
| rothos | रथः [2] | | | |
| ul̥'qo-s | वृकः | | | luxos |
| bhéronti | भरन्ति | | | feronzi |
| dedórke | ददर्श | | | dedorxe |
| dómos | दमः [3] | | domus | domos |
| Chonos | घनः | | | fonos |
| moni-s | मणिः [4] | | | |

i, u இவற்றோடு ஒரே ஸிலபில் ஆகும் o வைதிக மொழியில் ए, ओ ஆகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| lelóiqa | रिरेच | | | leloipa |
| uóida | वेद | | | oida |
| bhebhóu-dha | बुबोध | | | |
| sūnóu-s | सूनोः | | | |

1. स इद्राजा प्रतिजन्यानि ...... (ऋ. वे. 4, 50, 7)
2. रथं हिरण्यप्रउगं वहन्तः (*ibid* 1, 35, 5)
3. वर्धमानं स्वे दमे (*ibid* 1, 1, 8)
4. முதலில் मनिः என்றிருந்து ப்ராகிருதபாஷையின் சேர்க்கையால் பின்னர் मणिः என்று ஆயிற்று என்பர்.

கிரேக்மொழியில் gonu, poda, ge-gon-a என்ற இடங்களில் o இருப்பதாலும், வைதிகமொழியில் जानु, पादम्, जजान என்ற இடங்களில் आ இருப்பதாலும், இண்டோ-யூரோபீயன்மொழியில் விவ்ருதமான o இருக்குமிடத்து வைதிகமொழியில் आ உம், ஸம்விருதமான o இருக்குமிடத்து வைதிகமொழியில் अ உம் வரும் என்பர் ப்ருக்மன். கிரேக் மொழியில் gōnia, pōs என்ற சொற்களில் ō இருப்பதால் அச்சொற்களோடு जानु, पादम् என்ற சொற்கள் இனச் சொற்கள் ஆகும் எனக் கொள்ளலாமாகலின், அக்கருத்து தனக்கு உடன்பாடன்று என்பர் ஊலன்பேக்.

| இ. யூ. | வை. | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| ə | i | a | a | a |
| pə-tér | पिता | athir | pater | patēr |
| sthətó-s | स्थितः | | | statós |
| anə- | अनिमि अनिलः | | | anemos |
| bherə-tróm | भरित्रम् | | feretrum | peretrom |
| ĝenə-tō(r) | जनिता | | | genétor |
| tə̆mə-ró-s | तिमिरः | | | |

இண்டோ-யூரோபீயன் மொழியிலுள்ள e காரத்தின் இடத்தில் வந்த अ உம், ā, ē, ō இவற்றினிடத்தில் வந்த आ உம் இருக்கும் ஏகாச் உதாத்தத்தை இழந்து அநுதாத்த மானல் அங்கு इ வரும்.[1] ஒரே ஸிலபில் ஆக வரும் əi, əu

1. இண்டோயூரோபீயன்மொழி தாது me; வைதிகமொழி தாது मा; आ உதாத்தம் இல்லாதிருக்க मितः என்னுமிடத்து इ ஆனதைக் காண்க. அவ்வாறே मितिः என்னுமிடத்தும்.

இவ்விரண்டும் ई, ऊ ஆக மாறும். இதழொலிகளோடு சேராது வரும் ər, əl இவ்விரண்டும் வைதிகமொழியில் உயிரின் முன்னர் इर्, इल् ஆகவும், மெய்யின்முன்னர் ईर् ஆகவும் மாறும்.

| | |
|---|---|
| Çəri′-s | गिरिः |
| Çərō′ | गिरामि |
| tərō′ | तिरामि |
| dəlghó-s | दीर्घः |
| k̂ərs | शीर्षन् |
| Çəl-s | गीर् |

இதழொலிகளோடு சேர்ந்துவரும் ər, əl இவ்விரண்டும் வைதிகமொழியில் உயிரின் முன்னர் उर् ஆகவும், மெய்யின் முன்னர் ऊर् ஆகவும் மாறும்.

| | |
|---|---|
| pəlú-s | पुरु |
| sphərō′ | स्फुरामि |
| Çeru-s | गुरुः |
| u̯ərdhu̯ó-s | ऊर्ध्वः |
| u̯əmi′-s | ऊर्मिः |
| uəlnā′ | ऊर्णा |
| pəru̯o-s | पूर्वः |
| pəlnó-s | पूर्णः |
| məldhén | मूर्धन् |

நெட்டுயிர்மாறுபாடு :

| இ. ஐ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தின் | கிரேக் |
|---|---|---|---|---|
| ā | आ | ā | ā | ā(ē) |
| mātér | माता | māthir | māter | māter |
| bhrā'ter | भ्राता | | frāter | frāter |
| bhāghu-s | बाहुः | | | |
| ekuā | अश्वा | | | |
| iāgo-s | -yāja [1] | | | |

i, u இவற்றோடு ஒரே நிலையில் ஆகும் ā, வைதிக மொழியில் ऐ, औ ஆகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| nāu-s | नौः | | | |
| ī | ई | ī | ī | ī |
| Çīuó-s | जीवः | | vivus | βios |
| Çrīuā' | ग्रीवा | | | |
| pī'uen | पीवा | | | piōn |
| uīro-s | वीरः [2] | vīra | vīr | |

1. *Cf.* प्रयाजाः. தர்சபூர்ணமாஸத்தில் ஐந்து அங்கஹோமங்களுக்குப் பிரயாஜம் எனப் பெயர். यागः என்ற சொல்லில் ग அதிதேசத்தால் வந்தது என்க.

2. *Cf.* वीरा विदथेषु घृष्वयः (ऋ. वे. 1, 85, 1)

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| ū | ऊ | ū | ū | ū |
| dhūmó-s | धूमः | | fumus | thūmós |
| k̂ūro-s | शूरः | | | xūros |
| mūs [1] | मूः | | | |
| pū | पूयति | | | |
| nū [2] | नू | | | nūn |
| ē | आ | ī | ē | ē |
| ēd | आद् | | ēdimus | ededōs |
| rēĝ | rāj [4] | | | |
| mātē'r | माता | | | |

i̯, u̯ இவற்றோடு ஒரே ஸிலபில் ஆகும் ē, வைதிக மொழியில் ऐ, औ ஆகும்.

| | |
|---|---|
| é-dēik̂sm̥ | अदै'क्षम् |
| di̯ē'u-s | द्यौः |

1. இ. யூ. mūs தற்போது ஆங்கிலத்தில் mouse ஆகவும், இ. யூ. nū, now ஆகவும் வழங்குகின்றன.

2. முதல்வேற்றுமை ஒருமையில் राक् என்றிருக்கவேண்டியிருக்க राट् என இருத்தல் முறைமீறி வந்துள்ளது.

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| ō | आ | â | ō | ō |
| ōk̂ú-s | आशु | | ōciar | |
| ōmó-s | आमः | | | |
| dō'no-m | दानम् | | dōnum | |
| didōti | ददाति [1] | | | |
| ul̥'qōd | वृकाद् | | | |
| suéso(r) | स्वासा | | | |
| bhérō | भरामि | | ferō | ferō |

i̯, u̯ இவற்றோடு ஒரே ஸிலபில் ஆகும் ō வைதிக மொழியில் ऐ, औ ஆகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| ul̥qōis | वृकैः | | | |
| ǵōu̯-s | गौः | | | bous |
| sūnō'u̯ | सूनौ | | | |
| ōk̂tōu̯ | अष्टौ | | | |
| du̯ōu̯ | द्वौ | | | |

1. दिदाति என்று இருக்கவேண்டியிருக்க ददाति என்று இருக்கிறது.

यः शर्धते नानुददाति शृध्याम् (ऋ. वे. 2, 12, 10)

**மெய்யுயிர்மாறுபாடு** : *இண்டோயூரோபீயன்மொழிநிலையில் இருந்த ṛ, ḷ இவ்விரண்டும் ஒவ்வொரு கிளைமொழியிலும் எவ்வாறாக இருக்கின்றன என நிர்ணயிக்க முடியவில்லை என்பர். வைதிகமொழியில் அவ்விரண்டின் இடத்திலும்* **ऋ** *இருந்த தாகவே கொள்ளலாம்.* **क्लृप्** *தாதுவிலிருந்து வந்த* **क्लृप्तः** *முதலிய சொற்களில்* **ऌ** *இருக்கின்றதே எனின், அத்தாது* **कृप्** *எனவே கூறல் தகும்.*

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| ṛ'kþo-s | ऋक्षः | | ursus | arxtos |
| ṛ'sen | ऋषभः | | | arsen |
| pḷthú-s | पृथुः | | | platus |
| uḷ'qo-s | वृकः | | | |

*இண்டோ-யூரோபீயன் ṃ, ṇ இவ்விரண்டும் வைதிக மொழியில் இருவகையாக மாறின. மொழியின் ஈற்றிலும் அந்தஸ்தம் நீங்கிய மெய்யின் முன்னரும்* **अ** *ஆகவும், உயிர் அந்தஸ்தம் இவற்றின் முன்னர்* **अम्** *,* **अन्** *ஆகவும் மாறின.*

| | | | | |
|---|---|---|---|---|
| k̂ṃtó-m | शतम् | | centum | |
| dék̂ṃ | दश | | decem | dexa |
| Çṃtó-s | गतः | | | batos |
| Çṃti-s | गतिः | | | |
| Çṃsk̂heti | गच्छति | | | |
| sṃ- | सकृत् | | | |
| tṇtó-s | ततः | | tentus | danus |
| mṇtó-s | मतः | | -mentus | -matos |
| ṇ-mṛtó-s | अमृतः | | | ambrotos |

| இ. யூ. | வைதிக மொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| naún̥ | नव | | novem | |
| sm̥-ó-s | समः | | | amo |
| Çm̥-ó | गमामि | | | |
| Çm̥-iê't | गम्यात् | | | |
| tn̥-u-î | तन्वी | | | |
| tn̥-u | तनुः | | | |
| n̥-udro-s | अनुद्रः | | | |
| mn̥-ietai | मन्यते | | | |

வைதிகமொழியில் உள்ள सन्ति என்பது இண்டோ யூரோபீயன்மொழியில் sn̥ti ஆக இருந்தது என ப்ருக்மனும், senti ஆக இருந்தது என ஊலன்பெக்கும் கூறுவர்.

இண்டோயூரோபீயன்மொழியிலுள்ள m̥, n̥ என்பனவும் r̥, l̥ என்பனவும், உயிரோடுகூடிய m, n, r, l இவை உரப்பியொலிப்பதையோ தாக்கியொலிப்பதையோ இழக்க, உண்டாயிருத்தல் வேண்டும். அப்படியிருந்தும் பின்னர் அதிதேசத்தால் அவற்றைக் கொண்ட ஸிலபில் உரப்பியோ தாக்கியோ ஒலிக்கப்பட்டது காண்க.

உ-ம் :—septm̥', ul̥'qos.

இண்டோயூரோபீயன்மொழியில் r̥̄, l̥̄, m̥̄, n̥̄ இவை இருந்தனவா இல்லையா என்பதில் கொள்கைவேறுபாடுகள் உள. அதற்குச் சிறந்த காரணம் வைதிகமொழி முதலியவற்றில் இலக்கியம் முதலியவற்றின் வாயிலாக அவை இருந்தனவாக அறியக்கூடவில்லை என்பதே. ஆயினும் இண்டோயூரோபீயன்

மொழிநிலையிலுள்ள ṃ̄, ṇ̄ இவ்விரண்டும் வைதிகமொழியில் आ ஆக மாறின எனக் கூறி அதற்குக் கீழ்க்கண்ட உதாரணங் களைத் தந்தனர் ப்ருக்மன்.

உ-ம் :—

| இ. யூ. | வை. |
|---|---|
| Çṃ̄- | अगात, अगाम् , अगाः, अगात् . |
| ĝen | जातः |
| san | सातः |
| van | वातः |
| han | घातः |
| ĝṇ̄-nā-mi | जानामि |

अगाम् முதலியன இ. யூ. Çem இலிருந்து வந்தன வில்லை யென்றும், அவை Çā என்பதிலிருந்து வந்தன என்றும், அவ்வாறே सातः, वातः, घातः என்பனவும் என்றும், जातः என்பதில், जानाति என்பதன் அதிதேசத்தால், ज्ञ என்பதற்குப் பிரதியாக ज வந்தது என்றும், जानामि என்பதில் ज्ञ என்பதற்குப் பிரதியாக ज வேறினப்பட்டது என்றும் கூறி, இண்டோயூரோபியன்மொழியில் ṃ̄, ṇ̄ இவை இருந்தனவாகக் கூறுதல் பொருந்தாது என்பர் ஊலன்பெக்.

இண்டோயூரோபியன்மொழியில் இருந்த ṝ, ḹ இவ் விரண்டும் வைதிகமொழியில் ir, īr, ur, ūr என மாறின எனக் கூறுவர் ப்ருக்மன். அந்நான்கற்கும் மூலம் ə̀r, ə̀l என்பனவே எனக் கூறி, அவரது கொள்கையை மறுத்தனர் ஊலன்பெக்.

**அஜ்விபரிணமம்:** இண்டோயூரோபியன்மொழியி லிருந்து வந்த மொழிகளில் உயிரளவுமாறுதல் என்பது மிகுதி யாகக் காணப்படுகின்றது. அதனை வடமொழியில் அஜ்வி-பரிணமம்:[1] என்னலாம். அதற்கு க்ரிம்[2] அப்லௌட்[3] என்றும், ராஸ்க்[4] ஓம்லிட்[5] என்றும், ஸ்வீட்[6] க்ரடேஷன்[7] என்றும், யெஸ்பர்ஸன்[8] அபோபோனி[9] என்றும் பெயரிட்டனர்.

**அஜ்விபரிணமத்தின் சரிதை:** ஜர்மன்பாஷையில் springe என்ற தாதுவின் இறந்தகாலரூபம் முதலியவற்றில்—sprange, jesprungen — வெவ்வேறு உயிரைக் கண்டு, அதற்கு அப்லௌட் என, க்ரிம் பெயரிட்டனர். அவ்வாறு உயிர் வேறு பட்டதற்குவழங்குவோரின் மனத்தில் பொருள்வேறுபாட் டினைக் கொண்டதே ஆகும் எனவுங் கூறினர். அவ்வேறுபாடு பொருள்வேறுபாட்டாலன்று, விகுதியின் குறுக்கம் நீளம் முதலியவற்றாலே என, பாப்[10] கூறினர். ஒருக்கால் அவர் அவ்வாறு கூறியது ஹம்போல்டின்[11] கருத்தை ஒட்டி இருக்கலாம். ஸ்வரத்தின்[12] மாறுபாடே அம்மாறுபாட் டிற்குக் காரணம் என்றூர் பின்னோர்.

1. अज्विपरिणामः
2. Grimm
3. Ablaut
4. Rask
5. Omlyd
6. Sweet
7. Gradation
8. Jespersen
9. Apophony
10. Bopp
11. Humboldt
12. Accent

வினைப்பகுதியிலே தான் அஜ்விபரிணமம் உண்டு என க்ரீம் கொள்ள, அவ்வினையிலிருந்து வந்த பெயர்ப்பகுதியிலும் அஃது இருக்கலாம் என்றும், பகுதியிலேயன்றி விகுதியிலும் இருக்கலாம் என்றும் பின்னர் வந்த மொழிநூல்வல்லோர் கூறினர். அஃதோடு அவர் நில்லாது, அஜ்விபரிணமத்திற்குச் சிறந்த காரணம் ஸ்வரமே எனினும், சொற்களில் உயிர் குன்றுகை, சிலபகுதி குன்றுதல் காரணமாக உயிர் நீளுகை, காதின் இன்பங்கருதிச் செய்யுளில் உயிர் நீளுகை, அதிதேசத்தால் நீளுகை முதலியவற்றாலும் உயிரின் தன்மை மாறும் எனவுங் கண்டனர்.

வைதிகமொழியின் சொற்களிலுள்ள अ முன்னர் e, o ஆகவும் இருக்கலாம் எனக் கண்டபிறகு அஜ்விபரிணமத்தின் ரீதியில் வேறுபாட்டினைக் கண்டனர். தொடக்கத்தில் इ, उ என்பன ए ओ எனக் குணமாக[1] மாறின என்றும், அதன் பின்னர் ऐ औ என வ்ருத்தியாக[2] மாறின என்றும் கொள்கை இருந்தது. அக்கொள்கையையே பாணினியாசிரியர் கொண்டனர். மொழிநூல்வல்லோர் e, o இருக்கும் ஸிலபில் உரப்பியொலிப்பதையோ தூக்கியொலிப்பதையோ இழந்தால் அவை i, u முதலியனவாக மாறும் என்றும், அந்த ஸிலபில்கள் வலுப்பட விருத்தியாக மாறின என்றுங் கொண்டனர். ஆகலின் e, o இவற்றைக் கொண்டதை நார்மல் கிரேட்[3] என்றும், i, u முதலியவற்றைக் கொண்டதை வீக் கிரேட்[4] என்றும், வ்ருத்தியை ஸ்ட்ராங் கிரேட்[5] என்றுங் கூறினர். அன்றியும் தாதுக்கள் ஓரே ஸிலபில் கொண்டதாய்த் தான் இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை எனவுங் கண்டனர்.

1. गुण:
2. वृद्धि:
3. Normal grade
4. Weak grade
5. Strong grade

**அஜ்விபரிணமத்தின் இலக்கணம் :** ஒரே பொருளைக்கொண்ட தாதுக்களிலிருந்து வந்த பெயர் வினை இவற்றின் உருவங்களிலும், விகுதியுருவங்களிலும் உயிர் மாறுபடுகின்றது. அம்மாறுபாடு மாத்திரையாலும், பிறக்குமிடத்தாலும், ஸ்வர வேற்றுமையாலும் இருத்தல் கூடும். அதற்குக் காரணம் வைதிகமொழி முதலியன இண்டோயூரோபியன்மொழியை விட்டுப் பிரியாத காலத்தில் இருந்த ஒலிவிதிகளே ஆகும். அம்மாறுபடுகை அஜ்விபரிணமம் எனக் கூறப்படுகின்றது.

**தாதுக்களின் பகுப்பு :** தாதுக்கள் ஓருயிர்த்தாதுக்கள் ஈருயிர்த்தாதுக்கள் எனவும், ஒவ்வொன்றும் லகு,[1] குரு[2] எனவும் பிரிக்கப்படும். ஓருயிர்த்தாதுக்களில் நெட்டுயிரைக் கொண்டது குரு எனவும், குற்றுயிரைக்கொண்டது லகு எனவும் கூறப்படும் : ஈருயிர்த்தாதுக்களில் இரண்டு குற்றுயிரைக்கொண்டது லகு எனவும், முன்னுயிர் குறுகியும் பின்னுயிர் நீண்டும் கொண்டது குரு எனவுங் கூறப்படும்.

**உயிர்க்குறுகையும் உயிர்க்குன்றலும் :** ஒரு மொழியில் பிரதான ஸ்வரத்தை ஏற்காத உயிர்கள் குறுகும் அல்லது குன்றும். அவை வீக் கிரேட் கொண்டன என்று கூறப்

| | இ. யூ. | வை. |
|---|---|---|
| உ-ம் :— | es | अस्ति |
| | ei | एमि |
| | leiqe | |
| | pelē | |
| | genō | |
| | petā | |

1. लघुः
2. गुरुः

படுகின்றன. அவை ஸ்வரம் முற்றிலும் இல்லாதனவும், அப்பிரதமான ஸ்வரங் கொண்டனவும் என இருவகைப்படும். முற்கூற்றில் குற்றுயிர்களும் நெட்டுயிர்களும் குன்றும்; பிற்கூற்றில் குற்றுயிர்கள் சிறிது குறுகி, பின்னர் அந்நிலையையே அடைகின்றன; நெட்டுயிர்கள் நியூட்ரல்உயிர் (ə) ஆகின்றன; ei̯, eu̯, em, en, el, er இவற்றில் உள்ள உயிர் முற்றிலுங் குன்ற, பிற்பகுதிகள் மெய்யுயிர் ஆகின்றன.

குருவான அஜ்விபரிணமவகையில் நெட்டுயிர்கள் குன்றியோ, ə ஆக மாறியோ நிற்கின்றன; ēi̯, ōi̯, āi̯, ēu̯, ōu̯, āu̯ இவற்றிலுள்ள முற்பகுதி ə ஆக மாற əi̯, əu̯ இவ்விரண்டும் பின்னர் ī, ū ஆக மாறின.

**அஜ்விபரிணமவகை :** ஹீப்ஷ்மன்,[1] ப்ருக்மன், ரைட் முதலியோர் அஜ்விபரிணமத்தை எ-ஸீரீஸ்,[2] ஒ-ஸீரீஸ்,[3] அ-ஸீரீஸ்,[4] ஏ-ஸீரீஸ்,[5] ஓ-ஸீரீஸ்,[6] ஆ-ஸீரீஸ்[7] என அறுவகையாகப் பிரித்தனர். ஊலன்பெக் எ-ஸீரீஸ், ஏ-ஸீரீஸ், ஓ-ஸீரீஸ், ஆ-ஸீரீஸ் என நான்கு வகையாகப் பிரிக்கின்றனர். டி-ஸஸ்ஸூரே[8] ஏ-ஸீரீஸ், ஓ-ஸீரீஸ், ஆ-ஸீரீஸ் மூன்றும் ஏ-ஸீரீஸின் வகையே என்பர்.

1. Hübschmann
2. e-series
3. o-series
4. a-series
5. ē-series
6. ō-series
7. ā-series
8. De Saussure

*ஹுலன்பெக்கின் வகுப்பைக்கொண்டு ஈண்டு நாலு ஸீரீஸ் கூறப்படும்*

எ-ஸீரீஸ் :—

| இ.யூ. | வீக் கிரேட் | | நார்மல் கிரேட் | | நீண்ட கிரேட்[1] | |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 1 | 2 | 1 | 2 |
| | ... | ə, e | e | o[2] | ē | ō[2] |
| *ped* | उपब्द | पद्ः | | poda | pēs | pōs |
| | i (i̯) | ī | ei̯ (i̯e) | oi̯ (i̯o) | ēi̯ (i̯ē) | ōi (i̯ō) |
| *bheid* | भिन्न | | भेत्ति | | अभैत्सीत् | |
| | u (u̯) | ū | eu̯ (u̯e) | ou̯ (u̯o) | ēu̯ (u̯ē) | ōu̯ (u̯ō) |
| *bheu̯* | अभ्वं<br>भुवः | भूतिः | भवति | | भावयति | |
| | m (m̥) | əm (mə) | em (me) | om (mo) | ēm (mē) | ōm (mō) |
| *ĝem* | गतः<br>जग्मिव | | गमामि | | | |
| | n (n̥) | ən (nə) | en (ne) | on (no) | ēn (nē) | ōn (nō) |
| *men* | मतः | | मन्यते | | मानम् | |
| | r (r̥) | r (rə) | er (re) | or (ro) | ēr (rē) | ōr (rō) |
| *bher* | भृतः<br>बभृतुः | | भरति | | भारः | |
| | l (l̥) | əl (lə) | el (le) | ol (lo) | ēl (lē) | ōl (lō) |
| *kel* | | | कलयति | | कालः | |

1. Lengthened grade
2. o, ō இவை கிரேக்பாஷையில் ப்ரதானஸ்வரத்திற்கு அடுத்த ஸிலபிளில் இருக்கும்; e, ē இவை ப்ரதான ஸ்வரங்கொண்ட ஸிலபிளில் இருக்கும்.

ஏ-ஸீரீஸ் :—

| இ. யூ. | வீக் கிரேட் | | நார்மல் கிரேட் | |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 1 | 2 |
| | ... | ə, *e* | *ē* | *ō* |
| *dhē* | दध्मः | हितः | दधामि | |
| | | | Lat. crēditus | dōms |
| | i̯ (i) | ī, ei̯ (i̯e) | ēi̯ (i̯ē) | ōi̯ (i̯ō) |
| | u̯ (u) | ū, eu̯ (u̯e) | ēu̯ (u̯ē) | ōu̯ (u̯ō) |

ஓ-ஸீரீஸ் :—

| | | | |
|---|---|---|---|
| | ... | ə, *o* | *ō* |
| *dō* | देवत्तः | दत्तः | ददामि |
| | | | Lat. dōnum |
| | i̯(i) | ī, oi̯ | ōi̯ |
| | u̯ (u) | ū, ou̯ | ōu̯ |

ஆ-ஸீரீஸ் :—

| | | | | |
|---|---|---|---|---|
| | ... | ə, *a* | *ā* | *ō* |
| *sthā* | | स्थितः | तिष्ठामि | |
| | i̯ (i) | ī, ai̯ (i̯a) | āi̯ (i̯ā) | ōi̯ (i̯ō) |
| | u̯(u) | ū, au (ua) | āu (uā) | ōu (uō) |

---

இண்டோயூரோபியன்மொழிநிலையிலுள்ள மெய்கள் வைதிக மொழியில் எவ்வாறு மாறுபடுகின்றன என்பது இனிக் கூறப்படும்.

| இ.யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தின் |
|---|---|---|---|
| *p* | प् | | *p* |
| pə tē(r) | पिता | [1] | pater |
| spek̂-s | स्पट् [2] | | —spex (in auspex) |

வைதிகமொழியிலுள்ள फ् இண்டோயூரோபியன்மொழியில் *ph* ஆக இருந்ததா இல்லையா என்பதைப்பற்றி மொழிநூல் வல்லோர் தீர்மானத்திற்கு வரவில்லை. ஆனால் வடமொழியில் फ இருக்குமிடத்து இரான்மொழியில் *f* இருக்கின்றது.

| வைதிகமொழி | இரான் |
|---|---|
| कफः | kafa |
| शफः | safa |

| இ.யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தின் |
|---|---|---|---|
| *b* | ब् [3] | *b* | *b* |
| lamb | लम्बते | | lābitur |
| bal-bal | बल्बलाकरोमि | | balbus |

1. பழையஇரான்மொழியில் மொழிமுதலிலும் உயிர்களின் இடையிலும் பகரம் கெட்டது.
2. स्पक् என்பதே சரியான ரூபம் ஆகும்.
3. சிலவிடத்து भ விற்கு முன்னருள்ள ब्, द् ஆக மாறுகின்றது. *Cf.* अद्भिः, संसृद्भिः (இவற்றிற்கு अप्, संसृप् என்பன ப்ராதிபதிகம்). இது வேறினப்படுதல் (**dissimilation**) என்றதாலோ, नभ् ப்ராதிபதிகத்திலிருந்து வந்த नद्भिः என்றதோடு அதிதேசத்தாலோ ஆயிருத்தல் வேண்டும்.

| இ.யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தீன் |
|---|---|---|---|
| *bh* [1] | भ | | *f* |
| bh'erō | भरामि | | ferō |
| ĝómbho-s | जम्भः | | |
| *m* | म् | | |
| mn̥tó-s | मतः | | |
| *mt* | न्त् | | |
| C̦em'tu | गन्तु | | |
| *mu* | न्व् | | |
| C̦eC̦m̥mauōs | जगन्वान् | | |
| *mr* | ब्र् | | |
| | ब्रवीति | mraoiti | |
| *ms* (மொழியிறுதியில்) | न् | | |
| dems | दन् | | |
| *t* | त् [2] | | *t* |
| tn̥néumi | तनोमि | | tendō' |
| p̥ətē'(r) | पिता | athir | |

1. இண்டோயூரோபீயன் மொழியில் வரும் *bh*, அடுத்த விலபில் களில் கோஷமஹாப்ராணனுல் தொடரப்பட்டால் வைதிக மொழியில் ब् ஆகின்றது. ***bheido*—बोधति**
வைதிகமொழியில் வரும் भ இடத்தில் இதிஹாஸமொழியில் ह் உம் வரும். உ-ம் गृभ्णामि - गृह्णामि. இதனை ப்ராகிருதம் வழியாக வந்தது என்பர்.

2. வாஜஸநேயிஸம்ஹிதையின் சில எழுத்துப்பிரதிகளில் पत्नी, पत्मन् என்பதற்கு பிரதியாக पत्क्नी, पत्क्मन् என எழுதியுள்ளது. அங்கு, க்காரம் பக்தியாய் வந்ததெனக் கொள்ளல் வேண்டும்.

| இ. ஐ. | வைதிகமொழி | இரான் | லத்தீன் |
|---|---|---|---|
| *ts* | *cch* | | |
| patśas | पच्छः | | |
| *bh+t* | ब्ध् | | |
| labh | लब्धः | | |
| *dh+t* | द्ध् | | |
| badh | बद्धः | | |
| *Çh+t* | ग्ध् | | |
| dheÇh | दुग्धः | | |
| *ĝh + t* | ढ् | | |
| uĝh-tó-s | ऊढः | | |
| sēĝh-tó-s | साढः | | |
| *k̂t* | ष्ट् | | |
| ok̂tō′ | अष्टा | | |
| *d* | द् | *d* | *d* |
| dek̂m̥ | दश | | decem |
| se′dos | सदः | | sedeō |
| *ddh* | इध् | *zdh* | |
| deddhi′ | देहि [1] | dazdhi | |
| *zd* [2] | ड् | | |
| nizdo′-s | नीडः | | nīdus |
| *dn* | न्न् | | |
| e′*dno-m* | अन्नम् | | |

1. இ. ஐ. ***deddhi, deidhi*** ஆகி, ***dēdhi*** ஆகி, देहि ஆயிற்று.

2. *zd* இண்டோ-இரானியனில் *źd* ஆகி, வைதிகமொழியில் ஆயிற்று.

| இ. யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தீன் |
|---|---|---|---|
| *dj* [1] | ज्ज् | | |
| ud-jiti-s | उज्जितिः | | |
| *dh* | ध् [2] | | *f, b, d* |
| dhūmo'-s | धूमः | | fūmus |
| kludhi' | श्रुधि | | |
| *zdh* | ढ् | | |
| mizdhó-s | मीढम् | | |
| *n* | न् [3] | | *n* |
| nō'mn̥ | नामन् | | nōmen |
| *ln* | ण् | | |
| kəlno-s | किणः | | |

டவர்க்கவிதி: இண்டோயூரோபியன்மொழியில் சிலவிடத்து உள்ள தவர்க்கம் வைதிகமொழியில் டவர்க்கம் ஆக மாறுகின்றது. அதனை முதன்முதலில் கண்டுபிடித்தவர் பார்ச்சுநேடோவ்[4] என்பவர். லகரமும் பல்மெய்யும் இண்டோ-யூரோபியன்மொழியில் சேர்ந்து வந்தால், அவற்றிற்கு இயைபுபட்ட வைதிகமொழிச்சொற்களில் லகரம் கெட்டு

1. *ud-jiti-s* வைதிகமொழியில் उज्जितिः ஆனதைப் பார்த்து அதிதேசத்தால் *ud-jhita* என்பது उज्झित என்றாயிற்று.
2. வைதிகமொழியில் பல சொற்களில் ध விற்குப் பிரதியாக ह காணப்படுகின்றது.
3. चवर्गத்தின் முன்னர் न् ञ् ஆகவும், ष्, र्, ऋ, ॠ இவற்றின் பின்னர் ण् ஆகவும் மாறுகின்றது. மொழியினுள் உயிரினிடையில் न्स् என்பது ं स् எனவும், மொழியினிறுதியில் न् ஆகவும் மாறும்.
4. Fortunatov.

பல்மெய் டவர்க்கம் ஆகும் எனவும், அதே பல்மெய் பகரத்தோடு வரின் அவ்வாறு மாருது நிற்கும் எனவும் அவர் கூறினர். அதற்கு பார்ச்சுநேடோவ் விதி[1] எனப் பெயர்.

| இ. யூ. | வைதிகமொழி |
| --- | --- |
| kértō̄ | कर्तामि |
| merdō̄ | मर्दामि |
| ardho-s | अर्धः |
| kórno-s | कर्णः[2] |
| u̯ersā̄ | वर्षा[3] |
| palto-s | पटः |
| paltu-s | पटुः |
| u̯alto-s | वटः |
| kulth | कुठारः |
| kə̄lnos | किणः |
| ŏlni′-s | आणिः |
| pā̆lni′-s | पाणिः |
| pélno-s | पणः |
| bhā̆ls | भाषते |
| lals | लषामि |
| pē̆ls | पाषाणः<br>पाष्यः |

1. Fortunatov's law.

2, 3. இவ்விடங்களில் அவ்விதிக்கு மாறுபாடு இருக்கல் நோக்கத் தக்கது.

இவ்விதிக்கு முரணுயிருக்குமிடங்கள் ப்ராகிருதவழியாக வந்தன எனக் கொள்க.

| | |
|---|---|
| भृतः | भटः |
| कर्तनम् | कटः |
| नर्तकः | नटः |

இவ்விதியை பெக்டல்,[1] விண்டிஷ்[2] முதலிய அறிஞர்கள் ஏற்றுக்கொண்டனர். ஆனால் ப்ரூக்மன், பார்தலோமே,[3] ஷ்மிட்,[4] வாக்கர்நாகல்[5] முதலியோர் இவ்விதியை ஏற்றுக் கொள்ளாது, டவர்க்கம் வந்தது முழுமையும் ப்ராகிருதத்தின் வழியாலேதான் எனக் கூறுகின்றனர். ஊலன்பெக் அவ்விதியை ஒத்துக்கொண்டு, அதற்கு முரணுக வந்த டவர்க்கத்தை ப்ராகிருதத்தின் வழியாக வந்தது எனக் கூறுகின்றனர்.

கால்ட்வெல்லோ[6] வடமொழியில் உள்ள டவர்க்கம் திராவிட மொழிகளிலிருந்து கடன் வாங்கப்பட்டது என்பர். அதற்கு அவர் கூறும் காரணங்கள் நான்கு :—(1) திராவிடதாதுக்கள் பலவற்றில் அவை அவசியமாய் இருக்கவேண்டியுள்ளன. (2) வடமொழியோடு இயைபுபட்ட வேறு ஒருமொழியிலேனும் டவர்க்கம் இல்லை. (3) வடமொழியிலிருந்து தமிழில் கடன்வாங்கப்பட்ட மெய்கள் தமிழில் இலக்கணத்திற்குப் பொருந்தியவாறு மாற்றப்பட்டன. (4) வடமொழிக்கலப்பால் மிகுதியாக மாறுபட்ட தெலுங்குமொழியைக் காட்டிலும் தமிழில் டவர்க்கம் அதிகமாக வழங்கப்படுகின்றது. இவற்றுள் மூன்றும் நான்கும் சிறந்த காரணங்களாக இல்லாவிடினும், ஒன்றும் இரண்டும் பொருந்தும் என எல்லோரும் நினைத்தல் கூடும். ஆயினும் அவருடைய கொள்கைக்கு மாறுபாடாகச் சில

1. Bechtel.
2. Windisch.
3. Bartholomae.
4. Schmidt.
5. Wackernagel.
6. Caldwell.

*காரணங்கள் உள. ஸிந்துநதிக்கரையில் இயற்றப்பட்ட ருக் வேதத்தில் டவர்க்கம் உளது. அந்த டவர்க்கத்தை ஒலிக்கும் போது* நாக்கின் நுனி வளைந்து அண்ணத்தின் உயர்ந்த இடத்தைத் தொடும் எனப் ப்ராதிசாக்யங்கள் *கூறும். தமிழில் கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட* தொல்காப்பியமோ *டகரணகரங்கள் ஒலிக்கப்படும்போது* நாநுனி அண்ணத்தின் நுனியைத் தொடும் *எனக் கூறும்.*[1] யெஸ்பர்ஸனும் *பக்கத்துள்ள ஒலிகளின் சம்பந்தத்தால் தவர்க்கம் டவர்க்கமாக ஒலிக்கப்படலாம் என்றும், அவ்வாறே ஸ்வீடன் நார்வே இத்தேசங்களிலும் அமெரிக்காவிலும் வழங்கும் மொழிகளில் தவர்க்கம் டவர்க்கம்போல் ஒலிக்கப்படுகின்றன என்றுங் கூறி, அவ்வாறே வடமொழியிலும் பிறமொழியின் கலப்பாலின்றித் தவர்க்கம் சிலவிடத்து டவர்க்கமாக ஒலிக்கப்பட்டிருத்தல் கூடும் என்பர்.*[2]

கெண்டும்–சதம் மொழிகள் : *இண்டோயூரோபியன்மொழியிலுள்ள இடையண்ணமெய்* (ḱ, ḱh, ǵ, ǵh), *இதழ்குவியா-உள்நாமெய்* (q, qh, Ç, Çh), *இதழ்குவி-உள்நாமெய்* ($q^{w}$, $q^{w}h$, Ç$^{w}$, Ç$^{w}$h) *இம்மூன்றும் சில மொழிகளில் ஒருவகையாகவும் வேறு சில மொழிகளில் வேறுவகையாகவும் மாறுபட்டன.* கிரேக், லத்தீன், *முதலிய*[3] *மொழிகளுள் இடையண்ணமெய்யின் ஸ்பர்சங்கள் அவ்வாறாகவோ அவற்றிற்குச் சிறிது மாறுபட்டோ காணப்படுகின்றன.* ஈரான்மொழி, வைதிகமொழி *முதலியவற்றுள்*[4] *அவை* ஊஷ்மாக்களாக *மாறு*

1. *டகார ணகார நுனிநா வண்ணம் (தொல். எழுத். 91)*
2. Otto Jespersen — Language, its nature, development and origin pp. 196–7.
3. முதலிய என்பதனால் கெல்டிக் (Celtic), ஜர்மானிக் (Germanic) மொழிகளைக் கொள்ளவேண்டும்.
4. முதலியவற்றுள் என்பதனால் ஆர்மேனியன் (Armenian), ஆல்பேனியன் (Albanian), பால்டிக்-ஸ்லாவோனிக் (Baltic-Slavonic) மொழிகளைக் கொள்ளவேண்டும்.

பட்டன. அன்றியும் முற்கூற்றுமொழிகளுள் இதழ்குவியா-உள்நாமெய் இடையண்ணமெய்யாக மாறியும், இதழ்குவி-உள்நாமெய் மாறாதும் இருக்கின்றன. பிற்கூற்றுமொழிகளில் இதழ்குவியா-உள்நாமெய் மாறாதும், இதழ்குவி-உள்நாமெய் இதழ்குவியா-உள்நாமெய்யாகவும் மாறி இருக்கின்றன. இதழ் குவியா-உள்நாமெய் இரான்மொழியிலும் வைதிகமொழியிலும் கண்டயம் ஆக மாறின. ஆகலின் அவற்றை மொழிநூல்வல்லோர் k, kh, g, gh இக்குறிகளாற் குறிப்பர். வான்ப்ராட்க்[1] முற் கூற்றுமொழிகட்குக் கெண்டும் மொழிகள்[2] என்றும் பிற் கூற்றுமொழிகட்குச் சதம் மொழிகள்[3] என்றும் பிரித்துக் குறிப்பிட்டனர். முற்கூற்றுமொழிகள் மேல்வகுப்பாகவும்,[4] பிற்கூற்றுமொழிகள் கீழ்வகுப்பாகவும்[5] ஆயின. இவ்வாறாக இண்டோயூரோபீயன்மொழிகளை இருவகுப்பாகப் பிரித்தல் ப்ரூக்மன், ஊலன்பேக், ரைட் முதலியோர்க்கு உடன்பாடு ஆகும்.

ஆனால் கிராப் அதனை ஒருவாறு ஏற்றுக்கொண்டும் ஒருவாறு ஏற்றுக்கொள்ளாமலும் பின் வருமாறு கூறுவர்.[6] "இண்டோ யூரோபீயன்மொழிகள் எல்லாவற்றையும் கெண்டும் சதம் மொழிகள் எனப் பிரித்தல் அவ்யாப்தி அதிவ்யாப்தி என்ற குற்றங்களற்று இருக்கின்றது எனக் கூற இயலாது. கீழ் வகுப்பைச் சேர்ந்தும் மத்தியஆசியாவில் வழங்கப்படும் டொக்கேரியன்[7] கெண்டும் மொழிகளோடு ஒத்து இடையண்ண ஸ்பர்சங்களைக் கொண்டும், சதம் மொழிகளோடு ஒத்து இதழ் குவி-உள்நாமெய்களை இதழ்குவியா-உள்நாமெய்களாக மாற்றி

1. Von Bradk.
2. Centum languages.
3. Śatam languages.
4. Western group.
5. Eastern group.
6. Graff-Language and Languages pp. 364-367.
7. Tocharian.

யும் இருக்கின்றது. அல்பேனியன், இல்லிரியன்[1] இவற்றோடு இயைபுபட்ட வெனேடிக்[2] மொழியினும் அவ்வாறே உள்ளது. அன்றியும் அம்மாறுதல்கள் சில மொழிகளில் ஒரு காரணமும் இல்லாது யதிர்ச்சையாய்த் தோன்றலாம். ஆகலின் ஒலிகளின் ஒற்றுமையால் இண்டோயூரோபியன்மொழிகளைக் கெண்டும், சதம் எனப் பிரித்தது நேரிதாயிருப்பினும், அவற்றை மேல் வகுப்பு, கீழ்வகுப்பு எனப் பிரித்தல் நேரிதன்று.”

தாலவ்யவிதி. வில்ஹெல்ம் தாம்ஸன்[3] என்பவர் வைதிக மொழியில் k, k̂h g, ĝh இவையாக மாறிய இண்டோயூரோபியன்மொழியில் உள்ள இதழ்குவியா-உள்நாமெய் தாலவ்யமான e, ē, i, ī î இவற்றால் தொடரப்படின் அவை வைதிகமொழியில் தாலவ்யமாக மாறுகின்றன எனவும் மற்ற விடத்தில் கண்ட்யமாகவே இருக்கின்றன எனவுங் கூறினர். மெய் தாலவ்யமான பிறகு e, ē இவ்விரண்டும் a, ā ஆக மாறின. இவ்விதிக்குத் தாலவ்யவிதி[4] எனப் பெயர். இவ்விதியைக் கண்ட பின்னரே இண்டோயூரோபியன் மொழியில் உயிர்கள் மிகுதியாக இருந்திருக்கவேண்டும் என்பதும், அக்காரணம்பற்றி உயிர்களை மிகுதியாகக் கொண்ட ஐரோப்பியமொழிகளும் ஆர்மீனியன் மொழியும் உயிர்களை மிகுதியாகக் கொள்ளாத வைதிகமொழியினின்றும் பண்டையநிலையில் இருக்கின்றன என்பதும் மொழி நூல்வல்லோர்களால் அறியப்பட்டன.

| இ. யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| $\hat{k}$ | श् | $c$ | $c$ | $k$ |
| k̂m̥tòm | शतम् | | centum | |
| k̂ūro-s | शूरः | | | —xūros |

1. Illyrian.
2. Venetic.
3. Wilhelm Thomsen.
4. Law of Palatals.

| இ.யூ. | வைதிகமொழி | பழையஇரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| k̂uō (n) | श्वा | | | |
| ak̂ru | अश्रु | | lacruma | |
| *k̂t* | ष्ट् | | | |
| ok̂tō | अष्टा | | | |
| *k̂s* | क्ष | | | |
| ueksi | वक्षि | | | |
| *g* | ज् | *g* | *g* | *g* |
| ĝenos | जनः | | gignō | |
| ĝonu | जानु | | genu | |
| ĝnōto-s | ज्ञातः | | nōtus | |
| *ĝbh* | *ḍbh* | | | |
| uiĝbh'i-s | विड्भिः [1] | | | |
| *ĝh* | ह् | *g* | *h, f, g* | *x* |
| ĝhansó-s | हंसः | | anser | |
| ueĝhō | वहामि | | vehō | |
| *ĝh+t* | ढ् | | | |
| léiĝh-ti | लेढि | | | |
| uĝh-to-s | ऊढः | | | |
| ueĝh-tum | वोढुम् | | | |

1. विड्भिः, राड्भिः (rēĝbhis) द्विड्भिः (duizbhis) என்றவற்றிலுள்ள ड காரம் நேரிதே ஆகும். विट् विट्सु, राट् राट्सु, द्विट् द्विट्सु என்றவற்றிலுள்ள ट காரம் அதிதேசத்தால் வந்துளது.

| இ. யூ. | வைதிகமொழி | பழைய இரான் | லத்தீன் | கிரேக் |
|---|---|---|---|---|
| qe | च | | que | |
| qetuō'res | चत्वारः | | quatuor | |
| péṅqe | पञ्च | | quinque | |
| qarq | कर्कः | | | |
| Çéretai | जरते | | | |
| eÇāt | अगात् | | | |
| Çénmi | हन्मि | | | |
| dòlgho-s | दीर्घ | | | |

க் இருக்கவேண்டியவிடத்து சிலவிடங்களில் ச் இருக்கின்றது. அஃது அதிதேசத்தால் ஆயிருக்கவேண்டும்.

| இ. யூ. | வைதிகமொழி |
|---|---|
| peŋqnt | पञ्चत् |
| ueqos | वचस् (முதலிரண்டு வேற்றுமைகளின் ஒருமை) |
| ueqō | वच्मि |

ச் இருக்கவேண்டியவிடத்து சிலவிடங்களில் க் இருக்கின்றது.

| | |
|---|---|
| qe-sio | कस्य |

उपवाचीयस् என்பது நேரிது; उपवाकीयस् என்றது அதிதேசத்தால் வந்தது.

| | |
|---|---|
| ŋ | ङ्, ञ् |
| bhoŋÇo-s | भङ्गः |
| peŋqe | पञ्च |
| ñ | ञ्, ं |
| ēnoñka | आनंश |
| añghos | अंहः |

| இ. யூ. | வைதிகமொழி |
|---|---|
| $\hat{i}$ | य् |
| ieq̥rt | यकृत्[1] |
| treies | त्रयः |
| j | य |
| jeuo-s | यवः |
| jugó-m | युगम् |

இ. யூ. i, j இவ்விரண்டும் வைதிகமொழியில் य ஆக மாறினும், त என்ற விகுதி வரும்போது முன்னதின் य, इ-கரமாகவும், பின்னதின் य மாறாமலும் இருக்கின்றன.

| | |
|---|---|
| यज् | इष्टः |
| यस् | यस्तः |

a, e, o இவற்றோடு ஒரே ஸிலபில் ஆக வரும் $\hat{i}$ அவற்றோடு சேர்ந்து வைதிகமொழியில் ए ஆகும். உதாரணங்கள் முன்னே காட்டப்பட்டன.

| | |
|---|---|
| u | व |
| ueq̯es | वचः |
| uóiko-s | वेशः |
| $\hat{v}$ | व |

a, e, o இவற்றோடு ஒரே ஸிலபில் ஆக வரும் $\hat{u}$ அவற்றோடு சேர்ந்து வைதிகமொழியில் ओ ஆகும். உதாரணங்கள் முன்னர்க் காட்டப்பட்டன.

1. याकृत् என்பது மூன்றும் வேற்றுமை முதலியவற்றிலுள்ள ரூபத்தின் அதிதேசத்தால் यकृत् என ஆயிற்று.

| இ. யூ. | வைதிகமொழி | லத்தீன் |
|---|---|---|
| r | र् | |
| bherō | भरामि | |
| dedorka | दद्र्श | |
| l | ऌ, र् | |
| leighmi | लेह्मि | |
| tòla | तुला | |
| lelóiqa | रिरेच | |
| | स्, ष् | |
| septm' | सप्त | septem |
| ustó-s | उष्टः | |
| sthisthāmi | तिष्ठामि | |
| geuster | जोष्टर् | |
| dhrsnéumi | धृष्णोमि | |
| kòrs | शीर्षन् | |
| uéksi | वक्षि | |

இ. யூ. azd(h), nizdo-s என்பன வைதிகமொழியில் एध्, नीडः என மாறின; uiduezbhis வைதிகமொழியில் विद्वद्भिः என மாறிற்று.

| | |
|---|---|
| γ | ह् |
| γenu-s | हनुः |
| aγōm | अहम् |
| þ, ð | फ् |

ஸந்தி

வைதிகமொழியில் உள்ள சில எழுத்துக்களுக்கு மூலபூதமாய் இண்டோயூரோபியன்மொழியில் இரண்டு எழுத்துக்கள் இருந்தமையால், சில ரூபங்களில் மாறுபாடு தோன்றிற்று

| வைதிகமொழி | இ. யூ. |
|---|---|
| क्ष् | qs, k̂s |
| ज् | Ç, ĝ |
| ह् | Çh, ĝh |

भिषषि, भिषत्तम என இருக்கவேண்டியிருக்க, भिषक्षि, भिषक् இவற்றையொட்டி भिषक्षि, भिषक्तम என்ற ரூபங்கள் வந்தன.

याज (iaĝ) என இருக்கவேண்டியிருக்க त्याग (tyeÇ) என்பதைப் பார்த்து याग என்ற ரூபம் வந்தது.

ஸந்தி

வாக்கியங்களை ஒலிக்கும்போது அவற்றிற்கு அங்கமான சொற்களை இடைவிடாது ஒலிக்கின்றோம்.[1] அப்போது முன்னருள்ள சொற்களின் ஈற்றெழுத்துக்களிலும் பின்னருள்ள சொற்களின் முதலெழுத்துக்களிலும் சில மாறுபாடுகள் உண்டாகின்றன. அவ்வாறே சொற்களின் அங்கங்களாகிய பகுதி விகுதி இவற்றை இடைவிடாது ஒலிக்கும்போது பகுதியின் ஈற்றெழுத்திலும் விகுதியின் முதலெழுத்திலும் சில மாறுபாடுகள் தோன்றும். இவ்வாறு சொற்களையோ, சொற்களின் பகுதி விகுதிகளையோ இடைவிடாது ஒலித்தற்கு ஸந்தி[2] அல்லது புணர்ச்சி எனப் பெயர். சொற்களை இடைவிடாது ஒலித்தற்குப்

1. இடைவிடாது ஒலித்தலைப் பாணினியாசிரியர் संहिता என்பர்.
2. सन्धिः

புறப்புணர்ச்சி அல்லது வெளிஸந்தி[1] எனவும், பகுதிவிகுதிகளை இடைவிடாது ஒலித்தற்கு அகப்புணர்ச்சி அல்லது உள்ஸந்தி[2] எனவுங் கூறுவர்.

உயிர்கள் வாயைத் திறந்தே ஒலிக்கப்படுதலின், இரண்டு உயிர்களை ஒருங்கு ஒலித்தலைத் தடுத்தலும், ஒருங்கு வந்த மெய்களை ஓரினப்படுத்தலுமே பெரும்பாலும் ஸந்தியின் காரியம்.[3] ஓரினப்படுத்தல் பிறப்பிடம் முயற்சி இவ்விரண்டாலும் ஆகும். சொற்கள் ஸமாஸம் ஆகும்போதும், மெய்யில் தொடங்கும் வேற்றுமைவிகுதிகட்கு முன்னரும், யகரத்தைத் தவிர்த்து மெய்யில் தொடங்கும் தத்திதப்-பிரத்யயங்கட்கு முன்னரும் வெளிஸந்திவிதிகளே அனுசரிக்கப்படும்.

அவற்றைத் தவிர்த்து பெயர்வினைகளில் பகுதிவிகுதிகட்கு இடையே உள்ஸந்திவிதிகளே அனுசரிக்கப்படும்.

சிலவிடங்களில் ஈருயிர்கள் ஒருங்கு வருகின்றன.

*Cf* नमो भरन्त एमसि (ऋ. वे 1, 1, 7)
स इद्देवेषु गच्छति (*ibid* , 1, 4)
द्यावापृथिवी अन्तरीयते (*ibid* 1, 35, 9)
त उक्षितासो महिमानमाशत (*ibid* 1, 85, 2)
गोमातरो यच्छुभयन्ते अञ्जिभिः (*ibid* 1, 85, 3)
प्रच्यावयन्तो अच्युता चिदोजसा (*ibid* 1, 85, 4)[4]

1. External sandhi.
2. Internal sandhi.
3. Avoidance of hiatus and assimilation are the leading principles on which the rules of sandhi are based (Mac-Donell—Vedic Grammar p. 20.)
4. இவற்றுள் பின்னருள்ள மூன்றிடங்களிலும் ஒருங்கு ஈருயிர் வந்தது. இதிஹாஸமொழிநிலையில் நீக்கப்பட்டது.
*Cf.* एङः पदान्तादति (पा. अ. 6, 1, 109.)

வெளிஸந்தியில் மாத்திரம் வரும் மாறுதல்களைக் குறிக்கப் பாணினியாசிரியர் पदान्तात् என்பதை ஸூத்திரங்களில் வழங்குவர். அல்லது அச்சொல் அநுவ்ருத்திக்கும்படியாய் ஸூத்திரம் இயற்றுவர். வேறு வகையாலுங் குறிப்பர்.

*Cf.* एङः पदान्तादति (पा. अ. 6, 1, 109)
लोपः शाकल्यस्य (*ibid* 8, 3, 19)
ईदूदेद्द्विवचनं प्रगृह्यम् (*ibid* 1, 1, 11)
अदसो मात् (*ibid* 1, 1, 12)

உள்ஸந்திக்கும் வெளிஸந்திக்கும் மாறுபாடுகள் சிலவற்றைக் காணலாம். உயிருக்குமுன் அகோஷமெய் வெளிஸந்தியில் கோஷமாய் மாற, உள்ஸந்தியில் அது மாறாமலே இருக்கிறது.

*Cf.* मरुत् + यत्र = मरुद्यत्र
वाच् + य = वाच्य

நகாரம் ணகாரமாய் மாறுவது உள்ஸந்தியிலேதான்.[1] சிலவிடத்து[2] அதிதேசத்தால் வெளிஸந்தியிலும் வந்துளது.

சொற்களின் இடையிலோ, பகுதிவிகுதிகளின் இடையிலோ ஈருயிர்கள் வரின், அவ்விரண்டையும் நீக்கி ஸவர்ணதீர்க்கத்தையோ, குணாக்ஷரங்களையோ, விருத்தியக்ஷரங்களையோ அவ்விடத்தில் வழங்குவதும், முன்னருள்ள உயிரை அதற்கினமாகிய அந்தஸ்தவர்ணமாகச் செய்வதுமே வைதிகமொழியில் பெரும்பான்மை. அவ்விரண்டு உயிர்களையும் மாற்றாது இடையில் யகரவகரங்களை நுழைப்பது சிறுபான்மை.

*Cf.* असुर + अरिः = असुरारिः
देव + अस् = देवाः

1. रषाभ्यां नो णः समानपदे (पा. अ. 8, 4, 1.)
2. सुरापाणाः, गिरिणदी।

रमा + ईशः = रमेशः
भव + इयम् = भवेयम्
गङ्गा + ओघः = गङ्गौघः
आ + एधत = ऐधत
मधु + अत्र = मध्वत्र
वभू + उस् = वभूवुः

ஸந்திகாரணமின்றியே வைதிகமொழியில் ஒலிகள் மாறுபடுதலும் உண்டு. அவ்விதிகள் பின்னர் விரிவாய்க் கூறப்படும்.

## ஒலிவிதிகள்[1]

ஸந்தியில் இருமெய்கள் ஓரினப்படலாம் எனக் கூறப்பட்டது. அதனை ஸத்ருசீகரணம்[2] அல்லது ஓரினப்படுகை என்னலாம். அஃது இருவகைப்படும். முன்னர் வந்த மெய்யை ஒட்டிப் பின்னர் வரும் மெய் மாறுதல் ஒன்று. அதனைப் பரஸத்ருசீகரணம்[3] அல்லது பின்மெய்ம்மாறுகை என்னலாம்.

உ-ம். तद् + हरति = तद्धरति[4]
मुह् + तः = मुग्धः[5]

1. Sound-laws.
2. सदृशीकरणम् = ஓரினப்படுகை = Assimilation.
3. परसदृशीकरणम् = பின்மெய்ம்மாறுகை = Progressive assimilation.
4. कण्ठ्यम् உம் अघोषम् உம் ஆன ह, முன்னருள்ள दन्त्यम् ஆன द காரத்தை ஒட்டி दन्त्यम् ஆன धकारम् ஆய் மாறிற்று. ஆங்கிலத்தில் dogs என்ற சொல்லை ஒலிக்கும்போது s என்பது அகோஷமாயிருப்பினும், முன்னருள்ள கோஷமான g-ஐ ஒட்டி, z ஆக ஒலிக்கின்றனர்.
5. கோஷமும் மகாப்ராணனுமான ह् காரத்தை ஒட்டி அகோஷமும் அல்பப்ராணனுமான त கரம் ध காரமாய் மாறிற்று.

பின்னர் வரப்போகும் மெய்யைக் குறித்து முன்னருள்ள மெய் மாறுதல் மற்றொன்று. அதனைப் பூர்வஸத்ருசீகரணம்[1] அல்லது முன்மெய்ம்மாறுகை என்னலாம்.

உ-ம். मरुत् + चलति = मरुच्चलति[2]
तद् + लयः = तल्लयः[3]
मरुत् + भिः = मरुद्भिः[4]

சில மொழிகளில் அடுத்துவரும் மெய்களால்மாத்திரமன்றி இடைவிட்டுவரும் மெய்களாலும் முன்பின்மெய்கள் மாறும் என்பர்.[5] அவற்றையும் ஓரினப்படுதலின்கண் கொள்ளுகின்றனர்.

வேற்றினமெய்கள் எவ்வாறு ஓரினப்படுகின்றனவோ, அவ்வாறே ஓரினமெய்களும் சிலவிடத்தில் வேற்றினப்

1. पूर्वसदृशीकरणम् = முன்மெய்ம்மாறுகை = Regressive Assimilation.
2. பின்வரும் तालव्यத்தைக் குறித்து முன்னருள்ள दन्त्यम् तालव्यम् ஆக மாறிற்று.
3. பின்னருள்ள अन्तस्थத்தைக் குறித்து முன்னருள்ள स्पर्शम् अन्तस्थम् ஆக மாறிற்று.
4. பின்னருள்ள घोषத்தைக் குறித்து முன்னருள்ள अघोषम् घोषम् ஆக மாறிற்று.
5. Two classes of assimilation have been distinguished which *Stern* names *proleptic* and *metaleptic*. In prolepsis a consonant is affected by one that succeeds it; for instance *zucker* becomes *kucker*; in metalepsis a consonant is affected by one that precedes it: for instance *Peitsche* becomes *Peipe*. (Infant speech by Lewis p. 189)

படுகின்றன. அதனை விஸத்ருசீகரணம்[1] அல்லது வேற்றினப் படுகை என்னலாம்.

உ-ம். चञ्चूर्यते என்பது चर्चूर्यते[2] என வழங்கப்பட்டது.
वस् + स्यति = वत्स्यति[3]
श्रु + नु = शृणु[4]

ஒலிகள் எவ்வாறு ஓரினமாகியோ, வேற்றினமாகியோ ஒலிக்கப்படுகின்றனவோ, அவ்வாறே அவை இடம் மாற்றி ஒலிக்கப்படுகின்றன. அஃதாவது பின்னர் வரும் மெய்யை முன்னரும், முன்னருள்ள மெய்யைப் பின்னரும் ஒலித்தலே ஆகும். இதற்குக் காரணம் ஒலிக்கருவிகளின் அமைப்பு என்பர் சிலர். எப்போதும மனிதர் பின்னர் வருவதை நினைப்பதால், அவர் பின்னருள்ளதை முன்னர் ஒலிக்க, முன்னருள்ள மெய்யை ஒலிக்கவில்லையே எனப் பின்னர் நினைக்க, அதனைப் பின்னர் ஒலித்தனர் எனவுங் கொள்ளல் தகும். இவ்வாறு இடம்

1. विसदृशीकरणम् = வேற்றினப்படுகை = Dissimilation.
இதற்குக் காரணம் ஒன்றையே அடிக்கடியும் மிகுதியாகவும் கொள்ளுதலில் மனிதர்க்கு வெறுப்பும், சிறிது மாறுபாடு இருப்பதில் விருப்பமுமே ஆகும்.
2. अनुष्टुभमनु चर्चूर्यमाणम् (ऋ. वे. 10, 124, 9.)
இவ்வாறே चल्, फल् என்ற தாதுக்களிலிருந்து चञ्चलः, पम्फुल्यते முதலிய சொற்கள் ஆகின்றன. ஈண்டு ல-காரத்திற்குப் பிரதியாக ञ् உம் म् உம் வழங்கப்பட்டன. இவ்வாறே வடமொழி पुरुषः என்பது ப்ராகிருதத்தில் पुरिश என வழங்கப்படுகின்றது; ஈண்டு ஒரு உகரம் இகரமாக மாறிற்று. ஆங்கிலத்தில் marbre என்பது marble என மாறிற்று.
3. ஈண்டு स् , त् ஆக மாறிற்று.
4. ஈண்டு रु, ऋ ஆக மாறிற்று.

மாற்றி ஒலிகளை ஒலிப்பதை वर्णव्यत्यय:[1] வர்ணவிபர்யயம்[2] அல்லது ஒலியிடமாறுகை என்னலாம். ஸ்திதிபரிவ்ருத்தி எனப் பிராகிருதபிரகாசம் கூறும். இதனை மெடதேஸிஸ்[3] என்பர்.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | कस् | सिकता, | सक्तु |
| | हिंस | सिंहः | |
| | करेणुः | | कणेरू (ப்ராகிருதம்) |
| | आलानस्तम्भः | | आणालखंभो (..) |
| | दृश् | द्रक्ष्यामि, | द्रष्टुम् |
| | तृप् | तत्रप्थ | |
| | सृप् | स्रप्स्यामि | |

ஒரு சொல்லில் இரண்டு ஸிலபில்கள் ஒத்திருப்பின் அவற்றுள் ஒன்று லோபத்தை அடைகின்றது. இதற்கு ஸமானைகாஜன்யதரலோபம்[4] அல்லது ஓரினவொலிகுன்றல் எனப் பெயரிடலாம். இதனை ஹாப்லாலஜி[5] என்பர். இரண்டு ஸிலபில்களும் ஒத்திருத்தலின், அவற்றுள் ஒன்றை ஒலித்தவுடன் பின்னருள்ளதே ஒலிக்கப்பட்டது என்ற திரிபுணர்ச்சியால் அதற்குப் பின்னருள்ளதை ஒலித்தலே காரணம் ஆகலாம். அவ்வாறுள்ள சொற்களை ஒலிக்கத் தொடங்கும்போது ஒலிக்

1, 2. वर्णव्यत्ययः = वर्णविपर्ययः = ஒலியிடமாறுகை = Metathesis. वर्णव्यत्ययः என்பதை மஹாபாஷ்யகாரர் வழங்கியுள்ளார். இவ்வாறு ஆங்கிலத்தில் **brid, aks** என்பன தற்போது ***bird, ask*** என வழங்குகின்றன. தமிழில் தசை, சதை என வழங்குகின்றது.

3. *Cf.* Metathesis must be referred rather to a mental than to a phonetic origin. (Sayce — Science of Language pp. 316-7)

4. समानैकाजन्यतरलोप: = ஓரினவொலிகுன்றல் = Haplology.

5. லத்தீன் ***idololatria***. ஆங்கிலம் ***idolatry*;** வடமொழி पूजाचार्य, தமிழ் பூசாரி, தமிழ், ஆதன் + தந்தை = ஆந்தை.

கருவிகள் தயாராக இல்லாத காரணத்தாலே ஒரு ஸிலபில் விடப்படுகின்றது என ப்ருக்மன் கூறுவதாக ஸ்டேர்ன் கூறுகின்றார்.[1]

உ-ம். मन्म—मथः = मन्मथः [2]
रोम—मन्थः = रोमन्थः
वन—नरः = वानरः
नव—वेदस् = नवेदस्
कशी—शफः = कशीफः
अच्युत—दन्तः = अच्युतन्तः
शुष्म—मयः = शुष्मयः
भीम—मलः = भीमलः
वृतथा = वृथा
इरध्य्-अ-ध्यै = इरध्यै
शष्प—पिञ्जरः = शष्पिञ्जरः

இரண்டு மஹாப்ராணங்கள் சேர்ந்துவரின் முன்னர் உள்ளது அல்பப்பிராணமாக மாறுகின்றது. இதற்கு அல்ப ப்ராணீகரணம்[3] எனப் பெயரிடலாம். இதனை மொழிநூல் வல்லோருள் கிராஸ்மேன் என்பவர் கண்டதால், இதற்கு கிராஸ்மேன்விதி எனப் பெயரிட்டனர்.

உ-ம். लभ् + तः = लभ् + धः = लब्धः

1. Brugmann, on the other hand, thinks that the speaker at the moment of uttering the word has his articulatory movements not yet properly prepared, so two identical or similar movements may fuse into one. (G. Stern-Meaning and Change of meaning p. 253.)
2. Wackernagel II. 1, p. 129.
3. अल्पप्राणीकरणम् = Grassman's Law.

இரண்டு மெய்களும் உயிரால் பிரிக்கப்பட்டிருப்பினும் அல்பப்ராணீகரணம் ஸம்பவிக்கின்றது.

உ-ம். भू—भभूव—बभूव

இண்டோயூரோபீயன்மொழியில் இடையில் உயிரைக் கொண்ட இரண்டு மஹாப்ராணன்கள் உள்ள சொற்கள் இருக்கின்றன. அவை வைதிகமொழியில் வரும்போது முன்னருள்ள மஹாப்ராணன் அல்பப்ராணன் ஆகின்றது.

| | இ. யூ. | வைதிகமொழி |
|---|---|---|
| உ-ம். | bhéidho | बोधति |
| | dhidhēmi | दधामि |
| | Çhe-Çhon-e | जघान |

சொற்களை ஒலிக்கும்போது அவற்றின் தொடக்கத்திலும், இடையிலும், இறுதியிலும் சில புதிய ஒலிகள் சேர்க்கப்படலாம். அவற்றைச் சேர்த்தற்குக் காரணம் ஒலிக்கருவிகள் அச்சொற்களை எளிதில் ஒலிப்பதற்காகவே என்னலாம். புதிதாய் வரும் ஒலிகள் உயிராகவும் இருக்கலாம், மெய்யாகவும் இருக்கலாம். அவற்றை முறையே அஜ்பக்தி [1] ஹல்பக்தி [2] என்னலாம். அஜ்பக்தியை அனெப்டிக்ஸிஸ் என்பர் ப்ருக்மன். சொற்களின் தொடக்கம், இடை, இறுதி இவற்றில் தோன்றும் அஜ்பக்திகளை ஆதி-அஜ்பக்தி,[3] இடை-அஜ்பக்தி,[4] கடை-அஜ்பக்தி [5] எனவும், ஹல்பக்திகளை ஆதிஹல்பக்தி, இடைஹல்பக்தி, கடைஹல்பக்தி எனவும் பெயரிடலாம்.

1. अज्भक्तिः = Anaptyxis (Brugmann)
2. हल्भक्तिः
3. आद्यज्भक्तिः = ஆதி-அஜ்பக்தி = Prothetic anaptyxis.
4. मध्याज्भक्तिः = இடை-அஜ்பக்தி = Medial anaptyxis.
5. अन्त्याज्भक्तिः = கடை-அஜ்பக்தி = Final anaptyxis.

ஆதி-அஜ்பக்தி :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | लयः | — | इलयः |
| | रज्यति | — | इरज्यति |
| | स्त्री | — | इत्थी (ப்ராகிருதம்) |

இடை-அஜ்பக்தி :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | मनोर्थः | — | मनोरथः |
| | चन्द्रः | — | चान्दिरः |
| | इन्द्रा | — | इन्दिरा |
| | गर्भः | — | गरभः |
| | क्लिष्टम् | — | किलिट्ठं (ப்ராகிருதம்) |
| | हर्षः | — | हरिशः (ப்ராகிருதம்) |

கடை-அஜ்பக்தி :

| | | | |
|---|---|---|---|
| உ-ம் | धुर् | — | धुरा (ப்ராகிருதம்) |
| | शरद् | — | शरदो (ப்ராகிருதம்) |

ஆதி-ஹல்பக்தி :

| | | |
|---|---|---|
| உ-ம். | *cwēsan* (பழைய ஆங்கிலம்) | *squeeze* (புதிய ஆங்கி |
| | ekename | nickname |

இடை-ஹல்பக்தி :

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | *þūnor* | ,, | *thunder* | ,, |
| | slumeren | ,, | *slumber* | ,, |
| | brýdguma | ,, | *bridegroom* | ,, |
| | *nēmol* | ,, | *nimble* | ,, |

கடை-ஹல்பக்தி :

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | *ernes* | ,, | *earnest* | ,, |
| | *ageines* | ,, | *against* | ,, |

தொடக்கத்திலும் இடையிலும் கடையிலும் வரும் உயிர், மெய் இவற்றைப் பொதுவாக முறையே ப்ரோஸ்தீஸிஸ், எபெந்தேஸிஸ்,[2] பரகோஜி,[3] என்பர். இவற்றை ஆத்யாகமம், மத்யாகமம், அந்த்யாகமம் என்னலாம்.

ஆனால் எபெந்தேஸிஸ் என்பது வேறுவிதமான ஒலி மாறுதல்களுக்கும் பெயராகப் பலராற் கூறப்பட்டது. இடையண்ண ஒலிகளால் தொடரப்பட்ட மெய்கள் தாமும் இடையண்ணமெய்களாகவும், இதழொலிகளால் தொடரப்பட்ட மெய்கள் தாமும் இதழொலிமெய்களாய் மாறும். அப்போது அம்மெய்களுக்கு முன்னர் இ, உ இவற்றைத் தவிர்த்து இருக்கும் உயிர் இடையண்ணஸந்தியக்ஷரமாகவோ இதழ் ஸந்தியக்ஷரமாகவோ மாறும். இவ்வாறு மாறுகை எபெந்தெஸிஸ் எனப்படும் என்பர் ப்ருக்மன். தான் இருக்கும் ஸிலபிலே விட்டு அதற்கு முன்னருள்ள ஸிலபிலுக்கு அந்த ஒலிகள் வரின், அதனை எபெந்தெஸிஸ் என்பர் வெப்ஸ்டர்.[4] இதற்கு உதாரணமாக: (ப்ராகிருதம்) *peranta* — **पर्यन्त**, *kera* — **कार्य** என்பவற்றைக் கூறலாம்.

சொற்களின் தொடக்கத்திலும் இடையிலும் கடையிலும் ஒலிகள் சேர்க்கப்பட்டனபோன்று, ஆங்கு ஒலிகள் குன்றவும் குன்றலாம். அவை உயிராயின் அவற்றை ஆதிஸ்வரலோபம், இடைஸ்வரலோபம், கடைஸ்வரலோபம் என்னலாம். அவற்றை முறையே அபேஸிஸ், ஸிங்கோபி, அபகோபி எனக் கூறுவர் மொழிநூல்வல்லோர்.[5]

1. Prosthesis
2. Epenthesis
3. Paragoge
4. Webster — New International Dictionary.
5. आदिस्वरलोपः = ஆதிஸ்வரலோபம் = **Aphesis** அல்லது **Aphaeresis.**
   मध्यमस्वरलोपः = இடைஸ்வரலோபம் = **Syncope.**
   अन्त्यस्वरलोपः = கடைஸ்வரலோபம் = **Apocope.**

ஆதிஸ்வரலோபம் :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | आत्मना | — | त्मना |
| | उदकम् | — | दकम् |
| | आशु | — | शु |
| | अपिधानम् | — | पिधानम् |
| | अरण्यम् | — | रणम् (ப்ராகிருதம்) |
| ஆங்கிலம் | amend | — | mend |
| | esquire | — | squire |

இடைஸ்வரலோபம் :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | उरुवशी | — | उर्वशी |
| | जानुबिलम् | — | जाम्बिलम् |
| | अन्तरियात् | — | अन्तर्यात् |
| | राजन् + आ | — | राज्ञा |
| | कुरु + वः | — | कुर्वः |

பழைய ஆங்கிலம் *munec* புதிய ஆங்கிலம் *monk*

கடைஸ்வரலோபம் :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | चारु-वाकः | — | चार्वाकः |
| | अनु-वरः | — | अन्वरः |
| | अनु-वष्टि | — | अन्वष्टि |

பழைய ஆங்கிலம் *sūnu*, *lippa* புதிய ஆங்கிலம் *son*, *lip*.

இவ்வாறே இடைஹல்லோபமும்[1] கடைஹல்லோபமும்[2] இருக்கின்றன.

இடைஹல்லோபம் :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | पृषत्+उदरम् | — | पृषोदरम् |
| | मुकुलम् | — | मुउलम् (ப்ராகிருதம்) |

1. मध्यमहल्लोपः
2. अन्त्यहल्लोपः

கடைஹல்லோபம் :

உ-ம். सरित् — सरिआ (ப்ராகிருதம்)
सरस् — सरो (ப்ராகிருதம்)
पश्चात् — पश्चा [1]

மொழியின் இறுதியில் இயற்கையாய் இல்லாது ஸம்யோகாந்தலோபத்தால் வந்த ரேபத்திற்கு விஸர்க்கம் ஆதேசமாக வருதலை ரோடாஸிஸம் [2] எனக் கூறினர் மொழி நூல்வல்லோர்.

உ-ம். अकर् — अकः ; पितुर् — पितुः

ஆங்கிலத்தில் s, r ஆக மாறுவதையும் அவ்வாறு கூறுவர்.

உ-ம். *wese — were*

ஸமாநாக்ஷரத்திற்குப் பிரதியாக ஸந்த்யக்ஷரம் வரின், அதனை ஸந்த்யக்ஷரீகரணம் [3] என்னலாம்.

வேதத்தில் देव சப்தத்தின் முதல் வேற்றுமையிருமையில் देवा, देवौ என்ற இரண்டு ரூபங்கள் உள. அவற்றுள் देवा என்பது முற்காலத்தும், देवौ என்பது பிற்காலத்தும் இருந்திருப்பின், आ விற்குப் பிரதியாக औ வந்திருத்தலின் ஸந்தியக்ஷரீகரணத்திற்கு அஃது ஓர் உதாரணம் ஆகும்.

பழையஆங்கிலம் *mūs, wīf* ; புதியஆங்கிலம் *mouse, wife*.

1. आदित्पश्चा बुबुधानाव्यख्यन् (ऋ. वे. 4, 1, 18)
2. Rhotacism अकरित्यकः (पदपाठ. under ऋ. वे. 2, 12, 4) நோக்கத்தக்கது.
3. सन्ध्यक्षरीकरणम् = Diphthongisation.

ஸந்த்யக்ஷரத்தின் ஸ்தானத்தில் ஸமாநாக்ஷரம் வரின் அதனை ஸமாநீகரணம்[1] என்னலாம்.

गौ என்பது இரண்டாம்வேற்றுமைப் பன்மையில் गा என மாறியது இதற்கு உதாரணம் ஆகலாம்.

மெய்களின் மாத்திரையை நீட்டுவதற்கு அவற்றை இரட்டித்தலை யமீகரணம்[2] என்னலாம்.

உ-ம். पल्लिक्क्नी:

இரு சொற்களுக்கு உள்ள ஸந்தியைத் தவறாய்ப் பிரித்தலை விஸந்தீகரணம்[3] என்னலாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | ஆங்கிலம் : | a norange | — | an orange |
| | | then once | — | the nonce |
| | | an ewt | — | a newt |

ஒரு மெய்யிற்கு உயிர் ஆதேசமாய் வரின், அதனை ஸ்வரீகரணம்[5] என்னலாம்.

உ-ம். रामस् जयति — रामो जयति
सरस् — सरो (ப்ராகிருதம்)

ஒலி மாறுதற்குக் காரணம் மற்றொன்றும் உண்டு. அதனை அதிதேசம்[6] என வடமொழியிலும், ஒப்புமைப்போலி எனத் தமிழ்மொழியிலுங் கூறுவர். அது, ஒரு சொல்லின் உண்மை

1. समानीकरणम् = Monophthongisation.
2. यमीकरणम् = Gemination.
3. विसन्धीकरणम् = Metanalysis.
4. *Cf.* தமிழ் : வாதாபி-வ்-இல்வலன் — வாதாபி வில்வலன்:
மிகினும்-ஆனம் — மிகினும் மானம்.
5. स्वरीकरणम् = Vocalisation
6. अतिदेशः = Analogy = ஒப்புமைப்போலி.

யான உருவத்தை அறியாது, அது மற்றொன்றோடு இயைபு பட்டது எனத் தவறாக நினைத்து, அதனோடு ஒற்றுமைப்படுமாறு அச்சொல்லோடு இயைபுபட்ட சொற்களை ஆக்குதல் ஆகும். देवेन, देवात् இந்த ரூபங்களெல்லாம் तेन, तस्मात् இவற்றை ஒட்டியும், देवानाम् என்பது आत्मनाम् என்பதை ஒட்டியும், हरौ என்பது शम्भौ என்பதை ஒட்டியும், पत्युः என்பது पितुः என்பதை ஒட்டியும் வந்தன. ஒரு ப்ராதிபதிகத்தின் ஒரு வேற்றுமைரூபத்திலிருந்து வேறு வேற்றுமைரூபங்களையும் ஒன்றுபடுத்துவது உண்டு. वाचम्, वाचौ இவற்றைக் கண்டு वाचः, वाचा என வழங்கப்பட்டன. ஒரு ப்ராதிபதிகத்தின் ரூபத்தைக் கண்டு மற்றொரு ப்ராதிபதிகத்தின் ரூபத்தை ஒன்று படுத்தலை ரூபாதிதேசம்[1] எனவும், ஒரு ப்ராதிபதிகத்தின் ஒரு ரூபத்தைக்கொண்டு மற்ற ரூபங்களை ஒன்றுபடுத்தலை நேரதி-தேசம்[2] எனவுங் கூறுவர். சிராப், ப்ரகிருத்யதிதேசம்[3] ப்ரத்யயாதி-தேசம்[4] என இரண்டு வகையாகவும் பிரிப்பர். அதிதேசம் ப்ரகிருத்யம்சத்தில் இருப்பின் ப்ரகிருத்யதிதேசம் எனவும், ப்ரத்யயாம்சத்தில் இருப்பின் ப்ரத்யயாதிதேசம் எனவுங் கூறுவர்.

அதிதேசத்தால் மொழி மிகுதியாக வளர்கின்றது. पद् என்ற ப்ராதிபதிகத்தின் முதல் வேற்றுமையிருமைரூபமாகிய पादौ என்பதை पाद् என்ற ப்ராதிபதிகத்தின் முதல்வேற்றுமை யாக ஒருவன் பிரமித்து, அதன் ரூபங்களை லக்ஷியங்களில் வழங்கிவிட்டான். அக்காரணம்பற்றி पाद् என்ற ப்ராதிபதிகம்

1. रूपातिदेशः = Formal analogy.
2. न्यायातिदेशः = நேரதிதேசம் = **Logical analogy.**
3. प्रकृत्यातिदेशः = Material analogy.
4. प्रत्ययातिदेशः = Formal analogy.

உண்டாயிற்று. அவ்வாறே दन्त,[1] मास,[2] नर[3] முதலிய ப்ராதிபதிகங்கள் உண்டாயின. உறவினரைக் குறிக்கும் मातृ, पितृ முதலிய ப்ராதிபதிகங்களைப் பார்த்து नपात्[4] என்பது नप्तृ[5] என வேதகாலத்தே வழங்கலாயிற்று.

இவ்வாறு வந்த ஒலிமாறுபாடுகளுக்கெல்லாம் முயற்சி யெளிமையே (Economy of effort) காரணம் ஆகும். அவ் வெளிமை ஒலிக்கருவிகளுக்கும் நேரலாம்; மனத்திற்கும் நேரலாம்.

இவ்வொலிவிதிகளைத் தவிர்த்து க்ரிம் தாம் ஒரு விதியைக் கூறினர். அது பின்வருமாறு:—கிரேக், லத்தீன், வைதிகமொழி இவை முதலியவற்றில் *k*, *t*, *p* இவை இருப்பின் அவ்விடத்தில் ட்யூடானிக் மொழியில் *kh*, *th*, *ph* இவை இருக்கும் எனவும், முன்மொழிகளில் *gh*, *dh*, *bh* இவை இருப்பின், பின்மொழிகளில் *g*, *d*, *b* இவை இருக்கும் எனவும், முன் மொழிகளில் *g*, *d*, *b* இவை இருப்பின் பின்மொழிகளில் *k*, *t*, *p* இவை இருக்கும் என்பதே.

1. अग्निर्ह नामधायिदन्नमस्तमः (ऋ. वे. 10, 115, 2.)
   सं यो वना युवते भस्मना दता (*ibid* 10, 10, 3.)
2. प्रथमे मासि पृष्ठानि (तै. सं. 7, 5, 3.)
   षण्मासो दक्षिणेनैति (*ibid* 6, 5, 3.)
3. धत्त इन्द्रो नर्यपांसि कर्तवे (*ibid* 1, 85, 9.)
   இவற்றை நோக்கின் பாணினியாசிரியர் पद्दन्नोमास् ...... (पा. अ. 6, 1, 63) என்ற ஸூத்ரத்தில் पत् முதலிய வற்றிற்கு पाद முதலியன ஆதேசமாக வரும் என மாற்றிக் கூறி யிருக்கவேண்டும்.
4. अपां नपादाशुहेमा (ऋ. वे. 2, 35, 1.)
5. क्रीळन्तौ पुत्रैर्नप्तृभिर्मोदमानौ स्वे गृहे (*ibid* 10, 85, 42.)

வர்னர் என்பவர் இவ்விதியில் இரண்டு குற்றங்கள் கண்டனர். அவ்வெழுத்துக்கள் மொழிக்கு முதலிலோ ப்ரதான ஸ்வரத்திற்குப் பின்னரோ இருந்தால்தான் அவரது விதி பொருந்தும் என்பது ஒன்று. தெற்கே வழங்கும் ட்யூடானிக் மொழிகளில் அவ்வெழுத்துக்கள் ஒன்றுவிட்டு அடுத்த எழுத்துக்களாக மாறும் என்பது மற்றொன்று.

| அகோஷ-அல்பப்ராணன் | அகோஷ-மஹாப்ராணன் | கோஷ-அல்பப்ராணன் |
|---|---|---|
| bhrā'*t*er | bro*th*er | Bru*d*er |
| *p*eṅqe | *f*ive | |
| *p*ātér | *f*ader (பழைய ஆங்கிலம்) | *v*ater |

| கோஷ-மஹாப்ராணன் | கோஷ-அல்பப்ராணன் |
|---|---|
| *gh*ans | *g*oose |
| *bh*ū | *b*e |
| *dh*ē | *d*eed |

| கோஷ-அல்பப்ராணன் | அகோஷ-அல்பப்பிராணன் |
|---|---|
| *d*uo | *t*wo |
| *d*ekṃ | *t*en |
| *ĝ*enos | *k*in |

பழைய ஆங்கிலம் *fader*, *moder* என்பன வர்னர்விதிக்கு உதாரணங்கள். அவை பின்னர் *brother*-ஐப் பார்த்து அதிதேசத்தால் *father*, *mother* என மாறின.

இதுவரை கூறப்பட்ட விதிகளைக்கொண்டு மொழிநூல்விதி என்பதன் இலக்கணம் யாது எனக் கூறல் வேண்டும். ஒவ்வொரு மொழியிலும் காலக்ரமத்தில் ஒலிகளிலும், சொற்களிலும், சொற்களை ஆக்கும் வகையிலும் மாறுபாடு தோன்றுகின்றது.

அன்றியும் ஓரொலி ஒருவகைமொலிக்கூட்டத்தில் ஒருவாறு மாறுகின்றது; மற்றொருவகையொலிக்கூட்டத்தில் வேறு வகையாக மாறுகின்றது. ஆகலின் ஒரு மொழியிலேயே எல்லாக் காலத்திற்கும் பொருந்தும் விதிகளைக் கூற இயலாது. இவ்வாறிருக்க உலகத்துள்ள எல்லாமொழிகளுக்கும் பொதுவாய் விதி கூறுதல் எவ்வாறு இயலும்? ஆயினும் • ஒரு மொழியின் வளர்ச்சியில் ஒரு காலத்தில் ஓரொலி ஒருவகைப் பட்ட ஒலிக்கூட்டங்களில் எவ்வாறு மாறுகின்றது என்பதைக் கூறல் தகும். அதனையே மொழிநூல்விதி[1] என்னலாம்.

இதிஹாஸமொழிநிலை : இதிஹாஸமொழியில் உயிர்களுள் ऌ இறந்துவிட்டது. மெய்களுள் ळ ळ्ह யமங்கள் இவை இறந்துபட்டன.

ப்ராகிருதமொழிநிலை : ப்ராகிருதங்கள் பலவகைப்பட்டதால் ஒன்றுக்கொன்று சில மாறுபாடுகள் உள்ளன. இருப்பினும் இதிஹாஸமொழியில் இருந்த உயிர் மெய் இவற்றுள் சில ப்ரா-கிருதமொழிகளில் இல்லை. உயிருள் ऋ, ॠ, ऌ, ऐ, औ இவையும், மெய்களுள் மாகதியைத் தவிர்த்து ஏனையவற்றுள் श, ष இவையும் இல்லை. பல்மெய்யால் தொடர்ந்த இடமல்லாதவற்றுள் न இல்லை. ण ஆக வழங்கப்படுகின்றது.

சிலவிடத்து குறுகிய ए, குறுகிய ओ காணப்படுகின்றன. ए, ओ இவ்விரண்டும் ஸந்த்யக்ஷரத்தன்மையை இழந்து இ. யூ. ē, ō போல் ஆயின.

இதிஹாஸமொழியில் இருக்கும் உயிர்மெய்களின் ஸ்தானத்தில் ப்ராகிருதமொழிகளில் எவை வந்தன என்பது அறிதல் வேண்டும்.

| இதிஹாஸமொழி | ப்ராகிருதமொழி |
|---|---|
| अ | अ, आ, इ, ए, ओ |
| समृद्धिः | समिद्धी |

1. மொழிநூல்விதி = Law in Linguistic Science.

| இதிஹாஸமொழி | ப்ராகிருதமொழி |
|---|---|
| ईषत् | इसि |
| शय्या | सेज्जा |
| चतुर्थी | चोत्थी |
| आ | अ, आ, इ |
| यथा | जह, जहा |
| सदा | सइ |
| इ | इ, ए, ई, अ, उ, ओ |
| पिण्डम् | पिण्डं, पेण्डं |
| सिंहः | सीहो |
| पृथिवी | पुहवी |
| वृश्चिकः | विञ्छुओ |
| द्विधाकृतम् | दोहाइअं |
| ई | इ, ए |
| पानीयम् | पाणिअं |
| नीडः | णेड्डं |
| उ | उ, ओ, अ, इ |
| मुकुलम् | मउलम् |
| तुण्डम् | तोण्डं |
| पुरुषः | पुरिसो |
| ऊ | ऊ उ, अ, ए |
| सिन्दूरम् | सिंदूरं |
| मधूकः | महुअं |
| दुकूलम् | दुअल्लं |
| नूपुरम् | णेउरं |
| ऋ | रि, अ, इ, उ |
| ऋणम् | रिणम् |

| இஸமஸ்கிருதமொழி | ப்ராகிருதமொழி |
|---|---|
| ऋद्धः | रिद्धो |
| तृणम् | तणं |
| घृणा | घणा |
| ऋषिः | इसी |
| सृष्टिः | सिट्ठी |
| ऋतुः | उदू |
| संवृतम् | संवुदं |
| ऌ | लि |
| क्लृप्तम् | किलित्तं |
| ए | ए, इ |
| वेदना | वेअणा, विअणा |
| ऐ | ए, अइ, इ, ई |
| शैलः | सेलो |
| शैत्यम् | सेच्चं |
| दैत्यः | दइच्चो |
| वैरम् | वइरं |
| सैन्धवम् | सिंधवं |
| धैर्यम् | धीरं |
| ओ | ओ, अ |
| प्रकोष्ठः | पओट्ठो, पवट्ठो |
| औ | ओ, अउ, उ |
| कौमुदी | कोमुई |
| यौवनम् | जोव्वणं |
| पौरः | पउरः |
| कौरवः | कउरओ |
| सौन्दर्यम् | सुंदरं |
| शौण्डः | सुंडो |

## இதிஹாஸமொழிநிலை — ப்ராகிருதமொழிநிலை

இதிஹாஸமொழிச்சொற்களில் வரும் श्, ष् இவ்விரண்டும் மாகதியைத் தவிர்த்த ப்ராகிருதங்களில் स् ஆகும்; மொழிக்கு முதலில் வரும் न् உம் य् உம் முறையே ण् ஆகவும் ज् ஆகவும் மாறும். மற்ற வ்யஞ்சனங்களெல்லாம் மொழிக்கு முதலில் வரின் அவை பெரும்பாலும் ப்ராகிருதத்தில் மாறுவது இல்லை. மொழிக்கு இறுதியில் வரும் வ்யஞ்சனங்களுள் म्, न् இவற்றைத் தவிர்த்து ஏனையவெல்லாம் கெடும்; म्, न् இவை அநுஸ்வாரம் ஆகும். மொழிக்கு இடையில் அஸம்யுக்தமாய் வரும் क्, ग्, च्, ज्, त्, द्, प्, व्, य् இவை பெரும்பாலும் கெடும்; न्, ट्, ड् இவை முறையே ण्, ड्, ल् இவையாக மாறும். ख्, घ्, थ्, ध्, भ् இவை பொதுவாக ह ஆகவும், ठ्, ढ् ஆகவும், மாறும்; छ्, झ्, ह्, இவை மாறா. र्, ल् ஆக மாறும்.

| இதிஹாஸமொழி | பிராகிருதமொழி |
|---|---|
| निशा | णिसा |
| कषायम् | कसाअं |
| यशस् | जसो |
| नकुलः | णउलं |
| सागरः | साअरो |
| वचनम् | वअणं |
| गजः | गओ |
| वितानम् | विआणं |
| मदः | मओ |
| विपुलम् | विउलं |
| नयनम् | .णअणं |
| दिवसः | दिअहो |
| नटः | णडो |
| दाडिमम् | दालिमं |
| मुखम् | मुहं |
| मेघः | मेहो |
| गाथा | गाहा |

| இதிஹாஸமொழி | ப்ராகிருதமொழி |
| --- | --- |
| राधा | राहा |
| रासभः | रासहो |
| कठोरम् | कढोरं |
| किरातः | चिलादो |

ஸம்யுக்தாக்ஷரமாக வ்யஞ்சனங்கள் வரின் அவை பல் வகையாக மாறும். அம்மாறுதல்களுக்குச் சிறந்த காரணம் எளிதில் ஒலித்தலே ஆகும். அக்காரணம்பற்றி அவற்றுள் ஒன்று கெடுதலும், ஒன்று மற்றொன்றின் இனமாக மாறுதலும், இரண்டும் வேறொரு ஸம்யுக்தாக்ஷரமாக மாறுதலும் முதலியன நேரும்.

| | | |
| --- | --- | --- |
| உ-ம். | चन्द्रः | चन्दो |
| | क्षणम् | खणं[1] |
| | वल्कलम् | वक्कलं |
| | गर्तः | गड्डो |

தற்கால வடமாகாணமொழிகளில் ப்ராகிருதத்திலுள்ள ஒலிகள் உள்ளன. அராபிக், பர்ஸியன் முதலிய மொழிகளின் கலப்பால் q, qh, Ç, Çh, zh, z, f இவ்வொலிகளும் வந்திருக்கின்றன. இவை பெரும்பாலும் அம்மொழிகளிலிருந்து வந்த சொற்களிலே உள்ளன. சிறுபான்மை அதிதேசத்தால் ப்ராகிருதச்சொற்களிலும் வந்திருத்தல் கூடும். இறுதியில் உள்ள அகரம் இம்மொழிகளில் ஒலிக்கப்படுவதில்லை.

---

1. இங்கு ष् லோபிக்க क् மஹாப்ராணன் ஆயிற்று.

மொழிகளில் வாக்கியத்திற்கு அங்கமாயிருக்குஞ் சொற்கள் எவ்வாறு ஆக்கப்படுகின்றன என்பதைக் கூறும் பகுதிக்கு பதப்பிரகரணம் எனப் பெயர். வாக்கியங்களைச் சொற்களாகப் பிரித்தவர் இலக்கணக்காரர்களே. முதலில் தங்கருத்துக்களை வெளியிட வாக்கியங்களைக் கூறிய மக்கள், அவை சொற்களாகப் பிரிக்கக்கூடும் என்ற எண்ணத்தைக் கொண்டவர் இல்லை. இரண்டு கருத்துக்களில் சில பொது அம்சங்கள் இருந்திருப்பின் அவற்றைக் குறிக்கத் தாம் அறியாமலே ஒரே ஒலிக்கூட்டத்தை வழங்கியிருக்கக்கூடும். ஒவ்வொரு கருத்திற்கும் ஒரு வாக்கியத்தைச் சிறிதுகாலம் மக்கள் வழங்கியிருக்கப் பின்னர் அது மிகவும் விரிவாயிருந்தது என உணர்ந்திருக்கலாம். பிறகு வாக்கியங்களில் பொதுக்கருத்தை உணர்த்தும் ஒரே ஒலிக் கூட்டத்தைப் பார்த்து அக்கூட்டம் அப்பொருளை உணர்த்திய தாகக் கொண்டிருக்கலாம். இவ்வாறு வாக்கியங்களைச் சொற் களாகப் பிரித்திருத்தல் கூடும்.

ஒரு சொல்லின் பல உருவங்களைக்கொண்டு பிற சொற்களின் உருவங்களை ஆக்கி, அச்சொற்களால் வாக்கியங்களை ஆக்கித் தம் கருத்துக்களை வெளியிட்டுக்கொண்டு மக்கள் சிறிது காலம் இருந்திருக்கலாம். அப்போது அச்சொற்களைப் பகுதி விகுதி எனப் பிரிக்கலாம் என்ற எண்ணம் அவர்க்கு இல்லாமல் இருந் திருக்கலாம்.[2] எல்லாச்சொற்களின் ரூபத்தையும் மனப்பாடஞ் செய்திருந்தனர் எனக் கொள்ளுதலுந் தகாது[3]. இவ்வாறு சிறிது காலம் இருக்க, பின்னர் வந்த மக்கள் அச்சொற்களையும் பகுதி விகுதி எனப் பிரித்திருக்கலாம். சொற்களுள் சிலவற் றைப் பெயர்ச்சொல் என்றும் சிலவற்றை வினைச்சொல் என்றும் பிரித்திருக்கலாம். அதன்பின்னர் பெயர்ச்சொல்லின் பகுதி

1. Morphology.
2. Jespersen–Language p. 94.
3. अनभ्युपाय एष शब्दानां प्रतिपत्तौ प्रतिपदपाठः (Mahābhāṣya I, 1, 1)

விகுதிகளுக்கும் வினைச்சொல்லின் பகுதிவிகுதிகளுக்கும் மாறுபாட்டினைக் கண்டிருக்கலாம். வாக்கியங்களும் பெயர், வினை இவ்விரண்டு சொற்களாலேயே ஆக்கப்பட்டதாக நினைத்து வாக்கியங்களை ஆக்கி அவற்றை வழங்கியிருக்கலாம். பலகாலத்திற்குப் பின்னர் அவ்விருவகைச் சொற்களுள் சில உரு மழுங்கிப் போக, பின்னர் வந்தவர் அவற்றைப் பெயர் வினை இவற்றுள் ஒன்றாகக் கருதாது, அவற்றிற்குப் பெயர் ஒன்று புதிதாய் இட்டிருக்கலாம். இவ்வாறு வாக்கியத்திற்கு அங்கமாய்ப் பல வகைச்சொற்கள் வந்திருக்கலாம். ஆயினும் பெயர்ச்சொல் வினைச்சொல் இவற்றாலேயே இயற்றப்பட்ட வாக்கியங்களைக் கொண்ட மொழிகளை இன்றுங் காணலாம். ஆகலின் வாக்கியங்களின் சிறந்த அங்கங்கள் பெயர் வினை இவையே ஆகும்.

இண்டோயூரோபியன்மொழிகளை ஆய்ந்து பார்த்தால் அவை தாய்மொழியிலிருந்து தனியே பிரிந்துவந்த காலத்திலேயே அவற்றில் வாக்கியம் பெயர் வினை இவ்வங்கங்களை உடையதாகவும், பெயர்கள் பகுதி வேற்றுமையுருபு இவை சேர்ந்து ஆனதாகவும், பகுதி தாதுவும் விகுதியும் சேர்ந்து[1] ஆனதாகவும், வினைகள் தாதுவும் வினைவிகுதிகளும் சேர்ந்து ஆனதாகவும், வேற்றுமையுருபுகள் பெயர்ப்பகுதியின் பின்னரும், வினை விகுதிகள் தாதுக்களின் பின்னரும் சேர்க்கப்பட்டதாகவும், பகுதிவிகுதிகள் சேருமிடம் தெளிவாய் அறியப்படாதவாறு சேர்ந்திருந்ததாகவும், பெயர்க்குப் பிரதியாக ஸர்வநாமங்கள் வழங்கப்பட்டதாகவும், அவையும் வேற்றுமையுருபும் சேர்ந்த விதம் பெயரும் வேற்றுமையுருபும் சேர்ந்தவிதத்திலிருந்து மாறுபட்டிருந்ததாகவும், வினையுருவங்கள் பல்வகைப்பட்ட

1. பெயர்ப்பகுதிகள் எல்லாவற்றையும் தாது, க்ருத்ப்ரத்யயம் இவற்றால் ஆக்கப்பட்டனவாக சாகடாயனரும், பெரும்பான்மையும் அவ்வாறு ஆக்கப்படினும் எல்லாம் அவ்வாறே ஆக்கப்பட்டன எனக் கொள்ளுதல் பொருந்தாது என கார்க்யரும் நிருக்தகாரர்களும் கொண்டனர் என யாஸ்கரின் நிருக்தம் கூறும்.

नाम च धातुजमाह शकटस्य च तोकम् । न सर्वाणीति गार्ग्यः नैरुक्तसमयश्च ।

காலத்தையும், செயலின் விதத்தையும், விருப்பம் ஆணை முதலிய பல்வகைக் கருத்துக்களையும் காட்டின்தாகவும் அறியப்படும். பெயர்ப்பகுதிகளோடு வேற்றுமையுருபுகளும், தாதுக்களோடு வினைவிகுதிகளும் சேர்ந்த வகைகள் பலவாக இருந்தன. ஆகலின் இப்பிரகரணத்தில் பெயர்ச்சொல், வினைச்சொல் இவற்றைப் பற்றி விரிவாய்க் கூறப்படும்.

பெயர்ச்சொல்லைப்பற்றிய பகுதியில்,[1] பெயர்ப்பகுதிகளும் வேற்றுமையுருபுகளும் எவ்வாறு சேர்க்கப்படுகின்றன என்பதும், வேற்றுமையுருபுகளின் உற்பத்தியும் சரிதமும், பெயர்ப் பகுதிகளிலுள்ள ப்ரத்யயங்களின் உற்பத்தியும் சரிதமும், பெயர்களுக்கும் ஸர்வநாமங்களுக்கும் உள்ள ஒற்றுமை, வேறுபாடு முதலியனவுங் கூறப்படும். வினைச்சொல்லைப்பற்றிய பகுதியில்[2] வினைவிகுதிகளின் உற்பத்தியும் சரிதமும், வினைப் பகுதிகள் உண்டாகும் விதமுங் கூறப்படும். பெயர்ச் சொற்களே சிலவிடத்து தாதுக்கள்போலச் செய்கை செய்யப் படுதலானும், வினையுள் சில பெயர்போல வேற்றுமைவிகுதி ஏற்கின்றமையானும் பெயர்ச்சொற்பகுதியிற் கூறப்படும் சில செய்திகளும், வினைச்சொற்பகுதியிற் கூறப்படும் சில செய்தி களும் ஒன்றுபடும்.

பெயர்ச்சொல் வினைச்சொல் இவற்றைப்பற்றி விரிவாய் உணர்த்தற்கு முன்னர் ஸமாஸம் அல்லது தொகைச்சொல் என்பதைப்பற்றிக் கூறுதல் பொருந்தும். ஏனெனில் இண்டோயூரோபியன்மொழிகளில் ஸமாஸம் பலவாறாக வழங் கப்படுகின்றது.

## ஸமாஸம்[3]

இலக்கணம்: ஒரு சொல்லின் தன்மையை அடைந் திருக்கும் சொற்கூட்டமே ஸமாஸம் ஆகும். அவற்றின்

1. *Cf.* Brugmann — Comparative Grammar of the I. E. Language, Vol. II, Part i.
2. *Cf. ibid* Vol. II, Part ii.
3. समासः = தொகை = Compound.

இடையில் சில பாகம் மறைந்திருக்கலாம். தேவதாத்வந்த்வங்களைத் தவிர்த்து ஏனைய ஸமாஸங்களில் ஒரே ஸிலபில் (ஏகாச்) தான் உதாத்தம் பெறும். ஆனால் ஒரே உதாத்த ஸிலபிலைக் கொண்ட சொற்கூட்டங்கள் எல்லாம் ஸமாஸம் ஆகா. உதாரணமாக उपत्वाग्ने (ऋ. वे. 1, 1, 1) என்றவிடத்து उ என்ற ஒன்றே உதாத்தமாயுள்ளது; ஆயினும் அங்கு उप, त्वा, अग्ने என்ற மூன்று பதங்கள் உள்ளனவாகக் கருதப்படுகின்றன.

தொகைச்சொற்கள் தனிச்சொற்கள்[1] ஆதல்: காலக்கிரமத்தில் இரண்டு சொற்களால் ஆகிய சில தொகைச்சொற்கள் தனிச்சொற்கள் ஆகக் கருதப்படுகின்றன. அதற்குக் காரணம் அவ்விரண்டனுள் ஒன்று தனிப்பட வழங்குந் தன்மையை இழக்கின்றது. முன்னருள்ள சொல் அவ்வாறு ஆனால், அதனை முன்விகுதி[2] என்றும், பின்னருள்ள சொல் அவ்வாறு ஆனால், அதனைப் பின்விகுதி[3] என்றுங் கூறுவர்.

உ-ம். भिषक्पाशः,[4] केशपाशः,[5] केशहस्तः,[6] आढ्यचरः,[7]

1. व्यस्तपदम् = தனிச்சொல் = Simple word
2. முன்விகுதி = Prefix.
3. பின்விகுதி = Suffix.
4. पाशः என்ற சொல் இழிவுப்பொருளில் முன் தனிமையாய் வழங்கப்பட பின் அவ்வழக்கு ஒழிந்தது. அப்போது पाशः என்பதைத் தத்திதப்ரத்யயம் என்றனர்.

   *Cf.* याप्ये पाशप् (पा. अ. 5, 3, 47);
5. அவ்வாறே நெருக்கம் என்ற பொருளிலும் ஆயிற்று.

   *Cf.* तं केशपाशं प्रसमीक्ष्य कुर्युर्वालप्रियत्वं शिथिलं चमर्यः (कुमा. 1, 48)
6. நெருக்கம் என்ற பொருளிலே हस्तः என்ற சொல் வழக்கை இழந்தது.

   तुह्माणं अमुकेसु केसहत्थेसु कधं अह्माणं देवीए केसा संजमीयन्ति (वेणी. 1, 20—)
7. முன்னிருந்ததைக் குறிக்கும் चरः என்பது தத்திதப்ரத்யயம் ஆகக் கருதப்பட்டது. *Cf.* भूतपूर्वे चरट् (पा. अ. 5, 3, 53)

कुमारकल्पः,[1] पचतिकल्पम्,[2] अष्टादशवर्षदेशीयः,[3] युक्तरूपम्.[4]

இவ்வுதாரணங்களோடு उदञ्च्, प्रत्यञ्च्, प्राञ्च्, अभरम् இவற்றையுஞ் சேர்த்துக்கொள்ளலாம்.[5]

இவ்வாறு தொகைச்சொற்கள் தனிச்சொற்களாகக் கருதப் பட மூன்று காரணங்கள் இருத்தல் வேண்டும். அவைகளாவன: (1) தொகைச்சொல்லின் அம்சங்களாகிய இரண்டு சொற்களுள் பிரதானமான சொல் தெளிவாயும் வேறிடத்து தனிப்பட்டும் வழங்கப்படவேண்டும். (2) அப்பிரதானமான சொல் ஏதோ ஓரிடத்து வழங்கப்படாமல் பல சொற்களில் வழங்கப்பட வேண்டும் ; (3) அவ்விடங்களில் எல்லாம் பொருள் ஒன்றாகவே இருத்தல் வேண்டும்; அப்பொருள் ஒரு தன்மையையே குறித்தல் வேண்டும்.

1, 2. கொஞ்சம் குறைந்தது என்ற பொருளில் कल्पः என்பதன் தனிவழக்கு ஒழிய, தத்திதப்ரத்யயம் ஆயிற்று.

*Cf*. ईषदसमाप्तौ कल्पदेश्यदेशीयरः (पा. अ. 5, 3, 67)

कुमारकल्पं सुषुवे कुमारम् (रघु. 5, 36)

3. *Cf*. अष्टादशवर्षदेशीयां कन्यां ददर्श (कादम्बरी.)

4. युक्तरूपम् என்பதற்கு युक्तम् என்பதே பொருள். ஆகலின் रूपम् என்பதை பகுதிப்பொருள்விகுதி என்னலாம்.

*Cf*. जन्म यस्य पुरोर्वंशे युक्तरूपमिदं तव (शाकु. 1, 7)

5. இவ்வாறே ஆங்கிலத்திலும் பல உதாரணங்கள் உள.

| | | | |
|---|---|---|---|
| Anglo-Saxon: | *wīf-līc* (wife-like) | Modern English: | *wifely* |
| ,, | *hate + raeden* (condition) | ,, | *hatred* |
| Old English: | bisceop – rice (realm) | ,, | bishopric |
| ,, | friend-scipe (forming) | ,, | friendship |

*Stone-deaf*, *Stone-blind*, என்னுஞ் சொற்களில் **stone** என்பது முன்பிரத்யயத்தன்மையை அடைந்தது.

அவ்விடம், இவ்விடம், எவ்விடம் என்ற பொருளில் வந்த சொற்களாகிய அங்கு, இங்கு, எங்கு தற்போது தனிச் சொற்களாகக் கருதப்படுகின்றன.

இம்மூன்று காரணங்களைக் கொள்ளாது தனிச்சொற்களாகவும் கருதப்படாது இருக்குந் தொகைச்சொற்களும் உள. அவற்றைத் தெளிவற்ற தொகைச்சொற்கள்[1] அல்லது அஸ்புட-ஸமாஸம் என்னலாம்.

தெளிவற்ற தொகைச்சொற்கள் மூவகையாக இருக்கலாம் :-

(1) தனிச்சொற்களாகவே கூறுவோனுக்கும் கேட்போனுக்குந் தோன்றுவன :

உ-ம். श्वशुरः,[2] नीडः,[3] पीड्,[4] भिषज्[5], पृष्ठः[6], विंशतिः,[7] परुत्[8], नेदीयस्,[9] ईड्[10]

இவ்வாறே ஏனைய இண்டோயூரோபியன்மொழிகளிலுங் காணலாம்.[11]

1. अस्फुटसमासः = தெளிவற்ற தொகைச்சொல் = Obscured compound.
2. श्वशुरः இ. யூ. sue-k̂uro.
3. नीडः ,, ni-sed-o = ni-zd-o.
4. पीड् ,, api-sed = pi-sed = pizd.
5. भिषज्—अभि-सजति
6. पृष्ठः இ. யூ. pṛ-sto (மலையின் சிறந்த சிகரம்.)
7. विंशतिः ,, uîkṃti.
8. परुत् இ. யூ. per-ût-i (ஏழாம் வேற்றுமை)
9. नेदीयस् — இரான் nazd-yah ; இ. யூ. na-zd.
10. ईड् = இ. யூ. ieĝ + d = iž + d = iẓḍ = īḍ
11. Eng. : *world* — Ang. Sax. : *woruld* (*wer–old* = age of man)
    ,, *hussy* — O. Eng. : *hūs-wīf*
    ,, *bridal* — O. Eng. : *brȳd–ealu* (bride-feast)
    Mod. High Ger. : *welt* ; Old High Ger. : *wer–alt*
    Latin *surgo* for *sub–regō*

(2) *பின்ப்ரத்யயத்தையோ முன்ப்ரத்யயத்தையோ வேறு ப்ரத்யயம் போன்ற ரூபத்தைக் கொண்ட தொகைச்சொற்கள் இரண்டாம் வகையாம்.*

உ-ம். स्वसर्.[1] *இவ்வாறே ஏனைய மொழிகளிலுங் காணலாம்.*[2]

(3) *பல ஸிலபில்களான் ஆக்கப்பட்டதும், ப்ரத்யய மெனக் கருதப்படாமலும், தனிச்சொல்லெனக் கருதப்படா மலும் உள்ள பின்பாகத்தையும், தனிச்சொல்லெனக் கருதப்படும் முன்பாகத்தையுங் கொண்ட சொற்கள் மூன்றும் வகையாம்.*

**உ-ம்.** ऊरुद्घ्नः.[3] *இவ்வாறே ஏனைய மொழிகளிலுங் காணலாம்.*[4]

1. स्वसर् இ. யூ. *sue'sor* ஈண்டு *sor*, *bhrā'tor*, *dātor* முதலியவற்றிலுள்ள **tor**-ஐ ஒத்தது.
2. Eng. ***righteous*** = ***right-wise.*** ஈண்டு ***eous***, ***duteous***, ***plenteous*** போன்ற இடங்களில் ***eous***-ஐ ஒத்தது.

   Eng. *window* (from Icel. vind-auga = wind-eye) ஈண்டு *ow*, *meadow*, *fallow* போன்ற இடங்களிலுள்ள *ow*-ஐ ஒத்தது.

   Mod. High German : *wimper* ; Old High German : *wint-brawa* ஈண்டு *er*, *sattler* இல் உள்ள *er* ஐ ஒத்தது.
3. ऊरुद्घ्नः என்றவிடத்து ऊरु என்பது தனிச்சொல்லாக வழங்கப்படுகின்றது. द्घ्नः என்பது எச்சொல்லிலிருந்து வந்தது எனத் தெளிவாக அறியப்படவில்லை. அது எந்த ப்ரத்யயத்தைப் போன்று இருக்கின்றது எனவுங் கூறுதல் எளிதன்று.

   ऊरुद्घ्नेन पयसोत्तीर्य (कादम्बरी)
4. Eng. : *nightingale* — Ang. Sax. : *nihte-gale* (singer of the night)

   Latin ūsūrpō (I use) for ūsū-rāpō

   Mod. High German : braütigam ;

   Old High German : brūti-gomo (bride-man)

தொகைச்சொற்களின் வகை:[1] வடமொழியிலக்கணக்காரர்களும் மொழிநூல்வல்லோருள் சிலரும் பொருளைக் கொண்டு தொகைச்சொற்களை வகுத்தனர். அது சரிதமுறைக்கு[2] நேரிதன்று என மொழிநூல்வல்லோருள் சிலர் ரூபத்தைக் கொண்டு அவற்றை வகுத்தனர்.

பொருளைக்கொண்டு வகுக்கும் முறையே இருவகைப்படும். தொகைச்சொல் ஆகிய இருசொற்களும் ஸமப்ரதானமாயும்[3] விஷமப்ரதானமாயும்[4] இருத்தலைக்கொண்டு வகுத்தல் ஒன்று; அவை விசேஷணச்சொல்லாயும்[5] விசேஷ்யச்சொல்லாயும்[6] இருத்தலைக்கொண்டு வகுத்தல் மற்றொன்று.

முன்னருள்ள வகையில் த்வந்துவம்[7] தனியாகவும் ஏனைய ஸமாஸங்களாகிய தத்புருஷன்,[8] பகுவ்ரீஹி,[9] அவ்யயீபாவம்[10] இவை தனியாகவும் நிற்கும்.

பின்னருள்ள வகையில் பகுவ்ரீஹி தனியாகவும், ஏனைய ஸமாஸங்கள் தனியாகவும் இருக்கும்.

1. समासविभागः = தொகைச்சொற்களின் வகை = Classification of Compounds.
2. சரிதமுறை = Historical Method.
3. ஸமப்ரதான-சொல்-தொகை Co-ordinating compound.
4. விஷமப்ரதான-சொல்-தொகை Subordinating compound.
5. விசேஷணச்சொல்-தொகை Epithetised compound.
6. விசேஷ்யச்சொல்-தொகை Non-epithetised compound.
7. द्वन्द्वः = த்வந்துவம் அல்லது உம்மைத்தொகை *Cf.* चार्थे द्वन्द्वः (पा॰ अ॰ 2, 2, 29.)
8. तत्पुरुषः = தத்புருஷம் அல்லது தற்புருடன் அல்லது வேற்றுமைத்தொகை.
9. बहुव्रीहिः = பகுவ்ரீஹி அல்லது வெகுவிரியன் அல்லது பலநெல் அல்லது அன்மொழித்தொகை *Cf.* अनेकमन्यपदार्थे (पा॰ अ॰ 2, 2, 24.)
10. अव्ययीभावः = அவ்யயீபாவம்.

*த்வந்த்வத்தில் அதன் அம்சங்களாகிய இரண்டு சொற்களோ பல சொற்களோ ஸமப்ரதானமாய் இருக்கின்றன எனக் கூறப்பட்டது. இந்த ஸமாஸம் இதிஹாஸமொழிநிலையில் வடமொழியில் மிக்க வளர்ச்சி உற்றது. அவ்வாறு ஏனைய இண்டோ-யூரோபியன்பாஷைகளில் வளர்ச்சி உறவில்லை. இந்த ஸமாஸத்தின் சரிதை நோக்கத்தக்கது. அதன் சரிதையில் ஏழு நிலைகள் உள்ளன.*

த்வந்த்வஸமாஸத்தின் ஏழ்நிலைகள் :

(1) *முதன்முதலில் த்வந்த்வத்தின் அம்சங்களாகிய இரு சொற்களும் இருமைவிகுதியை ஏற்று, ஒவ்வொன்றிலும் ஒரு ஏகாச் உதாத்தஸ்வரம் பெற்றது. இரண்டன் இடையில் சில சொற்களும் வழங்கப்பட்டன. சிலவிடத்து அவற்றின் பின்னர் च உம் வழங்கப்பட்டது.*[1]

1. प्र मित्रयोर्वरुणयोः स्तोमो न एतु शूष्यः (ऋ. वे. 7, 66, 1.)

*ஈண்டு* मित्रयोर्वरुणयोः *என்ற த்வந்தஸமாஸனில்* मित्र *சப்தம்* वरुण *சப்தம் இரண்டும் ஆறும்வேற்றுமையிருமையுருபாகிய* ओस् *என்பதைப் பெற்று* मित्रयोः *என்பதின்* त्र *உம்,* वरुणयोः *என்பதன்* व *உம் உதாத்தஸ்வரம் பெற்றது. அவ்வாறே*

मित्रावरुणा यदपश्यतां त्वाम् (ऋ. वे. 7, 33, 10)

*என்றவிடத்து* मित्र *சப்தமும்* वरुण *சப்தமும் முதல் வேற்றுமையிருமையுருபாகிய* आ *என்பதை ஏற்றன.*

द्यावाचिदस्मै पृथिवी नमेते (ऋ. वे. 2, 12, 13)

*ஈண்டு* चित् अस्मै *இவ்விரண்டு சொற்கள் இடையில் வந்தன. இதனை* ***tmesis*** *என்பர் மொழிநூல்வல்லோர்.*

आ मा गन्तां पितरा मातरा च (वाज. सं. १, १९)

इन्द्रा को वां वरुणा सुम्नमाप स्तोमः (ऋ. वे. 4, 41. 1)

*ஈண்டு* इन्द्रावरुणा *என்ற எட்டாம்வேற்றுமைத்வந்வத்தில் பாதத்தின் முதலில் இருக்கும்* इन्द्रा *என்ற சொல்லில்* इ *உதாத்த ஸ்வரம் பெற்றதும் பாதத்தின் இடையில் உள்ள* वरुणा *என்பது ஸர்வாநுதாத்தம் ஆனதும் நோக்கத்தக்கன. அவற்றினிடையில்* को वां *என்ற சொற்கள் வந்ததும் நோக்கத்தக்கது.*

(2) இரண்டாம் நிலையில் அதன் அம்சமாகிய சொற்களுள் முதலாவது முதலிரண்டு வேற்றுமையிருமையுருபாகிய ஆ அல்லது औ ஐ ஏற்க, பின்னருள்ள சொல் எல்லாவேற்றுமை யிருமையுருபினையும் ஏற்றது. இரண்டு சொற்களினும் ஒரு ஏகாச் உதாத்தஸ்வரம் பெற்றது.[1]

(3) மூன்றும் நிலையில் இரண்டு சொற்களும் வேற்றுமை யுருபு ஏற்க, முன்னர்ச் சொல்லின் ஏகாச் உதாத்தத்தை இழந்து, பின்னர்ச்சொல்லின் இறுதியேகாச்சே உதாத்தஸ்வரம் பெறு கிறது.[2]

(4) நான்காம் நிலையில் முன்னர்ச்சொல்லின் ஏகாச் உதாத்தத்தை இழப்பதுடன் அதன் இறுதியில் வேற்றுமை யுருபும் சேர்க்கப்படாதிருக்கின்றது.[3]

(5) ஐந்தாம் நிலையில் இரட்டையிரட்டையாய் வருங் கூட்டங்களைக் குறிக்க பன்மையுருபேற்ற த்வந்த்வங்களும் உள. இவற்றில் முன்னருள்ள சொல் ப்ராதிபதிகமாகவும் பின்னருள்ள சொல் உருபேற்றும் நிற்கும். அன்றியும்

1. मित्रावरुणयोर्भागस्थ (अथ. वे. 10, 5, 12)

मित्रावरुणाभ्यां त्वा (वाज. सं. 7, 9)

2. सूर्याचन्द्रमसौ धाता (ऋ. वे. 10, 190, 3)

स्वस्ति पन्थामनुचरेम सूर्याचन्द्रमसाविव (ऋ. वे. 5, 51, 15)

இவ்வாறுள்ள ப்ரயோகங்கள் ருக்வேதத்தில் அருமையாகக் காணப்படுகின்றன.

3. इन्द्रवायू वरुणो मित्रो अर्यमा (ऋ. वे. 10, 65, 9)

முன்னர்ச்சொல்லின் ஒரு ஏகாரச்சும் உதாத்தஸ்வரம் பெறுது பின்னர்ச்சொல்லின் இறுதியேகாரச்சே உதாத்தம் பெறும்.[1]

(6) ஐந்தாம் நிலையிலுள்ள த்வந்த்வங்கள், யஜுர்வேத ஸம்ஹிதை, அதர்வவேதஸம்ஹிதை முதலியவற்றில் மிகுதியாய்க் காணப்படுகின்றன.[2]

(7) ஏழாம்நிலையில் சில த்வந்த்வங்கள் ஒருமையுருபை ஏற்கின்றன.[3]

உருபேற்ற இரண்டுசொற்களால் ஆக்கப்பட்ட பழைய த்வந்த்வங்களுள் முன்னருள்ள சொல்லோ பின்னருள்ள

1. अहोरात्राणि विदधद्विश्वस्य मिषतो वशी (ऋ. वे. 10, 190, 2)

ஈண்டு अहोरात्राणि என்றவிடத்து இறுதியிலுள்ள வேற்றுமையுருபு முன்னர்ச்சொல்லின் லிங்கத்திற்குத் தக்கதாயுள்ளது. रात्रि என்பது ஸ்திரீலிங்கமாயினும், अहस् என்பது நபும்ஸகலிங்கமாகலின் வேற்றுமையுருபும் நபும்ஸலிங்கமாய் இருக்கின்றது. அன்றியும் रात्रि என்பது रात्र என மாறி இருக்கின்றது. இவ்வாறுள்ள த்வந்த்வங்கள் ருக்வேதஸம்ஹிதையின் பத்தாம் மண்டலத்திலே காணப்படுகின்றது.

2. यैः सञ्चरन्त्युभये भद्रपापाः (अथ॰ वे॰ 12, 1, 41)

3. पाणिपादम्, रथिकाश्वरोहम्

*Cf*. द्वन्द्वश्च प्राणितूर्यसेनाङ्गानाम् (पा. अ. 2, 4, 2)
गङ्गाशोणम् *Cf*. विशिष्टलिङ्गो नदीदेशोऽग्रामाः (*ibid* 2, 4, 7)
अहिनकुलम् *Cf*. येषां च विरोधः शाश्वतिकः (*ibid* 2, 4, 9)
शीतोष्णम् *Cf*. विप्रतिषिद्धं चानाधिकरणवाचि (*ibid* 2, 4, 13)
भद्रपापम् — भद्रपापस्य निधनं तितिक्षुः (अथ. वे. 12, 1, 48)
इष्टापूर्तम् — सङ्गच्छस्व पितृभिः संयमेनेष्टापूर्तेन परमे व्योमन् (ऋ. वे. 10, 14, 8)

சொல்லோ த்வந்த்வத்தின் பொருளைக் குறிக்க வழங்கப்பட்டன. அவை பின்னர் இரண்டு சொற்களின் பொருளைக் குறிப்பதாகக் கொள்ளப்பட்டன.[1]

தத்புருஷன், அவ்யயீபாவம், பகுவ்ரீஹி இவை பெரும்பாலும் முறையே உத்தரபதார்த்தப்ரதானமாயும், பூர்வபதார்த்தப்ரதானமாயும், அந்யபதார்த்தப்ரதானமாயும் இருக்கும் என மஹாபாஷ்யகாரர் கூறினர்.[2] கர்மதாரயமும், த்விகுவும் தத்புருஷ

1. दस्रा हि विश्वमानुषङ्मक्षूभिः परिदीयथः (ऋ. वे. 8, 26, 6)
नासत्या कुहचित्सन्तौ (*ibid* 1, 184, 1)
அச்வின்தேவதைகளுள் ஒருவர் பெயர் தஸ்ரன் என்றும் மற்றொருவர் பெயர் நாஸத்யன் என்றும் இருந்திருப்பினும் பிற்காலத்து नासत्यौ दस्रौ இரண்டும் ஒரு பொருட்கிளவியாய் அச்வின்தேவதைகள் இருவரையும் குறிக்கலாயிற்று.
அவ்வாறே मातरापितरा என்பதற்குப் பிரதியாக मातरा என்றேனும் पितरा என்றேனும் வேதத்தில் வழங்கப்பட, பின்னர் पितरौ என்பது மாத்திரம் मातरपितरौ என்ற பொருளில் வழங்கலாயிற்று.
*Cf.* मातरा पितरा नू चिदिष्टौ (ऋ. वे. 4, 6, 7)
उदीर्य पितरा ......... (*ibid* 10, 11, 6)
आ मातरा भरति (*ibid* 3, 1, 7; 4, 22, 4)
अग्ने उभे सदा पुत्रो न मातरा ततन्थ (*ibid* 10, 1, 7)
द्यावापृथिवी என்ற பொருளில் द्यावा என்ற சொல் வழங்கப்பட, பின்னர் द्यौः என்பதற்கு உலகம் என்ற பொருள் வந்தது.
द्यावा च यत्र पीपयन्नहा च (*ibid* 7, 65, 2)
तिस्रो द्यावः (*ibid* 1, 35, 6)

2. पूर्वपदार्थप्रधानोऽव्ययीभावः, उत्तरपदार्थप्रधानस्तत्पुरुषः, अन्यपदार्थप्रधानो बहुव्रीहिः, उभयपदार्थप्रधानो द्वन्द्वः
(महाभाष्य under पा. अ. 2, 1, 6)

னின் ஒருவகையே யாகும். இரண்டு சொற்களும் ஸமானாதி-கரணஸம்பந்தத்தை உடைத்தாயிருப்பின் அது கர்மதாரய மாகும்.[1] முன்னருள்ள சொல் எண்ணுப்பெயராயிருப்பின் அது த்விகு ஆகும்.[2]

தத்புருஷன், கர்மதாரயன், த்விகு என்ற ஸமாஸங்கள் தொன்றுதொட்டு இண்டோயூரோபியன்மொழிகளில் இருந்தன என்பது அம்மொழிகளை ஒத்து ஆராய்ந்து பார்த்தவர் கூறுவர்.[3]

பின்னருள்ள வகையில் பகுவ்ரீஹி தனியாகவும் ஏனைய ஸமாஸங்கள் தனியாகவும் நிற்கும் எனக் கூறப்பட்டது. பகுவ்ரீஹி, தத்புருஷன், கர்மதாரயன் இவற்றினடியாய்ப் பிறந்த லானும், உருவத்தில் ஒன்றாயிருக்கும் தத்புருஷபகுவ்ரீஹிச் சொற்கள் ஸ்வரமின்றி ஒலிக்கப்படின்[4] தத்புருஷப்பொருளே தோன்றுகின்றமையானும், வாக்கியத்திலே தத்புருஷப்பொருள்

1. तत्पुरुषः समानाधिकरणः कर्मधारयः (पा॰ अ॰ 1, 2, 42)
2. सङ्ख्यापूर्वो द्विगुः (*ibid* 2, 1, 52)
3. मातृ-स्वसा Lithuvanian *brol-â-vaikis* (brother's child.)
   वेदविद् Latin *Jū-dex* (declaring right.)
   अधरहनुः Greek *akro-polis* (upper city.)
   ताम्रधूम्रः Old Irish *dub-glass* (dark blue.)
   Lithuanian *jud-beris* (black brown.)
   सप्तर्षयः Old High German *zwi-houbit* (having two heads.)
   द्विपद् Latin *bi-pēs* Anglo Saxon *twi-fēte.*
4. दुर्मनः (இ. யூ. **dus-menes**)—இச்சொல்லைக் கேட்டவுடன் கெட்டமனம் என்ற பொருளே தோன்றுகின்றது. அப்பொருள் அச்சொல்லைக்கொண்ட வாக்கியத்தில் பொருந்தாவிடின் அதனைக் கெட்டமனமுடையது என்ற பொருளிற் கொள்ளுகிறோம். வேதங்களில் ஸ்வரத்தால் எந்த ஸமாஸம் எனத் தீர்மானிக்கலாம்.

பொருந்தாதிருப்பின் பகுவ்ரீஹிப்பொருள் கொள்ளப்படுகின்றமையானும், பகுவ்ரீஹிஸமாஸம் ஏனைய ஸமாஸங்களுக்குப் பின்னர் மொழிகளில் தோன்றியிருக்கவேண்டும் என்பது மொழிநூல்வல்லோரின் துணிபு.

இவ்வாறுள்ள சொற்கள் பிறமொழிகளிலுங் காணப்படுகின்றன.[1]

இவற்றைத் தவிர்த்து சில ஸமாஸங்களும் உள :

(1) உபஸர்க்கங்களும் சில நிபாதங்களும் முற்றுவினையோடு சேர்ந்து ஸமாஸம் ஆகின்றன.

உ-ம். अधिगच्छति, अरङ्करोति, आविरभूत्

சில பெயர்ச்சொற்கள் நிபாதம்போல் நின்று வினையெச்சங்களோடு ஸமாஸம் ஆகின்றன.

உ-ம். अस्तमेष्यन्, नमस्कृत्य

இவை அதர்வவேதத்தில் மிகுதியாய்க் காணப்படுகின்றன.

காது, பாதம் இவற்றைக் குறிக்குஞ் சொற்கள் வினையெச்சங்களோடு ஸமாஸம் ஆகின்றன.

உ-ம். कर्णगृह्य (ऋ. वे. 8, 59, 5)
पादगृह्य (*ibid* 10, 27, 4)

हिम् என்ற நிபாதம் कृ என்ற தாதுவினோடு ஸமாஸம் ஆகின்றது.

உ-ம். हिङ्कृण्वति

1. Modern German: *dick-kopf* (thick headed person)
English: *red-breast* (robin)

ஒலிக்குறிப்பைக் குறிக்குஞ் சொற்கள் இரட்டித்து भू कृ தாதுக்களோடு ஸமாஸம் ஆகின்றன.

உ-ம். मल्मलाभवन्, अललाभवन्

நிபாதமோ, பெயரெச்சமோ அவை தழுவும் பெயரோடு ஸமாஸம் ஆகின்றன.

உ-ம். प्रतिजन्यानि (ऋ. वे. 4, 50, 7),
तुविजातः (*ibid* 4, 50, 4), मन्दयत्सखम्
(*ibid* 1, 4, 7)

(3) சேர்ந்து ஒலிக்கப்படும் இருசொற்கள் ஸமாஸமாகக் கொள்ளப்படுகின்றன.

உ-ம். येयजामहे, याद्-राध्यम्, अहम्-उत्तरा।

(4) பெயர்ச்சொற்களும், ஸர்வநாமங்களும், நிபாதங்களும் இரட்டிக்கப்பட்டு ஸமாஸங்கள் ஆகின்றன. அவ்விரண்டனுள்ளும் ஒரு ஏகாச்சே உதாத்தஸ்வரம் பெறுகின்றது.

உ-ம். दिवे-दिवे[1], अहरहः[2], त्वन्त्वम्[3], प्रप्र[4], यथायथा[5], पिबापिब।

இவ்வாறு இரட்டிக்கை அடிக்கடி ஸம்பவித்தல்,[6] இடைவிடாது ஒன்றன்பின் ஒன்று உண்டாகுதல்,[7] மனோவேகம் முதலியவற்றைக் குறிக்கும்.

1. उपत्वाग्ने दिवेदिवे दोषावस्तर्धिया वयम् (ऋ. वे. 1, 1, 1)
2. अहरहर्निष्कृतमाचरन्ती (*ibid* 1, 123, 9)
3. त्वन्त्वमहर्यथा उपस्तुतः (*ibid* 10, 96, 5)
4. प्रप्र यज्ञं पृणीतन (*ibid* 5, 5, 5)
5. यथायथा मतयस्सन्ति नृणाम् (*ibid* 10, 111, 1)
6. Frequency.
7. Constant succession.

ஈண்டுக் கூறப்பட்டவற்றுள் பெரும்பாலும் இதிஹாஸ மொழிநிலையில் இறந்துவிட்டன.

இவற்றைத் தவிர்த்து சில சொற்கள் பிற ஸமாஸங்களை அநுஸரித்து இலக்கணமறியாதாரால் வழங்கப்பட்டன. அவை ஸமாஸங்கள்போல் இருப்பினும், இருசொற்களைக் கூட்டி ஆனவை அல்ல. அவற்றைப் போலிஸமாஸம்[1] என்பர்.

உ-ம். वनस्पतिः,[2] वसुन्धरा,[3] पितामही[4]

1. Pseudo-compound.

2. वन என்பது அகாராந்தமாகையால் वन, पति இரண்டு சொற்களைக் கொண்டு தொகை செய்யப்பட்டதாயின் वनपतिः என்ற ரூபமே வந்திருக்கும். ब्रह्मणस्, पति இரண்டு சொற்களும் அலுக்ஸமாஸமாய் ब्रह्मणस्पतिः என்று ஆயிற்று. அந்த ஸமஸ்தரூபத்தைப்பார்த்து वनस्पतिः என்ற சால்லை ஒருவர் வழங்கியிருக்கக்கூடும். பின்னர் அது வழக்கில் வந்துவிட்டது. இவ்வாறே ऋतस्पतिः, रथस्पतिः என்பன வந்தன.

3. वसु என்பது நபும்ஸகலிங்கமாகையால் वसु, धरा என்ற சொற்களை ஸமாஸம் ஆக்கியிருந்தால் वसुधरा என்ற ரூபமே வந்திருக்கும். ஸ்திரீலிங்கம் புல்லிங்கம் ஆகிய धुरम् कुलम् இவை அலுக்ஸமாஸமாய் धुरः என்பதனோடு சேர்ந்து धुरन्धरः, कुलन्धरः என்பதைப் பார்த்து वसुन्धरा என்ற சொல் வழக்கில் வந்தது.

4. தாயிற்சிறந்தவன் என்ற பொருளில் தாயின் தாயைக் குறிக்க मातामही என்ற சொல் வந்தது. அவ்வாறே தந்தையிற் சிறந்தவன் என்ற பொருளில் தந்தையின் தந்தையைக் குறிக்க पितामहः என்ற சொல் வந்தது. मातामही-ஐப் பார்த்து पितामही உம், पितामहः-ஐப் பார்த்து मातामहः என்பதும் வந்தன என்பர் மொழிநூல்வல்லோர். அவை எவ்வாறு வந்தன என்பது பாணினியாசிரியர் காலத்தே

அவற்றைச் சேர்ந்தனவே अप्सुयोगः, अप्सव्यः என்றும் அவை முறையே सोमयोगः, सव्यः என்பதன் அதிதேசத்தால் வந்தன என்றுங் கூறுவர்.

ஸமாஸங்களை ரூபத்தைக் கொண்டு நால்வகையாக மொழி நூல்வல்லோர் வகுப்பர்.

(1) ஸமாஸமாகிய இருசொற்களுள் முதற்சொல் வேற்றுமையுருபேற்கத் தகுதியை உடைய ப்ராதிபதிகம்; அப்ப்ராதிபதிகம் பெயரதாகவும் ஸர்வநாமத்தினதாகவும் இருக்கலாம்.

உ-ம். नृमनः, पुरुदंसः, द्विपात्[1]

(2) முதற்சொல் மொழியில் ஒருகாலத்திலும் வேற்றுமையுருபினை ஏற்காது, ஸமாஸத்திலேயே தோன்றுவது.

உ-ம். अमृतः[2], अस्वप्नः[3], अनन्तः[4], तिरस्कृत्य, दुर्मनः, सुकृतः

மறந்துவிட்டபடியால், அவர் पितामहः मातामहः என்ற சொற்களை அவ்வாறே படிக்க, வார்த்திககாரர் அவற்றிற்குப் பொருள் கூறுமிடத்து, வார்த்திகங்களைக் கூறி मातामही என்பதைப்பற்றி मातरि षिच्च என்ற வார்த்திகத்தைக் கூறி, पितामही என்பதற்கு வார்த்திகங் கூறாது விட்டனர்.

*Cf.* पितृव्यमातुलमातामहपितामहाः (पा. अ. 4, 2, 36)
मातृपितृभ्यां पितरि डामहुच्; मातरि षिच्च

1. द्विपाद् என்றவிடத்து இகாரம் त्रिपाद् என்றவிடத்துள்ள இகரத்தைப் பார்த்து அதிதேசத்தால் வந்தது.
2. *Cf.* Greek: *a-mbrotos.*
3. *Cf.* Latin: *in-somnis.*
4. *Cf.* Greek: *an-ippo-s.*

*(3) முதற்சொல் வேற்றுமையுருபேற்றும் வேற்றுமையுருபு ஏலாதும் இருக்கும் நிபாதம். இந்நிபாதம் தனிச்சொல்லாய் வழங்கவும் படும்.*

உ-ம். अपिहितः[1], अतिमात्रम्, प्रत्यक्षम, अपिकर्णम्, नकिः[2]

*(4) முதற்சொல் வேற்றுமையுருபேற்ற சொல்.*

உ-ம். त्वोतः[3], त्वादत्तेभिः[4], गिरिष्ठाः[5], दिविजातः, द्वादश, दास्याःपुत्रः

*இந்நால்வகை ஸமாஸங்களுள் சிற்சிலவற்றுள் பழைய காலந்தொடங்கி சில விசேஷங்கள் காணப்படுகின்றன. அவை பின்னர்க் கூறப்படும் :—*

முதல்வகையைப்பற்றிய செய்திகள் :

*(1) முன்னர்ச்சொல் அகரத்தில் முடிந்து பின்னர்ச்சொல் உயிரில் தொடங்கும்போது, அகரம் மாறுமல் இருக்கின்றது.*[6]

1. *உபஸர்க்கம் தாதுவின் முன்னர் இடைவிடாதே வழங்க வேண்டும் என்ற நியதி வேதத்தில் இல்லை.*

   *Cf.* आ कृष्णेन रजसा वर्तमानः (ऋ. वे. 1, 35, 2)

   विसुपर्णो अन्तरिक्षाण्यख्यत् (*ibid* 1, 35, 7)

   *ஈண்டு* आ *என்பதற்கும்* वर्तमानः *என்பதற்கும் இடையிலும்* वि *என்பதற்கும்* अख्यत् *என்பதற்கும் இடையிலும் இரண்டு சொற்கள் இருத்தலைக் காண்க.*

2. *Cf.* नकिरस्य प्रमिनन्ति व्रतानि (*ibid* 10, 10, 5)

   *இரான்* ***nae-ci-s.***

3. न हन्यते न जीयते त्वोतः (*ibid* 3, 59, 2); त्वा *என்பது பிற்காலத்தில்* त्वया *என மாறிற்று.*

4. त्वादत्तेभीरुद्रशंतमोभिः (*ibid* 2, 33, 2)

5. कुचरो गिरिष्ठाः (*ibid* 1, 154, 2)

6. *வடமொழி அகரம் = இ. யூ. o*

   युक्त–अश्वः *இரான் :* ***yuxta–aspa*** ;

   **Prussian:** ***dago-augis***

(2) முன்னர்ச்சொல்லின் இறுதியிலுள்ள ஆகாரம் சிலவிடத்து அகாரமாக மாறுகின்றது.[1] சிலவிடத்து அகாரம் ஆகாரமாக மாறுகின்றது.[2]

(3) நகாராந்தமான முன்னர்ச்சொற்கள் மெய்யின் முன்னர் சிலவிடத்து அகாராந்தமாக மாறுகின்றது.[3]

(4) சிலவிடத்து முதல்வகைஸமாஸம் நான்காம்வகை ஸமாஸமாக மாறுகின்றது.[4]

இரண்டாம் வகையைப்பற்றிய செய்திகள்: ஏனைய இண்டோயூரோபியன்மொழிகளில் ஸமாஸத்திலேயே பூர்வ பதமாக வரும் सु வேதத்தில் தனியாகவும் வருகின்றது.[5] இதிஹாஸமொழிநிலையில் ஸமாஸத்திலேதான் காணப்படு கின்றது. அவ்வாறே सामि (இ. யூ. sēmi) என்ற சொல்லும் என்பர்.

மூன்றாம் வகையைப்பற்றிய செய்திகள்: ஈண்டு வினைப் பெயரும் அதைத் தழுவும் நிபாதமும் தொகையாதலையும்,[6]

1. प्रियभार्या Old High German: *junc – frouwa* (young lad)
   उखाछिद्, उखछिद् — இரான்: *gaδa–wara* (for gaδāvara)
2. अश्वामघः இரான்: aśā–dā (giving what is pure)
   daenā–vazah (proper name)
3. नामधाः, उक्षान्नम् — மெய்யின் முன்னர் *an*, *ṇ* ஆக மாறி)
   *ṇ* வடமொழியில் अ ஆக மாறலாம்; உயிரின் முன்னர் அவ்வாறு மாறுதல் அதிதேசத்தாலே என்னல் வேண்டும்.
4. अग्रगः — अग्रेगः
   शतपदम् Latin: *centum-peda* (*centi-peda*)
5. इमं स्वस्मै हृद आ सुतष्टं मन्त्रम् ...... (ऋ. वे. 2, 35, 2)
   ये ते पन्थाः सवितः पूर्व्यासोऽरेणवः सुकृता अन्तरिक्षे (*ibid* 1, 35, 11)
6. இ. யூ. épi–dhǒtos — अपिहितः
   ápo–qiti-s — अपचितिः

பெயரும் அதைத் தழுவும் நிபாதமும் தொகையாதலையும்,[1] ஸர்வநாமமும் நிஷேதப்ரத்யயமும் தொகையாதலையுங் காணலாம்.[2]

நான்காம் வகையைப்பற்றிய செய்திகள்: நான்காம் வகை ஸமாஸங்கள் பண்டையகாலத்தில் அரிதாகவும் பின்னர் மிகுதியாகவும் காணப்படுகின்றன. இவை பெரும்பாலும் ஏற்கனவே இருந்த அலுக்ஸமாஸங்களின் அதிதேசத்தால் உண்டாயினவேயன்றி இரண்டு சொற்கள் தொக்கு வந்தனவல்ல என்பர் மொழிநூல்வல்லோர்.

சில ஸமாஸச்சொற்கள் பண்டையகாலந்தொடங்கியே பொருள்களின் பெயர்கள் ஆயின.[3]

சில ஸமாஸங்களுள் இரண்டு சொற்களுள் ஒன்றே இரண்டின் பொருளைக் குறிக்க வழங்கப்பட்டன.[4] அவை பின்னர் தொகைச்சொற்களின் ஏகதேசம் என்பது மக்களால் அறியப்படுவதில்லை. ஆங்கு சில ஒலிமாறுதல்களும் நேரும்.

1. उपरि–मर्त्यः Greek: *upĕr–andrōpos*
2. माकिः இரான்: *nae-ci-s*; Lithuanian: *nĕ-kas*
3. अश्वमेधः Greek: *ippo-makos.*
   दिवोदासः ... ...
4. देवदत्तः என்பதற்குப் பிரதியாக देवः அல்லது दत्तः
   सत्यभामा ,, भामा அல்லது सत्या
   देवदत्तो दत्तः, सत्यभामा भामेति (महाभाष्ये 1, 1, 1)
   *Cf.* विनापि प्रत्ययं पूर्वोत्तरपदयोर्वा लोपो वाच्यः
   (Vārttika under पा. अ. 5, 3, 83)
   लोपः पूर्वपदस्य–दत्तिकः, दत्तियः, दत्तिलः, दत्तकः for देवदत्तकः
   Mod. High German: *soda* for *soda wasser*
   *kilo* ,, kilogramm
   *bus* ,, *omnibus*
   Greek: *pā* ,, patēr
   *mā* ,, mātēr

ஸமாஸஸ்வரம் : சொற்கள் குறிக்கும் பொருளின் வேறுபாட்டினால், சொற்களின் ஸ்வரம் வேறுபடுகின்றது என்றும் அதை உலகாநுபவம் உள்ளவர்கள் நன்கு அறிவர் என்றும், ஒரே சொல் வெவ்வேறு ஸ்வரத்தோடு ஒலிக்கப்படின் ஆங்கு அச்சொல் வெவ்வேறு பொருளை உணர்த்துகின்றது என்றும் மாதவபட்டர் ருக்வேதாநுக்ரமணியிற் கூறினர்.[1]

ஸமாஸங்களின் ஸ்வரம் பல்வகையாய் உள்ளன. தத்புருஷ ஸமாஸத்தில் இறுதியிலுள்ள ஏகாச்சே பொதுவாய் உதாத்த-ஸ்வரம் பெறுகின்றது.[2] பின்னருள்ள சொல் पति ஆனால் முன்னருள்ள சொல்லிலே உதாத்தஸ்வரம் காணப்படுகின்றது.[3] பகுவ்ரீஹியில் முன்னருள்ள சொல்லின் இயற்கைஸ்வரமே காணப்படுகின்றது.[4] த்வந்த்வத்தில் பூர்வபதம் எண்ணைக் குறித்தால், பூர்வபதத்திலே உதாத்தம் இருக்கும்.[5] அந்யோந்யா பாவத்தைக் குறிக்கும் नञ् ஸமாஸத்தில் नञ् ஏ உதாத்தஸ்வரம் பெறும்;[6] नञ् அசக்தி ஆக்ரோசம் இவற்றைக் காட்டும்போது ஸமாஸத்தின் இறுதி ஏகாச்சே உதாத்தஸ்வரம் பெறும்.[7]

1. अर्थस्वभावात्सर्वेषां शब्दानामुच्चनीचता ।
   स्वभावं तं विजानन्ति लौकिका न त्वलौकिकाः ॥ (1, 6, 6)
   अर्थभेदे तु शब्दस्य सर्वत्र सदृशः स्वरः ।
   यदा न तं स्वरं पश्येदन्यथार्थं तदा नयेत् ॥ (1, 8, 1)
2. अथ समासान्तोदात्तत्वं ततस्तत्पुरुषः (महाभाष्ये 1, 1, 1)
   इन्द्रशत्रुः (इन्द्रस्य शत्रुः — शातयिता)
3. गणपतिः — German Xund'a-faoti (leader of 100 men)
4. बहुव्रीहौ प्रकृत्या पूर्वपदम् (पा. अ. 6, 2, 1);
   यदि पूर्वपदप्रकृतिस्वरत्वं ततो बहुव्रीहिः (महाभाष्ये 1, 1, 1)
   इन्द्रशत्रुः (इन्द्रः शत्रुः यस्य सः)— இவ்வாறே கிரேக் மொழியிலும் உள்ளது.
5. सङ्ख्या (पा. अ. 6, 2, 35) द्वादश
6. अकुमारः, अदीर्घः
7. अच्कावशक्तौ (पा. अ. 6, 2, 157); आक्रोशे च (*ibid* 6, 2, 158)
   अपचः

இதிஹாஸமொழிநிலையில் ஸமாஸங்கள் ஸ்வரத்தை இழந்தன. ஆகலின் சிலவிடத்து லிங்கப்ரத்யயத்தால் தத்புருஷனுக்கும் பகுவ்ரீஹிக்கும் வேறுபாடு அறியப்படினும், சிலவிடத்து வாக்கியத்தில்தான் அவை தத்புருஷரு அல்லது பகுவ்ரீஹியா என அறியப்படும். உதாரணமாக पीताम्बरः என்ற சொல்லில் இறுதி புல்லிங்கத்தைக் காட்டுவதாலும், अम्बरम् என்ற சொல் நபும்ஸகமாய் இருப்பதாலும், அச்சொல் பகுவ்ரீஹி என்று கூறிவிடலாம். पीताम्बरम् என்ற சொல் இரண்டாகவும் இருத்தல் கூடும். ஒரு வாக்கியத்தில் அது விசேஷ்யமாயிருந்தால் அதனைத் தத்புருஷன் என்றும், அது விசேஷணமாயிருந்தால் அதனைப் பகுவ்ரீஹி என்றுங் கூறல் வேண்டும். அன்றியும் कर्णगृह्य, मन्दयत्सखम्, ययजामहे போன்றன இதிஹாஸமொழியில் இறந்தன.

## பெயரியல்

**ப்ரத்யயம் :** பெயர்ச்சொல் வினைச்சொல் இவற்றினை இலக்கணவாசிரியர்கள் பல அம்சங்கள் உள்ளனவாகப் பிரித்தனர். பெயர்ச்சொல்லைப் பகுதி[1] விகுதி[2] என இருகூற்றாகப் பிரித்தனர். பகுதியைப் பெரும்பாலும் தாது, ப்ரத்யயம் என இருகூற்றாகப் பிரித்தனர். அப்பிரத்யயத்தைக் கிருத்[3] தத்திதன்[4] என இரண்டாகப் பிரித்தனர். இவற்றுள் கிருத்ப்ரத்யயம் தாதுவோடு சேர்க்கப்படும்;[5] தத்திதப்ரத்யயம் கிருத்ப்ரத்யயத்தோடு சேர்ந்த தாதுவிற்கே சேர்க்கப்படும்.[6] கிருத்ப்ரத்யயத்

1. பகுதி = प्रकृति = Stem.
2. விகுதி = विकृति = Termination.
3. க்ருத் = कृत् = Primary Suffix.
4. தத்திதன் = तद्धितः = Secondary suffix. க்ருத், தத்திதன் இவ்விரண்டையும் formative suffixes என்பர் மொழிநூல் வல்லோர்.
5. धातोर्विहितः प्रत्ययः कृत्संज्ञा भवति
   महाभाष्यम् under (पा.अ. 3, 1, 91) and (कृदतिङ् पा.अ. 3, 1, 93)
6. இது समर्थानां प्रथमाद्वा (पा. अ. 4, 1, 82) என்றவிடத்து समर्थानाम् என்பதாற் குறிக்கப்பட்டது.

தையோ தத்திதப்பிரத்யயத்தையோ ஈற்றிற் கொண்ட தாதுவிற்குப் பகுதி எனப் பெயர். அதனைப் பிரகிருதி என்றும் ப்ராதி-பதிகம்[1] என்றுங் கூறுவர்.[2] பெயர்ச்சொல்லில் ப்ராதிபதிகம் பெயர்ப்பொருளைக் காட்டும்; ஆங்குள்ள தாது பெயர்ப் பொருளின் ப்ரவ்ருத்திநிமித்தத்தைப்[3] பெரும்பாலுங் கூறும். இப்பிராதிபதிகத்தின் பின்னரே வேற்றுமையுருபுகள்[4] சேர்க்கப்படும்.[5] அவ்வாறே வினைச்சொல்லையும் தாது, வினைவிகுதி என இருகூற்றாகப் பிரித்தனர். இரண்டற்கும் இடையில் अ, य, नु, ना முதலிய விகரணங்கள் சேர்க்கப்படும்; न என்ற விகரணம் மாத்திரம் தாதுவின் இறுதியுயிரின் பின்னர் சேர்க்கப் படும். வேற்றுமையுருபை ஈற்றிற்கொண்ட சொற்களும் வினை விகுதியை ஈற்றிற்கொண்ட சொற்களும் சொல் எனப்படும்.[6] ப்ரத்யயங்கள் பெரும்பாலும் பின்னர்ப்பிரத்யயங்களாகவே[7] இருக்கும்.

1. प्रातिपदिकम्
2. कृत्तद्धितान्तस्यैव प्रत्ययान्तस्य प्रातिपदिकसंज्ञा भविष्यति नान्यस्य प्रत्ययान्तस्य (महाभाष्ये under पा. अ. 1, 2, 45)
3. प्रवृत्तिनिमित्तम् = Connotation.
4. வேற்றுமையுருபுகள் = सुपः = Case-suffixes.
   பெயர்ப்பகுதியால் குறிக்கப்படும் பொருள் பின்னருள்ள வினையோடு பல்வகையாய் சம்பந்தப்பட உரித்தாயிருக்க, இந்த சம்பந்தத்தோடுதான் ஈண்டு உள்ளது என்பதை வேறு படுத்திக்காட்டுதலால் வேற்றுமையுருபு எனப் பெயர் வந்தது. அக்காரணம்பற்றியே विभक्तिप्रत्ययः என்ற சொல்லும் வந்தது.
5. ङ्याप्प्रातिपदिकात् (पा. अ. 4, 1, 1) என்ற ஸூத்திரத்தால் அறியப்படும்.
6. सुप्तिङन्तं पदम् (पा. अ. 1, 4, 14) सुप्, तिङ् இவற்றை Flexional suffixes என்பர் மொழிநூல்வல்லோர்.
7. Suffixes. இதனை परश्च (पा. अ. 3, 1, 2) என்ற ஸூத்திரம் உணர்த்தும்.

இப்ப்ரத்யயங்களை இரு கூற்றாகப் பிரிக்கலாம்; க்ருத் ப்ரத்யயமும் தத்திதப்ரத்யயமும் ஒரு கூற்றாகும்; வேற்றுமை யுருபும் வினைவிகுதியும் மற்றொரு கூற்றாகும். தற்போது முதற்கூற்றைப்பற்றிச் சில செய்திகள் கூறப்படும்.

ப்ராதிபதிகத்திற்கு ஈற்றில் உள்ள ப்ரத்யயங்களை க்ருத், தத்திதன் என இருவகையாக வடமொழியிலக்கணக்காரர் பிரித்தனர். வினைவிகுதிகளைத் தவிர்த்து தாதுக்களுக்கு நேரில் சேர்க்கப்பட்ட ப்ரத்யயத்தை க்ருத் என்றும், அதன் பின்னரோ வேற்றுமையுருபின் பின்னரோ[1] சேர்க்கப்பட்ட ப்ரத்யயத்தைத் தத்திதன் என்றுங் கூறினர். இவ்வாறு வகுத்தலான் சரித முறையாய் மொழிகளை ஆராயுமிடத்து அதிக பயன் இல்லை என மொழிநூல்வல்லோர் கூறுவர். அவர் அதற்குக் கூறுங் காரணங்கள் ஆவன :—

(1) மொழிகளில் முதன்முதலில் ஒரு ப்ரத்யயம் க்ருத், தத்திதன் இவற்றுள் ஒன்றாகவே இருந்தது எனச் சொல்ல, தக்க சான்று ஒன்றும் இல்லை. உதாரணமாக வைதிகமொழி யிலும் இதிஹாஸமொழியிலும் பல ப்ரத்யயங்கள் க்ருத்தாகவும் தத்திதனாகவும் காணப்படுகின்றன.

உ-ம். चि + य + स् = चेयः ;[2] आदिति + य + स् = आदित्यः[3]
बुध् + अ + स् = बुधः ;[4] शिव + अ + स् = शैवः[5]

(2) மொழிகளில் முதன்முதலில் க்ருத்ப்ரத்யயமாய் இருந்தவை, பிற்காலத்து தத்திதப்ரத்யயங்களாகக் கொள்ளப் பட்டன. அவ்வாறு கொள்ளப்பட்டதற்குக் காரணங்கள்

1. उच्चैस्तरः
2. अचो यत् (पा. अ. 3, 1, 97)
3. दित्यादित्यादित्यपत्युत्तरपादाण्ण्यः (*ibid* 4, 1, 85)
4. इगुपधज्ञाप्रीकिरः कः (*ibid* 3, 1, 135)
5. शिवादिभ्योऽण् (*ibid* 4, 1, 112)

இரண்டு கூறலாம்: (1) அதிதேசத்தால் ப்ரத்யயங்கள் ப்ராதிபதிகத்தின் பின்னர்ச் சேர்க்கப்பட்டிருத்தல் ஒன்று. (2) அவை முதலில் தாதுவிற்கே சேர்க்கப்பட்டிருக்க, ப்ராதி-பதிகங்களுக்கு அவை சேர்க்கப்பட்டன என இலக்கண வாசிரியர்கள் தவறாகக் கொண்டது மற்றொன்று. உதாரணமாக இரண்டு பொருள்களையோ பல பொருள்களையோ ஒத்துப் பார்க்க வழங்கும் ப்ரத்யயங்கள் यस्, ईयस्, तर, इष्ठ, तम என்பன. இவற்றுள் முன்னர் மூன்றும் இரண்டு பொருள்களைப் பற்றியன; பின்னர் இரண்டும் பல்பொருள்களைப் பற்றியன. இவற்றைக் கொண்ட சொற்கள் ओजीयः[1], वरीयः[2], ज्येष्ठम्[3] भिषक्तमम्[4], वीरवत्तमम्[5] முதலியன ருக்வேதத்தில் காணப் படுகின்றன. இவற்றைப் பார்த்தால் ईयस् इष्ठ என்பன க்ருத்-ப்ரத்யயங்களாகவும், तम என்பது தத்திதப்ரத்யயமாகவும் இருந்திருத்தல் கூடும். இவ்வாறே प्रेयस्, प्रेष्ठ, श्रेयस्, श्रेष्ठ முதலியன प्री, श्री முதலிய தாதுக்களுடன் यस्, ईयस्. इष्ठ முதலிய ப்ரத்யயங்கள் சேர்க்கப்பட்டு வந்திருத்தல் கூடும். அன்றியும் अल्प, अल्पतर, अल्पतम போன்ற ரூபங்களைக் கொண்டு ज्यायस्, ज्येष्ठ, श्रेयस्, श्रेष्ठ, नेदीयस्, नेदिष्ठ, साधीयस्, साधिष्ठ இவற்றிற்கும் अल्प என்ற ரூபம் போன்று

1. न वा ओजीयो रुद्र त्वदस्ति (ऋ॰ वे. 2, 33, 10)
   ओजीयः என்பது ओज् என்ற வைதிகதாதுவிலிருந்து வந்திருக்கலாம்.
2. यो अन्तरिक्षं विममे वरीयः (*ibid* 2, 12, 1)
   वरीयः என்பது वृ தாதுவிலிருந்து வந்திருக்கலாம்.
3. तस्य ज्येष्ठं महिमानम् (*ibid* 2, 35, 9)
   ज्येष्ठं என்பது ज्या என்ற வைதிகதாதுவிலிருந்து வந்திருக்கலாம்.
4. भिषक्तमं त्वा भिषजां शृणोमि (*ibid* 2, 33, 4)
5. यशसं वीरवत्तमम् (*ibid* 1, 1, 3)

ஒரு ரூபம் நியதியாய் இருத்தல் வேண்டும் என்று प्रशस्य, अन्तिक, बाढ முதலியவற்றை அவற்றோடு இயைபுபட்டதாகப் பாணினியாசிரியர் கூறினர். அவ்வாறு இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை எனத் தோன்றுகின்றது. அவ்வாறு ஒரு நியதியை அவர் கொண்டமையால்தான் ईयस् முதலிய ப்ரத்யயங்களைத் தத்திதப்ரத்யயங்களாக அவர்கள் கொண்டனர் எனக் கூறலாம். அன்றியும் लघीयस्, लघिष्ठ என்ற ரூபங்கள் लघु என்ற தாதுவிற்குச் சேர்க்கப்பட்டன என்பது நேரிதாயிருக்க, लघु என்பதற்குச் சேர்க்கப்பட்டன என அவர்கள் கொள்ள வேண்டியுள்ளது. ओजीयस् முதலியவற்றைப் பார்த்து स्रजीयस् முதலியன வர, ईयस् முதலியனவும் தத்திதப்ரத்யயமாய்க் கருதப்பட்டிருத்தல் கூடும். அன்றியும் அவற்றின் பொருளைக் கொண்ட, तर, तम என்பன தத்திதப்ரத்யயமாகவே வழங்கப்பட்டமையின், அவற்றை நோக்கி இவையும் அவ்வாறே கருதப்பட்டன எனவுங் கூறலாம். இக்கருத்து இண்டோ-யூரோபியன்மொழியிலே வந்திருத்தல் கூடும் என மொழிநூல் வல்லோர் கூறுவர். அதற்குக் காரணம் இச்சொற்களெல்லாம் பொருள்களின் ஒற்றுமை கருதாது அப்பண்பினைக் குறிக்குஞ் சொல்லிலிருந்து இப்பிரத்யயங்களைச் சேர்த்து ஆக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்ற எண்ணமே ஆகும். அந்நியதி இல்லை என்பதை ज्यायस्, ज्येष्ठ, कनीयस्, कनिष्ठ முதலிய சொற்கள் காட்டும்; ஒத்துப்பார்க்கும்போதுதான் இவ்வகைச் சொற்களை வழங்கவேண்டும்.

### க்ருத், தத்திதன் இப்பிரத்தியயங்களின் உற்பத்தி :

இண்டோயூரோபியன்மொழியில் இவை எவ்வாறு உண்டாயின என்பதும் அவற்றின் பொருள் யாது என்பதும் அறிதல் எளிதன்று. பிற்காலத்தில் ஒவ்வொரு மொழியிலும் புதிதாகப் பிரத்யயங்கள் உண்டாயின என்பதற்கு ஐயமில்லை. உதாரணமாக पाशः, हस्तः முதலிய சொற்கள் பிரத்யயங்களாகக் கருதப்பட்டன என முன்னர்க் கூறப்பட்டது. அவற்றிற்குப் பொருளைக் கூறுதலும் எளிதாகும். இவ்வாறு முழுச்சொற்கள் ப்ரத்யயங்களாக ஆனவை மிகக் குறைவாகவே இருக்கும்.

தற்போது ப்ரத்யயங்களாகக் கருதப்பட்டனவற்றுள் சில, தாதுக்களின் இறுதியாகவே இருத்தல் கூடும். வடமொழிச் சொல்லாகிய उक्षन् என்பதற்கு இனமாகிய ஆக்ஸன்[1] என்ற ஆங்கிலச்சொல்லில் அன் என்பது பன்மையுருபென்றும், ஆக்ஸ்[2] என்பது பகுதி என்றும் தவறாகக் கொள்ளப்பட்டது நோக்கத் தக்கது.

சிலவிடத்து ப்ரத்யயங்களோடு கூடிய பகுதியே பகுதியாகக் கருதப்பட்டு அதன்பின்னர் ப்ரத்யயங்கள் சேர்க்கப் படுகின்றன.[3]

சிலவிடத்து ப்ரத்யயம் உருவத்தில் மாறுபடுகின்றது. दत् என்ற பெயரின் முதல்வேற்றுமை இருமைரூபமாகிய दन्तौ என்பதை दन्त என்பதன் இருமையாக மயங்கி, दन्तः, दन्ताः முதலிய சொற்கள் வழங்கப்பட்டன. ஆகவே தகராந்தகமான சொல் அகாராந்தமாக வழங்கிற்று. இவ்வாறுள்ள சொற்கள் ப்ராகிருதத்தில் மிகுதியாகக் காணப்படும்.

உ-ம். प्रेमन् पेम्म
राजन् राअ
आत्मन् अत्त அல்லது अप्प
महत् महन्त etc.

சில சொற்களில், ப்ராதிபதிகத்தின் ஏகதேசமும் ப்ரத்யயமும் சேர்ந்து ப்ரத்யயம் என மயங்கி அதனை வேறு ப்ராதிபதிகத் தோடு சேர்ப்பர். तरुणी என்றவிடத்து ई ப்ரத்யயமாக இருக்க,

1. Oxen
2. புதிதாகப் பகுதியாய்க் கருதப்பட்ட *ox* என்ற சொல்லைப் போன்றே *pea*, *cherry* என்பன. பழையஆங்கிலத்தில் *peas* என்பதும் *ciris* என்பதும் ஒருமையாய் இருந்தன.
3. பழையஆங்கிலத்தில் *brec* என்பது பன்மை; அதன் ஒருமை *broc* என்பது. பின்னர் *brec* என்பது *breech* என மாறிற்று. அது ஒருமை என்ற மயக்கத்தால் *breeches* என்பது பன்மையாக வழங்கப்படுகின்றது.

**नी** என்பதைப் பிரத்யயம் என மயங்கி **पत्नी** என்றவிடத்து வழங்கினர் என்பர் மொழிநூல்வல்லோர். இவ்வாறு ஜர்மன் மொழியிலும் உதாரணங் காட்டுவர்.[1]

சிலவிடத்து ஒரே பொருளைக்கொண்ட இரண்டு ப்ரத்யயங்களை ப்ராதிபதிகத்தோடு கூட்டி வழங்குவர். இதற்குக் காரணம் மிகுதிப்பொருளைக் காட்டுவதே ஆகும்.

உ-ம். ज्येष्ठतमः; पुरुषत्वता [2]

ஒரு ப்ரத்யயம் பல சொற்களின் பின்னர் வழங்கப்பட்டால், அதன் பொருள் அம்முழுச்சொற்களின் பொருள்களை ஒட்டி மாறுபடுகிறது. பின்னர் அது பொருளில் அச்சொற்களை ஒத்த வேறு சொற்களிலும் வழங்கப்படுகின்றது. உதாரணமாக पितृ, मातृ, स्वसृ, भ्रातृ முதலிய உறவுச்சொற்கள் ऋ காராந்தமாய் இருந்ததனை நோக்கிப் பேரன் என்ற பொருளைக்கொண்ட नपात् என்ற சொல் வேதகாலத்திலே नप्तृ என ऋ-காராந்தமாய் ஆயிற்று. பின்னர் पितृ मातृ என்பதை நோக்கி, ஆங்கு तृ என்பது பிரத்யயம் எனக் கருதப்பட்டது. இவ்வாறு லத்தீன் ஜர்மன் இம்மொழிகளிலும் உதாரணங்கள் காணப்படுகின்றன.[3] ஸ்திரீலிங்கச்சொற்கள் ஆகாராந்தமாய் இருப்பதைப் பார்த்து ப்ராகிருதத்தில் मादा, दुहिदा இவை ஆகாராந்தமாகக் கருதப்

1. தோட்டக்காரன் என்ற பொருள்கொண்ட *gartin-ari* என்ற சொல்லுள் *ari* என்பது ப்ரத்யயம், *gartin* என்பது ப்ராதிபதிகம்; *inari* என்பதை ப்ரத்யயமாகப் பிரமித்து *sculd-inari* (கடன் வாங்கினவன்) என்று *sculd* என்ற ப்ராதிபதிகத்தோடு அதனைச் சேர்த்தனர்.
2. O. H. G. *hinter-ōro*.
3. லத்தீனில் *juven-ta* (time of youth) ஐப் பார்த்து *senec-ta* (time of old age) வந்தது; ஜர்மன்மொழியில் abend (மாலைக்காலம்) என்பதைப் பார்த்து *morg-end* (காலை) என்பது வந்தது.

பட்டன. ஆகலின் दा-வின் द् ப்ரக்ருதியோடு சேர்ந்து விட்டது. அவ்வாறே जरस् தொடக்கத்தில் जृ தாதுவோடு अस् ப்ரத்யயம் சேர்ந்து வந்திருக்க, அதன் முதல்வேற்றுமை யொருமைரூபமாகிய जरा: என்பது ஸந்தியில் விஸர்க்கத்தை இழந்துநிற்க, அதனை ஸ்திரீலிங்கப்ரத்யயமான आ-காரத்தைக் கொண்டதெனப் பிரமித்து जरे, जरा: முதலிய ரூபங்களை வழங்கியிருப்பர் எனத் தோன்றுகின்றது.

இவற்றையெல்லாம் நோக்கின் பல ப்ரத்யயங்கள் புதிதாய்த் தோன்றியிருக்கலாம் என்பதும், அவை இப்போது கொண்ட பொருளைத் தொடக்கத்தில் கொள்ளாதிருக்கலாம் என்பதும் அறியப்படும்.

## சில ப்ரத்யயங்களின் வர்ணனை :

பின்னர் 14 ப்ரத்யயங்கள் க்ருத்தாகவும் தத்திதனுகவும் வழங்கப்படுகின்றன.

(1) अ — உ-ம். बुधः[1]; शैवः[2]

(2) अक — உ-ம். निन्दकः,[3] राजन्यकः[4]

(3) इ — உ-ம். जलधिः[5] (जल+धा+इ+स्); दाक्षिः[6]

(4) इक — உ-ம். आखनिकः,[7] लाक्षिकः[8]

1. इगुपधज्ञाप्रीकिरः कः (पा. अ. 3, 1. 135)
2. शिवादिभ्योऽण् (*ibid* 4, 1, 112)
3. निन्द...वुञ् (*ibid* 3, 2, 146)
4. राजन्यादिभ्यो वुञ् (*ibid* 4, 2, 53)
5. कर्मण्यधिकरणे च (*ibid* 3, 3, 93)
6. अत इञ् (*ibid* 4, 1, 95)
7. खनेर्डडरेकेकवका वाच्याः (वार्त्तिक. under पा. अ. 3, 3, 125)
8. लाक्षारोचनाट्ठक (पा. अ. 4, 2, 2)

(5) इन् — உ-ம். पितृव्यघाती,[1] इष्टी[2]

(6) क — உ-ம். शुष्कः,[3] धनुष्कः[4]

(7) त — உ-ம். गतः,[5] दैवतः[6]

1. कर्मणि हनः (*ibid* 3, 2, 86)
2. इष्टादिभ्यश्च (*ibid* 5, 2, 88)
3. शुषः कः (*ibid* 8, 2, 51)
4. वेतनादिभ्यो जीवति (*ibid* 4, 4, 12)

   क என்பது முதலில் ஸ்வார்த்தத்தில் வந்து, பின்னர்ச் செல்வக் குழந்தையைக் குறித்தற்கு வர, பின்னர் இளமையைக் குறிக்க, பிறகு அவமதிப்பைக் குறித்தற்கு வந்திருத்தல் கூடும்.

   *Cf*. अल्पे (*ibid* 5, 3, 85); ह्रस्वे (*ibid* 5, 3, 86); कुत्सिते (*ibid* 5, 3, 74); अनुकम्पायाम् (*ibid* 5, 3, 76)

   अन्तकः என்பதை अन्त+कः எனப் பிரிக்காது अन्त्+अक எனப் பிரிக்க, அதையொட்டி अक என்பது க்ருத்-ப்ரத்யய மாகக் கருதப்பட்டு सायकः, नायकः, पाचकः முதலிய சொற்கள் வந்தன என மொழிநூல்வல்லோர் கூறுவர்.

5. निष्ठा (*ibid* 3, 2, 102)

   कृतः, चितः போன்ற இடங்களில் तः என்பது செயப்பாட்டு வினைப்பொருள் பண்டைக்காலம் முதல் உள்ளது.

   *Cf*. येनेमा विश्वा च्यवना कृतानि (ऋ. वे. 2, 12, 4)

   सीदताबर्हिरुरुवः सदस्कृतम् (*ibid* 1, 85, 6)

   ஆனல் गतः, स्थितः போன்ற இடங்களில் செய்வினைப்பொருளே உள்ளது. இரண்டிடத்திலும் இறந்தகாலந் தோன்றுகின்றது. ஆகலின் செயப்பாட்டுவினைப்பொருள் தோன்றுதற்குப் பிரத்யயம் மாத்திரமே காரணம் எனக் கூறுதற்கு இல்லை. அக்காரணம்பற்றியே பாணினியாசிரியர் भूते என்ற அதிகாரத்தின்கீழ் निष्ठा என்ற ஸூத்ரத்தைப் படித்தனர். செயப்பாட்டுவினைப்பொருள் प्रकृतः कटं देवदत्तः என்ற

(8) ति — உ-ம். कृतिः,[1] नवतिः.[2]

தொடரை மஹாபாஷ்யகாரர் வழங்குகின்றனர். ஈண்டு प्रकृतः என்பது செய்வினைப்பொருளிலேயே வந்திருக்கின்றது. ஆயினும் (क्रिया) सासौ येन येन शब्देनाभिसम्बध्यते तावति तावति परिसमाप्यते (महाभाष्ये under 3, 2, 105) என அவர் கூறுகின்றமையின், பழைய இலக்கியங்களில் कृतः போன்றவை செயப்பாட்டுவினைப்பொருளில் வந்ததாகக் கொள்ளல் வேண்டும். அதற்கு ஒரு சான்று ருக்வேதத்தில் முற்று வினைகள் உருவத்தில் செய்வினையாக இருப்பினும் பொருளில் செயப்பாட்டுவினையாகப் பல்லிடங்களில் இருக்கின்றன.

*Cf.* प्रतद्विष्णुः स्तवते (ऋ. वे. 1, 154, 2)

ஈண்டு स्तवते என்பதற்கு स्तूयते என்பது பொருள் ஆகும்.

6 देवात्तल् (पा. अ. 5, 4, 27); प्रज्ञादिभ्यश्च (*ibid* 5, 4, 38) दैवतः என்ற சொல்லைப் பாணினியாசிரியர் देव என்ற சொல்லிலிருந்து வந்த देवता என்ற சொல்லிலிருந்து வந்ததாகக் கொண்டனர். देव என்ற சொல்லிலிருந்தே வந்ததாகக் கொள்ளலாம் எனத் தோன்றுகின்றது.

1. स्त्रियां क्तिन् (*ibid* 3, 3, 94)
2. पङ्क्तिविंशतित्रिंशच्चत्वारिंशत्पञ्चाशत्षष्टिसप्तत्यशीतिनवतिशतम् (*ibid* 5, 1, 59)

ति, என்பது தொடக்கத்தில் செயலைக் குறிக்க வந்தது என்றும், சிலவிடத்தில் ருக்வேதத்தில் चित्तिः போன்ற சொற்கள் அறிவுடையோரைக் குறித்தது என்றுங் கூறுவர்.

படர்க்கையொருமை வினைவிகுதியான ति தாதுவைக்குறிக்கும் என வார்த்திககாரர் கூறினர்.

*Cf.* इक्श्तिपौ धातुनिर्देशे (under 3, 3, 108)

அதற்கு உதாரணமாக सक्तुः सचतेः, என்ற மஹாபாஷ்ய வாக்யம் உள்ளது. ஆனால் தாதுவால் குறிக்கப்பட்ட செயலைக் குறித்தற்கு यजतेः, ईक्षतेः என்ற சொற்கள் பூர்வமீமாம்ஸாஸூத்ரத்திலும் உத்தரமீமாம்ஸாஸூத்ரத்திலும் வழங்கப்பட்டன.

(9) न — உ-ம். ऋणम्,[1] स्त्रैणम्[2]

(10) म — உ-ம். क्षामः,[3] द्रुमः[4]

(11) य — உ-ம். चेयम्,[5] उदीच्यम्,[6] सभ्यः[7]

(12) र — உ-ம். नम्रः,[8] मधुरः[9]

(13) ल — உ-ம். फुल्लः[10], वत्सलः[11]

1. ऋणमाधमर्ण्ये (*ibid* 8, 2, 60)
2. तस्यापत्यम् (*ibid* 4, 1, 92)
3. क्षायो मः (*ibid* 8, 2, 53)
4. द्युद्रुभ्यां मः (*ibid* 5, 2, 108)
5. अचो यत् (*ibid* 3, 1, 97)
6. द्युप्रागपागुदक्प्रतीचो यत् (*ibid* 4, 2, 101)
7. सभाया यः (*ibid* 4, 4, 145)

   सभ्यः என்பதை सभा என்ற சொல்லோடு य என்ற தத்தித-ப்ரத்யயம் சேர்க்கப்பட்டு வந்ததாகப் பாணினியாசிரியர் கூறுகின்றனர். सह என்ற நிபாதத்தைக் கவனித்தால், सह् என்ற தாதுவிற்கு உடனிருத்தல் என்ற பொருளும் இருந்திருக்கவேண்டும் எனத் தெரிகின்றது. அன்றியும் ह् பல்லிடங்களிலும் அதற்கு மூலபூதமான घ, ध, ढ, भ இவற்றிற்குத் திரும்பிச் செல்லுகின்றது என மொழிநூல்களிற் கூறியிருத்தலின், सभ्य என்றவிடத்தில் य என்ற க்ருத்ப்ரத்யயமே सह् என்ற தாதுவுடன் சேர்க்கப்பட்டிருக்கலாம். அவ்வாறுயின் முன்னர் க்ருத்ப்ரத்யயமாயிருந்து பின்னர்த் தத்திதப்ரத்யயம் எனக் கருதப்பட்டது என்பதற்கு இஃதும் ஓர் உதாரணம் ஆகும்.

8. नमिकम्पिस्म्यजसकमहिंसदीपो रः (*ibid* 3, 2, 167)
9. ऊषसुषिमुष्कमधो रः (*ibid* 5, 2, 107)
10. अनुपसर्गात् फुल्लक्षीबकृशोल्लाघाः (*ibid* 8, 2, 55)
11. वत्सांसाभ्यां कामबले (*ibid* 5, 2, 98)

(14) व — உ-ம். पक्वः[1], केशवः[2]

(15—18) तुम्, त्वा, तवे, तोः இவற்றை க்ருத்ப்ரத்யயமாகவே கொண்டனர் பாணினியாசிரியர். இவற்றுள் நான்கும் வேதத்திலும், முன்னிரண்டுமே இதிஹாஸமொழியிலும் வழங்கப்படுகின்றன. இவற்றின் ரூபங்களையும், हन्त्वासः[3] என்பதையும் ग्रहीतुकामः, ग्रहीतुमनाः என்ற விடங்களில் மகாரத்தின் லோபத்தையும் பார்த்து, முதன்முதலில் तु ப்ரத்யயமாகவும் अम्, आ, ए, ओस् இவை வேற்றுமையுருபாகவும் இருந்திருத்தல் வேண்டும் என்பர். பிற்காலத்தில் तुम्, त्वा முதலியன ஒரே ப்ரத்யயங்களாகக் கருதப்பட்டன.

1. पचो वः (*ibid* 8, 2, 52)

2. केशाद्वोऽन्यतरस्याम् (*ibid* 5, 2, 109)

विधवा என்ற சொல் कस्ते मातरं विधवामचक्रत् (ऋ॰वे. 4, 18, 12) என்றவிடத்து உளது. धवः என்ற சொல் ருக்வேதத்தில் வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை. அதற்கு வடமொழியிலக்கணவாசிரியர்கள் विगतः धवः यस्याः सा என விக்ரஹம் கூறுகின்றனர். ஆங்கிலத்தில் அதற்கு இனச்சொல் *widow* என்பது; அதற்குப் புல்லிங்கம் *widower* என்பது. இவற்றையும் மற்ற மொழிகளிலுள்ள அதன் இனச்சொற்களையும் ஆராய்ந்து அச்சொல் व्यध् என்ற தாதுவோடு व என்ற க்ருத்ப்ரத்யயம் சேர, பின்னர் आ சேர்ந்து வந்தது என மொழிநூல்வல்லோர் கூறுவர். असुर என்ற சொல்லை असु+र எனப் பிரிக்காது, अ+सुर எனப் பிரித்ததால் सुर என்ற சொல் வந்தவாறு विधवा என்ற சொல்லை विध्+अ+व+आ எனப் பிரிக்காது वि+धव+आ எனப் பிரித்ததால் மொழியில் धव என்ற சொல் வந்ததாகக் கூறுகின்றனர்.

विधवा இ. யு. uidheuā

3. रिपवो हन्त्वासः (ऋ॰ वे. 3, 30, 15)

பாவார்த்தத்தில்[1] வரும் त्वम् என்பதும் तु ஒடு अम् சேர்ந்து வந்திருக்கலாம் என்பர். ता உம் तु ஒடு आ சேர்ந்து வர, உகரங்கெட ता என ஆயிற்று என்னலாம்.

से, असे, अध्यै — இந்த ப்ரத்யயங்கள் க்ருத்ப்ரத்யயங்களாய் வேதத்தில் வழங்கப்பட்டு இதிஹாஸமொழியில் இறந்தன.

உ-ம. वक्षे, अवसे,[2] गमध्यै[3]

இவையும் நான்காம்வேற்றுமையுருபேற்ற பெயர்களாய் வழங்கிப் பின்னர் துமுன்[4] அர்த்தத்தில் வந்த வினையெச்சங்களாகக் கருதப்பட்டன என்பர்.

சில ப்ரத்யயங்கள் க்ருத்தாகவே வழங்கப்பட்டன. அவற்றுள் சில இங்கே கூறப்படும் :

अनः — உ-ம். नन्दनः[5]
अनीय — உ-ம். चयनीयः[6]

இதே பொருளில் तव्य என்ற ப்ரத்யயமும் வழங்கப்படுகின்றது. ஆனால் அது மிகுதியாய் இதிஹாஸமொழியில் தான் காணப்படுகின்றது.

आक — உ-ம். वराकः[7]

1. तस्य भावस्त्वतलौ (पा. अ. 5, 1, 119)
2. ह्वयामि मित्रावरुणाविहावसे (ऋ. वे. 1, 35, 1)
3. ता वां वास्तून्युश्मसि गमध्यै (*ibid* 1, 160, 6)
4. तुमुन्
5. नन्दिग्रहिपचादिभ्यो ल्युणिन्यचः (पा. अ. 3, 1, 134)
6. तव्यत्तव्यानीयरः (*ibid* 3, 1, 96)
7. जल्पभिक्षकुट्टलुण्टवृङः पाकन् (*ibid* 3, 2, 155)

आलु — உ-ம். दयालुः[1] आ என்பதை க்ருத்தாகவும் लु என்பதைத் தத்திதமாகவும் கொள்ளல் தகும்.

इष्णु — உ-ம். अलङ्करिष्णुः[2]

இந்த ப்ரத்யயம் स्नु[3] ப்ரத்யயமே இகாரஸ்வரபக்தியோடு கூடி வந்தது எனக் கொள்ளல் தகும்.

उ — உ-ம். भिक्षुः[4]
वस् — உ-ம். विद्वस्[5]

சில ப்ரத்யயங்கள் தத்திதமாகவே வழங்கப்படுகின்றன.

इक — உ-ம். नाविकः[6]
ईन — உ-ம். सांयुगीनः[7]

कानीनः என்பது कन्या என்பதற்கு अण् ப்ரத்யயத்தைச் சேர்த்து வந்ததாகவும் அப்போது कन्या என்பதற்கு कनीन என்ற ஆதேசம் வந்ததாகவும் பாணினியாசிரியர் கூறுவர்.

*Cf.* कन्यायाः कनीन च (पा॰ अ॰ 4, 1, 116)
ஆனால் வேதத்தில் कना என்ற சொல் பெண் என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது.

*Cf.* कनायाँ दुहितुः (ऋ॰ वे॰ 10, 61, 5)
कना என்பதற்கு ईन என்ற ப்ரத்யயத்தைச் சேர்த்தால் कानीन என்ற ரூபம் எளிதாய் ஸித்திக்கும் என்பர். வேதத்தில்

1. स्पृहिगृहिपतिदयिनिद्रातन्द्राश्रद्धाभ्य आलुच् (*ibid* 3, 2, 158)
2. अलङ्कृञ् ......... इष्णुच् (*ibid* 3, 2, 136)
3. ग्लाजिस्थश्च स्नुः (*ibid* 3, 2, 139)
4. सनाशंसभिक्ष उः (*ibid* 3, 2, 168)
5. विदेः शतुर्वसुः (*ibid* 7, 1, 36)
6. नौद्व्यचष्ठन् (*ibid* 4, 4, 7)
7. तत्र साधुः (*ibid* 4, 4, 98)

வழங்கப்பட்ட कनीना என்ற சொல்லும்,[1] कना என்ற சொல்லும் இதிஹாஸமொழியில் இறந்துவிட்டமையால், பாணினியாசிரியர் அவ்வாறு கூறினர் என்க.

ईय — உ-ம். आयुधीयः [2]
त्न, तन — உ-ம். नूत्नम्, नूतनम् [3]
भ — உ-ம். वृषभः [4]
श — உ-ம். बहुशः [5]
तर — உ-ம். लघुतरः [6]
तम — உ-ம். लघुतमः [7]
ताति — உ-ம். शिवताति [8]

இது ता, ति இவ்விரண்டு ப்ரத்யயங்களும் சேர்ந்து உண்டாயின என்பர். இந்த ப்ரத்யயம் இதிஹாஸமொழியில் இறந்துவிட்டது.

मत् — உ-ம். गोमान् [9]
वत् — உ-ம். रसवान् [10]

1. भर्गः कनीनाम् (ऋ. वे. 1, 66, 4 ; 1, 163, 8 ; 2, 15, 7)
कनीनको विचारुहन् (*ibid* 10, 40, 9)
2. आयुधाच्छ च (पा. अ. 4, 4. 14)
3. नवस्य नू आदेशः त्नप्तनप्खाश्च प्रत्यया वक्तव्याः
(वार्त्तिकं under पा. अ. 5, 4, 25)
4. இந்த ப்ரத்யயம் Balto-Slavonic பாஷைகளில் மிகுதியாய் வழங்கப்படுகின்றது என்பர்.
5. बह्वल्पार्थाच्छस्कारकादन्यतरस्याम् (पा. अ. 5, 4, 42)
6. द्विवचनविभज्योपपदे तरबीयसुनौ (*ibid* 5, 3, 57)
7. अतिशायने तमबिष्ठनौ (*ibid* 5, 3, 55)
8. शिवशमरिष्टस्य करे (*ibid* 4, 4, 143)
9. तदस्यास्त्यस्मिन्निति मतुप् (*ibid* 5, 29, 4)
10. रसादिभ्यश्च (*ibid* 5, 2, 95) and मादुपधायाश्च मतोर्वोऽयवादिभ्यः (*ibid* 8, 2, 9)

अन् — உ-ம். महा[1]
मन् — உ-ம். वर्मन्
वन् — உ-ம். मघवा
विन् — உ-ம். यशस्विन्[2]

नகாராந்தசப்தங்களுக்கும் அகாராந்தசப்தங்களுக்கும் சில வேற்றுமைகளில் ரூபம் ஒத்திருப்பதைக்கொண்டு சில ப்ராதிபதிகங்கள் நகாராந்தரூபம் அகாராந்தரூபம் இரண்டையுங் கொண்டன.

உ-ம். चाकन् — चाक
धर्मन् — धर्म

வேற்றுமைப்பொருளில் சில ப்ரத்யயங்கள் வருகின்றன. ஐந்தாம்வேற்றுமைப்பொருளில் तः உம், ஏழாம்வேற்றுமைப் பொருளில் त्र உம், ஏழாம்வேற்றுமைப்பொருளாகிய காலப் பொருளில் दा, र्हि, दानीम् முதலியனவும் வரும்.

உ-ம். ततः, तत्र, तदा, तर्हि, तदानीम्

ப்ராகிருதமொழிநிலையிலும், வடமாகாணமொழிநிலையிலும் வடமொழிச்சொற்கள் பலவகையாக உருவம் மாறுபட்டமை யாலும், ப்ராகிருதமொழிகளும் வடமாகாணமொழிகளும் பலவகையில் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருத்தலாலும் அவற்றைப்பற்றி இலக்கணம் எழுதியவர் பெரும்பாலும் வட மொழியிலக்கணங்களின் ரீதியில் எழுதியிருப்பதாலும், அவ் விரண்டு நிலையிலும் உள்ள ப்ரத்யயங்களைக் கூறுதற்கு இலக்கியங் களிற் காணப்படும் சொற்களையெல்லாந் தொகுத்து அவற்றை ஆராய்தல் இன்றியமையாததாலும், அவை இங்கு விரிவாய்க் கூறப்படவில்லை. வடமொழியில் பெயரெச்சம் வினையெச்சம் இவற்றில் வந்த சில ப்ரத்யயங்களே ப்ராகிருதங்களில் வழங்கப் பட்டன. அவை अत् , माण, त्वा, तुम् , तव्य என்பன. அவை முறையே न्त, माण, ऊण, उम् , अव्व என ப்ராகிருதங்களில் மாறியுள்ளன.

1. नृम्णस्य मह्ना स जनास इन्द्रः (ऋ. वे. 2, 12, 1)
2. अस्मायामेधास्रजो विनिः (पा. अ. 5, 2, 121)

பெயர்ச்சொல்லின் அம்சங்கள் முன்னரே கூறப்பட்டன. அவை தாது, க்ருத்ப்ரத்யயம், சிலவிடத்து தத்திதப்ரத்யயம், வேற்றுமையுருபு என்பன. தாது, க்ருத்ப்ரத்யயம் எனப் பிரிக்கப்படாத இடத்தை அவ்யுத்பன்னப்ராதிபதிகம் என்பர். சில அவ்வாறு உண்டு என்பதே கார்க்யர், நிருக்தகாரர்கள் இவர்களது கொள்கை. இவற்றால் ப்ரவ்ருத்திநிமித்தம், வ்யக்தி, லிங்கம், வசனம், கர்மகரணாதிவேற்றுமைப்பொருள் என ஐந்து பொருள்கள் உணர்த்தப்படுகின்றன. இவ்வைந்தும் ப்ராதிபதிகத்தாலே உணர்த்தப்பட, आ, ई முதலியன ஸ்திரீலிங்கத்திற்கும், सुप् வசனம், வேற்றுமைப்பொருள் இவற்றிற்கும் த்யோதகம் ஆகும் என்பர் மஹாபாஷ்யகாரர்;[1] முதல் நான்கும் ப்ராதிபதிகார்த்தம் என்றும், வேற்றுமைப்பொருள் வேற்றுமையுருபின் பொருள் என்றுங் கூறுவர் கையடர்.[2] अजः போன்ற இடங்களில் முதல் மூன்றும் ப்ராதிபதிகார்த்தம் என்றும் ஏனைய இரண்டும் வேற்றுமையுருபின் பொருள் என்றும், रमाम् போன்ற இடங்களில் முதலிரண்டும் रम என்பதன் பொருள் என்றும், ஸ்திரீலிங்கம் आ இன் பொருள் என்றும், ஏனைய இரண்டும் வேற்றுமையுருபின் பொருள் என்றுங் கூறுவர் சிலர்.[3] द्वौ போன்ற இடத்தில் இருமை ப்ராதிபதிகத்

1. स्वार्थद्रव्यलिङ्गसङ्ख्याकर्मादिलक्षणः पञ्चकः प्रातिपदिकार्थः इति दर्शनम्
(कैयटे. under 1, 4, 21)
स्वार्थशब्देनप्रवृत्तिनिमित्तं द्रव्यशब्देन विशेष्यम् (उद्योते.)
एकत्वादयो विभक्त्यर्थाः ; कर्मादयः विभक्त्यर्थाः
(महाभाष्ये under 2-3, 1)
2. सङ्ख्यारहितं चतुष्कं प्रातिपदिकार्थः (उद्योते in महाभाष्ये under 2, 3, 1), (तत्त्वबोधिनी under 2-3-46)
3. यदा त्रिकः प्रातिपदिकार्थः स्वार्थद्रव्यलिङ्गलक्षणः
(कैयटे. under 3, 1, 92)
लिङ्गं टाबादिवाच्यमिति पक्षे आदितो द्विकमेवेत्यन्ये
(तत्त्वबोधिनी under 2, 3, 46)

தாலே குறிக்கப்படினும் ப்ரத்யயமில்லாது ப்ரகிருதியை வழங்கக் கூடாது என்ற நியமத்தால் ஸுப் பின்னர் வந்தது என்க.[1] விசேஷணத்தைக்குறிக்குஞ் சொற்களெல்லாம் விசேஷ்யத்தைக் குறிக்குஞ்சொல்லின் லிங்கவசனங்களைக் கொள்ளும்.[2]

ஈண்டு ஒன்று நோக்கத்தக்கது. ஐந்து பொருள்கள் பெரும்பாலும் மூன்று அம்சங்களால் குறிக்கப்படுகின்றன—தாதுவால் ப்ரவிருத்திநிமித்தமும், க்ருத்ப்ரத்யயத்தால் திரவ்யம், லிங்கம் இவை இரண்டும், வேற்றுமையுருபால் வசனம், கர்மாதி வேற்றுமைப்பொருள்கள் இவை இரண்டும். இதற்குக் காரணம் யாது எனின், முதன்முதலில் பெயர்ச்சொல்லை அம்சங்களாகப் பிரித்த இலக்கணவாசிரியர்கள் பொருளில் ஐந்து அம்சங்களைக் காணினும் சொல்லை ஐந்து அம்சமாகப் பிரிக்க இயலவில்லை என்பதே ஆகும். கர்மம், கரணம் முதலிய வேற்றுமைப் பொருள்கள் தனிமையாகவோ, வேறொன்றுடன் சேர்ந்தோ, பலவற்றுடன் சேர்ந்தோ நிற்றல் இன்றியமையாதது என நினைத்து வசனம், காரகப்பொருள் இவ்விரண்டையும் ஒன்றின் பொருளாகக் கூறியிருக்கலாம். த்ரவ்யம், அறியப்படின் அதன் பாலும் அறியப்படுமாகலின், அவ்விரண்டனையும் ஒன்றன் பொருளாகக் கூறியிருக்கலாம். அதனால் முதன்முதலில் லிங்கத்தைக் குறிக்கத் தனியாய் ஒரு அம்சம் இல்லாமல் இருப்பினுங் கூடும். ஆகலின் அதன் சரிதையை அறிதல் அவச்யமாகும்.

1. न केवला प्रकृतिः प्रयोक्तव्या न च केवलः प्रत्ययः

(महाभाष्ये under 2–3–1)

नित्यसम्बन्धौ एतावर्थौ प्रकृतिः प्रत्यय इति । प्रत्ययेन नित्यसम्बन्धात् केवलस्य प्रयोगो न भविष्यति । (महाभाष्ये under 1, 2, 45)

2. गुणवचनानां शब्दानामाश्रयतो लिङ्गवचनानि भवन्ति

(महाभाष्ये under 1, 2, 52)

இது கிரேக், லத்தீன் முதலிய மொழிகளிலும் இருந்தது என்பர்.

**லிங்கத்தின் சரிதை :** லிங்கம், புல்லிங்கம்[1], ஸ்திரீலிங்கம்[2], நபும்ஸகலிங்கம்[3] என மூவகைப்படும்.[4] சிலவிடத்தில் சொல்லின் லிங்கம் பொருளின் லிங்கத்தோடு ஒன்றுபட்டும் சிலவிடத்தில் வேறுபட்டும் உள்ளது.[5] पिता, माता என்ற இடங்களில் ஒன்றுபட்டும், दाराः, कलत्रम् என்றவிடத்தில் வேறுபட்டும் லிங்கங்கள் இருக்கின்றன. ஒன்றுபட்டிருக்கும் லிங்கத்தை இயற்கை-லிங்கம்[6] என்றும், மாறுபட்டிருக்கும் லிங்கத்தை இலக்கண-லிங்கம்[7] என்றுங் கூறுவர்.

1. पुल्लिङ्गम् Masculine Gender.
2. स्त्रीलिङ्गम् Feminine Gender.
3. नपुंसकलिङ्गम् Neuter Gender.
4. पुल्लिङ्गम्, स्त्रीलिङ्गम् இவையும் தமிழில் உள்ள ஆண்பால், பெண்பால் இவையும் ஒன்று ஆகாவோ எனின், ஆண்பால் ஆணொருமையையும், பெண்பால் பெண்ணொருமையையும் குறிக்கின்றனவாகலானும், புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் என்பன பொருள்பற்றியே இல்லாது சொல்பற்றியும் இருக்கின்றமையானும், அவை ஒன்று ஆகா என்க.
5. शब्दो या स्त्री तल्लक्षणश्चेदेव विशेष इति आहोस्विदर्थो या स्त्री तल्लक्षणश्चेदेव विशेष इति (महाभाष्ये under 1, 2, 68)

   लोकत एते शब्दाः प्रसिद्धाः स्त्री पुमान्नपुंसकमिति…खट्वावृक्षयोश्च लिङ्गं न सिध्यति…तस्मान्न वैयाकरणैः शक्यं लौकिकं लिङ्गमास्थातुम् । अवश्यञ्च कश्चित् स्वकृतान्त आस्थेयः । कोऽसौ स्वकृतान्तः? संस्त्यानप्रसवौ लिङ्गमास्थेयौ…कस्य पुनः संस्त्यानं स्त्री, प्रवृत्तिर्वा पुमान्? गुणानाम् । केषाम्? शब्दस्पर्शरूपरसगन्धानाम् । … संस्थानाविवक्षायां स्त्री, प्रसवविवक्षायां पुमान्, उभयोरविवक्षायां नपुंसकम् । (महाभाष्ये under 4, 1, 3)
6. இயற்கைலிங்கம் = लौकिकलिङ्गम् = **Natural gender.**
7. இலக்கணலிங்கம் = वैयाकरणलिङ्गम् = **Grammatical gender.**

   गुणानां सत्त्वरजस्तमःपरिणामरूपाणां शब्दादीनां वृद्धिह्रासमध्यस्था अवस्थाः शब्दैकगोचरा लिङ्गत्वेन परिगृह्यन्ते । आत्मनस्त्वपरिणामिरूपत्वादप्रवृत्तिधर्मत्वेप्यनुयायित्वाल्लिङ्गयोगः (कैयट under 2, 1, 35)

இண்டோயூரோபியன்மொழிகள் தாய்மொழியை விட்டுப் பிரிவதற்கு முன்னரே இலக்கணலிங்கத்தை உடைத்தாயிருந்தன. உயிரில்பொருள்களிலும் ஆண் பெண் என்ற விபாகத்தைக்கொண்டு சொற்களை வழங்கியவர் மிக்க ஆராய்ச்சியாளராய் இருத்தல் வேண்டும் என மொழிநூல்வல்லோருள் முன்னோர் கூறினர். அக்கொள்கைக்கு மஹாபாஷ்யமும் இடந்தருகின்றது. ஆனால் இலக்கணலிங்கத்திற்கும் இயற்கைலிங்கத்திற்கும் ஒரு ஸம்பந்தமும் இல்லை என்பர் ப்ருக்மன். அதற்கு அவர் கூறுங் காரணங்கள் ஆவன :—

(1) ஒரே லிங்கம் எனக் கொள்ளப்பட்ட சொற்களுள் சில ஆண்மக்களையும் சில பெண்மக்களையும் குறிக்கின்றன.

உ-ம். देवाः, दाराः

(2) மனைவி பெண்ணாயிருப்பினும், அவளைக் குறிக்கப் புல்லிங்கச்சொல், ஸ்திரீலிங்கச்சொல், நபும்ஸகலிங்கச்சொல் இம்மூன்றுங் காணப்படுகின்றன.

உ-ம். दाराः, भार्या, कलत्रम्

(3) மொழிகளின் சரிதையில் ஒரு லிங்கச்சொல் மற்றொரு லிங்கச்சொல்லாக மாறிவிடுகின்றது.[1]

உ-ம். गौः என்ற சொல் தொடக்கத்தில் புல்லிங்கமாக இருந்திருத்தல் வேண்டும் என்பது अयं गौः[2] என்ற ருக்வேதப்பிரயோகத்தால் அறியப்படும். இப்போது ஸ்திரீலிங்கத்திலே பெரும்பாலும் வழங்கப்படுகின்றது.[3]

1. ஜர்மன்மொழியில் *e* இல் முடிந்த *traube, niere, wade* என்ற சொற்கள் முற்காலத்தில் புல்லிங்கமாயும் தற்போது ஸ்திரீலிங்கமாயுங் கொள்ளப்பட்டன. அதற்குக் காரணம் தற்போது *e* இல் முடியுஞ் சொற்களுள் பல ஸ்திரீலிங்கமாய் இருத்தலே என்னலாம்.
2. आयं गौः पृश्निरक्रमीत् (ऋ. वे. 10, 189, 1)
3. क्षीरिण्यः सन्तु गावः (मृच्छकटिके 10, 60)

(4) மெய்யீற்றுப்பிராதிபதிகங்களில் லிங்கம் பொருளாலே முன்னர் அறியப்பட்டிருத்தல் வேண்டும்.[1] ஆகலின் இண்டோயூரோபீயன்மொழியின் ஆதிகாலத்தில் லிங்கத்தைக் குறிக்கச் சொல்லில் ஒன்றும் இல்லாமல், பொருளின் லிங்கத்தைக்கொண்டோ அடைமொழிகளாலோ சொல்லின் லிங்கத்தை அறிந்திருக்கவேண்டும் என்பர்.

அவ்வாறாயின் இலக்கணலிங்கம் எவ்வாறு வந்தது என ஆராயவேண்டும் :

உயிரில் பொருள்களைக் குறிக்குஞ் சொற்களில் புல்லிங்கமும் ஸ்திரீலிங்கமும் எவ்வாறு வந்தன என்பதைத் தீர்மானமாய் இன்றுங் கூற இயலவில்லை. அதனைப்பற்றிய ஆராய்ச்சி வார்த்திககாரரது காலத்தே வந்துவிட்டது என்பது खट्वावृक्षौ न सिध्यतः (वार्त्तिकम् under 4, 1, 3) என்ற வார்த்திகத்தால் அறியப்படுகின்றது.

இலக்கணலிங்கத்தின் உற்பத்தி : காலக்கிரமத்தில் சில ப்ரத்யயங்கள் தாம் சேர்ந்த பகுதிகளுக்கு உரித்தான பொருளைக் கொள்ளுகின்றன. இவற்றைச் சேர்ந்தது ஸ்திரீலிங்கப்ரத்யயமான आ என்பது. வைதிகச்சொல்லாகிய ग्ना[2] என்பதன் இறுதியில் आ உள்ளது. இச்சொல்லில் பகுதிப்பொருளே பெண்ணைக் குறிக்கின்றது. பின்னர் आ என்பதே பெண்ணைக் குறித்தது என எண்ணி, அதனை ग्ना என்பதிலிருந்து பிரித்து, அது பெண்ணைக் குறிக்கும் விகுதி என நினைத்துப் பின்னர் அதனை अ-காராந்தச்சொற்களுக்குச் சேர்க்க, அவை பெண்ணைக் குறித்தன என இலக்கணவாசிரியர் கொண்டனர். இவ்வாறே स्त्री[3] போன்ற சொற்களிலிருந்து ई[4] யைப் பிரித்து

1. இ. யூ. *p°tēr, mātēr.*
2. இதைப்போன்றனவே வடமொழியிலுள்ள रमा, मा என்ற சொற்கள்.
3. लक्ष्मीः, गौरी இவை ஒருவாறு இதனைப்போன்றதே என்னலாம்.
4. பல மொழிகளிலும் அல்பம் என்ற பொருளில் வரும் ப்ரத்யயங்களுள் *i* என்ற உயிர் இருக்கின்றது என்பர் யெஸ்பர்ஸன்.

அதுவும் பெண்ணைக்குறிக்கும் ப்ரத்யயம் என நினைத்து அகாராந்தச்சொற்களுக்குச் சேர்க்க, அவையும் பெண்ணைக் குறித்தன என இலக்கணவாசிரியர் கொண்டனர்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ-ம். | अश्वः | अश्वा [1] | जनकः | जानकी |
| | रामः | रामा | पर्वतः | पार्वती |

இவ்வாறே பல அகாராந்தச்சொற்கள் தத்தம் பகுதிகளால் ஆணைக் குறிக்க, அவற்றிலிருந்து अ-ஐப் பிரித்து, அஃது ஆணைக் குறிக்கும் ப்ரத்யயம் எனக் கருதி, பின்னர் பகுதிகளுக்கு அதனைச் சேர்த்தனர். பின்னர் அகாராந்தச்சொற்களெல்லாவற்றையும் புல்லிங்கச்சொற்கள் எனக் கருதினர். கிரேக், லத்தீன் இம்மொழிகளில் ஸ்திரீலிங்கமாகக் கருதப்படும் அகாராந்தச் சொற்கள் இன்றும் உள்ளன. பின்னர் ई, ऊ இவற்றை இறுதியிற் கொண்ட சொற்களும், ஏகாச்சான தொழிற்பெயர்களும், ति முதலியவற்றில் முடியும் பெயர்களும் ஸ்திரீலிங்கச்சொற்கள் என்றும், तृ, अन् இவற்றில் முடிவன புல்லிங்கச்சொற்கள் எனவுங் கருதப்பட்டன.

இவ்வாறு கூறியவர் ப்ருக்மன். ஆனால் யாகோபி [2] இக் கொள்கையை ஏற்றுக்கொள்ளவில்லை. அதற்கு அவர் கூறும் காரணங்கள் இரண்டு:— (1) गना, स्त्री போன்ற சொற்கள் ஒவ்வொரு மொழியிலும் மிகுதியாய் இல்லை என்பது ஒன்று; (2) ஸர்வநாமசப்தங்களில் புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் எவ்வாறு வந்தன என்பது கூறப்படவில்லை என்பது மற்றொன்று. இலக்கணலிங்கங்களின் உற்பத்தி பெயர்களிலிருந்து அறிதல் இயலாது என்றும், ஸர்வநாமசப்தங்களிலிருந்து அறியவேண்டும் என்றும் அவர் கூறுவர். அவர் கூறுங் காரணங்களும் சிறந்தனவாகத் தோன்றவில்லை என்பர் மொழிநூல்வல்லோர்.

1. இ. ஐ. ek̂uo-s — ek̂uā

2. Jacobi.

ஆகலின் எல்லோரும் மனமொத்து ஏற்றுக்கொள்ளும்படி இலக்கணலிங்கத்தின் வரலாற்றினை இதுவரை ஒருவரும் கூறவில்லை.

ஆனால் ஈண்டு சில விஷயங்கள் கவனித்தற்கு உரியன. வடமொழியில் பகுதியாலே ஆண் பெண் இவற்றைக் குறிக்குஞ் சொற்கள் இன்றும் வழங்கப்படுகின்றன. அவை पिता, भ्राता, भर्ता नप्ता என்ற புல்லிங்கச்சொற்களும் माता, स्वसा, ननान्दा என்ற ஸ்திரீலிங்கச்சொற்களும் ஆகும். அவ்வாறே रमा, वधूः, लक्ष्मीः, धेनुः முதலிய சொற்களும் கொள்ளல் தகும். இவை முறையே रम्, वह्, लक्ष्, धे முதலிய தாதுக்களுக்கு आ, ऊ, मी, नु என்ற க்ருத்ப்ரத்யயங்கள் சேர்ந்து வந்தன எனக் கொள்ளல் தகும். அன்றியும் ஸ்திரீலிங்கப்ரத்யயங்களுள் ति போன்றன க்ருத்ப்ரத்யயமாயும், आ, ई போன்றன க்ருத், தத்திதன் இரண்டாயும் இருக்கின்றன. ति ஸ்திரீயைக் குறிக்கும் என்பர் பாணினியாசிரியர்.[1] विश्वपा போன்ற ஆகாராந்தச்சொற்கள் இன்றும் புல்லிங்கமாக வழங்கப்படுகின்றன ருக்வேதத்தில் புல்லிங்கமாக வழங்கப்பட்ட ஆகாராந்தச்சொற்களாகிய सामगाः[2], गोपाः[3] என்பன தற்போது அகாராந்தமாய் सामगः, गोपः என வழங்கப்படுகின்றன.[4]

1. स्त्रियां क्तिन् (पा. अ. 3, 3, 94)
2. तमेव ऋषिं तमु ब्रह्माणमाहुर्यज्ञन्यं सामगामुक्थशासम्
(ऋ. वे. 10, 10, 76)
3 राजन्तमध्वराणां गोपाम् (*ibid* 1, 1, 8)
गां पान्ति என்ற பொருளில் வந்த गोपाः என்ற சொல்லிற்கும் गुप् தாதுவிலிருந்து வந்த गोपाः என்ற சொல்லிற்கும் மயக்கம் தோன்றி गोपः என்ற சொல் வந்திருத்தல் கூடும்.
4. जगुश्च ते यथाशास्त्रं तत्र सामानि सामगाः (रामा. अ. 76, 18)
போன்ற விடத்திலுள்ள सामगाः என்ற பன்மைச்சொல்லை सामग என்பதன் பன்மை என மயங்கி. सामगः என்ற சொல்லை வழங்கத் தொடங்கினர்.

ग्रामणीः [1], सेनानीः முதலிய ஈகாராந்தச்சொற்கள் இன்றும் புல்லிங்கமாக வழங்கப்படுகின்றன.

புல்லிங்கமும் ஸ்திரீலிங்கமும் நிலைத்தபிறகு நபும்ஸகலிங்கம் வந்திருத்தல் கூடும். அதற்குக் காரணம் மூன்றும் வேற்றுமையி லிருந்து ஏழாம் வேற்றுமை முடிய அதன் ரூபங்கள் புல்லிங்க ரூபங்களை ஒத்திருத்தலே ஆகும். நபும்ஸகலிங்கத்திலுள்ள சொற்கள் பெரும்பாலும் அசேதனப்பொருளையும், நிலை முதலிய வற்றையும் குறித்தலால், அவற்றின் இரண்டாம்வேற்றுமை யொருமைரூபமே முதலில் வந்திருக்கலாம். அவற்றில் அகாராந் தத்தைத் தவிர்த்து ஏனைய ப்ராதிபதிகங்களே வேற்றுமையுரு பின்றி வழங்கப்பட்டுள்ளன. அகாராந்தத்தில் புல்லிங்கத்தின் ரூபமே காணப்படுகின்றது. பிறகு அவற்றிற்கும் முதல் வேற்றுமை வேண்டும் எனக் கருதப்பட்டு இரண்டாம் வேற் றுமைரூபமே ஆங்குங் கொள்ளப்பட்டது என்னலாம்.

இரண்டாம்வேற்றுமைப்பன்மையில் अ, इ, उ இவற்றை ஈற்றிற்கொண்ட ப்ராதிபதிகங்கள் आ, ई, ऊ இவற்றில் முடிகின் றன. அகாராந்தத்தில் முதல் வேற்றுமையில் நபும்ஸகலிங்கப் பன்மைரூபம் வேதத்தில் ஆகாராந்தஸ்திரீலிங்கத்தின் ஒருமை ரூபத்தை ஒத்திருத்தலின்,[2] அது ஒரு கூட்டத்தைக் காட்டும் ஸ்திரீலிங்கவொருமை ஆக இருக்கலாம் எனக் கூறுவர் மொழி நூல்வல்லோர். இதை ஒட்டியே அவை கிரேக் வைதிகமொழி இவ்விரண்டிலும் சிலவிடத்தில் ஒருமைவினையைக் கொள்ளும்.[3] ஹலந்தநபும்ஸகலிங்கத்தில் முதல் வேற்றுமைப்பன்மையில் आ குறைந்து ऽ ஆனபிறகு, அந்த ऽ வைதிகமொழியில் इ

1. दक्षिणावान्ग्रामणीरग्रमेति (ऋ॰ वे॰ 10, 107, 5)

2. भयन्ते विश्वा भुवना (*ibid* 1, 85, 8)

3. धृष्णवे धीयते धना (*ibid* 1, 81, 3)

ஆயிற்று. ज्ञानानि, शुचीनि முதலியன நகாராந்தப்ராதிபதிகங்களின் முதல்வேற்றுமைப்பன்மைரூபத்தின் அதிதேசத்தால் வந்தன என்பர்.

இதிஹாஸமொழியில் நண்பன் என்ற பொருளில் வரும் मित्रम् என்பது வைதிகமொழியில் புல்லிங்கமாய் உள்ளது.[1]

வசனம் :[2] இண்டோயூரோபீயன்மொழியில் வசனம் ஒருமை, இருமை, பன்மை என மூன்று வகைப்படும். அவை வேற்றுமையுருபாலே குறிக்கப்படும். ஆனால் வடமாகாண மொழிகளில் பன்மையைக் குறிக்க வேறு ப்ரத்யயமும் வேற்றுமையைக் குறிக்க வேறு ப்ரத்யயமும் உள. இண்டோ-யூரோபீயன்மொழிகளில் சிலவற்றுள் பண்டைக்காலத்தில் இருமை இருந்து தற்போது இறந்துவிட்டது. வைதிகமொழியிலும் இதிஹாஸமொழியிலும் அஃது இருக்கின்றது. பழைய இரான்மொழியிலும் பழைய கிரேக்கிலும் அஃது இருந்தது. தற்போது ப்ராகிருதம் வடமாகாணமொழிகள் இவற்றில் இல்லை. அவ்வாறே இரான், கிரேக் இம்மொழிகளில் தற்காலத்தில் இல்லை என்பர். லத்தீன் ஆர்மீனியன் இம்மொழிகளில் அறிந்தவரை இருந்ததாகத் தோன்றவில்லை என்பர். ஏனைய மொழிகளிலும் அதன் வழக்கு மிகச் சிறிதே ஆகும். வைதிகமொழியிலும் ஏழு வேற்றுமைகளில் இருமைரூபங்கள் மூன்றே இருத்தலின் இருமை சிறுபான்மையே வழங்கப்பட்டது என அறியப்படுகின்றது. மொழியில் இருமை கெடுதல் அம்மொழியைப் பேசுவோரின் உயர்ந்த நாகரிகத்தைக் குறிக்கின்றது என்பர்.[3] ஆகலின் அதன் சரிதம் அறிதற்கு உரியது.

இருமையின் சரிதம் : உலகத்தில் சில பொருள்கள் இயற்கையில் இரட்டையிரட்டையாய் இருக்கின்றன. அவை இரண்டும் ஒரே செயலைச் செய்கின்றன. ஆகலின் அவற்றை

1. यं क्रन्दसी संयती विह्वयेते परेऽवर उभया अमित्राः (*ibid* 2, 12, 8)
2. वचनम् –எண்–Number.
3 Language by Vendryes p. 355

ஒன்றாகவே மக்கள் நினைத்தற்கு இடன் உண்டு. அவ்வாறுள்ள பொருள்கள் மக்களின் கண், கால், கை முதலியன ஆகும். இவற்றைக் குறிக்கத் தொடக்கத்தில் வழங்கிய சொற்கள் உருவத்தில் ஒருமையாகவே இருந்திருத்தல் கூடும். அவை अक्षी, हस्तौ, बाहू, पादौ முதலியன.

இதற்கு ஒரு சான்று கூறலாம். தமிழ்மொழியில் கண், கால் முதலியன உருவத்தில் ஒருமையாய் இருப்பினும் பன்மையைச் சுட்டும் என்று ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுகின்றார்.[1]

வேதத்திலும் அவ்வாறுள்ள பொருள்கள் இரட்டையாகவே குறிக்கப்படுகின்றன.[2]

பின்னர்ச் செயற்கையில் இரண்டு பொருள்களைக்கொண்டு ஒருவேலையை மக்கள் செய்கின்றனர். உதாரணமாக, இரண்டு மாடுகளைக்கொண்டு நிலத்தை உழுகின்றனர்; வண்டியையும் ஓட்டுகின்றனர். அப்போது 'மாட்டைக் கொண்டுவா' என மக்கள் கூறுகின்றனரே யன்றி 'மாடுகளைக் கொண்டுவா' எனக் கூறுவதில்லை. ஆகலின் அவ்வாறுள்ள பொருள்களைக் குறிக்க இருமை வழங்கியிருத்தல் கூடும். போரில் பகைவர் இரு கக்ஷியினராய்ச் சண்டை செய்யும்போது, ஒவ்வொரு கக்ஷியையும் ஒன்றாய் நினைக்க, வினை இருமையில் வேதத்தில் வழங்கப் பட்டது நோக்கத்தக்கது.

यं क्रन्दसी संयती विह्वयेते परेवर उभया अमित्राः

(ऋ. वे. 2, 12, 8)

இவ்வாறுள்ள சொற்கள் गावौ, अश्वा, अश्वौ முதலியன ஆகும்.

*Cf.* अश्वा नया वाजिना पूतबन्धू (ऋ. वे. 6, 67, 4)

1. தொல், சொல் 61.
2. अक्षीभ्यां ते नासिकाभ्यां कर्णाभ्यां छुबुकादधि (ऋ. वे. 10, 163, 1)

ஒன்றுக்கொன்று வேறுபட்டிருந்தும் இரண்டு பொருள்கள் ஒன்றாக இருந்து காரியங்களைச் செய்கின்றமையான் அவ்விரண்டையும் இருமைவிகுதியோடு வழங்கி, பின்னர் அவற்றுள் ஒன்றை இருமைவிகுதியோடு வழங்கி இரண்டையுங் குறிப்பதாகக் கொண்டனர். அவ்வாறுள்ள சொற்கள் दस्रा [1], नासत्या [2], पितरा [3], मातरा [4], द्यावा [5], अहा [6] முதலியன ஆகும்.

இரண்டையும் ஒருங்கே கொள்ளவேண்டியவிடத்து उभा [7], उभौ, उभे முதலிய பதங்கள் வேதத்தில் வழங்கப்பட்டன.[8]

இரண்டனுள் ஒவ்வொன்றையும் குறிக்கவேண்டியவிடத்து द्वा [9], द्वौ, द्वे முதலிய பதங்கள் வழங்கப்பட்டன.[10]

ப்ராகிருதமொழியில் द्वौ, उभौ இவற்றிற்கு நேரான சொற்களின் பின்னர் பன்மைப்பெயரே வழங்கப்பட்டன; அவற்றையொட்டி அவற்றின் பின்னர் பன்மைவினையே வழங்கலாயின.[11]

1. दस्रा हि विश्वमानुषङ् मक्षूभिः परिदीयथः (ऋ. वे. 8, 26, 6)
2. नासत्या कुहचित्सन्तौ (*ibid* 1, 184, 1)
3. पुनर्ये चक्रुः पितरा युवाना (*ibid* 4, 33, 3)
4. आ मातरा भरति (*ibid* 4, 22, 4)
5, 6. द्यावा च यत्र पीपयन्नहा च (*ibid* 8, 65, 2)
7. उभा—Latin *ambo*, Greek *ambō*
8. उभे द्यावापृथिवी अन्तरीयते (*ibid* 1, 35, 9)
   उभा राजाना स्वधया मदन्ता (*ibid* 10, 14, 8)
9. द्वा—Latin *duo* Greek *duo*.
10. तिस्रो द्यावः सवितुर्द्वा उपस्था (*ibid* 1, 35, 6)
    विभिद्वा चरतः (*ibid* 8, 29, 9)
11. **दुवे** वि णिक्करुणजलणस्स प्पवेसेण **इन्धणीहोन्ति**
    (वेणीसंहारे 6, 28—)

**வேற்றுமைகள் :** *தாய்மொழியில் எட்டு வேற்றுமைகள் இருந்திருக்கவேண்டும்.* அவை எழுவாய்வேற்றுமை, கர்மவேற்றுமை, கருவிவேற்றுமை, ஸம்பிரதானவேற்றுமை, அபாதானவேற்றுமை, ஸம்பந்தவேற்றுமை, இடவேற்றுமை, விளிவேற்றுமை ஆகும்.[1] *விளிவேற்றுமையிலுள்ள சொல் வாக்கியத்தில் வேறு சொல்லோடு சம்பந்தப்படாமையால், உண்மையாய் அது ஒரு வேற்றுமை ஆகாது. வைதிகமொழியிலும் இதிஹாஸமொழியிலும் எட்டு வேற்றுமைகளும் உள. ப்ராகிருதத்தில் ஸம்பிரதானவேற்றுமை பெரும்பாலும் இல்லை. அதன் பொருளில் சம்பந்தவேற்றுமையே உளது.*[2] *அவ்வாறே வடமாகாணமொழிகளிலும் உளது. பால்டிக்-ஸ்லாவோனிக் பாஷைகளில் அபாதானவேற்றுமை இறந்தது. கிரேக் பாஷையில் கருவிவேற்றுமையும் அபாதானவேற்றுமையும் இறந்தன.*

1. *எழுவாய்வேற்றுமை (முதல்வேற்றுமை)* = प्रथमा विभक्तिः = Nominative case

   *கர்மவேற்றுமை (இரண்டாம்வேற்றுமை)* = द्वितीया विभक्तिः = Accusative case.

   *கருவிவேற்றுமை (மூன்றாம்வேற்றுமை)* = तृतीया विभक्तिः = Instrumental case.

   *ஸம்பிரதானவேற்றுமை (நான்காம்வேற்றுமை)* = चतुर्थी विभक्तिः = Dative case.

   *அபாதானவேற்றுமை (ஐந்தாம்வேற்றுமை)* = पञ्चमी विभक्तिः = Ablative case.

   *ஸம்பந்தவேற்றுமை· (ஆறாம்வேற்றுமை)* = षष्ठी विभक्तिः = Genetive case.

   *இடவேற்றுமை (ஏழாம்வேற்றுமை)* = सप्तमी विभक्तिः = Locative case.

   *விளிவேற்றுமை (எட்டாம்வேற்றுமை)* = सम्बोधनप्रथमा विभक्तिः = Vocative case.

2. ता निव्वट्टीअदु भअवदो सहस्सरस्सिणो सवरिआ (वेणीसंहारे 2, 15-)

வேற்றுமை ஒன்றுபடுகை:[1] சில மொழிகளில் சில வேற்றுமைகள் இறந்தன எனக் கூறப்பட்டது. அப்போது அவ்வேற்றுமைகளுக்கு உரித்தான உருபுகள் வேறு வேற்றுமையின் உருபுகளாகக் கருதப்பட்டன. உதாரணமாக கிரேக் மொழியில் தற்போது ஸம்பிரதானவேற்றுமை என்பதற்கண் பழைய ஸம்பிரதானவுருபுகள், கருவிவேற்றுமையுருபுகள், இடவேற்றுமையுருபுகள் உள்ளன; ஸம்பந்தவேற்றுமை என்பதற்கண் பழைய ஸம்பந்தவேற்றுமையுருபுகளும் பழைய அபாதானவேற்றுமையுருபுகளும் உள்ளன. அவ்வாறே லத்தீன்மொழியில் தற்போது அபாதானவொருமைவேற்றுமையின்கண் பழைய அபாதானவுருபுகள், இடவேற்றுமையுருபுகள், கருவிவேற்றுமையுருபுகள் உள்ளன. ஆகலின் கிரேக் மொழியில் தற்போது ஸம்பிரதானவேற்றுமையின் பொருளாக பழையஸம்பிரதானவேற்றுமைப்பொருள், பழைய கருவி வேற்றுமைப்பொருள், பழைய இடவேற்றுமைப்பொருள் இவையனைத்தும் கொள்ளப்படுகின்றன. இந்த ஸம்பந்தத்தை வேற்றுமையொன்றுபடுதல், विभक्त्येकत्वम् என்ற பெயராற் குறிக்கலாம். ஈண்டு ஒன்று அவசியமாய் நோக்கத்தக்கது. ஒரு வேற்றுமைக்குப் பல வேற்றுமைப்பொருள் உள்ளதாகக் கருதப்படினும், அவ்வவ்வேற்றுமையுருபு பண்டையகாலத்தில் எப்பொருளில் வழங்கப்பட்டதோ அவ்வாறே வழங்கப்பட்டது.

அவ்வாறு வழங்கப்படாது ஒரு உருபு வேறு உருபின் பொருளில் வழங்கப்படின், அதனை வேற்றுமைப்பொருள் மயக்கம் என்னலாம்.[2] கிரேக்மொழியில் sio ஆகிய ஆறாம்

1. வேற்றுமையொன்றுபடுகை = विभक्त्येकत्वम् = Syncretism.
2. வேற்றுமைப்பொருள்மயக்கம் = सुबर्थव्यत्ययः = Contamination; ஆங்கிலத்தில் மூன்றாம்வேற்றுமை முதல் ஏழாம்வேற்றுமை வரையில் உள்ள உருபுப்பொருளை by, with, to, from, of, in முதலிய சொற்களால் குறிக்கின்றனர். அவற்றின்பின் வரும் பெயரை இரண்டாம் வேற்றுமை என்றே கூறுகின்றனர். இது ஸிங்க்ரிடிஸிம் ஆகும். 'Mend the pencil *with* a knife' என்று கூறுதற்குப் பிரதியாக 'Mend the pencil *by* a knife' என்று வழங்கினால், இது கன்டாமினேஷன் ஆகும்.

வேற்றுமையுருபு ஐந்தாம்வேற்றுமைப்பொருளிலும் வழங்கப் படுகின்றது. இதனை வடமொழியில் सुवर्थव्यत्यय: என்னலாம்.

இவ்விரண்டு ஸம்பவங்களும் வேற்றுமைகள் முன் இருந்த எண்ணிக்கையிலிருந்து பின்னர்க் குறைந்தால்தான் நிகழும் என்பது வெளிப்படை. அது வைதிகமொழியிலும் இதிஹாஸ மொழியிலும் இல்லாமையால், ஆங்கு அவ்விரண்டற்கும் இடனில்லை. ப்ராகிருதத்தில் ஸம்பிரதானவேற்றுமை ஸம்பந்த வேற்றுமையோடு ஒன்றுபட்டமையால் ஆங்கு विभक्त्येकत्वम् உண்டு; ஆனால் ஸம்பிரதானவேற்றுமையுருபு இறந்தமையால் सुवर्थव्यत्ययத்திற்கு இடம் இல்லை.

வேற்றுமையுருபுகள்: வேற்றுமையுருபுகள், அவற்றை யேற்ற பகுதிகளின் பொருள் பின்வருஞ் சொற்களின் பகுதிப் பொருளோடு எவ்வாறு ஸம்பந்தப்படுகின்றது என்பதைக் கூறு கின்றமையாலும், அந்த ஸம்பந்தம் பல்வகைப்பட்டமையாலும் மொழிகளின் பண்டைய நிலையில் பல வேற்றுமையுருபுகள் இருந் திருக்கவேண்டும். வேற்றுமையுருபுகளின் பொருள் நிச்சய மாய் இதுதான் என நிலைக்கப்படாமலும் இருந்திருக்கவேண்டும். இவ்வுருபிற்கு இப்பொருள்தான் என நிச்சயித்தல் பிற் காலத்ததாக இருத்தல் வேண்டும். ஆகலின் தொடக்கத்தில் ஒவ்வொரு உருபிற்கும் குறிப்பிட்ட பொருள் இருந்தது என் றும், அவற்றில் மயக்கம் பிற்காலத்திலே வந்தது என்றும் விட்னி, ஷ்லீஷர் முதலிய பண்டைய மொழிநூல்வல்லோரின் கூற்று பொருந்தாது என்பர் பிற்காலத்து வந்த மொழிநூல் வல்லோர். ஆகலின் அவ்வேற்றுமையுருபுகளின் உற்பத்தியைப் பற்றி அறிதல் நன்று.

வேற்றுமையுருபுகளின் உற்பத்தி: வேற்றுமையுருபுகள் தொடக்கத்தில் சொற்களாய் இருந்து பிறகு தேய்ந்து மாய்ந் தவை என ரைட் முதலியோர் கூறுவர். அவ்வாறு உள்ளன மிகச் சிறியவே ஆகும் என்பர் யேஸ்பர்ஸன். அதற்கு அவர் இரண்டு காரணங்களைக் கூறுவர். அவையாவன:—(1) उक्षन्

என்ற பிராதிபதிகத்திற்கு ஒத்த ஆங்கிலப்ராதிபதிகமான *oxen* என்ற சொல்லைப் பன்மை என ப்ரமித்து, அதனுள் *ox* என்பது ப்ராதிபதிகம் எனவும் *en*, பன்மை விகுதி எனவுங் கொண்டுள்ளார். அன்றியும் பின்னர் உயிர் முதன்மொழியாய் வரின் வழங்கப்பட்ட *mine, thine* என்ற சொற்களில் உள்ள *ne*-ஐ விதேயப்பொருளைக் காட்டுவதாக ப்ரமித்தனர். ஆகலின் ஷேக்ஸ்பியர் என்ற மஹாகவி *mine eyes, thine enmity*[1] என வழங்கிருப்பினும் இக்காலத்து அவ்வாறு வழங்குதல் தவறு எனக் கருதப்படுகின்றது. ஜர்மன்மொழியில் இக்காலத்தும் பெயர்க்குமுன்னர் *mein* வழங்கப்படுகின்றது.[2]

(2) வேற்றுமைப்படுத்த சொற்களையே தொடக்கத்தில் மக்கள் வழங்கியிருப்பாராயின், ஒருவகை வேற்றுமையைக் குறிக்க ஒரே சொல்லை எல்லாப்பிராதிபதிகத்தின் பின்னர் வழங்கியிருப்பர். அவ்வாறு இல்லை. எழுவாய் வேற்றுமைப் பன்மையுருபுகள் आसस्, अस् என இரண்டு இருக்கின்றன; மூன்றும் வேற்றுமையொருமையுருபுகள் इन, आ என இரண்டு இருக்கின்றன. நான்காம் வேற்றுமையொருமையுருபுகள் य, ए, भ्यम्, ह्यम् सै, स्यै, முதலியன இருக்கின்றன.

ரைட் கூறுவதை இவ்வாறு மறுத்து யெஸ்பர்ஸன் தனது கொள்கையைக் கூறுகின்றனர். தற்போது வேற்றுமையுருபுகளாகக் கருதப்படுவன தொடக்கத்தில் வேற்றுமைப்பொருளை உணர்த்தாத சொற்களின் பகுதியாய் இருந்திருக்கவேண்டும்.

1. mine eyes / my mother / thine enmity / thy country } Shakespeare—Corialanus Act V, Sc. iii, ll. 22 & 209.

2. Nominative : mein Vater
Genitive : meines Vaters
Dative : meinen Vater
Accusative : meinen Vater

அச்சொற்களில் அவை வேற்றுமைப்பொருளை உணர்த்துவதாக மக்களாற் கருதப்பட்டு, அவை அவற்றிலிருந்து பிரிக்கப்பட்டு வேறு சொற்களில் வேற்றுமைப்பொருளை உணர்த்தச் சேர்க்கப் பட்டிருத்தல் வேண்டும். காலக்கிரமத்தில் அவை வேற்றுமை யுருபுகள் எனவும், தாம் இப்பொருளைக் குறித்தன எனவும் கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும்.

பின்னர் அவ்வேற்றுமையுருபுகளுக்கு நிபாதங்கள், கிருத்-ப்ரத்யயங்கள், இவை சேர்க்கப்பட்டு அவை முழுமையும் வேற் றுமையுருபுகளாகக் கருதப்பட்டிருக்கலாம். சுட்டெழுத்தும் வேற்றுமையுருபு ஆயிருக்கலாம்.

(1) வேதத்தில் எழுவாய் வேற்றுமையிருமையிலும் கர்ம வேற்றுமையிருமையிலும் आ என்ற உருபு உள்ளது. பிற்காலத் தில் उ என்ற நிபாதம் அதனுடன் சேர்க்கப்பட, औ என்பது அவ்வேற்றுமையுருபு ஆயிற்று.

(2) ஸம்பிரதானவேற்றுமையொருமையுருபாகிய ए-க்கு अ என்ற நிபாதம் சேர்க்கப்பட, ए இன் முற்பகுதியாகிய अ லோபத்தை அடைய, इ य् ஆக மாற, य என்பது அகாராந்த சப்தங்களில் அவ்வேற்றுமையுருபு ஆயிற்று.

(3) வடமொழியில் இடவேற்றுமைப்பன்மையாகிய सु-உம்,[1] கிரேக்கில் அவ்வாறுள்ள *si*-உம்,[2] ஏழாம்வேற்றுமைப் பன்மையுருபாகிய *s*-ஓடு *u*, *i* இவை சேர்க்கப்பட்டன ஆகும்.

(4) வேற்றுமையுருபுகளோடு म्, अम् சேர்க்கப்பட்டன.

1. वृकेषु
2. *lūxoizi.*
3. अहम् இ. யூ. *eghō*; லத்தின் *ego*
वयम् இ. யூ *uei*; ஆங்கிலம் *we*
त्वम् and तुवम् இ யூ. *tu*, *tū*
तुभ्य — तुभ्यम्
तुभ्येदमग्ने मधुमत्तमं वचः (ऋ. वे. 5, 11, 5)
माम् இ. யூ. *mē*, *me*

(5) சில வேற்றுமையுருபுகளின் முற்பகுதி கிருத்-ப்ரத்யயம்.[2]

(6) படர்க்கைப்பன்மையான ते என்பது त உடன் इ சேர்ந்து ஆயிற்று என்பர் ஷ்மிட். इ சுட்டெழுத்தே ஆகும்.

(7) அன்றியும் எழுவாய் ஒருமைவேற்றுமையுருபான स् முதன்முதலில் புல்லிங்கத்தையும் ஸ்திரீலிங்கத்தையும் பிரித்துக் காட்ட வந்ததாகக் கூற இயலாது; புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் இவ்விரண்டு சொற்களிலும் அது காணப்பட்டது. அகாராந்த புல்லிங்கத்தில் அது காணப்பட்டமையானும், அதனின்று வந்த ஆகாராந்தஸ்திரீலிங்கத்திற் காணப்படாமையானும், அது புல்லிங்கத்திற்கு உரியது எனக் கருதப்பட்டது.

(8) தொடக்கத்தில் கர்மவேற்றுமையின் உருபு म्-ஐக் கொண்டது எனக் கூறுதற்கு இல்லை. அகாராந்தசப்தங்களில் அது சேர்க்கப்பட, பின்னர் அது அவ்வேற்றுமைக்கு உரியது எனக் கொள்ளப்பட்டது.

(9) சிலவிடத்தில் வேற்றுமையுருபும் ப்ராதிபதிகத்தின் ஏகதேசம் எனக் கருதப்பட, அதன்பின்னர் வேற்றுமை யுருபுகள் சேர்க்கப்பட்டன. ப்ராகிருதமொழியில் இதிஹாஸ மொழியின் ஹலந்தச்சொற்களெல்லாம் அஜந்தமாகச் செய்யப் பட்ட விடங்களெல்லாவற்றிலும் இதனைக் காணலாம். அநேக மாய் मूर्धन्-இல் உள்ள न् உம், उपर्-இல் உள்ள र्-உம் தொடக்கத்தில் இடவேற்றுமையுருபாக இருந்திருக்கலாம் என்பர்.

1. भ्याम् இல் உள்ள भ्, उभौ இல் உள்ள भ् ஒடு ஒத்தது. அதன்பின்னர் भ् க்குப் பன்மைவிகுதிகள் சேர்க்கப்பட்டு भिस् உம், भ्यस् உம் உண்டாயிருக்கலாம்.

வேற்றுமையுருபுகளைப்பற்றி விரிவாய்க் கூறுதற்கு முன்னர் அவற்றை ஏற்கும் பிராதிபதிகங்களைப்பற்றிச் சிறிது கூறுதல் அவசியமாகும். ஏனெனில் ஏழு வேற்றுமைகளுள்ளும் ப்ராதி-பதிகத்துள்ள உயிர் ஓரிடத்தில் இருக்குமாறு மற்றோரிடத்தில் இல்லை. அஃதாவது ஆங்கு அஜ்விபரிணாமம் காணப்படுகின்றது. வைதிகமொழியிலும் இதிஹாஸமொழியிலும் புல்லிங்கத்துள்ளும் ஸ்திரீலிங்கத்துள்ளும் எழுவாய்வேற்றுமை கர்மவேற்றுமையின் ஒருமை, இருமை இவ்வைந்திலும் ப்ராதிபதிகத்துள்ள உயிர் குணம் முதலியவற்றை ஏற்று வலுத்தும்[1], ஏனையவற்றுள் யூ உயிர் இவற்றில் தொடங்கும் விகுதிகட்கு முன்னர் மிகக் குன்றியும், ஏனையவற்றுள் குன்றியும் இருக்கும். நபும்ஸகத்துள் எழுவாய் வேற்றுமைப்பன்மை கர்மவேற்றுமைப்பன்மை இவ்விரண்டிலும் உயிர் வலுத்து நிற்கும். உயிர் மிகக்குன்றியிருக்கும் ப்ராதிபதிகத்திற்கு **भम्** என்ற குறியும்[2], உயிர் குன்றியிருக்கும் ப்ராதிபதிகத்திற்கு **पदम्** என்ற குறியும்[3], முதலைந்து வேற்றுமையுருப்புகட்கும் நபும்ஸகலிங்கத்து எழுவாய் வேற்றுமை கர்மவேற்றுமை இவ்விரண்டன் பன்மையுருபிற்கும் **सर्व-नामस्थानम्** என்ற குறியும்[4] ஆசிரியர் பாணினி இட்டனர். உயிர் வலுத்தும், குன்றியும் மிகக்குன்றியும் இருப்பதோடு, மெய்யும் சிறிது மாறுபாட்டை அடையும். இக்காரணம்பற்றிப் பிராதிபதி-கத்தை ஸ்ட்ராங் ஸ்டெம்[5], மிட்டில் ஸ்டெம்,[6] வீக் ஸ்டெம்[7] என

1. இடவேற்றுமையொருமையிலும், கர்மவேற்றுமைப்பன்மையிலும் இவ்வாறு உண்டு என்றுங் கூறுவர்.
2. यचि भम् (पा. अ. 1, 4, 18)
3. स्वादिष्वसर्वनामस्थाने (*ibid* 1, 4, 17)
4. शि सर्वनामस्थानम् (*ibid* 1, 1, 42)
   सुडनपुंसकस्य (*ibid* 1, 1, 43)
5. Strong stem.
6. Middle stem.
7. Weak stem.

மூவகையாகப் பிரிப்பர் மொழிநூல்வல்லோர். இம்மூன்று வகையும் பெரும்பாலும் इ, उ, ऐ, ओ இவற்றிலும் மெய்யெழுத்திலும் முடியும் ப்ராதிபதிகங்களிற் காணலாம். ஆனால் சிலவிடத்து வைதிகமொழியிலேயே ஒற்றுமைப்போலியால் இவ் வேறுபாடு அழிந்துபோயிற்று [1]. ஏனைய மொழிகளிலும் இவ்வாறே அது அழிந்தது என்பர் [2].

## பெயர் வேற்றுமையுருபேற்றல் [3]

வைதிகமொழிநிலையும் இதிஹாஸமொழிநிலையும்: ஒருமை, இருமை, பன்மை இவற்றில் ஒவ்வொரு வேற்றுமையிலும் ப்ராதிபதிகங்கள் எவ்வாறு உருபேற்கின்றன என்பவற்றை ஈண்டு கூறப்படும்.

### ஒருமை

முதல்வேற்றுமை: புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் இவ்விரண்டனுள்ளும் இவ்வேற்றுமையில் ப்ராதிபதிகம் நான்கு வகையாய் உருபேற்கும்:

(1) ஆகாராந்தம், ஈகாராந்தம் [4] இப்பிராதிபதிகங்களின் பின்னர் உருபு இல்லை.

உ-ம். रमा, गौरी

ஈகாராந்தச்சொல் ஏகாச் ஆக இருந்தால் வேற்றுமையுருபு உண்டு. உ-ம். धीः

இதனை ஒட்டி அதிதேசத்தால் அனேகாச் ஆக இருக்குமிடத்தும் உருபு வருகின்றது. உ-ம். लक्ष्मीः, वृकीः, नप्तीः

1. वाचौ, वाचा, वाग्स्याम्
2. கிரேக்—*patērōn* for the older *patrōn*.
3. Noun declension.
4. கிரேக் லத்தீன் மொழிகளில் ஈகாராந்தச்சொற்களே இல்லை.

(2) அனேகாச்சாய் உள்ள நகாராந்தம் ரேபாந்தம் இப் பிராதிபதிகங்களில் பகுதியின் உயிரை நீட்டியும், இறுதி மெய்யைக் கெடுத்தும் கெடுக்காதும் வழங்குவர்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ-ம். | இ·யூ. | *k̂uōn* | श्वा | கிரேக் | *xūōn* |
| | ,, | *m̂ātēr* | माता | ,, | *mātēr* |

அனேகாச்சாயுள்ள ஸகாராந்தச்சொற்களுள் स கெடுவ தில்லை.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | இ·யூ. | *dus-menēs* | दुर्मनाः |
| | ,, | *āusōs̑* | उषाः |

(3) अ, इ, उ, ई, ऊ இவற்றை ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகங்களின் பின்னர் स् உருபு மாத்திரம் வரும்.

| | இ·யூ. | | கிரேக் | லத்தீன் |
|---|---|---|---|---|
| உ-ம். | *ul̥qos* | वृकः | *lūkos* | *lupus* |
| | *ôui-s* | अविः | *oïs* | *ovis* |
| | *sûnu-s* | सूनुः | | |
| | | धीः | | |
| | | भ्रूः } | | |
| | | वधूः } | | |

(4) ஸந்தியக்ஷரத்தில் முடியும் ப்ராதிபதிகங்களிலும், மெய்யில் முடியும் ஏகாச்-ப்ராதிபதிகங்களிலும் स् வரும். வட மொழியில் ஹலந்தத்தில் स् இல்லை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உ-ம். | இ· யூ | *nāus* | नौः | கிரேக் | *naūs* |
| | | *u̯ōq-s* | वाक् | லத்தீன் | *vōx* |

விளிவேற்றுமை: இதற்கு உருபு இல்லை. தாய்மொழியில் சொல்லின் 'முதலேகாச்சில் உதாத்தஸ்வரம் இருந்தது[1]. தற்

1. आमन्त्रितस्य च (पा॰ अ॰ 6, 1, 198)

போது வைதிகமொழியில் எட்டாம் வேற்றுமைச் சொற்கள் பாதத்தின் தொடக்கத்தில் வரின் அவ்வாறே இருக்கின்றன. வேறு இடத்தில் வரின் சொல் முழுவதும் அநுதாத்தமாகும்[1]. அவை ஒரு சொல்லின்பின்னர் வருவதால் அந்த அநுதாத்தம் முழுவதும் ப்ரசயஸ்வரமாகவோ, அவற்றில் முதலேகாச்சு ஸ்வரிதஸ்வரமாகவும் ஏனைய பரசயஸ்வரமாகவோ இருக்கின்றன.

உ-ம். अग्ने यं यज्ञमध्वरं विश्वतः परिभूरसि (ऋ. वे. 1, 1, 4)
उप॑त्वाग्ने दिवेदिवे दोषावस्तर्धिया वयम् (*ibid* 1, 1, 7)

இருவர் விளிக்கப்பட்டால், ஒருவரைக் குறிக்குஞ் சொல் விளிவேற்றுமையிலும் மற்றொருவரைக் குறிக்குஞ் சொல் முதல் வேற்றுமையிலும் சிலவிடத்து இருக்கும். ஆங்கு விளி வேற்றுமைக்குப் பிரதியாக முதல் வேற்றுமை வந்தது என்பர். ஆனால் ஒருவரை விளித்து நீரும் மற்றொருவரும் இதனைச் செய்க எனக் கொள்ளின் அவ்வாறு கூறவேண்டுவது இன்று.

உ-ம். वायविन्द्रश्च चेतथः[2] (ऋ. वे. 1, 2, 5)
इन्द्रश्च सोमं पिबतं बृहस्पते[3] (*ibid* 4, 50, 10)

ஆகாராந்தப்பிராதிபதிகம் ஸ்திரீலிங்கமானல், பெரும் பான்மையும் आ, ए ஆக மாறுகின்றது[4]. இதற்குக் காரணம் யாதெனநிச்சயமாய்த் தெரியவில்லை. आ உடன் சுட்டெழுத்து ஆகிய इ சேர்க்க, ए வந்தது என்பர் ப்ருக்மன். இகாராந்த-ப்ராதிபதிகத்தின் அதிதேசத்தால் அவ்வாறு ஆயிற்று என்பர்

1. आमन्त्रितस्य च (*ibid* 8, 1, 19)
2. இங்கு चेतथः என்பதற்கு எழுவாய் (त्वं) इन्द्रश्च
3. இங்கு पिबतम् என்பதற்கு எழுவாய் (त्वं) इन्द्रश्च
4. विश्वपाः என்றவிடத்து ஆகாரம் ए ஆக மாறாமையும் வேற்றுமை யுருபு வருதலும் நோக்கத்தக்கன.

மற்றோர். ஆனால் अश्वा முதலிய ப்ராதிபதிகம் விளிவேற்றுமையில் अश्व என்றே உளது. அகாராந்தபுல்லிங்கத்தில் देव என்றும் ஆகாராந்தஸ்திரீலிங்கத்தில் अश्व என்றும் வருவதை நோக்கி அச்சுட்டெழுத்து பெரும்பாலும் ஆகாராந்தத்தில் சேர்க்கப்பட்டதோ என்பது ஆராய்தற்கு உரியது.

இகாராந்தப்பிராதிபதிகத்தில் விளிவேற்றுமை கிரேக்மொழியில் ஒருவகையாகவும் வைதிகமொழியில் வேறுவகையாகவும் இருக்கின்றது. கிரேக்மொழியில் இறுதியில் இகரமே உள்ளது ; வைதிகமொழியில் அது குணம் எடுத்தது.

உ-ம். अग्ने கிரேக் *pōli*

முதல் ஏகாச்சே உதாத்தஸ்வரம் பெறின் கிரேக்மொழியிலுள்ள ரூபமும், இரண்டாம் ஏகாச் அதனைப் பெறின் வைதிகமொழியிலுள்ள ரூபமும் நேரிது ஆகும். வைதிகமொழியில் முதல் ஏகாச்சிலே உதாத்தஸ்வரம் இருப்பினும் ह குணமெடுத்து உளது. தாய்மொழியில் இருவகையும் இருந்திருக்க, வைதிகமொழியில் எல்லாவிடத்திலும் ஒருவகையும், கிரேக்மொழியில் எல்லாவிடத்திலும் மற்றொரு வகையுங் கொள்ளப்பட்டன எனக் கொள்ளல் வேண்டும்.

அவ்வாறே ப்ராதிபதிகம் உகாராந்தமாயிருக்க விளிவேற்றுமையில் ஈற்றெழுத்து கிரேக்கில் உகாரமாகவும் வைதிகமொழியில் ओ-காரமாகவும் உள்ளது.

உ-ம். सूनो கிரேக் *pēxu*.

ப்ராதிபதிகம் ஈகாராந்தமாகவும், ஊகாராந்தமாகவும் இருக்கும்போது, அநேகாச்பதத்தில் விளிவேற்றுமையின் ஈற்றெழுத்து கிரேக்கில் முறையே ஈகாரமாகவும் ஊகாரமாகவும், வைதிகமொழியில் इ, उ ஆகவும் இருக்கும். உ-ம். गौरि, वधु.

பதம் ஏகாச்சாய் இருந்தால் முதல் வேற்றுமைரூபமே ஈண்டும் உளது. உ-ம். धीः, धूः

भूरिगो என்ற ரூபத்தைக் கொண்டு ஆரம்பத்தில் गो ப்ராதிபதிகத்தின் விளிவேற்றுமை गो ஆக இருந்திருக்கலாம் என்பர். ஆங்கு ப்ராதிபதிகம் भूरिगु ஆகலின் அவருடைய கூற்று ஆராய்தற்பாலது.

ப்ராதிபதிகம் ஹலந்தமாயிருப்பின், ப்ராதிபதிகரூபமே விளிவேற்றுமையில் உளது. உ-ம். मरुत्, राजन्

अत्, मत्, वत् இப்பிரத்யயங்களை ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகங்கள் अन्, मन् இவற்றைக் கொண்டன.

உ-ம். पचन्, श्रीमन्, धनवन्

विद्वस् ஸகாராந்தமாய் இருத்தலின் विद्वः என்ற ரூபமே நேரிதாயிருக்க, धनवन् முதலிய ரூபங்களோடு அதிதேசத்தால் இதிஹாஸமொழியில் विद्वन् என ஆயிற்று; வைதிகமொழியில் विद्वस्[1] என்றே உளது.

இரண்டாம் வேற்றுமை: அஜந்தப்ராதிபதிகத்திற்கு இவ் வேற்றுமையுருபு m என்றும் ஹலந்தப்ராதிபதிகத்திற்கு m̥ என்றும் தாய்மொழியில் இருந்தது. வைதிகமொழியில் m̥ अ ஆக மாற, அவை அஜந்தப்ராதிபதிகத்தை ஒட்டி म्-உம் வந்தது என்பர்.

| | இ.யூ. | வைதிகமொழி | க்ரேக் |
|---|---|---|---|
| உ-ம். | ulq̑o-m | वृकम् | lúkon |
| | pod-m̥ | पादम् | pòda |

அனேகாச்சான देवी என்பது எவ்வாறு देवीम् என்ற ரூபத்தைக் கொண்டதோ, அவ்வாறே स्त्री என்பது स्त्रीम् என்ற ரூபத்தைக் கொண்டது எனல் வேண்டும். அவ்வாறாயின் முன்பு

1. இ. யூ. *u̯eid — u̯os.*

அது स्तिरी என அனேகாச்சாக இருந்து, பின்பு ஏகாச்சாக இருந்திருத்தல் வேண்டும். அதன் பின்னர் धियम् போன்று स्त्रियम् என்ற ரூபத்தைக் கொண்டிருத்தல் வேண்டும். तनुम् என்பது போன்று तन्वम् என்ற ரூபமும் ருக்வேதத்தில் காணப் படுகின்றது[1]. उषास् என்பதற்கு उषासम् என்ற ரூபம் ருக்வேதத்தில் இருக்க, उषाम् என்ற ரூபம் அதர்வவேதத்தில் காணப்படுகின்றது.

उषासमिन्द्र सम्पिणक् (ऋ. वे. 4, 30, 9)

उषामुषां श्रेयसीं धेह्यस्मै (अ. वे. 12, 2, 45)

गिरिष्ठाम् என்பதோடு ஒத்து அதிதேசத்தால் வந்தது என்பர். கிரேக் லத்தீன் மொழிகளிலும் ēs, ōs என்பவற்றில் முடிந்த ப்ராதிபதிகங்கள் இவ்வாறு ரூபங் கொண்டன என்பர்.

उषसम् என்ற ரூபம் य उषसं जजान (ऋ. वे. 2, 12, 7) என்பவற்றால் அறியப்படுகின்றது.

ஸந்தியக்ஷரங்களை ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகங்களில் சிலவிடத்து ஸந்தியக்ஷரத்தின் பிற்பகுதி லோபத்தை அடைகின்றது, गो என்ற ப்ராதிபதிகத்தின் ஈற்றெழுத்து ओ என்பது; அதன் பிற்பகுதி उ என்பது; அது லோபத்தை அடைய गाम् என்ற ரூபம் வருகின்றது. இவ்வாறு இண்டோ-யூரோபியன்மொழிகாலத்திலே வந்தது என்பர்.

நபும்ஸகலிங்கத்தில் முதல் எட்டு, இரண்டு வேற்றுமைகளில் அகாராந்தப்ராதிபதிகம் म्-ஐக் கொண்டும் ஏனைய ப்ராதிபதிகத்தின் ரூபத்தையே கொண்டும் இருக்கும். வேதத்தில் சிலவிடத்து காணப்படும் देवव्यचाः என்பது शतशाः என்பதை ஒட்டி அதிதேசத்தால் வந்தது என்பர்.

1. जायेव पत्ये तन्वं रिरिच्याम् (ऋ. वे. 10, 10, 7)

மூன்றும் வேற்றுமை : கிரேக் போன்ற சில மொழிகளில் இவ்வேற்றுமை அழிந்துவிட்டது. அஃது இருக்கின்ற மொழிகளிலும் ஒன்றுக்கொன்று ஒற்றுமை இல்லை. ஆயினும் அஃது இரண்டு வகையாக ஆக்கப்பட்டது என்னலாம்:—

भि அல்லது मि-ஐ ப்ராதிபதிகத்தோடு சேர்ப்பது ஒன்று; கிரேக், ஆர்மீனியன் இம்மொழிகளில் मि-ஐ ஈற்றில் கொண்ட சொற்கள் அரிதாய்க் கிடைக்கின்றது; मि-ஐ ஈற்றில் கொண்ட சொற்கள் பால்டிக்ஸ்லவோனிக் பாஷைகளில் மிகுதியாய்க் காணப்படுகின்றன. मि உருபு ஆங்கு ஒருமையில்மாத்திரமன்றிப் பன்மையிலும் உள்ளது. भि உருபு வைதிகமொழியிலும் இதிஹாஸமொழியிலும் பன்மையிலே மிகுதியாய்க் காணப்படுகின்றது. மூன்றும் வேற்றுமையில் ஒருமையில் இல்லாவிடினும் तुभ्यम् என்றவிடத்து (भ्) உளது [1]. இச்சொல் வேதத்தில் (तुभ्य) [2] எனவும் வழங்கப்பட்டுள்ளது. மற்றோரிடத்தில் அவ்வுருபு சிறிது மாறிக் காணப்படுகின்றது. அச்சொல் मह्यम् என்பது; ह-காரத்திற்கு மூலபூதமான வர்ணங்களுள் भ-உம் ஒன்று என முன்னமே கூறப்பட்டது. मि என்பது सनेमि [3] என்றவிடத்து உள்ளது. இது பால்டிக்ஸ்லவோனிக் பாஷையில் மிகுதியாய் வழங்கப்படுகின்றது.

1. त्वं नं इन्द्र त्वाभिरूती त्वायतो अभिष्टि पासि जनान् (ऋ. वे. 2, 20, 2) என்றவிடத்து ऊती என்பதை ஒருமையாகவும் கொள்ளலாமாகலான், त्वाभिः என்பதையும் ஒருமையாகக் கொள்ளலாம். அப்போது भिस् ஒருமையில் வந்ததற்கு இது ஒரு அபூர்வ உதாரணம் ஆகும். दुष्टुती, सष्टुती (2, 33, 4) என்பனவற்றை ஒருமையாகவே ஸாயணாசார்யர் கொண்டிருத்தல் நோக்கத்தக்கது.
2. तुभ्येदमग्ने मधुमत्तमं वचः (*ibid* 5, 11, 5)
3. सनेम्यस्मद्युयोतदिद्युम् (*ibid* 7, 56, 9)

आ-ஐ ப்ராதிபதிகத்தோடு சேர்த்தல் மற்றொன்று. இது வைதிகமொழியிலும் இதிஹாஸமொழியிலும் ஹலந்தப்ராதி-பதிகச் சொற்களில் மாறுபாடின்றிக் காணப்படுகின்றது.

உ-ம். रजसा [1], नमसा [2], महित्वना [3], महिना [4]

அஜந்தஸ்திரீலிங்கத்திலும் आ காணப்படுகின்றது.

உ-ம். मायया [5], धिया [6], विश्वशम्भुवा [7], तन्वा [8]

ஆனால் சிலவிடத்தில் ப்ராதிபதிகத்தின் ஈற்றெழுத்தே நீண்டிருக்கின்றது.

உ-ம். दुस्तुती [9], सहूती [9]

புல்லிங்கத்திலும் आ காணப்படுகின்றது.

உ-ம். क्रत्वा [10], शवी [11]

1. आ कृष्णेन रजसा वर्तमानः (*ibid* 1, 35, 2)
2. विधेमनमसा हविर्भिः (*ibid* 4, 50, 6)
3. तेवर्धन्तस्वतवसो महित्वना (*ibid* 1, 85, 7)
4. अभि यो महिना दिवं मित्रो बभूव सप्रथाः (*ibid* 3, 59, 7)
5. पुनाति धीरो भुवनानि मायया (*ibid* 1, 160, 3)
6. उपत्वाग्ने दिवेदिवे दोषावस्तर्धिया वयम् (*ibid* 1, 1, 7)
7. यो जजान रोदसी विश्वशम्भुवा (*ibid* 1, 60, 4)
8. अन्यस्येवेह तन्वा विवेष (*ibid* 2, 35, 13)
9. मात्वा रुद्र चुक्रुधामानमोभिमादुष्टुतीवृषभमासहूती (*ibid* 2, 33, 4)
10. तव क्रत्वा...(*ibid* 6, 48, 4); இரான்மொழி; காதையில் *xra*þ-*wā* என்று உளது.
11. अमन्यमानाञ्छवी जघान (*ibid* 2, 12, 10)

ஸர்வநாமத்திலும் त्वा[1] என்ற ரூபம் வேதத்தில் காணப் படுகின்றது. அகாராந்தத்திலும் देवा போன்ற சொற்களில் வைதிகமொழியில் காணப்படுகின்றது.

இவற்றைக்கொண்டும் ஏனைய மொழிகளில் இருப்பதைக் கொண்டும் இவ்வேற்றுமையுருபு *o* அல்லது *e* ஆக இருத்தல் வேண்டும் என மொழிநூல்வல்லோர் கூறுவர். அது வைதிக மொழியில் अ ஆக மாறும். அகாராந்தப்ராதிபதிகத்தோடு அது சேர, ஈற்றில் आ வந்தது. அகாராந்தப்ராதிபதிகம் ஈற்றில் நீண்டது எனக் கருதப்பட்டு இகாராந்தப்பிராதிபதிகம் உகாராந்தப்ராதிபதிகம் இவை நீட்டப்பட்டன. பின்னர் आ-வே வேற்றுமையுருபு எனக் கருதப்பட்டு, அஃதே ஈற்றில் சேர்க்கப் பட்டது. அதுவே ஹலந்தப்ராதிபதிகத்தில் உள்ளது. புல் லிங்கத்திலும் ஸ்திரீலிங்கத்திலும் இகார-உகாராந்தப்ராதி-பதிகங்களில் ஒரே உருவத்தைக் கண்டு (ऋत्वा, तन्वा), गुणिना போன்ற நகாராந்தப்ராதிபதிகத்தின் அதிதேசத்தால் अग्निना[2] क्रतुना[3] मधुना[4] போன்ற ரூபங்கள் புல்லிங்கத்திலும் நபும்ஸக-லிங்கத்திலும் உண்டாயின. அகாராந்தத்திலும் देवा போன்ற ரூபத்தோடு देवेन போன்ற ரூபமும் வந்தது[5]. இது तेन என்ற ரூபத்தின் அதிதேசத்தால் என்பர். சிலவிடத்து வேதத்தில் तेना[6], सूरियेणा போன்ற ரூபங்களும் உள.

1. त्वा युजा पृतनायूरभिष्याम् (*ibid* 7, 1, 13)
   त्वादत्तेभीरुद्र शंतमेभिः शतं हिमा अशीय भेषजेभिः (*ibid* 2, 33, 2)
2. अग्निना रयिमश्नवत् (*ibid* 1, 1, 3)
3. देवो देवान् क्रतुना पर्यभूषत (*ibid* 2. 12, 1)
4. यस्य त्री पूर्णा मधुना पदानि (*ibid* 1, 154, 4)
   हिरण्ययेन सविता रथेन (*ibid* 1, 35, 2)
5. आ कृष्णेन रजसा वर्तमानः (*ibid* 1, 35, 2)
6. यस्ते मदो वरेण्यस्तेना पवस्वान्धसा (*ibid* 9, 61, 19)

ஆகாராந்தப்ராதிபதிகத்தில் முதல் வேற்றுமைரூபமும் மூன்றும் வேற்றுமைரூபமும் ஒன்ருனதால் மயக்கம் வர, तया என்ற ரூபத்தின் அதிதேசத்தால் स्वधया[1] போன்ற ரூபம் வந்தது.

ஸர்வநாமத்திலும் மூன்றும் வேற்றுமை मा, त्वा[2] என்பதற்கும் இரண்டாம் வேற்றுமை मा, त्वा என்பதற்கும் ரூபம் ஒன்ருயிருந்து மயக்கம் வந்தமையான் मया, त्वया என்ற ரூபங்கள் வந்தன. இது तया-வின் அதிதேசத்தால் இருந்திருக்கலாம். अस्मद् , युष्मद् இவ்விரண்டன் ரூபங்களுள் சில புல்லிங்க ரூபங்களையும் சில ஸ்திரீலிங்கரூபங்களையும் கொண்டன. அவற்றைப்பற்றி விரிவாய்ப் பின்னர்க் கூறப்படும்.

நான்காம் வேற்றுமை : தாய்மொழியில் இவ்வேற்றுமையின் உருபு *ai* ; *o*, *ā* இவற்றை ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகத்துடன் அவை சேர்க்கப்பட, அச்சொற்களின் ஈற்றில் *ōi*, *āi* என இருந்தன. ஒகர-ஈற்றுப்பிராதிபதிகச்சொல்லில் இறுதியில் ஒரு அகரம் சேர்க்கப்பட, அச்சொல்லின் இறுதி *ōia* என என ஆயிற்று. வைதிகமொழியில் *ōia*, *āi* என்பன आय, ऐ என ஆயின. ஆகலின் तनय என்பதற்கு நான்காம் வேற்றுமை तनयाय[3] என்ருயிற்று. रमा என்பதற்கு रमै என ஆகவேண்டியிருக்க बृहत्यै போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் रमै என ஆகாது, இடையில் य வர, रमायै என்ற ரூபம் வந்தது. மற்ற

1 अक्षीयमाणा स्वधया मदन्ति (*ibid* 1, 154, 4)

2. மூன்றும் வேற்றுமைரூபமாகிய त्वा, त्वादत्तेभिः (ऋ.वे. 2 33, 2) त्वोतः (*ibid* 3, 59, 2) போன்ற இடங்களில் காணப்படுகின்றது.

3 तोकाय तनयाय मृळ (*ibid* 2, 33, 14)

இடங்களில் எல்லாம் ए தானே உருபாக இருக்கின்றது.[1] मत्यै என்றது बृहत्यै போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் வந்தது எனல் வேண்டும்; அதற்குக் காரணம் मत्या என்பது ரூபத்தில் बृहत्या போன்றது என்ற எண்ணமே ஆகும்.

तनु என்ற ப்ராதிபதிகத்திற்கு तनवे, तन्वे [2] என்ற ரூபங்கள் வேதத்தில் உள்ளன. பின்னர் बृहत्यै போன்ற ரூபத்தின் அதிதேசத்தால் तन्वै என்ற ரூபமும் வந்தது.

ஐந்தாம் வேற்றுமை: தாய்மொழியில் அகாராந்தப்பிராதிபதிகத்தின் பின்னர் *ĕd*, *ŏd* இவ்விரண்டனுள் ஓர் உருபு சேர்க்கப்பட்டது; ஏனையவற்றின் பின்னர் *es*, *os*, *s* இவற்றுள் ஒன்றே சேர்க்கப்பட்டது; *es*, *os*, *s* இவையே அவற்றிற்கு ஆறும் வேற்றுமையுருபாகவும் உளது; *es*, *os*, *s* இவை வைதிகமொழியில் अस् ஆயின. *Ed*, *od* இவை வைதிகமொழியில் अत् ஆயின.[3] இவ்வுருபு வைதிகமொழியிலும் பழைய லத்தீன் மொழியிலுமே காணப்படுகின்றது. கிரேக்மொழியில் பெரும் பான்மையும் அது இறந்தது; ஆகலின் பல்லிடங்களில் ஆறும் வேற்றுமையுருபாகிய *sio̭* ஐந்தாம் வேற்றுமைப்பொருளில் வழங்கப்பட்டுளது.

அகாராந்தப்பிராதிபதிகத்தைத் தவிர ஏனையவற்றின் பின்னர் சேர்க்கப்படும் अस् எவ்வாறு ஐந்து ஆறு ஆகிய இரண்டு வேற்றுமைகளுக்கும் உருபு ஆயிற்று என்பதை அறிதற்குத் தக்க சான்று இல்லை.

1 दधद्रत्नानि दाशुषे वार्याणि (*ibid* 1, 35, 8)

स नः पितेव सूनवेऽग्ने सूपायनो भव (*ibid* 1, 1, 9)

2. तन्वे तने च (*ibid* 6, 46, 12)

तन्वे = तनवे ; तने = तनयाय

3. न वा उ योषद्रुद्रादसुर्यम् (*ibid* 2, 33, 9)

ஸ்திரீலிங்கத்தில் ஆகாராந்தப்பிராதிபதிகத்தின் பின்ன अस् சேர்க்கப்படின், அதன் ரூபத்திற்கும் முதல்வேற்றுமையின் ரூபத்திற்கும் மாறுபாடு இல்லாமற்போம். அதைக் கருதி बृहत्याः என்பதன் அதிதேசத்தால் रमायाः என வழங்கினர். அவ்வாறே அதன் அதிதேசத்தால் मत्याः என்பதும் வழங்கப் பட்டது. पत्युः, जन्युः என்பன पितुः என்பதன் அதிதேசத்தால் வந்தன.

अत् என்ற உருபு எவ்வாறு வந்தது? मत्, अस्मत्, त्वत् இவற்றின் அதிதேசத்தால் எனின், ஆங்கு त् மாத்திரம் இருத் தலின் अ எங்கிருந்து வந்தது எனக் கூறவேண்டும். அதனைப் பற்றி இன்னும் முடிவிற்கு வரவில்லை மொழிநூல்வல்லோர். ப்ராதிபதிகத்தின் ஈறே நீண்டது என்பர் சிலர்.

இரான்மொழி லத்தீன்மொழி இவற்றில் ĕd, ŏd உருபுகள் ஏனைய ப்ராதிபதிகங்களின் பின்னரும் அதிதேசத்தால் வழங்க லாயிற்று.

கிரேக், ஆர்மீனியன் இவற்றில் *tos*, என்பதும் வைதிக மொழியில் तस् என்பதும் ஐந்தாம் வேற்றுமைப்பொருளில் சேர்க்கப்பட்டன. இப்பிரத்யயம் சுட்டெழுத்தின் பின்னர் வழங்கப்பட்டு அவை நிபாதங்களாகக் கொள்ளப்பட்டன. அவை इतः, अतः, ततः என்பன. இவற்றின் அதிதேசத்தால் मुखतः [2] போன்ற சொற்களும் வந்தன. அவை இதிஹாஸ மொழியில் ஒருமை பன்மை இரண்டிலும் பொதுவாக வழங்கப் பட்டன [3]. ப்ராகிருதத்தில் இப்பிரத்யயம் மிகவும் பரவியது.

1. गा उदाजदपधा वलस्य (*ibid* 2, 12, 3)
   ஈண்டு வேற்றுமையுருபு லோபத்தை அடைந்தது.
2. मुखतोऽन्नं राद्धम् (तै. उप. 3, 10)
3. गुरुर्गरीयान् पितृतो मातृतश्च
   भयं दंष्ट्रिभ्यः शत्रुतः

ஆறும் வேற்றுமை : *தாய்மொழியில் o-ஐ ஈறுகக்கொண்ட பிராதிபதிகத்தின் பின்னர் si̯o என்ற உருபும் ஏனையவிடத்தில் es, os, s இவற்றுள் ஒன்றும் சேர்க்கப்பட்டன ; si̯o உருபு கிரேக், ஆர்மீனியன் வைதிகமொழி இவற்றில் உள்ளன. வைதிகமொழியில் அது स्य ஆக இருக்கிறது. இவ்வுருபு ஸர்வ நாமத்தில் ஆறும் வேற்றுமையின் அதிதேசத்தால் வந்தது என்பர். உயிர்க்குப் பின்னர் s உம், ஹலவிற்குப் பின்னரும் உதாத்தஸ்வரமும் பெற்றிருப்பின் es உம், ஹலவிற்குப்பின்னர் உதாத்தஸ்வரம் பெறாது இருப்பின் os உம், தாய்மொழியில் இருந்திருக்கலாம் என்றும், அவற்றுள் லத்தீன் es-ஐயும் கிரேக் os-ஐயுங் கொண்டன என்றுங் கூறுவர்.*

ஏழாம் வேற்றுமை : *இதன் உருபு इ. சில ஹலந்தப்ராதிபதிகங்களும் இகாரவுகாரப்ராதிபதிகங்களும் इ ஐ ஏலாதே வைதிகமொழியில் உள்ளன. இதிஹாஸமொழியில் ஹலந்தப்ராதிபதிகங்களெல்லாம் அவ்வுருபைக் கொண்டன.*

*உகாராந்தப்ராதிபதிகத்தின் उ விருத்தி எடுக்கிறது.*

*உ-ம்.* सूनौ

*இகாராந்தப்ராதிபதிகத்தின் इ உம் விருத்தியெடுக்க அதன் ஈற்றிகரம் லோபத்தை அடைகிறது. உ-ம்.* अग्ना [1]

सूनौ *என்பதன் அதிதேசத்தால்* अग्नौ *எனவும் ஆயிற்று.* सूनौ *என்பது சிலவிடத்து* इ *கரத்தையுங் கொண்டு* सूनवि [2]

1. अग्ना यो मर्त्यो दुवः (ऋ. वे. 6, 14, 1)
   ऋतस्य योना गर्भे सुजातम् (*ibid* 1, 65, 4)
2. ऋक्षस्य सूनवि (ऋ. वे. 8, 57, 15)
   यत्सोममिन्द्र विष्णवि (*ibid* 8, 12, 16)

என ஆகின்றது. पतौ என்று இருக்கவேண்டியிருக்க पत्यौ என்ற ரூபம் உள்ளது. இது पत्या, पत्ये இவற்றின் அதிதேசத்தால் என்னலாம். ஆகாராந்தப்ராதிபதிகத்தில் இகரவுருபும் அதன்பின்னர் ஒரு ஆகாரமும் அதன்பின்னர் அம்மும் சேர்க்க रमायाम् முதலிய ரூபங்கள் வந்தன. ஈகாராந்தத்திலும் बृहत्याम् போன்ற ரூபங்கள் வந்தன. நான்காம்வேற்றுமைக்கும் ஏழாம்வேற்றுமைக்கும் மயக்கம் தோன்றி இவ்வாறு வந்திருக்கலாம். அதன் அதிதேசத்தால் मत्याम् என்றும், अग्नौ என்பதன் அதிதேசத்தால் मतौ என்றும், ரூபங்கள் வந்தன. அகாராந்த-ப்ராதிபதிகத்தில் ஈற்றிலுள்ள अ, உருபாகிய इ ஓடு சேர்ந்து ए ஆகின்றது.[1]

न्, र्, स् இவற்றில் முடியும் ப்ராதிபதிகங்கள் வேதத்தில் சிலவிடத்து உருபு ஏலாது இருக்கின்றன.

உ-ம். यामन्[2], सामन्[3], व्योमन्[4], आत्मन्[5], अन्तर्[6], श्वस्[7]

ஹலந்தங்களெல்லாம் உருபை ஏற்றும் நிற்கும்.

உ-ம். बर्हिषि[8], प्रदिशि[9], शरदि[10]

1. वर्धमानं स्वे दमे (*ibid* 1, 1, 8)
2. प्रये शुम्भन्ते जनयो न सप्तयो यामन्रुद्रस्य सूनवः सुदंससः (*ibid* 1,85,1)
3. सामन्नु राये … (*ibid* 10, 59, 2)
4. बृहस्पतिः प्रथमं जायमानो महो ज्योतिषः परमे व्योमन् (*ibid* 4, 50, 4)
5. वीर्यमुपरिष्टादात्मन्धत्ते (तै. सं. 2, 2, 2, 5)
6. उभे द्यावापृथिवी अन्तरीयते (*ibid* 1, 35, 9)
7. श्वसित्यप्सुहंसो न सीदन् (*ibid* 1, 65, 9)
8. सीदन्नधि बर्हिषि प्रिये (*ibid* 1, 85, 7)
9. यस्याश्वासा प्रदिशि (*ibid* 2, 12, 7)
10. चत्वारिंश्यां शरद्यन्वविन्दत् (*ibid* 2, 12. 11)

நகாராந்தப்ராதிபதிகத்தில் मूर्धनि, मूर्ध्नि போன்ற இரண்டு ரூபங்கள் உள. இவற்றுள் எது முன்னர் இருந்தது, எது பின்னர் வந்தது என்பது இன்னும் தீர்மானிக்கப்படவில்லை. முன்னர் मातर्, पितर् என்பனவே இவ்வேற்றுமையில் ரூபமாயிருந்து, பின்னரே मातरि, पितरि என்பன வந்தனவா என்பது ஆராய்தற்கு உரியது.

## இருமை

இண்டோயூரோபியன்மொழியில் முதல் இரண்டு எட்டு இம்மூன்று வேற்றுமைகளில் ஓர் உருபும், மூன்று, நான்கு, ஐந்து இம்மூன்றிலும் ஒன்றுக்கு மேற்பட்ட உருபுகளும், ஆறு ஏழு இவற்றுள் தனித்தனி உருபும் இருந்தன என ஊகித்தற்குச் சில சான்றுகள் உள. இரான்மொழியில் ஆறு, ஏழு இவற்றில் வெவ்வேறு உருபுகள் உள. வைதிகமொழியில் மூன்று நான்கு ஐந்து இவற்றுள் ஓர் உருபும், ஆறு ஏழு இவற்றில் ஓர் உருபுமே உள்ளது. சில மொழிகளில் இருமை இறந்துவிட்டபடியாலும், அது இருக்கும் மொழிகளிலும் ஒற்றுமை காணப்படாமையாலும் அவ்வுருபுகள் தாய்மொழியில் எவ்வாறு இருந்தன என நிச்சயமாய்க் கூற இயலவில்லை.

ஆயினும் புல்லிங்கத்திலும் ஸ்திரீலிங்கத்திலும் முதல், இரண்டு, எட்டு இம்மூன்றிலும் ப்ராதிபதிகத்தின் ஈற்றெழுத்திற்குத் தக்கவாறு ஐந்து வகையாய் இருமையின் ரூபம் உள்ளது என்னலாம். அவையாவன :—

(1) *O*-ஐ ஈற்றிற்கொண்ட ப்ராதிபதிகங்கள் ஈற்றில் *ō*, *ōu̯* இவற்றைக் கொண்டன.

(2) Ā-ஐ ஈற்றிற்கொண்ட ப்ராதிபதிகங்கள் ஈற்றில் *ai̯* என்பதைக் கொண்டன.

(3) *I*, *u* இவற்றை ஈற்றிற்கொண்ட ப்ராதிபதிகங்கள் ஈற்றில் முறையே *ī*, *ū* இவற்றைக் கொண்டன.

(4) *īā*-ஐ ஈற்றிற்கொண்ட ப்ராதிபதிகங்கள் *ī*-ஐ ஈற்றிற் கொண்டன.

(5) ஹலந்தம், ஏகாச்சான ஈகாராந்த ஊகாராந்தமான ப்ராதிபதிகங்கள் ஈற்றில் *e*-ஐக் கொண்டன [1].

வைதிகமொழியில் அகாராந்தப்ராதிபதிகங்கள் आ, औ இவற்றில் முடியும்.

உ-ம். मित्रावरुणा [2] मित्रावरुणौ [3]

ஆகாராந்தப்ராதிபதிகங்கள் ए-இல் முடியும்.

உ-ம். धिषणे [4]

இகாராந்த-உகாராந்தப்ராதிபதிகங்கள் ई, ऊ இவற்றில் முடியும். உ-ம். इन्द्राग्नी [5] इन्द्रवायू [6]

ஹலந்தம், ஈகாராந்தம், ஊகாராந்தம் இப்பிராதிபதிகங்கள் அகாராந்தப்ராதிபதிகரூபங்களின் அதிதேசத்தால் आ, औ

1. கிரேக், ஐரிஷ் இம்மொழிகளில்தான் இது தற்போது காணப்படுகின்றது.
2. कवीनो मित्रावरुणा तुविजाता उरुक्षया (ऋ. वे. 1, 2, 9)
3. ह्वयामि मित्रावरुणा
   विहावसे (*ibid* 1, 35, 1)
4. सुजन्मनी धिषणे (*ibid* 1, 160, 1)
5. यानीन्द्राग्नी चक्रथुः (*ibid* 1, 108, 5)
6. इन्द्रवायू इमे सुताः (*ibid* 1, 2, 4)

இவற்றில் முடிந்தன என்பர்[1]. ஆனால் द्यावापृथिवी[2], जन्मनी[3], रोदसी[4] இவை வேதத்திற் காணப்படுகின்றமையால் அவை ई-இலும் முடியும் எனக் கொள்ளல் வேண்டும்.

நபும்ஸகலிங்கத்தில் *o*-ஐ ஈற்றில் கொண்ட ப்ராதிபதிகம் *oi* இலும், *i*-ஐ ஈற்றில் கொண்ட ப்ராதிபதிகம் *ī* இலும், ஏனையவற்றில் உள்ளன *i*, *ī* இவற்றிலும் முடியும். வைதிக மொழியில் அகாராந்தப்ராதிபதிகம் ए இலும்[5], ஏனைய ப்ராதிபதிகங்கள் ई இலும் முடிகின்றன.[6] ई-க்கு முன்னர் न् உம், வருகின்றது.[7] இது நகாராந்தப்ராதிபதிகரூபத்தின் அதிதேசத்தால் வந்தது என்பர்.

மூன்று, நான்கு, ஐந்து இவ்வேற்றுமையுருபுகளில் *bh*, *m* இவை இருந்தன என்றும், அவற்றுள் *bh* ப்ராசீனம் என்றுங் கூறுவர். வைதிகமொழியிலுள்ள विंशतिः என்ற சொல்லிலும், காதிக்கில்[8] உள்ள *tvai-m* என்ற சொல்லிலும், ஜர்மனில்

1. विश्वशम्भुवा (*ibid* 1, 160, 1)
   उरुव्यचसा (*ibid* 1, 160, 2)
   ता (*ibid* 1, 21, 1)
   अश्विना (*ibid* 1, 3, 1)
   नरा (*ibid* 1, 3, 2)
   ऋतावृधौ (*ibid* 1. 2, 8)
2. ते हि द्यावापृथिवी (*ibid* 1, 160, 1)
3. सुजन्मनी (*ibid* 1, 160, 1)
4. रोदसी (*ibid* 1, 160, 2)
5. स्वाध्यायप्रवचने एव (तै. उप. 1, 9)
6. अक्षी इव चक्षुषा यातमर्वाक् (*ibid* 2, 39, 5)
7. वर्त्मनी एव गच्छति (छान्दो. उप. 4, 15, 1)
8. Gothic.

உள்ள *zwei-m* என்ற சொல்லிலும் மேற்கூறப்பட்ட *m* இருப்பதாகக் கருதலாம் என்பர்.

வைதிகமொழியில் மூன்று நான்கு ஐந்து இவ்வேற்றுமைகளில் **भ्याम्** உம்[1], ஆறு, ஏழு இவ்வேற்றுமைகளில் **ओस्** உம்[2] இருக்கின்றன. **मनङ्भ्याम्** என்பது நேரிதான ரூபமாயிருக்க **मनोभ्याम्** என்பது **मनो जयति** போன்ற இடங்களிலுள்ள அதிதேசத்தால் வந்தது எனக் கொள்ளல் வேண்டும்.

## பன்மை

முதல்வேற்றுமையும் விளிவேற்றுமையும் : இவ்விரண்டிலும் புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் இவ்விரண்டன் ப்ராதிபதிகங்கள் எல்லாவற்றிற்கும் பன்மையிற் சேர்க்கப்படும் உருபு தாய் மொழியில் *es* உம், வைதிகமொழியில் अस् உம்[3] ஆகும். அகராந்தப்ராதிபதிகத்தின் பின்னர் असस् உம்[4] வரும். असस् போன்றது கிரேக் முதலிய மொழிகளில் இல்லாமையால், வைதிகமொழியில் பின்னரே வந்திருத்தல் வேண்டும். இரட்டித்த अस् உருபே असस् எனக் கூறல் தகும். ஆயினும் பாணினியாசிரியர் अस् என்ற ஆகமம் தோன்றிற்று என்றனர். ஏன் अस् இரட்டிக்கப்படவேண்டும் எனின், செய்யுளில் எழுத்துக்குறைவாலோ செவிக்கு இனிமையை வேண்டியோ வந்திருத்தல் கூடும். அகாராந்தப்ராதிபதிகத்திற்போல் ஆகாராந்தப்ராதிபதிகத்தின் பின்னரும் असस् வந்தது என்பர்.[5]

1. याति शुभ्राभ्यां यजतो हरिभ्याम् (*ibid* 1, 35, 3)
2. यो अश्मनोरन्तरग्निं जजान (*ibid* 2, 12, 9)
3. मदन्ति वीरा विदथेषु घृष्वयः (*ibid* 1, 85, 1)
4. दिवि रुद्रासो अधि चक्रिरे सदः (*ibid* 1, 85, 2)
5. पन्थासो यन्ति (*ibid* 1, 100, 3)

**हन्त्वासः**[1] என்ற ரூபத்தைப் பார்த்தால் **असस्** உகாராந்தப்ராதிபதிகத்திலும் வந்தது எனக் கொள்ளவேண்டும். தாய் மொழியில் $\hat{i}\hat{e}$-ஐ ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகங்கள் $\hat{i}\hat{e}s$ என்பதை ஈற்றிற் கொண்டன. உதாரணமாக $bh\mathring{r}\hat{g}hnt(i)\hat{i}\hat{e}s$ என்பது வைதிகமொழியில் **बृहत्यः**[2] என்றும் **बृहतीः**[3] என்றும் இரண்டு ரூபங்களைக் கொண்டன. இகாராந்தப்ராதிபதிகத்தில் **युवतयः** போன்ற ரூபம் உளது.[4] **विद्वस्** என்ற ப்ராதிபதிகத்திலிருந்து வந்த ரூபம் சிலவிடத்து **विदुषः** என்று உளது.[5] **विद्वांसः** என்ற ரூபம் **विद्वन्** என்ற ப்ராதிபதிகத்திலிருந்து தீர்க்கத்தையும் **विद्वत्** என்ற ப்ராதிபதிகத்திலிருந்து **न्**-ஐயும் பெற்றது. பண்டையகாலத்தில் ஒரே தாதுவிற்குப் பல ப்ரத்யயங்களைச் சேர்த்து பல ப்ராதிபதிகங்கள் இருந்திருத்தலாலும்[6], அவற்றுள் பல பிற்காலத்தில் இறந்ததாலும், இவ்வாறு மயக்கம் உண்டாதல் இயற்கையே ஆகும்.

1. दुर्मायवो दुरेवामर्त्यासो निषङ्गिणो रिपवो हन्त्वासः (*ibid* 3, 30, 15)
   हन्त्वासः = हननीयाः
   आज्जसेरसुक् (पा. अ. 7, 1, 50)
2. ऊर्वं नद्यः पृणन्ति (ऋ. वे. 2, 35, 3)
   नद्यः என்றவிடத்து உதாத்தஸ்வரமின்மையான் முன்னர் नदियः என்ற ரூபம் இருந்திருத்தல் வேண்டும்.
3. नारीर्देवाय देवीर्दिधिषन्त्यन्नम् (*ibid* 2, 35, 5)
   उशतीरिव मातरः (*ibid* 10, 9, 2)
4. तमस्मेरा युवतयो युवानं मर्मृज्यमानाः (*ibid* 2, 35, 4)
5. शृणोतु ग्रावाणो विदुषो नु (तै.सं. 1, 3, 13, 1)
6. உதாரணமாக कृ தாதுவிற்கு क्विप् ப்ரத்யயஞ் சேர்த்து कारं (कर्तारम्) என்ற ரூபமும், अस् சேர்த்து करांसि (कर्माणि) என்ற ரூபமும் இருந்தது காண்க.
   पश्यन्त्रासो अभि कारमर्चन् (ऋ. वे. 4, 1, 14)
   विद्वाँ आह विदुषे करांसि (*ibid* 4, 19, 103)

இரண்டாம் வேற்றுமை: தாய்மொழியில் புல்லிங்கத்திலும் ஸ்திரீலிங்கத்திலும் இரண்டாம்வேற்றுமையில் உயிரை ஈற்றில் கொண்ட ப்ராதிபதிகத்தின் பின்னர் *ns* என்ற உருபும், மெய்யீற்றுப்ராதிபதிகத்தின்பின்னர் *ṇs* என்ற உருபும் சேர்க்கப் பட்டன. ஆனால் *o*, *i*, *u* இவ்வீற்றுப்ராதிபதிகங்களின் ரூபங் களின் ஈற்றில் *o-ns*, *i-ns*, *u-ns* இருந்தனவா, அல்லது *ō-ns*, *ī-ns*, *ū-ns* இவை இருந்தனவா என்ற ஐயம் உண்டாகின்றது; ஏனெனில் வைதிகமொழியில் देवान्, अरीन्, गुरून् போன்ற ரூபங்களே உள. அவ்வாறாயின் உயிர் நீண்டதற்குக் காரணம் யாது? ஸ்திரீலிங்கத்தில் முதல்வேற்றுமை இரண்டாம் வேற்றுமை இவற்றுள் ஒரே ரூபத்தைக் கண்டு, *o* ஈற்றுப்ராதி-பதிகத்தில் முதல்வேற்றுமைப்பன்மையில் உயிர் நீட்சியைக் கண்டு இரண்டாம்வேற்றுமையில் வந்தது; அதனை ஒட்டி அதிதேசத்தால் *i*, *u* இவற்றை ஈறாகக் கொண்ட ப்ராதிபதிகங் களில் உயிர் நீண்டது என்பர். अरीन् என்ற ரூபத்திற்குப் பிரதியாக ருக்வேதத்தில் ஓரிடத்து अर्यः[1] என வழங்கப் பட்டுளது. ஹலந்தப்ராதிபதிகத்திற்குச் சேர்க்கப்படும் अस् உருபு ஈண்டுச் சேர்க்கப்பட்டதா என்பது ஆராய்தற்கு உரியது. உயிரின் நீட்சி ருகாராந்தப்ராதிபதிகத்திற்குஞ் சென்றது. मातृ, पितृ என்ற ப்ராதிபதிகங்களை मातर् पितर् என்ற ரூபங்களைக் கொண்டு ரேபாந்தப்ராதிபதிகம் என்பர் மொழிநூல் வல்லோர்.

ஆகாராந்தப்ராதிபதிகம் अस् உருபு ஏற்குமாறு வேதத்தில் சிலவிடத்து असस्-ஐயும் கொள்ளும் என்பர்.

ஸ்திரீலிங்கத்தில் இகார-உகார-ரேபாந்தப்ராதிபதிகங்களில் मतीः, धेनूः, मातॄः என்ற ரூபங்கள் எவ்வாறு வந்தன; அங்கே நகாரத்திற்கு லோபம் வந்திருக்கக் காரணம் யாது? இரான்

1. अभीष्वं१र्यः पौंस्यैर्भवेम (*ibid* 10, 59, 3)

மொழியில் *mäleramis* என்ற ரூபம் இருப்பதால் मतीः முதலியனவும் मतीन्स् என இருந்திருக்கவேண்டும் என்பர். வைதிகமொழியில் புல்லிங்கரூபத்தையும் ஸ்திரீலிங்கரூபத்தையும் வேறுபடுத்திக் காட்ட, புல்லிங்கத்தில் நகாரம் தோன்றலும், ஸ்திரீலிங்கத்தில் அதன் முன்னருள்ள உயிரை அநுநாஸிகமாக்கி அந்நகாரம் கெடுதலும் வந்தன என்னலாம். அவ்வுயிரை அநுநாஸிகமாக ஒலித்தல் பிற்காலத்து இறந்திருத்தல் வேண்டும்.

वधूः என்றவிடத்து உயிர் நீண்டது देवीः என்றவிடத்து உயிர்நீட்டத்தின் அதிதேசத்தால் என்னலாம்.

ருக்வேதத்தில் गवः என்ற ரூபமும் தைத்திரீயப்ராம்மணத்தில் गावः என்ற ரூபமும் காணப்படுகின்றமையால், गाः என்ற ரூபம் गाम् என்ற ரூபத்தை ஒட்டி அதிதேசத்தால் வந்தது என ப்ருக்மன் கூறுவர்.

மஹாபாரதத்தில் காணப்படும் पितरः என்பது முதல் வேற்றுமைப்பன்மையுருவத்தின் அதிதேசத்தால் வந்திருத்தல் கூடும்.

முதல் எட்டு இரண்டு வேற்றுமைகளில் நபும்ஸகலிங்கப் பெயர்களின் ரூபம் ஒன்றே ஆகும். தாய்மொழியின் பண்டைய காலத்தில் அது ஒரு கூட்டத்தைக் குறிக்கும் ஸ்திரீலிங்கப் பெயராக இருந்தது என முன்னர்க் கூறப்பட்டது; *o* ஈற்று ப்ராதிபதிகங்களின் ரூபம் *ā*-இலும், *i*, *u* இவ்வீற்றைக் கொண்ட ப்ராதிபதிகங்களின் ரூபம் *ī*, *ū* இவற்றிலும், ஹலந்தப்ராதிபதிகங்களின் ரூபம் ə இலும் முடிந்தன. வைதிக மொழியில் அகாராந்தப்ராதிபதிகம் आ-இலும், आनि-இலும் முடியும். உ-ம். भुवना [1] भुवनानि [2]

1. भयन्ते विश्वा भुवना मरुद्भ्यः (ऋ. वे. 1, 85, 8)
2. आदेवो याति भुवनानि पश्यन् (*ibid* 1, 35, 2)

**भुवनानि** என்ற ரூபம் நகாராந்தப்ராதிபதிகங்கள் கொண்ட **वत्मांनि**[1] போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் என்பர். அதற்குக் காரணம் **वर्त्मा**[2] போன்ற ரூபங்களும் காணப்படுதல் என்பர்.

இகாராந்தப்ராதிபதிகம் **ई, ईनि** இவற்றில் முடியும்.

உ-ம். **शुची, त्री**[3], **शुचीनि**[4]

உகாராந்தப்ராதிபதிகம் **ऊ, ऊनि** இவற்றில் முடியும்.

உ-ம். **मयोभु**[5], **त्रिधातूनि**[6]

நகாராந்தப்ராதிபதிகம் **आ, आनि** இவற்றில் முடியும்.

உ-ம். **अहा**[7], **नामा**[8], **अहानि**[9]

1. अपवत्मीन्येषामनु रीयते घृतम् (*ibid* 1, 85, 3)
2. धामा ह यत्ते अजरवना वृश्चन्ति शिक्वसः (*ibid* 6, 2, 9)
   பதபாடத்தில் धाम என்று உளது. ஸாயணாசாரியர் धामानि எனப் பொருள் கொடுக்கிறார். அவரது பாடம் धामा ஆக இருந்ததா என்பது ஆராய்தற்பாலது.
3. शुची वो हव्या मरुतश्शुचीनाम् (*ibid* 7, 56, 12)
   यस्य त्री पूर्णा मधुना पदानि (*ibid* 1, 154, 4)
4. या वो भेषजा मरुतः शुचीनि (*ibid* 2, 33, 13)
5. या वो भेषजा मरुतः ...... मयोभु (*ibid* 2, 33, 13)
   ஈண்டு मयोभू என்பது मयोभु என்று ஆயிற்று.
6. या वः शर्म शशमानाय सन्ति त्रिधातूनि (*ibid* 1, 85, 12)
7. अहा यदिन्द्र सुदिना ... (*ibid* 7, 30, 3)
8. चत्वारि ते असुर्याणि नामा (*ibid* 10, 54, 4)
9. अहानि गृध्राः पर्या व आगुः (*ibid* 1, 88, 4)

ரேபாந்தப்ராதிபதிகம் चतुर्, चत्वारि[1] என்ற ரூபங் கொண்டது.

कर्तृणि என்பது नामानि, शुचीनि, मधूनि இவற்றின் அதிதேசத்தால் வந்தது என்பர்.

घृतवत्, सत् போன்ற ப்ராதிபதிகங்களின் ரூபம் வேதங்களின் முற்பகுதியில் घृतवान्ति, सान्ति என்றும், பிற்பகுதியிலும் இதிஹாஸமொழியிலும் घृतवन्ति, सन्ति என்றும் உள்ளன. घृतवान्ति என்றவிடத்து தீர்க்கம் घृतवन् என்ற ப்ராதிபதிகத்துள்ள தீர்க்கத்தின் அதிதேசத்தால் வந்திருத்தல் வேண்டும்.

பிராம்மணகாலம் முதல் त्रिवृन्ति, भांसि, हृन्दि, मनांसि என்றவிடத்தில் நுமாகமம் உள்ளது. घृतवन्ति போன்ற இடத்துள்ள நுமாகமம் विद्वांसि போன்ற இடங்களின் அதிதேசத்தால் பரவி அங்கிருந்து ஹலந்தப்ராதிபதிகங்கள் எல்லாவற்றிலும் பரவின என்பர்.

ஸகாராந்தப்ராதிபதிகம் रजांसि[2] போன்ற ரூபங் கொண்டது. இரான்மொழியில் *rajā* என்று உளது.

மூன்றும்வேற்றுமை: தாய்மொழியில் இவ்வேற்றுமையுருபு *bhis*-உம் *mis*-உம் ஆகும். *so* ப்ராதிபதிகத்திற்கு *tōis* என்ற ரூபம் உளது. வைதிகமொழியில் *mis* என்ற உருபு காணவில்லை. भिस् என்பதே பெரும்பாலும் எல்லாவிடத்திலும் உள்ளது. வேதத்தில் அகாரந்தப்ராதிபதிகத்தில் देवेभिः[3], देवैः[4] போன்ற

1. இ. யூ. *qetuōr*-ठ
   चत्वारि ते असुर्याणि नामा दाभ्यानि महिषस्य सन्ति (*ibid* 10, 54, 4)
2. कृष्णा रजांसि तविषीं दधानः (*ibid* 1, 35, 4)
3. देवो देवेभिरागमत् (*ibid* 1, 1, 5)
4. देवैर्नो देव्यदितिर्निपातु (*ibid* 4, 55, 7)

இரண்டு ரூபங்கள் உள. அவற்றுள் देवैः என்பது तैः என்ற ஸர்வநாமரூபத்தின் அதிதேசத்தால் வந்தது என்பர். இதிஹாஸ மொழியில் देवेभिः போன்ற ரூபம் இறந்துவிட்டது. ஹலந்த-ப்ராதிபதிகரூபங்களில் சில தமக்கு உரித்தான ரூபங்களை விட்டு அதிதேசத்தால் புதிய ரூபங்களைக் கொண்டன.

| | உரித்தான ரூபம் | புதிய ரூபம் |
|---|---|---|
| உ-ம். | उषाद्भिः [1] | उषोभिः |
| | मनाद्भिः | मनोभिः |
| | माद्भिः | माभिः |
| | सुदाद्भिः | सुदाभिः |
| | हविड्भिः | हविर्भिः |

நான்காம்வேற்றுமையும் ஐந்தாம்வேற்றுமையும்: தாய் மொழியிலேயே இவ்விருவேற்றுமைகளுக்கும் ஒரே உருபு இருந்திருக்கலாம். இரான்மொழியும் வைதிகமொழியும் *bhias* என்ற உருபும், லத்தீன் *bus* என்ற உருபுங் கொண்டன. தாய் மொழியில் இவ்வுருபு *bh*, *m* இவற்றைக் கொண்டு இருந்தது என்பதை நிச்சயமாய்க் கூற முடியினும், அவை எவ்வுயிரைக் கொண்டன என்பதைத் திண்ணமாய்க் கூற இயலவில்லை. तुभ्यम्, मह्यम् என்றவிடத்தை நோக்கின் *bh*, *m* என்பன ஒருமையுருபாகவும், *bhias* என்பது பன்மையுருபாகவும் இருந்திருத்தல் கூடும். அவ்வாறாயின் युष्मभ्यम्, अस्मभ्यम् என்பன பொருந்துமா எனின், பொருந்தும். ஆங்கும் भ्यम् என்பது ஒருமையுருபாயிருத்தல் கூடும் என்பது अस्मत्, युष्मत् என்றவிடத்தில் त् ஒருமையுருபாயிருத்தலானும், ஆறாம்வேற்றுமை ரூபங்களாகக்கொண்ட अस्माकम्, युष्माकम् என்பன ஒருமைப் பெயராயிருத்தலானும் என்க.

1. समुषाद्भिरजायथाः (*ibid* 1, 2, 6)

हरिभ्यः போன்று देवभ्यः என்று இருக்கவேண்டியிருக்க, देवेभ्यः என்ற ரூபம் உளது. அது तेभ्यः என்றதன் அதிதேசத்தால் வந்தது என்பர். சில ஹலந்தப்ராதிபதிகங்கள் தமக்கு உரித்தான ரூபங்களை விட்டு புதிய ரூபங்களைக் கொண்டன.

| | உரித்தான ரூபம் | புதிய ரூபம் |
|---|---|---|
| உ-ம். | दिड्भ्यः | दिग्भ्यः |
| | मनद्भ्यः | मनोभ्यः |
| | उषद्भ्यः | उषोभ्यः |
| | माद्भ्यः | माभ्यः |
| | हविड्भ्यः | हविर्भ्यः |

ஆறும்வேற்றுமை : தாய்மொழியில் இவ்வேற்றுமையுருபு *om*; *o*-ஐ ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகத்தில் ஈற்றிலுள்ள *o*-உம் உருபும் சேர, அச்சொற்களின் இறுதியில் *ōm* உண்டாயிற்று. அஃதே எல்லாவீற்றுப்பிராதிபதிகங்களுக்கும் உருவாய்க் கொள்ளப்பட்டது.

இது வைதிகமொழியில் आम् ஆயிற்று. ஹலந்தப்ராதிபதிகங்கள் எல்லாவற்றிற்கும் இவ்வுருபே சேர்க்கப்பட்டது.[1] உயிரீற்றுப்ப்ராதிபதிகங்களின் ரூபங்கள் வைதிகமொழியில் இருவகையாகக் காணப்படுகின்றது. எல்லாவற்றின் இறுதியுயிர் நீண்டு அதன்பின்னர் नाम् சேர்க்கப்பட்ட ரூபம் ஒன்று;[2]

1. आतें पितमरुताम् सुम्नमेतु (ऋ. वे. 2, 33, 1)
भिषक्तमं त्वा भिषजां शृणोमि (*ibid* 2, 33, 4)

2. अयं देवानामपसामपस्तमः (*ibid* 1, 160, 4)
वयं स्याम पतयो रयीणाम् (*ibid* 4, 50, 6)
चेतन्ती सुमतीनाम् (*ibid* 1, 3, 11)
पुरूतमं पुरूणाम् (*ibid* 1, 5, 2)

அகாராந்தப்ராதிபதிகம் आम् இனும், இகாராந்தப்ராதிபதிகம் ईम् இனும், உகாராந்தப்ராதிபதிகம் ऊम् இனும் முடிவது மற்றொன்று. आत्मनाम् என்பதை आत्मन्—आम् எனக் கொள்ளாது आत्म—नाम् எனத் தவருகக் கொண்டு அதைப் போன்று देवा—नाम् என வழங்கியிருக்கவேண்டும் என்றும், அகாராந்தப்ராதிபதிகரூபத்தின் அதிதேசத்தால் இகாராந்த-உகாராந்தப்ராதிபதிகங்களிலும் नाम् வந்திருத்தல் வேண்டும் என்றும், ஆகாராந்தப்ராதிபதிகத்தில் இரண்டாம்வேற்றுமை யொருமைக்கும் ஆரும்வேற்றுமைப்பன்மைக்கும் மயக்கம் வர, அதனைப்போல் ஆரும்வேற்றுமையில் नाम् சேர்க்கப்பட்டிருக்க வேண்டும் என்றும், அதனைப் பார்த்து அதிதேசத்தால் ஈகாராந்த-ஊகாராந்தப்ராதிபதிகங்களுக்கும் नाम् சேர்க்கப் பட்டிருத்தல் வேண்டும் என்றுங் கூறுவர் மொழிநூல்வல்லோர்.

ஏழாம்வேற்றுமை : தாய்மொழியில் முதன்முதலில் உருபு எவ்வாறு இருந்தது என்பதை நிச்சயமாய்க் கூற இயலவில்லை; ஏனெனில் வைதிகமொழியும் லிதுவேனியனும் *su* என்ற உருபையும், கிரேக் *si* என்ற உருபையும் கொண்டிருக்கின்றன. ஆயினும் தொடக்கத்தில் *su* என்ற உருபு தான் இருந்தது என்றும், பின்னர் ஏழாம்வேற்றுமை யொருமையுருபாகிய *i*, *s*-க்குச் சேர்க்கப்பட *si* வந்தது என்றும் மொழிநூல்வல்லோருள் பலர் கூறுவர். ஆயினும் *s* ஏ உருபாக இருந்து, பல்லிடங்களில் ஏழாம்வேற்றுமைப்பன்மைக்கும் முதல்வேற்றுமை யொருமைக்கும் மயக்கம் வர, ஏழாம்வேற்றுமையில் *s*-இன் பின்னர் சுட்டெழுத்துக்களாகிய *u*, *i* இவை சேர்க்கப்பட, அவற்றுள் ஒன்றைச் சில மொழிகளும் மற்றொன்றைச் சில மொழிகளுங் கொண்டன எனக் கொள்ளல் தகும்.

*o*-ஐ ஈற்றிற் கொண்ட ப்ராதிபதிகம் ஸர்வநாமசப்தத்தின் அதிதேசத்தால் வேற்றுமையுருபிற்கு முன்னர் *oi̯*-ஐச் சேர்த்துக் கொண்டது.

ஆகலின் வைதிகமொழியில் அகாராந்தப்ராதிபதிகரூபம் देवेषु என்றும், மற்ற ப்ராதிபதிகங்களில் अरिषु, रमासु, देवीषु என்றும் இருக்கின்றன. சிலவிடங்களில் இறுதியில் आ சேர்க்கப்படுகின்றது.[1] சில ஹலந்தப்ராதிபதிகங்கள் தமக்கு உரித்தான ரூபங்களை விட்டுப் புதிய ரூபங்களைக் கொண்டன.

| | உரித்தான ரூபம் | புதிய ரூபம் |
|---|---|---|
| உ-ம். | मनस्सु | मनःसु |
| | हविष्षु | हविःषु |
| | विद्वस्सु | विद्वत्सु |

## வேற்றச்சுப்படுக்கை

இருவகைப்பட்ட ப்ராதிபதிகங்களிலிருந்து வந்த ரூபங்களுள் சில ஒரே வகையாக இருக்கும். ஒரு ப்ராதிபதிகத்தின் ஒரு ரூபத்தைக் கண்டு, அது மற்றோர் ப்ராதிபதிகத்தின் ரூபம் என மயங்கி, அப்பிராதிபதிகத்திற்கு உரிய ஏனைய ரூபங்களை மக்கள் வழங்குதல் இயற்கை ஆகும். அதற்கு ஓர் உதாரணம் கூறலாம்: தற்போது பெண்மணிகள் கையில் பல்வகைப்பட்ட பொன்வளையல்களை அணிகின்றனர்; அவற்றுள் சில ஒரு பகுதியில் ஒன்றுபட்டிருத்தல் கூடும்; அவ்வாறுள்ள ஒரு பகுதியை ஒரு பெண்மணி பொற்கொல்லனிடம் கொடுத்து அவ்வளையலைச் செய்துவரச் சொல்ல, அவன் அப்பகுதி வேறொரு வகையைச் சேர்ந்ததாகப் பிரமித்து அதை வேற்றச்சில் அடித்து அவன் கொண்டுவருகிறான். அப்போது பெண்மணி தான் நினைத்தது அவ்வகையன்று எனக் கூற, பொற்கொல்லன் அவள் தன்னிடம் கொடுத்த பகுதிக்குத் தக்கவாறு தான் செய்த வளையல் இருப்பதைக் காட்டுகின்றான். இவ்வாறு மொழிகளில் பல்லிடங்களில் நேரும். இதற்குத் தமிழில்

1. स चैषु सवनेष्वा (*ibid* 1, 9, 2)

வேற்றச்சுப்படுக்கை என்றும், வடமொழியில் பின்னமூஷாஸேகம் என்றும், ஆங்கிலத்தில் மேடப்ளாஸம் என்றுங் கூறலாம்.[1]

வேதத்தில் नृ என்ற ப்ராதிபதிகத்தின் ரூபமாக नरा என்ற முதல்வேற்றுமையிருமை காணப்படுகின்றது.[2] முதல் வேற்றுமைப்பன்மையில் नरः [3] என்ற ரூபமும் காணப்படுகின்றது. नरा என்பதை नर என்ற ப்ராதிபதிகத்தின் முதல்வேற்றுமையிருமை என மயங்கிப் பின்னர் नराः, नरान् முதலிய அகாராந்தப்புல்லிங்கப்ராதிபதிகத்தின் ரூபங்களை மக்கள் வழங்கிவிட்டனர்.[4] அவ்வாறே पात् என்ற ப்ராதிபதிகத்தின் முதல்வேற்றுமையிருமைரூபமாகிய पादौ என்பது पाद என்ற ப்ராதிபதிகத்தின் ரூபம் என மக்கள் மயங்கி पाद என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்கள் வழங்கப்பட்டன.[5] இவ்வாறே

1. வேற்றச்சுப்படுக்கை = भिन्नमूषासेकः = *Metaplasm* (Greek-metaplazmos—meta=beyond, plazzein=to mould).
இவ்வாறு சொற்கள் வேற்றுருவத்தைக் கொள்ளினும், வேற்றுருவங் கொள்ளுதற்கெல்லாம் இதுவே காரணம் எனக் கொள்ளுதல் நேரிதாகாது.
2. नरादंसिष्ठावत्रये शुभ्रासिषासतं धियः (ऋ. वे. 10, 142, 3)
अथाहि वां दिवो नरा पुनस्तोमो न विशसे (*ibid* 10, 142, 3)
3. भयन्ते विश्वा भुवना मरुद्भ्यो राजान इव त्वेष संन्दृशो नरः (*ibid* 1, 85, 8)
4. नारायणं नमस्कृत्य नरं चैव नरोत्तमम् (महाभारते.)
எனத் தொடங்குகிறது. ஈண்டு உள்ள नरम् என்பது नृ என்ற ப்ராதிபதிகத்திற்கும் नर என்ற ப்ராதிபதிகத்திற்கும் ஒத்த ரூபமே ஆகும். ஆயினும் नरोत्तमम् என்ற தொகைச்சொல்லில் பூர்வபதம் नर ஆகுமேயன்றி नृ ஆகாது. ஆகலின் नर என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்கள் மஹாபாரதகாலத்திலேயே வந்துவிட்டன என்று கூறலாம்.
5. तयोर्जगृहतुः पादान् (रघुवंशे 1, 57)

मास् , दत् என்ற ப்ராதிபதிகங்களின் முதல்வேற்றுமையிருமை ரூபமாகிய मासौ, दन्तौ என்பன मास, दन्त என்பதன் ரூபங்களாக மயங்கப்பட்டன. முன்னர் மயக்கத்திற்கு முதல் வேற்றுமையிருமைரூபம் போன்று இரண்டாம்வேற்றுமை யொருமை இரண்டாம்வேற்றுமையிருமை இவையுங் காரணம் ஆகலாம். இவ்வாறு வருவதையெல்லாம் பாணினியாசிரியர் ஒரு ஸூத்திரத்தில்[1] தொகுத்துக் கூறினர். ஆனால் சரித்திர நிலையை நோக்கி पद् முதலியன पाद मுதலியனவாக மாறிற்று எனக் கூறாது पाद முதலியனவற்றிற்கு पद् முதலியன ஆதேசமாக வரும் என்றனர். पूषणः என்ற ரூபமும் पूषणं[2], पूष्णः என்ற ரூபங்களும் வேதத்தில் காணப்படுகின்றமையால் அந்த ஸூத்திரத்தில் पूषन् என்பதையுஞ் சேர்க்கலாம் என்பர்.

दोषन् என்பதோடு दोषा என்ற ப்ராதிபதிகமும் கொள்ளப் பட்டது என்பது दोषाम्[3] என்ற ரூபத்தால் அறியப்படுகின்றது. योषन् என்பதோடு योषा என்ற ப்ராதிபதிகம் தோன்றியது எனத் தோன்றுகிறது[4]. அவ்வாறே सीमन् இலிருந்து सीमा தோன்றியது. ஸகாராந்தப்ராதிபதிகங்களான उषास् , जरस् இவற்றிலிருந்து ஆகாராந்தப்ராதிபதிகங்களாகிய उषा, जरा[5] இவை தோன்றின.

1. पद्दन्नोमास्हृन्निशसन्यूषन्दोषन्यकञ्छकन्नुदन्नासञ्छस् प्रभृतिषु (पा. अ. 6, 1, 63)
2. इन्द्रवायू बृहस्पतिंमित्राग्निं पूषणं भगम् (ऋ. वे. 1, 14, 3)
   प्रप्र पूष्णस्तु विजातस्य (*ibid* 1, 137, 1)
3. दोषामुषासमीमहे (*ibid* 5, 5, 6)
4. दाना मित्रं न योषणा (*ibid* 5, 52, 14)
   गुहा चरन्ती मनुषो न योषा (*ibid* 1, 8, 163)
5. ஈண்டும் जराया जरसन्यतरस्याम् (पा. अ. 7, 2, 101) எனப் பாணினியாசிரியர் முறைமாற்றிக் கூறியது கவனித்தற்கு உரியது.

उष् இல் முடியும் ப்ராதிபதிகங்களிலிருந்து உகாராந்த ப்ராதிபதிகங்கள் தோன்றின.

பேருஷ் இலிருந்து பேரு[1]

உ-ம். जिग्युष् जिग्यु[2]

வேதத்தில் ஒரு தாதுவிற்குப் பல்வகைப்பட்ட ப்ரத்யயங்கள் சேர்க்கப்பட்டு பல ப்ராதிபதிகங்கள் உண்டாயின. அவற்றின் ரூபங்களுள் பல பிற்காலத்தில் இறக்க, பின்னப்ராதிபதிகங்களின் ரூபங்களை ஒரே ப்ராதிபதிகத்தின் ரூபங்களாக இதிஹாஸ மொழியில் கொள்ளப்பட்டன. அவ்வாறே கொண்டு பாணினியாசிரியரும் இலக்கணம் எழுதினர். இவையெல்லாம் நஷ்டாச்வ-தக்தரதந்யாயத்திற்கு[3] இலக்கு ஆகும் என்னலாம்.

உ-ம். ऋक्वन् ऋक्वत् என்ற ப்ராதிபதிகங்களின் ரூபங்கள் ऋक्वन् என்பதன் ரூபங்களாகக் கொள்ளப்பட்டன[4]. पथ् என்ற தாதுவிலிருந்து पथ्, पथ, पथस्, पथि पथ्या என்ற ப்ராதிபதிகங்களும், पन्थ् என்ற தாதுவிலிருந்து पन्थन्, पन्था என்ற ப்ராதிபதிகங்களும் வேதத்தில் இருக்க, அவற்றின் ரூபங்களுள்,

1. पेरुमस्यस्यर्जुनि (ऋ. वे. 5, 84, 2)
2. अस्मान्त्सुजिग्युषस्कृतम् (*ibid* 1, 4, 17)
3. नष्टाश्वदग्धरथन्यायः இரண்டு குதிரைவண்டிகள் போட்டியுடன் ஓட்டப்பட, ஒன்றன் குதிரை வீழ்ந்து இறக்கவும், மற்றொன்றன் வண்டி தீப்பிடித்து எரியவும், இரண்டு வண்டிக்காரர்களும் ஒத்து ஒன்றன் குதிரையை மற்றொரு வண்டியில் கட்டி இருவரும் குறித்த இடம் போகின்றனர். இதை ஒரு நியாயமாக வழங்கினர் பதஞ்சலிமுனிவர்.
4. ऋक्वाणो अग्निमिन्धते (ऋ. वे. 3, 13, 5)
   ऋक्वभिर्वावृधानः (*ibid* 10, 14, 5)
   ऋक्वता गणेन (*ibid* 4, 50, 5)

*இறந்ததுபோக எஞ்சிநிற்பன, இதிஹாஸமொழியில்* **पथिन्** *என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்களாகக் கொள்ளப்பட்டன.*[1]

1. पथ् — पथः (*இரண்டாம் வேற்றுமைப்பன்மை*)
पथ एकः पीपाय (*ibid* 8, 29, 6)
पथा (*மூன்றாம்வேற்றுமையொருமை*)
पथेव यन्तौ (*ibid* 1, 139, 4)
पथः (*ஆறாம்வேற்றுமையொருமை*)
पथस्पथः परिपतिम् (*ibid* 6, 49, 8)
पथाम् (*ஆறாம்வேற்றுமைப்பன்மை*)
पथां विसर्गे (*ibid* 10, 5, 6)

पथ — पथम्
पथं गच्छ पथं गच्छ (मै. सं. 2, 9, 10)

पथस् — पथः
दुर्गं पथस्तत्कवयो वदन्ति (कठोपनिषत्)

पथि — पथ्या पूष्णः (मै. सं. 1, 9, 2), (तै. आ. 3, 9, 1)
पथिभिर्मधुमत्तमैः (वाज. सं. 28, 2)
पथीनां पतये नमः (*ibid* 16, 17)

पथ्या — जज्ञानाः पथ्या ३ अनु स्वाः (ऋ. वे. 10, 14, 2)
(पथ्याः — *இரண்டாம் வேற்றுமைப்பன்மை*)

पन्थन् — पन्थानः
पन्थानो राजन् दिवा आचरन्ति (तै. सं. 2, 3, 14, 4)
पन्थानम्
पन्थानं भ्रूभ्याम् (वा. सं. 25, 1)

पन्था — पन्थाः (*முதல்வேற்றுமையொருமை*)
अयं पन्था अनुवित्तः (ऋ. वे. 4, 18, 1)
पन्थाः (*முதல்வேற்றுமைப்பன்மை*)
ये ते पन्थाः सवितः (*ibid* 1, 35, 11)
पन्थाम्
पन्थां सूर्याय यातवे (*ibid* 8, 7, 8)
पन्थासो यन्ति (*ibid* 1, 100, 3)

இதிஹாஸமொழியிலுள்ள ரூபங்களெல்லாம் **पथिन्** என்ற ப்ராதிபதிகத்திலிருந்து வந்தன என்பதற்கு **पथिभिः, पथीनां** என்ற ரூபங்களை **गुणिभिः गुणीनां** போன்ற நகாராந்தப்ராதிபதிகங்களின் ரூபங்களென மயங்கியதே காரணம் ஆகும். ஆக **पन्थाः** என்பது **पन्था** என்பதன் ரூபம்; **पन्थानौ, पन्थानः, पन्थानम्** இவை **पन्थन्** என்பதன் ரூபங்கள்; **पथा, पथे, पथः, पथोः, पथाम्, पथि** இவை **पथ्** என்பதன் ரூபங்கள்; **पथिभ्याम्, पथिभिः, पथिभ्यः, पथीनाम्, पथिषु** இவை **पथि** என்பதன் ரூபங்கள் ஆகும்.

இவ்வாறே இதிஹாஸமொழியில் வழங்கப்படும் **महत्** என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்களும் ஆகும். **मह्** என்ற தாதுவிலிருந்து **मह्, महत्, महन्, मही** என்ற ப்ராதிபதிகங்கள் வேதத்தில் இருந்தன.[1] இதிஹாஸமொழியிலுள்ள **महान्,**

1. मह् — महः (இரண்டாம்வேற்றுமைப்பன்மை)
   महो देवान्यजसि (ऋ. वे. 6, 48, 4)
   महा (மூன்றாம்வேற்றுமையொருமை)
   महा नमसा विवासे (*ibid* 6, 52, 17)
   महे (நான்காம்வேற்றுமையொருமை)
   मनामहे ...... महे वयम् (*ibid* 5, 48, 1)
   महः (ஆறாம்வேற்றுமையொருமை)
   सधस्थे वा महो दिवः (*ibid* 5, 52, 7)

   महन् — महानि
   महतो महानि (*ibid* 4, 22, 5)
   मह्ना (மூன்றாம்வேற்றுமையொருமை)
   नृम्णस्य मह्ना स जनास इन्द्रः (*ibid* 2, 12, 1)
   महानाम् (ஆறாம்வேற்றுமைப்பன்மை)
   महानां देवानामवो वृणे (*ibid* 8, 83, 8)

   महत् — महत्तन्नाम गुह्यम् (*ibid* 10, 55, 2)

   मही — सहस्रधारा पयसा मही गौः (*ibid* 4, 41, 5)

महान्तौ, महान्तः, महान्तम्, महान्तौ இவ்வைந்திலுள்ள ஆ என்ற தீர்க்கம் महन् என்ற ப்ராதிபதிகத்திலிருந்தும், ஈற்றெழுத்துக்கள் महत् என்ற ப்ராதிபதிகத்திலிருந்தும் வந்தன எனக் கொள்ளல் வேண்டும். महतः முதல் महत्सु முடிய உள்ள ரூபங்கள் महत् என்ற ப்ராதிபதிகத்திலிருந்து வந்தனவே ஆகும்.

இதிஹாஸமொழியில் विद्वस् என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்களாக வழங்கப்படுவனவும் பல ப்ராதிபதிகங்களின் ரூபங்கள் ஆகும். विद् தாதுவிலிருந்து विद्वत्, विद्वस्, विद्वन् என்ற மூன்று ப்ராதிபதிகங்கள் வேதத்தில் இருந்திருக்கவேண்டும். இதிஹாஸமொழியில் உள்ள विदुषः, विदुषा, विदुषे, विदुषः, विदुषोः, विदुषाम्, विदुषि என்ற ரூபங்கள் विद्वस् என்ற ப்ராதிபதிகத்தைச் சேர்ந்தன. विद्वद्भ्याम्, विद्वद्भिः, विद्वद्भ्यः, विद्वत्सु இவை विद्वत् என்ற ப்ராதிபதிகத்தைச் சேர்ந்தன. विद्वान्-இல் உள்ள ஆகாரம் विद्वन् ப்ராதிபதிகத்தையும், ஈற்றிலுள்ள न् विद्वत् ப்ராதிபதிகத்தையுஞ் சேர்ந்தன. विद्वांसौ, विद्वांसः, विद्वांसम् இவற்றிலுள்ள ஆகாரம் विद्वन् ப்ராதிபதிகத்தையும், न् विद्वत् ப்ராதிபதிகத்தையும், स् विद्वस् ப்ராதிபதிகத்தையுஞ் சேர்ந்தன. இப்படிப்பட்ட மயக்கம் வைதிகமொழியிலே காணப்படுகின்றது [1].

वच् என்ற ப்ராதிபதிகத்தில் ஸர்வநாமஸ்தானரூபங்களைக் கண்டு இரண்டாம் வேற்றுமைப்பன்மை முதல் உயிர் நீண்டது. அதாவது वचः, वचा, वचे என இருக்கவேண்டியிருக்க वाचः, वाचा, वाचे என ரூபங்கள் வந்தன. वाचस्पतिः [2] என்ற சொல்லைப் பார்த்தால் இம்மயக்கம் வைதிகமொழியிலேயே வந்தது எனத் தோன்றுகின்றது.

1. विद्वाँ अग्ने वयुनानि (ऋ॰ वे. 1, 72, 7)
   ता विद्वांसा हवामहे (*ibid* 1, 120, 3)
   विद्वांसः पदा गुह्यानि कर्तन (*ibid* 10, 53, 10)
2. वाचस्पतिं विश्वकर्माणमूतये मनोजुवं वाजे अद्याहुवेम (*ibid* 10, 81, 7)

வைதிகமொழியிற் காணப்படும் अर्चिनः, अर्चिना[1] போன்ற சப்தங்கள் अर्चिन् என்ற ப்ராதிபதிகத்திலிருந்து வந்ததாகக் கொள்ளப்படுகின்றன. வைதிகமொழியையும் இரான்மொழியையும் ஆராய்ந்து பார்த்தால் முதலில் अर्च्यन् என்ற ப்ராதிபதிகமே இருந்திருக்கவேண்டும் என்றும், இரண்டாம்வேற்றுமைப் பன்மையிலிருந்து ஏழாம்வேற்றுமைப்பன்மை முடிய உள்ள ரூபங்களின் அதிதேசத்தால் अर्च्यां, अर्च्यांनौ, अर्च्यांनः, अर्च्यांनम् என்பன अर्ची, अर्चिनौ, अर्चिनः, अर्चिनम् என ஆயின என்றுங் கூறினர் மொழிநூல்வல்லோர்.

அவெஸ்தாவில் *kainīn*, *kaini*, *kaininem*, *kainīno kaini-byō* என்ற ரூபங்கள் காணப்படுதலால் வைதிகமொழியிலுள்ள कन्या என்பது कन्यन् என்ற ப்ராதிபதிகத்திலிருந்து வந்ததாகக் கருதலாம். ஆனால் அதுவும், அவெஸ்தாவிலுள்ள ரூபங்களும் ஆகாராந்தப்ராதிபதிகத்தின் ரூபங்களாக இலக்கணவாசிரியர்களாற் கருதப்படுகின்றன.

गौर्यै முதலியவற்றைப் பார்த்து मत्यै போன்ற ரூபங்களும் गुणीनाम् முதலியவற்றைப் பார்த்து हरीणाम् போன்ற ரூபங்களும் வந்தன என்பது முன்னரே கூறப்பட்டது.

வேற்றச்சுப்படுக்கையால் வைதிகமொழியும் இதிஹாஸமொழியும் எவ்வாறு வளர்ந்தன என்பது இவற்றிலிருந்து நன்கு புலப்படும்.

## ப்ராகிருதமொழிநிலே

ப்ராகிருதமொழிநிலேயில் பெயர் உருபேற்றல், வைதிகமொழிநிலே இதிஹாஸமொழிநிலே இவற்றுள் எவ்வாறே அவ்வாறே தான். ஈண்டும் ஒரு ப்ரத்யயமே வேற்றுமையையும்

1. स माया अर्चिना पदास्तृणात् (*ibid* 8, 41, 8)

வசனத்தையுங் காட்டும். ஆனால் இங்கிலேயில் நான்காம் வேற்றுமையும், இருமையும் இறந்துவிட்டபடியால் இருமையை யும் நான்காம்வேற்றுமையையுங் குறிக்கும் ப்ரத்யயங்கள் இறந்தன.

ப்ராகிருதமொழி தேசத்திற்குத் தக்கவாறும், பேசு வோர்க்குத் தக்கவாறும் சிறிது மாறுபடும். ஆகலின் அங்கிலேயைப் பற்றிக் கூறுதல் பெரும்பான்மைபற்றியே ஆகும். இங்கிலேயில் உள்ள வேற்றுமையுருபுகள் இதிஹாஸமொழிகிலேயில் இருந்த உருபுகளினின்றும் வேறுபட்டன. அவ்வேறுபாட்டிற்கு ஒரு சிறந்த காரணம் முயற்சிசிக்கனம்[1] ஆகும். ப்ராதிபதிகங்களின் ஈறுகள்குறைந்தபடியால் ரூபங்களும் குறைந்தன. புல்லிங்கத்தில் அகாரஈறும் இகர-உகரஈறுகளும், ஸ்திரீலிங்கத்தில் ஆகார-ஈகார-ஊகாரவீறுகளுமே பெரும்பாலும் உள்ளன. ஸ்திரீ லிங்கத்தில் இகர-உகரவீறுகள் ஈகார-ஊகாரவீறுகளின் ரூபங் களைக் கொண்டன. பிராகிருதமொழியில் ருகாராந்தப்புல்லிங்க வீறு அகாராந்தமாகவும், ருகாராந்தஸ்திரீலிங்கவீறு ஆகாராந்த மாகவும், ஹலந்தவீறு உயிரீறாகவும் மாறின.

## ஒருமை

**முதல்வேற்றுமை:** புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகம் ओ ஆகவும் இகார-உகாராந்தப்ராதிபதிகங்கள் ஈற்றுயிர் நீண்டும், ஸ்திரீலிங்கத்தில் ஆகார-ஈகார-ஊகாராந்தப்ராதிபதிகங்கள் உருபு ஏலாது இயற்கையாகவும் இகார-உகாராந்தப்ராதி-பதிகங்கள் ஈற்றுயிர் நீண்டும் உள்ளன.

உ-ம். जणो[2], दुन्दुही[3], दिट्ठी[4], सुवअणा,[5] पिअसही[6]

1. Economy of effort.
2. सिविणअन्तो जणो किं ण क्खु प्पलवदि (वेणी. 2, 2–)
3. किं दाणिं एसो ...... समरदुन्दुही ताडीअदि (*ibid* 1, 24—)
4. बाप्पजाउला दिट्ठी (*ibid* 4)
5. सोहणं भणादि सुवअणा (*ibid* 2, 2—)
6. ता कहेदु पिअसही (*ibid* 2, 2—)

இரண்டாம் வேற்றுமை : எல்லாப்ராதிபதிகமும் ஈற்றில் அநுஸ்வாரம் பெறும்; ஈற்றிலுள்ள நெட்டெழுத்து குன்றும்.

உ-ம். णाहं [1], सवरिअं [2], पाण्ड अक्कोसिइं [3]

மூன்றும் வேற்றுமை : புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகத்திற்கு இறுதியில் ण-ஐச் சேர்த்து அகாரத்தை ए-காரமாக்கவேண்டும்; இகார-உகாராந்தப்ராதிபதிகத்திற்கு णा சேர்க்கவேண்டும். ஸ்திரீலிங்கத்தில் ஆகாராந்தப்ராதிபதிகத்திற்கு इ, ए இவையும், ஈகாராந்த-ஊகாராந்தப்ராதிபதிகங்களுக்கு इ, ए, अ, आ, இவையும் சேர்க்கப்படும்.

உ-ம். णउलेण [4], पसंसाए [5], भाणुमदीए [6], वहूए [7]

ஐந்தாம் வேற்றுமை : எல்லாப்ராதிபதிகத்திலும் ஈற்றில் दो, दु, हि இவை சேர்க்கப்படும். ப்ராதிபதிகத்தின் ஈற்றிலுள்ள குற்றெழுத்து நீளும்.

உ-ம். कालणादो [8]

ஆறும் வேற்றுமை : புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகத்திற்கு स्स-உம் இகார-உகாராந்தப்ராதிபதிகங்களுக்கு स्स, णो-இவ்விரண்டும், ஸ்திரீலிங்கத்தில் ஆகாராந்தப்ராதிபதிகத்

1. णाहं (नाथं) पेक्खिदुं तुवरदि मे हिअअं (वेणी. 1, 14 —)
2. सहस्सरस्सिणो सवरिअं (सपर्या) णिव्वट्टेमि (*ibid* 2, 15—)
3. (मालवि. 1, 13—)
4. णउलेन (नकुलेन) अहिसदं वावादिदम् (*ibid* 2, 8—)
5. सिविणआ पसंसाए (प्रशंसया) कुसलपरिणामा होन्ति (*ibid* 2, 2—)
6. भाणुमदीए देवी दिट्ठा (*ibid* 1, 19—)
7. वहूए (वध्वा) सह अणुमरदि (*ibid* 4, 9—)
8. तुहकालणादो (कारणात्) (*ibid* 3, 2—)

திற்கு इ, ए இவையும், ஈகார-ஊகாராந்தப்ராதிபதிகங்களுக்கு इ, ए, अ, आ இந்நான்கும் சேர்க்கப்படுகின்றன.

உ-ம். भादुसदस्स [1], हरिणो [2], अज्जाए [3], देवीए [4]

ஏழாம்வேற்றுமை: புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகத்தின் இறுதியில் ए அல்லது म्मि உம், இகார-உகாராந்தப்ராதிபதிகங்களுக்கு म्मि உம், ஸ்திரீலிங்கத்தில் ஆகாராந்தப்ராதிபதிகத்திற்கு इ, ए இவையும், ஈகார-ஊகாராந்தப்ராதிபதிகத்திற்கு इ, ए, अ, आ இவை நான்கும் சேர்க்கப்படும்

உ-ம். णिअमे [5], गदाए [6], जीआइ [7], भूमिए [8]

எட்டாம்வேற்றுமை: புல்லிங்கத்தில் எட்டாம்வேற்றுமைக்கு உருபு இல்லை. ஸ்திரீலிங்கத்தில் ஆகாராந்தப்ராதிபதிகத்தின் ஈற்றெழுத்து ए ஆகவும், ஈகார-ஊகாராந்தப்ராதிபதிகங்களின் ஈற்றெழுத்து குறுகியும் நிற்கும்.

உ-ம். णाह [9], वशागन्धे [10], भाणुमदि [11]

நபும்ஸகலிங்கத்தில் முதலிரண்டு வேற்றுமைகளில் वअणं (वचनम्) [12], दहिं (दधि) போன்ற ரூபங்கள் வரும்.

1. जेट्ठो भादुसदस्स (भ्रातृशतस्य) (*ibid* 4, 9—)
2. हरिणो (हरेः) विअ मङ्गलं तुह्माणं होदु (*ibid* 1, 25—)
3. अज्जाए (आर्यायाः) गन्धालीए पादवन्दणं कादुं गदा (*ibid* 1, 18—)
4. उव्वे अकालणं आसी देवीए (देव्याः) (*ibid* 1, 18—)
5. कस्सिं वि णिअमे (नियमे) अहिलासो (*ibid* 21, 6—)
6. असिक्खिदं गदाए (गदायाम्) (*ibid* 6, 16—)
7. जीआइं (जीवायामपि) व्यावारिदो समं सिलीमुहासारो (*ibid* 4, 9—)
8. भूमिए (भूमौ) उवविट्ठो चिट्ठदि (*ibid* 4, 9—)
9. णाह (नाथ) (*ibid* 1, 17—)
10. वशागन्धे (वशागन्धे) शुट्ठु (*ibid* 3, 2—)
11. अइ भाणुमदि (*ibid* 1, 20—)
12. अस्सुदपुव्वं क्खु दे एदिसं वअणं (वचनम्) (*ibid* 1, 15—)

முதல்வேற்றுமை : புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகம் ஈறு நீண்டும், இகார-உகாரப்ராதிபதிகங்கள் ணோ பெற்றும் ஈறு நீண்டு ஓ பெற்றும், ஸ்திரீலிங்கப்ராதிபதிகங்கள் உருபு ஏலாதும், ஈற்றில் ஓ அல்லது उ பெற்றும் வரும்.

உ-ம். वीरमणुस्सा [1], केसा [2], पदीविआओ [3]

இரண்டாம்வேற்றுமை : புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகம் ஈறு நீண்டும் அல்லது ए ஆக மாறியும், இகார-உகாரப்ராதிபதிகங்கள் णो பெற்றும், ஸ்திரீலிங்கத்தில் எல்லாப்ராதிபதிகமும் ओ, उ பெற்றும் வரும்.

உ-ம். पदीविआओ [4]

மூன்றும்வேற்றுமை : எல்லாப்ராதிபதிகங்களும் ஈற்றில் हिं, हि இவற்றைப் பெறும். ஈற்றிலுள்ள அகரம் ए ஆகும்.

உ-ம். कुमारेहिं [5], पिपीलिआहिं [6], सोणिअविंदुहिं [7]

ஐந்தாம்வேற்றுமை : எல்லாப்ராதிபதிகங்களும் ஈற்றில் हिंतो அல்லது सुंतो என்பதைப் பெறும். ஈற்றிலுள்ள குற்றெழுத்து நீளும்; அகரம் ए ஆகவும் மாறும்.

1. वीरमणुस्साः (वीरमनुष्याः) दीसन्ति (*ibid* 4, 9)
2. अज्जवि केसा (केशाः) ण संजमीअन्ति (*ibid* 1, 19)
3. पदीविआओ पज्जालीअन्ति (मृच्छ. 1, 56—)
4. पज्जालेहि पदीविआओ (*ibid* 1, 56—)
5. अवरेहिं कुमारेहिं (कुमारैः) सह गदुअ अओज्झेहि (वेणी. 4, 79—)
6. चूदङ्कुरं विचिण्णन्तीणं पिपीलिआहिं दंसिदं (मालवि. 3, 12—)
7. सोणिअविंदुहिं (शोणितबिन्दुभिः) लित्तमुहं बाणं (वेणी. 4, 9—)

ஆறும் வேற்றுமை: *எல்லாப்ராதிபதிகமும் ஈற்றில்* **णं, ण** *இவற்றைப் பெறும். ஈற்றுக்குற்றெழுத்து நீளும்.*

உ-ம். **पुरिसाणं** [1], **देवदाणं** [2], **अक्खोहिणीणं** [3]

ஏழாம் வேற்றுமை: *எல்லாப்ராதிபதிகங்களும் ஈற்றில்* **सु, सुं** *இவற்றைப் பெறும். ஈற்றகரம்* **ए** *ஆகவும் இகரவுகரங்கள் நெட்டெழுத்தாகவும் மாறும்.*

உ-ம். **सण्णिहिदेसु** [4]

எட்டாம் வேற்றுமை: *புல்லிங்கத்தில் அகாராந்தப்ராதிபதிகம் நீண்டும், இகார-உகாராந்தப்ராதிபதிகங்கள்* **णो** *பெற்றும் அல்லது ஈறுநீண்டு* **ओ** *பெற்றும், ஸ்திரீலிங்கத்தில் ஈற்றில்* **ओ, उ** *இவை பெற்றும் வரும்.*

உ-ம். **दुज्जोहणप्पमुहा** [5], **कुरुबलसेणापहुणो** [6]

*நபும்ஸகலிங்கத்தில் முதலிரண்டு வேற்றுமைகளிலும் ஈற்றுயிர் நீண்டு* **ईं** *அல்லது* **इं** *பெறும்.*

உ-ம். **रिउबलाइं** [7], **सल्लाइं** [8]

வடமாகாணமொழிநிலை: *ஹிந்தி, மராட்டி முதலிய மொழிகளில் ஒருமைக்குச் சேர்க்கும் வேற்றுமையுருபுகளே பன்மைகளுக்குஞ் சேர்க்கப்படுகின்றன. முதல்வேற்றுமையில்*

1. पुरिसाणं (पुरुषाणां) समूहो दीसइ (*ibid* 4, 9—)
2. देवदाणं सवरिअं णिव्वट्टेमि (*ibid* 2, 15—)
3. ए आदहाणं अक्खोहिणीणं (अक्षौहिणीनां) णाअको भविअ (*ibid* 4, 9—)
4. किं वि उव्वेअकालणं तुह्मेसु सण्णिहिदेसु (सन्निहितेषु) (*ibid* 11, 7—)

5, 6. (*ibid* 4, 9—)

7. रिपुबलानि (*ibid* 1, 26—)
8. शल्यानि (*ibid* 4, 9—)

பெரும்பாலும் ஒருமைக்கும் பன்மைக்கும் ஒரே ரூபம் உளது. இரண்டாம்வேற்றுமையிலிருந்து ஏழாம்வேற்றுமை முடிய ஒருமைரூபத்திற்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் आँ, याँ, योँ இவற்றில் ஒன்று ஹிந்திபாஷையிற் சேர்க்கப் படுகின்றது. மராட்டியில் அநுஸ்வாரம் சேர்க்கப்படுகின்றது. ஆகலின் இந்நிலையில் மொழி ஒட்டநிமொழிநிலையை அடைந்தது. வேற்றுமையுருபுகள் ஒவ்வொரு மொழியிலும் வெவ்வேறாக இருக்கின்றன. ஹிந்தியிலும் மராட்டியிலும் இரண்டு முதல் ஏழு முடிய உள்ள வேற்றுமைகளின் உருபுகள் ஆவன :

| | | ஹிந்தி | மராட்டி |
|---|---|---|---|
| இரண்டாம்வேற்றுமை | | को | स |
| மூன்றும் | ,, | से | शीं |
| நான்காம் | ,, | केलिये | लाना |
| ஐந்தாம் | ,, | से | तून |
| ஆறும் | ,, | का, के, की | चा, चे, ची |
| ஏழாம் | ,, | मैं, पै, पर | त |

ப்ராதிபதிகத்தோடு வேற்றுமையுருபுகள் சேரும்போது சில மாறுதல்களும் நேரும். அவை விரிவாய் இங்கு உணர்த்தப் படவில்லை.

## எண்ணுப்பெயர் [1]

இண்டோயூரோபீயன்மொழியில் ஒன்று முதல் தொள்ளாயிரத்துத்தொண்ணூற்றொன்பதுவரையில் உள்ள எண்ணுப் பெயர்கள் மூன்று வகையாய் உள்ளன : tri [2] போன்ற தனிச் சொற்கள் ஒருவகை ; duō-dek̂m̥ [3] போன்ற தொகைச் சொற்கள் மற்றொரு வகை ; trei̯es qe ŭi̯k̂m̥ti qe [4] போன்ற

1. எண்ணுப்பெயர் = सङ्ख्यावाचकः = Numeral.
2. Skt. त्रि
3. Skt. द्वादश
4. Skt. त्रयश्च विंशतिश्च

தொடர்ச்சொற்கள் மூன்றும் வகை. தொடக்கத்தில் ஒன்று முதல் பத்திற்கும் நூறுக்குமே தனிச்சொற்கள் இருந்தன. பின்னர் மொழிகள் பிரிந்தபிறகு सहस्रम् போன்றன ஆயிரத்தைக் குறிக்க வந்தன.

இருபது, முப்பது, நாற்பது முதலியவற்றைக் குறிக்கும் பகுதியான $\hat{k}\underset{\circ}{m}t$, $\hat{k}omt$ என்பன $d\hat{k}\underset{\circ}{m}t$ $d\hat{k}omt$ என்பனவற்றின் விகாரமே ஆகும். உதாத்தஸ்வரமின்மையால் $d$ லோபித்தது எனல் வேண்டும். எண்ணுப்பெயர்கள் எவ்வாறு வந்தன என்பதும், தொடக்கத்தில் அவை எப்பொருளைக் குறித்தன என்பதும் தெளிவாய்க் கூற இயலவில்லை.

அவ்வெண்ணுப்பெயர் நான்கு வகையாக இருக்கலாம்: ஒன்று, இரண்டு போல்வன ஒருவகை: அவற்றைக் கார்டினல்[1] எண் என்பர்; ஒன்றாவது, இரண்டாவது போல்வன மற்றொரு வகை: அவற்றை ஆர்டினல்[2] எண் என்பர்; ஒருமுறை, இருமுறை போல்வது மூன்றாவது வகை: அவற்றை மல்டிப்ளிகேடிவ்[3] எண் என்பர்; ஒவ்வொன்றாக, ஈரிரண்டாக போல்வன நான்காவது வகை: அவற்றை டிஸ்டிரிப்யூடிவ்[4] எண் என்பர்.

### கார்டினல் எண்

ஒன்று:

| | | | |
|---|---|---|---|
| இ.யூ. | oi-no-s | வை. | एन[5] |
| ,, | oi̯-qo | ,, | एकः |
| ,, | sem, som, sm̥ | ,, | सकृत्, सम |

1. Cardinal number.
2. Ordinal number.
3. Multiplicative number.
4. Distributive number.
5. एनापत्यातन्वं १ संसृजस्व (ऋ. वे. 10, 85, 27)

இரண்டு :

இ. யூ. duuō(u) — வை. दुवा, दुवौ, द्वा, दुवे

,, duō(u)

,, duuoi (நபும்ஸகலிங்கம்)

द्विपद् இல் உள்ள இகாம் त्रिपद् இல் உள்ள இகாத்தின் அதிதேசத்தால் வந்தது எனல் வேண்டும்.

மூன்று :

இ.யூ. tri (புல்லிங்கமும் நபும்ஸகலிங்கமும்) — வை. त्रयः

,, त्री[1], त्रीणि[2]

,, tiser, tisr — ,, तिस्रः

त्रि இல் இகாம் ப்ரத்யயம் என்பது तृतीयः என்ற ரூபத்தால் விளங்கும்.

ஸ்திரீலிங்கத்தில் *tisr* என்பது *tri-sr* என்பதிலிருந்து வந்திருக்கும் எனவும், *sr* என்பது *sue-sor* என்றவிடத்துள்ள விகுதியே எனவும் சிலர் கருதுகின்றனர்.

நான்கு :

இ. யூ. qetuor-es (புல்லிங்கம்) — வை. चत्वारः[3]

,, qetuer (ஸ்திரீலிங்கம்) — ,, चतस्रः[4]

,, qetuōr-ə (நபும்ஸகலிங்கம்) — ,, चत्वारि[5]

1. महिषा त्री शतानि (*ibid* 5, 29, 7)
2. त्रीणि शता त्री सहस्राण्यग्निं त्रिंशच्च देवा न वचासपर्यन् (*ibid* 10, 52, 6)
3. चत्वार ईं विभ्रति क्षेमयन्तो दश गर्भं (*ibid* 5, 47, 4)
4. चतस्र ईं घृतदुहः सचन्ते (*ibid* 9, 89, 5)
5. चत्वारि ते असुर्याणि नामा (*ibid* 10, 53, 4)

ஐந்து :

இ.யூ. penqe வை पञ्च

ஆறு :

suek̂s கிரேக் zfeks

,, sek̂s வை. षष् லத்தீன் sex

,, uek̂s ஆர்மீனியன் மொழியில் இதற்குத் தக்கவாறு உள்ளது.

ஏழு :

,, septm̥ வை. सप्त

,, septom கிரேக் ebdomaxis

ருக்வேதத்தில்

सप्तसिन्धुषु (8, 24, 27), सप्तसिन्धून् (2, 12, 3),
त्रिः सप्त सस्रा नद्यः (10, 64, 8)

என்றவிடங்களில் सप्त என்பது வேற்றுமையுருபு ஏலாமையான் வேதத்தில் அது அவ்யயமாய் இருந்தது என்பர். ஆனால் ருக்வேதத்தில் सप्तानां सप्त ऋष्टयः போன்றவிடத்து सप्तानाम् என்ற ரூபம் காணப்படுகின்றமையாலும், यामन् (1, 85, 1) अपधा (2, 12, 3) போன்ற இடங்களில் வேற்றுமையுருபு லோபித்திருக்கின்றமையாலும், அவருடைய கூற்று பொருந்தாதென்க.

அவ்வாறே दश என்பதும் சிலவிடத்து உருபேற்றும் சிலவிடத்து உருபு ஏலாமையும் இருக்கும்.

दश ते कलशानाम् (ऋ. वे. 4, 32, 19)

दशानामेकम् (*ibid* 10, 27, 16)

सप्त என்பது பிற்காலத்தில் सप्त என்றாயிற்று.

எட்டு :

இ.யூ. oktō′ வை. अष्टा [1]
,, oktōu ,, अष्टौ [2]

**अशीतिः** என்றவிடத்து oktō-இன் தகாமில்லாமையின் அத்தகாம் ப்ரத்யயமாய் இருந்திருக்கலாம் என்பர்.

**अष्टासु** என்ற ரூபம் நேரிதாயிருக்க, **अष्टसु** என்ற ரூபம் **सप्तसु** போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் வந்தன எனக் கொள்ளல் வேண்டும்.

ஒன்பது :

இ.யூ. neun வை. **नव** [3] லத்தீன் novem
,, e′nun கிரேக் e′nen

லத்தீன்மொழியில் noven என்ற ரூபம் நேரிதாயிருக்க, novem என்பது septem, decem இவற்றின் அதிதேசத்தால் வந்தது என்பர்.

பத்து :

இ.யூ. dekm வை. **दश**

**दश** என்பதும் முன்னர் அவ்யயமாயிருந்தது என்பர். **दशानाम्** [4] போன்ற ரூபங்கள் வேதத்திற் காணப்படுகின்றமையால் அக்கூற்று பொருந்தாது.

1. अष्टा महो दिवः (ऋ. वे. 1, 121, 8)
2. अष्टौ व्यख्यत् ककुभः (*ibid* 1, 35, 8)
3. नव यदस्य नवतिं च भोगान् (*ibid* 5, 29, 6)
   नवानां नवतीनाम् (*ibid* 1, 191, 12)
4. दशानामेकम् (*ibid* 10, 27, 16)

பதினொன்று முதல் பத்தொன்பது வரையில் உள்ள எண்களில் பத்தைக் குறிக்கும் எண்ணும், ஒன்று இரண்டு முதலியவற்றைக் குறிக்கும் எண்ணும் தனியாய் உம்மையால் சேர்க்கப்பட்டுத் தாய்மொழியில் இருந்திருக்கலாம் எனவும் அதற்குச் சான்று एकं च यो विंशतिं च (ऋ. वे, 7, 18, 11) என்ற ருக்வேதத்தொடர் என்றும் கூறுவர்.

பதினொன்று முதல் பத்தொன்பது முடிய எண்கள் வைதிகமொழியில் மூன்று வகையாக உள்ளன.

பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று இவற்றில் ஒன்று, இரண்டு, மூன்று இவற்றைக் குறிக்குஞ் சொற்கள் உருபேற்று இருக்கின்றன.

एकादश, द्वादश[1], त्रयोदश

ஈண்டு द्वा, त्रयः இவ்விரண்டும் முதல்வேற்றுமையில் புல்லிங்கத்தில் இரண்டு மூன்றிற்கு உள்ள ரூபங்களே வந்தன. एकादश என்றவிடத்தில் ஸ்திரீலிங்கத்திற்கு உரிய ரூபம் வந்துள்ளது. இதற்குக் காரணம் யாது என அறிய முடியவில்லை.

பதினான்கு முதல் பதினெட்டு முடிய உள்ள எண்களில் நான்கு, ஐந்து முதலியவற்றைக் குறிக்கும் எண் உருபு ஏற்கவில்லை; ஆயினும் முதல்வேற்றுமையில் அவற்றிற்கு உரித்தான ரூபங்களையே அவை கொண்டன. அவற்றுள் षोडश என்பது எவ்வாறு வந்தது என்பது வைதிகமொழிக்கு முன்னருள்ள நிலையிலிருந்து அறிதல் கூடும். षष् என்பதனோடு दश என்பதைச் சேர்க்க षகாரத்தால் ड्, ड ஆக, डகாரத்தால் ष கோஷவத் ஆக, அதுவும் அதற்கு முன்னருள்ள அகாரமும்

1. द्वादश प्रधयश्चक्रमेकं त्रीणि नभ्यानि (ऋ. वे. 1, 164, 47)

ओ ஆக षोडश என்ற ரூபம் வந்தது. ஷகாரத்திற்கு ஒட்டிய கோஷவத்தான எழுத்து வைதிகமொழிநிலையில் இறந்தது எனக் கூறல் வேண்டும்.

பத்தொன்பது என்பது வைதிகமொழியில் एकोनविंशतिः, उनविंशतिः, एकान्नविंशतिः என வழங்குகின்றது. ஜர்மன் மொழியில் ains-min-zwainzich என்பது இவற்றோடு ஒப்ப நோக்கத்தக்கது.

இருபது, அறுபது, எழுபது, எண்பது, தொண்ணூறு என்பன ஒருவகையாகவும், முப்பது, நாற்பது, ஐம்பது இவை ஒருவகையாகவும் வைதிகமொழியில் இருக்கின்றன. அவை: विंशतिः[1], षष्टिः[2], सप्ततिः[3], अशीतिः[4], नवतिः[5], त्रिंशत्[6], चत्वारिंशत्[7], पञ्चाशत्[8] என்பன ஆகும்.

1. இ. யூ. uei-k̂m̥t-i; uei என்பது ui, uim, uin ஆகவும் நின்றது; uei என்பதற்கு ஆரம்பத்தில் இரண்டு என்பது பொருள். அது विश्व, विषु (இருபக்கத்திலும்) என்ற சொற்களின் वि ஒடும், उभौ-இல் உள்ள उ ஒடும் இயைபுபட்டதென்பர். *Cf.* विषु विश्वा अभियुजो वज्रिन् (ऋ.वे. 8, 45, 8) தொடக்கத்தில் विंशतिः ஆக இருந்து பின்னர் विंशतिः ஆயிற்று எனவுங் கூறுவர்.
2. ṣaṣ + k̂m̥t + i = ṣaṣ + k̂t + i = ṣaṣ + śt + i = ṣaṣṭi ; பின்னர் ṣaṣ என்பதனோடு ti சேர்க்கப்பட, ṣaṣṭi ஆயிற்று என்றனர்.
3. septm̥ + k̂m̥t + i = septm̥ + t + i = septati = सप्ततिः
4. oktō + k̂m̥t + i = ok̂ō + t + i = ok̂īti = अशीतिः
5. neun̥ + k̂m̥t + i = neun̥ + t + i = neun̥ti = नवतिः
6. tri + k̂m̥t = trim̐k̂m̥t = त्रिंशत्
7. qetuōr – ŏ + k̂m̥t = ketuōrŏm̐km̥t = चत्वारिंशत्
8. penqe + k̂m̥t = penqēk̂m̥t = पञ्चाशत्

   ஈண்டு k̂m̥t-இல் உள்ள k̂m̥, dek̂m̥-இன் ஏகதேசம் எனக் கொள்ளல் வேண்டும். de உதாத்தஸ்வரமின்றி லோபித்திருக்கவேண்டும்.

பின்னருள்ள வழக்குகள் கவனித்தற்கு உரியன :

(1) त्रिंशता हरीणाम्
(2) त्रिंशता हरिभिः
(3) पञ्चाशद्भिर्वाणैः

முதல்தொடரில் இரண்டு சொற்களும் வெவ்வேறு வேற்றுமையில் உள்ளன. இரண்டாந்தொடரில் இரண்டும் ஒரே வேற்றுமையில் இருப்பினும் ஒன்று ஒருமையிலும் மற்றொன்று பன்மையிலும் இருக்கின்றன. மூன்றாந்தொடரில் இரண்டும் ஒரே வேற்றுமையிலும் ஒரே வசனத்திலும் உள்ளன. மக்கள் தொடக்கத்தில் தொடர்களைப் பல்வகையாக வழங்கினர் என்றும் நாளடைவில் அவை ஒழுங்குபடுத்தப் பட்டன என்றும் கொண்ட கூற்றிற்கு இஃதும் ஒரு தக்க சான்று ஆகும்.

நூறு :

| | | | |
|---|---|---|---|
| இ.யூ. | k̂m̥to'-m | வை. | शतम् |
| லத்தீன் | centum | காத்திக் | hund |

शतम्, शतेन முதலியன பல்வகைப்பட்ட வேற்றுமை யுருபேற்ற சொற்களால் தொடரப்பட்டன.

शतं ते राजन् भिषजः (ऋ. वे. 1, 24, 9)
शतं न इंद ऊतिभिः सहस्रं वाशुचीनाम् (*ibid* 9, 52, 5)
शतेनानो अभिष्टिभिः (*ibid* 4, 46, 2)

இருநூறு :

द्वे शते, द्विशतम् இரண்டும் நேரிதான ரூபங்கள் ; द्विशती என்பது பின்னர் வந்த ரூபம்.

ஆயிரத்தைக் குறிக்கும் सहस्रम् என்பதற்குத் தக்கவாறுத் தாய்மொழியில் ĝheslo என்று இருந்திருக்கலாம் எனச் சிலர் கருதினும், பலர் அதற்கு உடன்படார்.

## ஆர்டினல் எண்

அனேகமாய் இண்டோயூரோபியன்மொழிகள் எல்லாவற்றிலும் கார்டினல் எண்ணிற்கு तमप् அர்த்தங் கொண்ட ப்ரத்யயத்தைச் சேர்க்க, ஆர்டினல் எண் உண்டாகும். அவை :

to, is-to, m̥-o, mo, tm̥-o, tm̥mo என்பன.

ஒன்றாவது :

Per தாதுவிற்கு u̯o, mo, tm̥mo, isto இவை சேர்க்கப்பட, தனிமொழிகளில் ஒன்றாவது என்ற பொருள் கொண்ட ரூபம் வந்தன.

u̯o, tm̥mo இவை வைதிகமொழியில் व, तम என்று ஆகும்.

உ-ம். पूर्वः, प्रथमः,
mo, isto :-ஆங்கிலோஸாக்ஸன்[1] : forma, fyrst.

இரண்டாவது :

இங்கு மாத்திரம் तरप् அர்த்தங் கொண்ட ப்ரத்யயமே சேர்க்கப்படுகிறது.

வை. द्वितीयः, கிரேக் deúteros, லத்தீன் secundus.

மூன்றாவது :

வை. तृतीयः, கிரேக் tritos, லத்தீன் tertius.

நான்காவது :

இ. யூ. qetur̯tós, வை. चतुर्थः, तुरीयः,[2] तुर्यः

1. Anglo-saxon.
2. तुरीयमिद्रोहितस्य पाकस्थामानं भोजं दातारमब्रवम् (ऋ. वे. 8, 3, 24)

ஐந்தாவது :

இ. யூ. peṅq-tós, வை. पञ्चथः

पञ्चमः என்பது सप्तमः என்பதன் அதிதேசத்தால் வந்தது எனக் கொள்ளல் வேண்டும். அது வைதிகமொழியிலேயே வந்தது.

ஆறாவது :

இ. யூ. suek̂-to-s, வை. षष्ठः லத்தீன் sextus.

ஏழாவது :

இ. யூ. septmó, septm̥-tò } வை. सप्तमः, सप्तथः } லத்தீன் septimus

எட்டாவது :

இ. யூ. ok̂tōu̯-o, வை. अष्टमः, லத்தீன் octāvos.

ஒன்பதாவது :

இ. யூ. neun̥n̥-ó, neun̥-tó } வை. नवमः

नवनः என்பது நேரிதான ரூபமாயிருக்க, नवमः என்பது सप्तमः என்பதன் அதிதேசத்தால் வந்தது என்பர்.

பத்தாவது :

இ. யூ. dek̂m̥-tós, dek̂m̥m-o } வை. दशमः, லத்தீன் decimus.

பதினொன்றாவது முதல் பத்தொன்பதாவது முடிய வைதிக மொழியில் முன்னரெண் கார்டினல் ஆகவும், பின்னரெண் ஆர்டினல் ஆகவும் இருக்கின்றன. அவ்வாறே லத்தீனிலும்

உள்ளது. ஆனால் லத்தீனில் இரண்டும் ஆர்டினல் ஆகவும் இருக்கின்றன.

உ-ம். வை. एकादशः, द्वादशः அல்லது द्वादशमः
லத்தீன் duo-decimus, quartus-decimus.

இவ்வெண்கள் தைத்திரீயாரண்யகத்தில் ஓரிடத்துத் தொகுத்துக் கூறப்பட்டன.[1]

## மல்டிப்ளிகேடிவ் எண்

இருமுறை:

| | | |
|---|---|---|
| இ. யூ. dui-s / duui-s | வை. द्विः[2] / दुविः | லத்தீன் bis<br>ஆங்கிலம் twice |

1. देवा देवेषु श्रयध्वम् । प्रथमा द्वितीयेषु श्रयध्वम् । द्वितीयास्तृतीयेषु श्रयध्वम् । तृतीयाश्चतुर्थेषु श्रयध्वम् । चतुर्थाः पञ्चमेषु श्रयध्वम् । पञ्चमाष्षष्ठेषु श्रयध्वम् । षष्ठास्सप्तमेषु श्रयध्वम् । सप्तमा अष्टमेषु श्रयध्वम् । अष्टमा नवमेषु श्रयध्वम् । नवमा दशमेषु श्रयध्वम् । दशमा एकादशेषु श्रयध्वम् । एकादशा द्वादशेषु श्रयध्वम् । द्वादशास्त्रयोदशेषु श्रयध्वम् । त्रयोदशाश्चतुर्दशेषु श्रयध्वम् । चतुर्दशाः पञ्चदशेषु श्रयध्वम् । पञ्चदशाष्षोडशेषु श्रयध्वम् । षोडशास्सप्तदशेषु श्रयध्वम् । सप्तदशा अष्टादशेषु श्रयध्वम् । अष्टादशा एकान्नविंशेषु श्रयध्वम् । एकान्नविंशा विंशेषु श्रयध्वम् । ...... देवास्त्रिरेकादशास्त्रिस्त्रयस्त्रिंशाः । (2, 2)
2. द्विर्मीधाः (तै. सं. 2, 4, 40)

மும்முறை :

இ. யூ. tris வை. त्रिः [1] ஆங்கிலம் thrice

ஒருமுறை, நான்குமுறை முதலிய எண்களைக் குறிக்க, ஒவ்வொரு மொழியிலும் வெவ்வேறு வகையாக எண்கள் இருக்கின்றன.

ஒருமுறை :

வை. सकृत् [2] லத்தீன் sem-el

நான்குமுறை :

வை. चतुः, चतुष्कृत्वः [3] லத்தீன் quarter

ஐந்துமுறை, ஆறுமுறை இவை போன்றவை கார்டினல் எண்ணோடு कृत्वः என்ற ப்ரத்யயம் சேர உண்டாகும்.

உ-ம். पञ्चकृत्वः [4]

एकवारम् போன்ற ரூபங்கள் இதிஹாஸமொழியில் மிகுதியாய்க் காணப்படுகின்றது. विश्ववारम् [5] போன்ற ரூபங்கள் வைதிகமொழியிலே காணப்படுகின்றது.

## டிஸ்டிரிப்யூடிவ் எண்

பண்டைய காலத்தில் டிஸ்டிரிப்யூடிவ் எண்ணை ஆக்கக் கார்டினல் எண்ணை இரட்டித்தனர்.

உ-ம். पञ्चपञ्च [6], एकैकः [7], पूर्वस्पूर्वः, पूर्वपूर्वः

1. त्रिर्नो रयिं वहतमश्विना (ऋ. वे. 1, 34, 5)
2. सकृद्धामिरजायत (*ibid* 6, 48, 22)
3. चतुष्कृत्वोऽह्वयत् (तै. ब्रा. 2, 3, 23) ; चतुस्ते नमः (तै. आ. 4, 6, 9)
4. पञ्चकृत्वोऽह्वयत् (*ibid* 2, 3, 24)
5. आयं होता यजति विश्ववारम् (ऋ. वे. 7, 7, 4)
6. षोह्ळा युक्ताः पंच पंचा वहन्ति (*ibid* 3, 55, 18)
   एकमेकं सुशस्तिभिः (*ibid* 1, 20, 7)
7. एकैको वै जनतायामिन्द्रः (तै. ब्रा. 1, 4, 32)

கார்டினல் எண்ணிற்கு शस् என்ற ப்ரத்யயம் சேர்த்தும் டிஸ்டிரிப்யூடிவ் எண்கள் ஆக்கப்பட்டன.

உ-ம். एकशः, द्विशः

ப்ராக்ருதமொழி

இந்நிலையில் எண்ணுப்பெயர்கள் சிறிது மாறுபாட்டுடன் காணப்படும்.

द्वौ என்பதற்கு दो என்ற ஆதேசம் வந்து முதலிரண்டு வேற்றுமைகளில் दो, दुवे[1], दोणि என்ற ரூபங்களையும், மூன்று, ஐந்து இவ்வேற்றுமைகளில் दोहिं என்ற ரூபத்தையும், ஆறும் வேற்றுமையில் दोण्हं என்ற ரூபத்தையும், ஏழாம்வேற்றுமையில் दोसु என்ற ரூபத்தையும் பெறும்.

त्रि என்பது ति என்ற ஆதேசம் பெற்று, முதலிரண்டு வேற்றுமைகளில் तिणि என்ற ரூபத்தையும், மூன்று ஐந்து வேற்றுமைகளில் तीहिं என்ற ரூபத்தையும், ஆறும்வேற்றுமையில் तिण्हं என்ற ரூபத்தையும், ஏழாம்வேற்றுமையில் तीसु என்ற ரூபத்தையும் பெறும்.

चत्वारः, चत्वारि என்பன முதலிரண்டு வேற்றுமைகளிலும் चत्तारो चत्तारि என்ற ரூபங்களையும், மூன்று ஐந்து வேற்றுமைகளில் चअउहिं என்ற ரூபத்தையும், ஆறும்வேற்றுமையில் चअउण्हं என்ற ரூபத்தையும், ஏழாம்வேற்றுமையில் चअउसु என்ற ரூபத்தையும் பெறும்.

पञ्च என்பது மூன்று ஐந்து வேற்றுமைகளில் पञ्चहिं என்ற ரூபத்தையும், ஆறும்வேற்றுமையில் पञ्चण्हं पञ्चाणं[2] என்ற ரூபங்களையும், ஏழாம்வேற்றுமையில் पञ्चसु என்ற ரூபத்தையும் பெறும்.

1. दुवे (द्वौ) वि पेक्खअा जादा (वेणी॰ 4, 9—)
2. पञ्चाणं (पञ्चानाम्) वि आह्मणं मज्झे (वेणी॰ 6, 12—)

வடமாகாணமொழிநிலை

| | | ஹிந்தி | மராட்டி |
|---|---|---|---|
| ஒன்று | — | एक | एक |
| இரண்டு | — | दो | दोन |
| மூன்று | — | तीन | तीन |
| நான்கு | — | चार | चार |
| ஐந்து | — | पांच | पांच |
| ஆறு | — | छः | सहा அல்லது साहा |
| ஏழு | — | सात | सात |
| எட்டு | — | आठ् | आठ |
| ஒன்பது | — | नौ | नऊ |
| பத்து | — | दस | दहा |
| நூறு | — | सौ | शंभर |
| ஒன்றாவது | — | पहला | पहिला |
| இரண்டாவது | — | दूसरा | दुसरा |
| மூன்றாவது | — | तीसरा | तिसरा |
| நான்காவது | — | चौथा | चौथा |
| ஐந்தாவது | — | पांचवाँ | पांचवा |
| ஒருமுறை | — | एकबार | एकपट |
| இருமுறை | — | दोवार | दुपट |
| மும்முறை | — | तीनबार | तिपट |
| நான்குமுறை | — | चारबार | चौपठ |
| ஐம்முறை | — | पांचबार | पांचपट |
| ஒவ்வொன்றாய் | — | हरएक<br>एकाएक | प्रत्येक<br>एकएकास |

ஸர்வநாமசப்தங்கள்

உற்பத்தி: பெயர்களுக்கு முன்னரே ஸர்வநாமசப்தங்கள் தோன்றியிருக்கவேண்டும் என ப்ரீல்[1] கூறுவர். அதற்கு அவர் கூறுங் காரணங்கள் ஆவன: (1) தன்னையும், முன்னின்றானையும்,

1. M. Breal — Semantics pp. 187–8

அயலானையும் கையாற் சுட்டிக்காட்டிக் கூறுதல் மக்கட்கு இயற்கை. ஆகலின் கைச்சைகையால் அவை முன்னர்க் குறிக்கப்பட, பின்னர் அவற்றை விளக்க மொழிகள் வந்திருத்தல் வேண்டும். (2) ஒவ்வொரு பெயர்க்கும் எவ்வாறு தனித் தனியாய் வேற்றுமைகளில் ரூபங்கள் வேண்டுமோ, அவ்வாறு ஸர்வநாமாக்களில் வேண்டுவதில்லை ; ஏனெனில் கூறுவோ னெல்லாம் தன்மைப்பெயராற் குறிக்கப்படுவான் ; முன்னிலையில் உள்ளோனெல்லாம் முன்னிலைப்பெயராற் குறிக்கப்படுவான் ; அயலானெல்லாம் படர்க்கைப்பெயராற் குறிக்கப்படுவான்.

ஆனால் குழந்தைகள் பேசத் தொடங்கும்போது தன்னையும் முன்னின்றானையும், அயல்நின்றானையும் தன்மைப்பெயரானும், முன்னிலைப்பெயரானும், படர்க்கைப்பெயரானுங் குறிக்காது அவரவரது இயற்பெயராலேயே குறிக்கின்றன. இதனை நோக்கின் ப்ரீலின் கூற்று பொருந்துமா என்ற ஐயம் உண்டாகின்றது. அன்றியும் இயற்பெயரையே திருப்பித் திருப்பிச் சொல்வதில் மக்கட்கு வெறுப்பு உண்டாகி அதற்குப் பிரதியாக குறுகிய பெயரை வழங்கியிருத்தலும் இயற்கை யாகலாம். ஸர்வநாம, ப்ரோநௌன் [1] என அவற்றிற்கு குறி இட்ட ஆசிரியர்களுக்கும் இதுதான் கருத்து எனக் கூறல் தகும்.

மொழிகளில் வினைவிகுதிகளுக்கும் ஸர்வநாமசப்தங்களின் பகுதிகளுக்கும் ஒற்றுமையிருத்தலின், கூறுவோனின் முழுக் கருத்தைக் குறிக்கும் வாக்கியம், பெயர் வினை இவைகளாகப் பிரிக்கப்பட்டபின்னர் வினைவிகுதிகளின் ஏகதேசத்தையே மக்கள் தாம் அறியாது ஸர்வநாமங்களாய் வழங்கியிருப்பாரோ என்பதும் ஆராய்தற்குரியது.

வகை : ஸர்வநாமசப்தங்களை லிங்கத்தைப் பிரித்துக் காட்டும் ஸர்வநாமங்கள் [2] என்றும், லிங்கத்தைப் பிரித்துக் காட்டாத ஸர்வநாமங்கள் [3] என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். முற்

1. Pronoun = 'பெயர்க்குப் பிரதியாக வருவது' என்பது இச்சொல்லின் பொருள்.
2. Pronoun with distinguishable gender.
3. Pronoun without distinguishable gender.

கூற்றில் படர்க்கைச்சுட்டுப்பெயர் [1], வினாப்பெயர் [2], சுட்டெதிர் பெயர் [3], தெளிக்குறிப்பில்பெயர் [4] இவை வரும்; பிற்கூற்றில் தன்மைப்பெயர் [5], முன்னிலைப்பெயர் [6], தன்னைத்தான்குறிபெயர் [7], உடைமைப்பெயர் [8] இவை வரும்.

இண்டோயூரோபீயன்மொழிநிலை: இந்நிலையில் ஸர்வநாம-சப்தங்கள் இருந்திருக்கவேண்டும் என்றாலும், எவை அப்போது இருந்தன எனக் கூறுதற்குப் போதிய சான்று இல்லை. அன்றியும் அந்நிலையிலேயே ஒவ்வொரு வேற்றுமையிலும் உதாத்தஸ்வரங் கொண்ட ரூபமும், ஸர்வாநுதாத்தமான ரூபமும் இருந்தன என்பதும், அவற்றுள் சிலவற்றைச் சிலமொழிகளும் வேறு சிலவற்றைப் பிறமொழிகளும் கொண்டன என்பதும், அதன்பிறகு தனிமொழிகள் ஸ்வரங்கொண்டனவற்றை ஸ்வரமில்லாதனவாகச் செய்து புதிய ரூபங்களை ஆக்கிக் கொண்டன என்பதும் அறியப்படுகின்றமையால், பின்னருள்ள ரூபங்கள் எவை இண்டோயூரோபீயன்மொழிநிலையில் இருந்தன எனத் துணிவாய்க் கூற இயலவில்லை. உதாரணமாக, உதாத்தமாயிருந்த mē, tuē, nōs, vōs என்பன வைதிகமொழிநிலையில் அநுதாத்தமாகிய मा, त्वा, नः, वः என மாறி, உதாத்தம் பெற்ற माम्, त्वाम्, अस्मान्, युष्मान् என்னும் புதிய ரூபங்கள் தோன்றின; nōs, vōs என்பன பழையநிலையில் உள்ளபடியே லத்தீன் மொழியில் வழங்கப்படுகின்றன. தன்மைப்பெயரிலும், முன்னிலைப்பெயரிலும், தன்னைத்தான்குறிபெயரிலும் பலமொழிகளில் ஒற்றுமை இருத்தலின், இண்டோயூரோபீயன்மொழிநிலையில் அவை எவ்வாறு இருந்தன என ஊகிக்கலாமேயன்றி, ஏனைய ஸர்வநாமங்களின் ரூபத்தைக் கூற இயலாது.

1. Demonstrative pronoun.
2. Interrogative pronoun.
3. Relative pronoun.
4. Indefinite pronoun.
5. First personal pronoun.
6. Second personal pronoun.
7. Reflexive prououn.
8. Possessive pronoun.

படர்க்கைச்சுட்டுப்பெயரின் பகுதிகள்: இவை பல்வகைப் பட்டன. அவை (1) स, सा, त, ता. உ-ம். स [1], सः; सा; तस्मात्; ताभ्याम्; स, सा இவ்விரண்டும் புல்லிங்கம் ஸ்திரீலிங்கம் முதல் வேற்றுமையொருமையிலே வழங்கப்பட்டன; ஆனால் சிலவிடத்து வேறு வேற்றுமையிலும் உள்ளது.

*Cf.* सस्मिन्—तस्मिन्

(2) स्य, स्या. உ-ம். स्यः, स्या.

(3) अ, आ. உ-ம். असौ, आभ्यः.

(4) एष, एषा, एत, एता. இண்டோயூரோபியன்மொழியில் இங்கு என்ற பொருளைக் கொண்ட eì என்பதற்கு so, sā, to, tā இவற்றைச் சேர்க்க, eiso, eisā, eito, eitā என்ற ரூபங்கள் வர, அவை வைதிகமொழியில் एष, एषा, एत, एता ஆயின என்பர்.

(5) अन, अना. இவற்றிற்கு ஸமானமாய்த் தாய்மொழியில் *eno, ono, enā, onā* இருந்திருக்கலாம் என்பர்.

உ-ம். अनेन, अनया.

(6) इद्, इम्. உ-ம். इदम्, इमौ. இண்டோயூரோபியன் மொழியில் *i* என்பதற்கு *d* சேர்த்து *id* ஆயிருக்கலாம் என்பர்.

1. स इन्महानि समिथानि (ऋ. वे. 1, 55, 5)

एष शम्भुः, सशम्भुः என்றவிடத்து விஸர்க்கம் லோபிக்கின்றது என்றனர் பாணினியாசிரியர். एतत्तदोः सुलोपो अको अनञ्समासे हलि (पा.अ. 6, 1, 32). ஆனால் एषः, सः என்பவை போன்று एष, स என்ற ரூபங்களும் இருந்தன என்பதை அவை அறிவிக்கின்றன என்பர் மொழிநூல்வல்லோர்.

(7) इयम्—இது தாய்மொழியில் $\hat{i} + am$ ஆக இருந்திருக்கலாம் என்பர்.

(8) अयम्—இது தாய்மொழியில் $o\hat{i} + am$ ஆக இருந்திருக்கலாம்.

சுட்டெதிர்பெயரின் பகுதி: यः या. இவை தாய்மொழியில் $\hat{i}o$, $\hat{i}\bar{a}$ ஆக இருந்தன.

வினாப்பெயரின் பகுதி: क, कि, कु. உ-ம். कः, किम्, माकिः[1], नकिः[2], क[3]; தாய்மொழியில் இவை $qo$, $qi$, $qu$ ஆகும்.

இப்பகுதிகள் உதாத்தஸ்வரம் பெறும்; அவையே அதனைப் பெறுவிட்டால், தெளிக்குறிப்பில்பெயர்ப்பகுதி ஆகும்[4].

உ-ம். कश्चित्[5], कश्चन[6], कस्य[7], किञ्चित्, किञ्च[8], कुतश्चित्[9].

1. माकिर्नेशन् (ऋ. वे. 4, 4, 3)
2. नकिरेवायथात्वं (*ibid* 4, 30, 1)
   माकिः, नकिः என்பவற்றுள் क् இகரத்தால் தொடரப்படினும் च् ஆக மாறாது क् ஆகவே இருக்கின்றது. चिद् என்றவிடத்து மாறியிருக்கின்றது.
3. क्वेदानीं सूर्यः (*ibid* 1, 35, 7)
4. ஆனால் ஆங்கிலம்போன்ற மொழிகளில் வினாப்பெயர்களே (**who, which**) சுட்டெதிர்பெயராகவும் வழங்கப்படுகின்றன. சுட்டெதிர்பெயர்கொண்ட வாக்கியம் வினாவாகவும், முடிவுபெறும் வாக்கியம் இதற்கு விடையாகவும் இருக்கக் கூடுமாகலான், பல மொழிகளில் சுட்டெதிர்பெயரும் வினாப் பெயரும் ஒன்றாக இருக்கின்றன என ப்ரீல் கூறினர். (Breal Semantics pp. 207, 8)
5. कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षत् (कठोप. 4, 2)
6. न चक्षुषा पश्यति कश्चनैनम् (*ibid* 6, 9)
7. मा गृधः कस्य स्विद्धनम् (ईशावा. 1)
8. यत्किञ्च जगत्यां (*ibid* 1)
9. नायं कुतश्चित् (कठोप. 2, 18)

सम என்பதும் தெளிக்குறிப்பில் பெயருள் அடங்கும்.

மேற்கூறப்பட்ட ஸர்வநாமங்கள் வேற்றுமையுருபினை ஏற்பதில் பெரும்பாலும் ஒற்றுமைப்பட்டன.

ஒருமை

முதல்வேற்றுமை: புல்லிங்கத்தில் स, सः, एष, एषः, अयम्, असौ, यः, कः என்பனவும், ஸ்திரீலிங்கத்தில் सा, एषा, इयम्, असौ, या, का, என்பனவும், நபும்ஸகத்தில் முதலிரண்டு வேற்றுமைகளிலும் तद्, एतद्, इदम्, अदः, यद्, किम् என்பனவும் ரூபங்களாம். किम् என்பது हरिम् போன்ற பெயர்களின் ஒற்றுமைப்போலியால் வந்தது.

இரண்டாம்வேற்றுமை: புல்லிங்கத்தில் तम्, एतम्, एनम्, इमम्, एनम्, अमुम्, यम्, कम् என்பனவும், ஸ்திரீலிங்கத்தில் ताम्, एताम्, एनाम्, इमाम्, एनाम्, अमूम्, याम्, काम् என்பனவும் ரூபங்களாம். एतद् ப்ராதிபதிகத்தின் அந்வாதேசங்களாகிய एनम्, एनाम् என்பனவே इदम् ப்ராதிபதிகத்தின் அந்வாதேசங்களாகக் கொள்ளப்பட்டன.

மூன்றும்வேற்றுமை: புல்லிங்கநபும்ஸகலிங்கங்களில் உருபு न; அப்போது இறுதி அகரம் ए-காரம் ஆகும். तेन[1], एतेन, एनेन, अनेन, एनेन, येन, केन. अदस् ப்ராதிபதிகம் மாத்திரம் ना உருபு ஏற்கும். चन, हिन போன்ற நிபாதங்களில் உள்ள இறுதி நகாரம் இவ்வுருபே என்பர்.

ஸ்திரீலிங்கத்தில் உருபு या; அப்போது ப்ராதிபதிகத்தின் ஈற்றெழுத்து குறுகும். तया, एतया, एनया, अनया, एनया, अमुया, यया, कया.

ईदृशः, ईम् இவற்றிலுள்ள ई, इ ப்ராதிபதிகத்தின் மூன்றும் வேற்றுமைரூபமாயிருக்கலாம் என்பர்.

1. இந்த ரூபங்களின் அதிதேசத்தாலே பெயர்களின் அகாராந்த ப்ராதிபதிகம் இவ்வுருபு ஏற்கின்றது. *Cf.* देवेन.

நான்காம்வேற்றுமை : புல்லிங்கநபும்ஸகலிங்கங்களில் ப்ராதிபதிகத்திற்கும் வேற்றுமையுருபாகிய ஏ-க்கும் இடையில் स्म-உம், ஸ்திரீலிங்கத்தில் स्य-உம் சேர்க்கப்படுகின்றன. உறுதிப்பொருளைக்கொண்ட நிபாதமாகிய स्म-உம், இங்கு வரும் स्म-உம் ஒன்று எனவும், முன்னர் युष्माकं स्म[1] போன்ற விடத்தில் அது காணப்படுகின்றது எனவும் மொழிநூல்வல்லோர் கூறுவர். अमुष्मात् என்ற பொருளில் अमात्[2] என்ற ரூபம் ருக்வேதத்திற் காணப்படுகின்றமையால் अमुष्मै, अमुष्यै என்ற ரூபங்கள் அதிதேசத்தால் வந்தது என்பர்.

ஐந்தாம்வேற்றுமை : ஈண்டும் அவ்வாறே स्म, स्य சேர்க்கப்படும். तस्मात्[3]...... ; तस्यै...... முன்னர்க் கூறப்பட்ட காரணத்தாலே अमुष्मात्, अमुष्याः என்பன பின்னர் வந்த ரூபங்கள் என்பர்.

ஆறும்வேற்றுமை : புல்லிங்கநபும்ஸகலிங்கங்களில் तस्य போன்ற ரூபங்களும், ஸ்திரீலிங்கத்தில் तस्याः போன்ற ரூபங்களும் இருக்கின்றன. நான்கு ஐந்து வேற்றுமைகளிற்போல் ஈண்டும் ஸ்திரீலிங்கத்தில் ப்ராதிபதிகத்திற்கும் வேற்றுமையுருபிற்கும் இடையில் स्य சேர்க்கப்பட்டது என்று கொள்ளலாம். அவ்வாறாயின் तस्य என்ற ரூபம் எவ்வாறு வந்தது என அறிதல் வேண்டும். ஏழாம்வேற்றுமையில் போன்று வேதங்களில் ஆறும்வேற்றுமையிலும் வேற்றுமையுருபு மறைந்திருக்க, அதனை நோக்காது तस्य என்பதையே வேற்றுமையுருபேற்றதாக மயங்கியிருத்தல் கூடும்; அவ்வாறாயின் तस्म என அன்றே

1. युष्माकं स्मारथाँ अनुमुदे दधे मरुतो जीरदानवः (ऋ. वे. 5 53, 5)

2. आन्तरिक्षादमादुत (*ibid* 5, 53, 8)

3. இந்த ரூபங்களின் அதிதேசத்தால்தான் देवात् என்ற ரூபம் வந்தது.

இருத்தல் வேண்டும் எனின், ஸ்திரீலிங்கரூபம் மயக்கத்தால் வழங்கப்பட்டிருத்தல் கூடும்; அல்லது ஸகரம் யகரமாக மயங்கி ஒலிக்கப்பட்டிருத்தல் கூடும்; तस्य என்ற புல்லிங்கரூபத்தின் மேல் விகுதிசேர்க்கப்பட்டு तस्याः என்ற ரூபம் வந்தது என்பர் மொழிநூல்வல்லோர். அது எனக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை.

ஏழாம்வேற்றுமை : புல்லிங்கநபும்ஸகலிங்கங்களில் स्म-உம், ஸ்திரீலிங்கத்தில் स्य-உம் ப்ராதிபதிகத்திற்கும் உருபிற்கும் இடையில் சேர்க்கப்படுகின்றன. அவற்றிற்கு வேற்றுமை யுருபுகள் முறையே इन्, आम् என்பன. इन् என்பதற்கு முன்னர் स्म-இன் அகாரம் லோபிக்கும்.

## இருமை

பெயரில் இருமையில் உள்ள உருபுகளே ஈண்டும் உள்ளன

## பன்மை

முதல்வேற்றுமை : இவ்வேற்றுமைப்புல்லிங்கவுருபு ई. அது ப்ராதிபதிகத்தின் ஈற்றகரத்தோடு சேர்ந்து ए ஆகும். अदस् ப்ராதிபதிகத்தில் अम इன் அகரம் லோபிக்க, अमी என்ற ரூபம் வரும்.[1] ஸ்திரீலிங்கத்தில் பெயரிற் போன்று உருபு अस्-ஏ ஆகும். अदस् ப்ராதிபதிகத்திலிருந்து अमूः என்ற ரூபம் உண்டாகின்றது. நபும்ஸகலிங்கத்தில் ता போன்ற ரூபமும் பின்னர் तानि போன்ற ரூபமும் உண்டு.

இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஏழாம்வேற்றுமைகள் : இவ்வேற்றுமைகளில் ஸர்வநாமரூபங்களுக்கும் பெயர்ரூபங்

1. தாய்மொழியில் o இல் முடியும் ப்ராதிபதிகம் oi இல் முடியு மென்றும் अमी இல் இருக்கும் ஈகாரத்திற்குக் காரணம் கூற முடியவில்லை என்றும் மொழிநூல்வல்லோர் கூறினர்.

களுக்கும் மாறுபாடு இல்லை. अदस् ப்ராதிபதிகத்திலிருந்து மாத்திரம் अमीभिः, अमीभ्यः, अमीषु என்ற ரூபங்கள் காணப் படுகின்றன.[1]

ஆறும்வேற்றுமை : ப்ராதிபதிகத்திற்கும் வேற்றுமையுரு பிற்கும் இடையில் स् தோன்றும். अमूषाम् என்பது அதிதேசத் தால் வந்த ரூபம் ஆகும்.

## தன்மை-முன்னிலைப்பெயர்களின் விசேஷங்கள்

(1) தன்மை-முன்னிலைப்பெயர்களில் ஒவ்வொன்றின் ரூபங்களும் ஒன்றுக்கொன்று இயைபுபடாத வெவ்வேறு ப்ராதி பதிகங்களிலிருந்து வந்தன.

உ-ம். अहम्, माम्, वयम्, अस्मान्[2]
त्वम्, यूयम्, युष्मान्[3]

ஒருமைரூபங்களின் ப்ராதிபதிகமும் பன்மைரூபங்களின் ப்ராதிபதிகமும் ஒன்றுக்கொன்று வேறுபடுதற்கு ஒரு காரணம் கூறலாம். தன்மைப்பெயர் பேசுவோனையே குறிக்கும். ஏக காலத்தில் ஒருவன்தான் ஓரிடத்தில் பேசக்கூடுமாகலான், தன் மைப்பெயர் என்பது உண்மையாய் ஒருமைக்குத் தான் பொருந் தும். ஆயினும் தன்னையும் முன்நின்றானையும் உளப்படுத்தியும், தன்னையும் அயலானையும் உளப்படுத்தியும், தன்னையும் முன் நின்றானையும் அயலானையும் உளப்படுத்தியும் ஒருவன் பேசுவது உலகவழக்காயிருக்கின்றது. பேசுவோன் ஒருவனாய் இருப்

1. தாய்மொழியில் மூன்று நான்கு ஐந்தாம்வேற்றுமைகளில் *o* இல் முடிந்த ப்ராதிபதிகம் பெயராயின் *o* இலும், ஸர்வநாமமாயின் *oi* இலும் முடிந்தன என்றும், அவ் வேறுபாடு வைதிகமொழியில் இல்லை என்றுங் கூறுவர் மொழிநூல்வல்லோர்.
2. *Cf.* ஆங்கிலம் I, me, we, us.
3. *Cf.* ஆங்கிலம் Thou, you.

பினும் பலரைக் குறிக்கின்றமையால், அது பன்மைப்பெயராய் இருக்கவேண்டியுள்ளது. அவ்வாறுள்ள பெயரைத் தன்மைப் பன்மை என்கின்றனர். ஒருமைக்கும் பன்மைக்கும் உள்ள இந்த பேதத்தை நோக்கி அவற்றைக் குறிக்குஞ் சொற்கள் வெவ்வேறு ப்ராதிபதிகத்தினின்றும் வந்தன எனக் கூறலாம். அவ்வாறே பேசுவோன் ஓரிடத்தில் ஏககாலத்தில் ஒருவனையே நோக்கிப் பேசமுடியும். இருப்பினும் முன்நின்றானையும் அயலாரையும் உளப்படுத்திப் பேசுதல் வழக்கமாயிருக்கிறது. இந்த மாறுபாட்டினை நோக்கி முன்னிலைப்பெயரின் ஒருமை ரூபங்களும் பன்மைரூபங்களும் வெவ்வேறு ப்ராதிபதிகங்களினின்று வந்திருத்தல் கூடும். தன்மைப்பெயரைப் பற்றிய இக் கருத்தை ரைட் தனது நூலிற் கூறுவர்.

(2) பல ரூபங்கள் வேற்றுமையுருபேற்ற சொற்கள் இல்லை உ-ம். मे (இ. யூ. *mo-i*)

(3) ஒரே ரூபம் பல வேற்றுமைப்பொருள்களைக் கொண்டன. உ-ம். मे, ते, नौ, वाम्.

(4) பன்மையில் பல ரூபங்கள் ஒருமையுருபினை ஏற்றும் ஒருமைரூபங் கொண்டும் இருக்கின்றன. உ-ம். अस्मत्, युष्मत्, अस्माकम्, युष्माकम्.

(5) சில ரூபங்கள் புல்லிங்கப்பெயரின் உருபினையும் சில ஸ்திரீலிங்கப்பெயரின் உருபினையும் கொண்டன.

உ-ம். अस्मान्, युष्मान्, मया, त्वया, अस्माभिः, युष्माभिः, अस्मासु, युष्मासु. அவற்றை வழங்குவோர் அவற்றிலுள்ள லிங்கவேற்றுமையைக் கருதுவதில்லை.

(6) பொதுவாக முதல்வேற்றுமைரூபங்களை வழங்குவது இல்லை; ஏனெனில், அவற்றின் பொருள் முற்றுவினையின் விகுதியாலே அறியப்படுகின்றது.

(7) சில ரூபங்களில் சில விகுதிகள் சேர்க்கப்பட்டுள்ளன; அவை ஏன் சேர்க்கப்பட்டன என்பதும் எப்பொருளில் சேர்க்

*கப்பட்டன என்பதும் அறிய இயலவில்லை. உ-ம். अहम्*[1], *वयम्*[2], *त्वम्*[3], *यूयम्*[4] *என்பவற்றின் இறுதியில் உள்ள अम् பின்னர்ச் சேர்க்கப்பட்டிருத்தல் கூடும்.*

தன்மைப்பெயர் : (வைதிகமொழிநிலை)

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| மு. வே. | अहम्[5] | आवम्[6] | वयम्[7] |

1. இ. யூ. *eghō, egho*, லத்தீன் *ego*.
2. ,, *uei*. Eng. *we*.
3. ,, *tu, tū*. Old Eng. *þū*. Modern Eng. *thou*
4. ,, *iū-s*. Eng *you*.
5. *தாய்மொழியில் இதற்கு மூலபூதமான ரூபத்தைப் பார்த்தால் ஈற்றில்* अम् *சேர்க்கப்பட்ட சொற்களுள் இதுவும் ஒன்று ஆகும். இதன் ப்ரகிருதி பின்னருள்ள வேற்றுமைகளின் ப்ரகிருதியிலிருந்து வேறுபட்ட தாலும், அவற்றின் ப்ரகிருதி தன்மையொருமைவினையின் விகுதியோடு ஒன்றுபட்டிருப்ப தாலும், இதன் பொருள் முற்றுவினையின் விகுதியாற் கூறப்பட்டிருத்தலாலும், இந்த ரூபம் அவ்வேற்றுமை ரூபங்களின் பின்னர் மொழியில் வந்திருக்கலாம்.*

   *Cf.* ह्वयाम्यग्निम् (ऋ. वे. 1, 35, 1)

   अहमिन्द्रः (*ibid* 10, 48, 5)
6. आवम् *என்பது வைதிகமொழிநிலையில் உள்ள ரூபம்*

   प्रहारावमन्तरस्स्वः (तै. सं. 2, 5, 10, 1)

   *Cf.* प्रथमायाश्च द्विवचने भाषायाम् (पा. अ. 7, 2, 83)

   இதிஹாஸமொழியில் आवम् *இறந்தது என்பதும், இரண்டாம் வேற்றுமைரூபமாகிய* आवाम् *ஏ முதல்வேற்றுமையிலும் வந்தது என்பதும் அஷ்டாத்யாயீஸூத்திரத்தாலும் பிற்காலவழக்காலும் அறியக்கிடக்கின்றன.*
7. वयम्-உம் अहम् *என்பதைப்போல் ஈற்றில்* अम् *சேர்க்கப்பட்ட சொற்களுள் ஒன்று என்பதும், இரண்டு மூன்று முதலிய வேற்றுமைரூபங்களைக்காட்டிலும் பிற்பட்டிருக்கலாம் என்பதும் அதன் பொருள் முற்றுவினையின் விகுதியால் அறியப் பட்டது என்பதும் அறியத்தக்கன.*

   *Cf.* तावां वास्तून्युश्मसि (ऋ. वे. 1, 160, 6)

   वयन्तं इन्द्र विश्वह प्रियासः (*ibid* 2, 12, 15)

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| இ. வே. | मां[1], मा[2] | आवां, नौ[3] | अस्मान्[4], नः[5] |
| மூ. வே. | मया[6] | आवाभ्याम् | अस्मा[7], अस्माभिः[8] |

1, 2. தாய்மொழியில் இவற்றிற்கு ஒட்டிய ரூபங்கள் *mē*, *me* என்பன. அவற்றுள் *mē* உதாத்தஸ்வரமும் *me* அநுதாத்த ஸ்வரமும் பெற்றன. அவற்றை ஒட்டி வைதிகமொழியில் मा म, என்ற ரூபங்கள் இருந்திருக்கவேண்டும். அவ்வாறின்றி मा எனபது அநுதாத்தஸ்வரம் பெற, உதாத்த ஸ்வரம் பெற்ற माम् என்ற ரூபம் பின்னர் பெயர்களின் ரூபத்தின் அதிதேசத்தால் வந்தது என்பர்.

*Cf.* मां देवा दधिरे (ऋ॰ वे. 1, 52, 4); उन्माममन्द (*ibid* 2, 33, 6)

3. यतरो नौ जयात् (तै॰ ब्रा॰ 2, 1, 46)

4. अस्मान्त्सुतत्र चोदय (ऋ॰ वे. 1, 9, 6)

अस्मान् என்பது தாய்மொழியில் *n̥s-sme* என இருந்தது என்றும், अस्मान् என்பது பின்னர் देवान् போன்றதன் அதிதேசத்தால் வந்தது என்றுங் கூறுவர். युष्मा போன்று अस्मा என்ற ரூபமும் இருந்திருத்தல் கூடும்.

5 आनः पवस्व (*ibid* 9, 35, 1)

नः என்பதற்கு லத்தீன் மொழியில் இனச்சொல் *nōs*.

6. मा (म+आ) என்பதே त्वा போன்று நேரிதான ரூபமாய் இருந்திருக்கவேண்டும்; இரண்டாம்வேற்றுமைரூபமாகிய मा என்பதற்கும் மூன்றும்வேற்றுமைரூபமாகிய मा என்பதற்கும் வைதிகமொழிநிலைக்கு முன்னரே மயக்கம் வர, அதனைப் போக்க मया என்ற ரூபம் வந்திருக்கவேண்டும். இது रमया போன்ற ரூபத்தின் அதிதேசத்தால் வந்தது என்பர் சிலர். என்னுடையது என்ற பொருளைக்கொண்ட இ.யூ. ரூபமாகிய *meio* என்றதன் விகாரத்திலிருந்து आ-விகுதி சேர்ந்து வந்தது என்பர் சிலர்.

मया सोऽन्नमत्ति (*ibid* 10, 125, 4)

7. अस्मा इत्काव्यं वच उक्थमिन्द्राय शंस्यम् (*ibid* 5, 39, 5)

இதிஹாஸமொழிநிலையில் இந்த ரூபம் இறந்தது.

8. अस्माभिरूनु प्रतिचख्याभूत् (तै. सं. 1, 4, 34); अस्मा என்பது முன்னருள்ள ரூபமென்றும், பின்னர் देवताभिः போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் अस्माभिः வந்தது என்றுங் கூறுவர்.

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| நா. வே. | मह्य[1], मह्यम्[2], मे[3] | आवाभ्याम्, नौ[4] | अस्मभ्य, अस्मभ्यं[5], नः[6] |
| ஐ. வே. | मत्[7] | आवाभ्याम् | अस्मत्[8] |

1. मह्या ते सख्यं वश्मि (ऋ॰ वे. 3, 31, 14)

இதிஹாஸமொழிநிலையில் இந்த ரூபம் இறந்தது.

2. मह्यं त्वष्टा वज्रमतक्षत (*ibid* 10, 48, 3) இதற்கு மூலபூதமான ரூபம் me+gh என்றாவது eme+gh என்றாவது இருந்திருக்கவேண்டும் என்பர்.

3. चनो दधीत नाद्यो गिरो मे (*ibid* 2, 35, 1); இ. யூ. *moi*.

4. ग्रहाविव नावत्रापि गृह्येताम् (तै॰ सं॰ 6, 4, 42)

5, 6. अस्मभ्यं तानि मरुतो वियन्त रयिं नो धत्त वृषणः सुवीरम्

(ऋ॰ वे॰ 1, 85, 12)

7. कस्तं मदामदं देवं मदन्यो ज्ञातुमर्हति (कठोप. 2, 21)

8. ते अस्मन्निवपन्तु सेनाः (ऋ. वे॰ 2, 33, 11) मत् போன்று अस्मत्-உம் ஒருமைவிகுதி ஏற்றது நோக்கத்தக்கது. சிலவிடத்தில் अस्मत्-இன் அகரம் லோபிக்கும்.

स्मदापरैदपदभ्रचेताः (*ibid* 10, 61, 8)

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| ஆ. வே. | मम [1], मे [2] | आवयोः [3], नौ | अस्माकम् [4], नः [5] |
| ஏ. வே. | मे, मयि [6] | आवयोः | अस्मे [7], अस्मासु [8] |

1. ममानीकं सूर्यस्येव दुष्टरम् (*ibid* 10, 48, 3)

   मम என்பது *ama* என்பதன் விகாரமா, *ma* இரட்டிக்கப் பட்டதா எனத் திண்ணமாய் அறியமுடியவில்லை.

2. विद्युर्मे अस्य देवाः (*ibid* 1, 23, 24)

3. अश्विनावभूतामावयोर्वा एषा (तै. सं. 2, 1, 56)

4. अस्माकमस्तु केवलः (ऋ. वे. 1, 7, 10) अस्माकम् என்பது मामकम् போன்று நபும்ஸகலிங்கத்தில் முதல்வேற்றுமையாக இருந் திருக்கவேண்டும் என்பது பின்னருள்ள ப்ரயோகங்களால் விளங்கும்.

   अस्माकेन वृजनेनाजयेम (*ibid* 10, 43, 10)

   अस्माकेभिः सत्वभिः शूर शूरैः (*ibid* 2, 30, 10)

   अस्माकासो मघवानो वयं च (*ibid* 7, 78, 5)

   अस्माकं मित्रावरुणावतं रथम् (*ibid* 2, 31, 1) போன்ற இடங்களில்

   अस्माकं रथम् என்பதற்கு என்னுடையதான ரதத்தை எனப் பொருள் கொள்ளவேண்டியிருக்க, அவ்வாறு கொள்ளாது என்னுடைய ரதத்தை எனப் பொருள்கொண்டு अस्माकम् என்பது ஆறும்வேற்றுமையாகக் கருதப்பட்டிருக்கவேண்டும். தமிழ்மொழியில் என கைகள் என்றவிடத்து முதல் வேற்றுமைப்பன்மைகுறிப்புவினையாலணையும்பெயரான என என்ற சொல் நன்னூலார்காலத்தில் ஆறும்வேற்றுமைப் பன்மையுருவமாகக் கருதப்பட்டது ஒப்பிடத்தக்கது.

5. अभि नो वीरो अर्वति क्षमेत (*ibid* 2, 33, 1)

6. मयि देवहूतिः (*ibid* 10. 128, 3)

7. सचासावा सुमतिर्भूत्वस्मे (*ibid* 4, 50, 11). ஈண்டும் ஒருமைவிகுதி வந்தது நோக்கத்தக்கது. இந்த ரூபம் இதிஹாஸமொழி யில் இறந்தது.

8. पुष्टिं भूतिमस्मासु धत्तम् (*ibid* 8, 45 முடிவு)

முன்னிலைப்பெயர் : ( வைதிகமொழிநிலை )

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| மு. வே. | त्वम्[1], तुवम्[2] | युवम्[3] | यूयम्[4] |
| இ வே. | त्वाम्[5], त्वा[6] | युवाम्[7], वाम्[8] | युष्मा[9], युष्मान्[10], वः[11] |

1, 2. இ. யூ *tu, tū* இவை வைதிகமொழியில் तु, तू என்று இருக்க வேண்டும். ஆனல் அவற்றின் இறுதியில் अम् சேர்க்கப் பட்டு त्वं, तुवम् என்ற ரூபங்கள் வைதிகமொழியில் உள்ளன. இதிஹாஸமொழியில் तुवम् என்ற ரூபம் இறந்தது. இதன் பொருள் வினைமுற்றின் விகுதியாற் கூறப்படுதலால், இச் சொல் பெரும்பாலும் வழங்கப்படுவது இல்லை.

*Cf*. तोकाय तनयाय मृळ (*ibid* 2, 33, 14)

त्वं नः पाह्यंहसः (*ibid* 6, 15, 30)

3. युवं दक्षं धृतव्रतामित्रावरुणदूळभम् (*ibid* 1, 15, 6)

युवं वायो सविता च भुवनानि रक्षथः (अ. वे. 4, 25, 3)

இதிஹாஸமொழியில் இதற்குப் பிரதியாக युवाम् என்ற ரூபமே வந்தது.

4. இ. யூ. *iū.s.* यूयम् என்பது यूषम् என்றிருக்கவேண்டும் என்றும், वयम् என்பதின் அதிதேசத்தால் இந்த ரூபம் வந்தது என்றுங் கூறுவர்.

यूयं राजानः (ऋ. वे. 8, 19, 35)

5, 6. त्वां यदग्ने पशवः समासते (*ibid* 3, 9, 8)

तं त्वा मर्ता अगृभ्णत (*ibid* 3, 9, 7)

தாய்மொழியில் *tuē* என்பது உதாத்தம் பெற்ற ரூபமாயும் *tue* என்பது அநுதாத்தம் பெற்ற ரூபமாயும் இருந்திருக்க, வைதிகமொழியில் त्वा அநுதாத்தம்பெற்ற ரூபமாய் மாற, त्वाम् என்ற புதிய ரூபம் வந்தது.

7, 8. कण्वासो वां सुतसोमा अभिद्यवोयुवां हवन्तेऽश्विना (*ibid* 1, 47, 4)

9. युष्मा इन्द्रोऽवृणीत (वा. सं. 1, 13)

இந்த ரூபம் இதிஹாஸமொழியில் இறந்தது.

10. युष्मान्दिवा हवामहे (ऋ. वे. 8, 7, 6)

11. आवो वहन्तु सप्तयः (*ibid* 1, 85, 6)

## முன்னிலைப்பெயர்

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| மூ. வே. | त्वा[1], तुवा, त्वया[2], | युवभ्यां[3], युवाभ्याम्[1] | युष्मा[5], युष्माभिः[6] |
| நா. வே. | तुभ्य[7], तुभ्यम्[8], ते[9], | युवभ्याम्[10], युवाभ्याम्[11], वाम्[2] | युष्मभ्य, युष्मभ्यम्[13] वः |

1. त्वा युजा पृतनायूरभिष्याम् (ऋ. वे. 7, 1, 13)
त्वादत्तेभीरुद्र शंतमेभिः (*ibid* 2, 33, 2) என்று त्वादत्तेभिः என்பது அலுக்ஸமாஸம். இரண்டாம்வேற்றுமைரூபத்தோடு மயக்கம் வந்து இந்த ரூபம் இதிஹாஸமொழியில் இறந்திருக்கலாம்.
2. त्वया वयमुत्तमं धीमहे (*ibid* 2, 23, 10)
3. अथा सोमस्य प्रयती युवभ्याम् (*ibid* 1, 109, 2)
4. युवाभ्यां वाजिनीवसूप्रातिरस्तोमाऽअदृक्षत (*ibid* 8, 5, 3)
5. युष्मोतो विप्रः (*ibid* 7, 58, 4)
युष्मा दत्तस्य मरुतो विचेतसोरायः स्याम् (5, 53, 13)
युष्मा என்ற ரூபம் இதிஹாஸமொழியில் இறந்தது.
6. युष्माभिरहमेतमध्वानमनुसञ्चराणि (तै. ब्रा. 1, 5, 59)
7. तुभ्येदमग्ने मधुमत्तमं वचः (ऋ वे. 5, 11, 5)
இந்த ரூபம் இதிஹாஸமொழியில் இறந்தது.
8. तुभ्यं गावो घृतं पयः (*ibid* 9, 31, 5)
9. यस्ते आदित्य शिक्षति व्रतेन (*ibid* 3, 59, 2)
10. इयं देव पुरोहितिर्युवभ्यां यज्ञेषु मित्रावरुणावकारि (*ibid* 7, 61, 7)
11. युवाभ्यां मित्रावरुणोपमं धेयामृचा (*ibid* 5, 64 4)
12. आ वां दानाय (*ibid* 1, 180, 5)
13. युष्मभ्यं कं मरुतः सुजाताः (*ibid* 1, 88, 3)

| | ஒருமை | இருமை | பன்மை |
|---|---|---|---|
| ஐ. வே. | त्वत्[1] | युवभ्याम्, युवाभ्याम् | युष्मत् |
| ஆ. வே. | तव[2], ते[3] | युवोः[4], युवयोः, वाम्[5] | युष्माकम्[6], वः[7] |
| ஏ. வே. | त्वे[8], त्वयि[9], | युवोः[10], युवयोः | युष्मे[11], युष्मासु[12] |

1. नवा ओजीयो रुद्र त्वदस्ति (ऋ. वे. 2, 33, 10)

2. तव व्रते सुभगासः स्याम (*ibid* 2, 28, 2)

3. ये ते शुष्मं ये तविषीमवर्धन् (*ibid* 3, 32, 3)

4. युवोरहमवसा सुम्नमाचके (*ibid* 10, 40, 7)

   இந்த ரூபம் இதிஹாஸமொழியில் இறந்தது.

5. प्रवां मन्मान्यृचसे नवानि कृतानि (*ibid* 7, 61, 6)

6 युष्माकं देवा अवसाहनि प्रिय ईजानस्तरति द्विषः (*ibid* 7, 59, 2)

   अस्माकम् போன்று युष्माकम्-உம் நபும்ஸகலிங்கத்தில் முதல் வேற்றுமையொருமையாய் இருந்திருக்கவேண்டும் என்பது பின்னருள்ள பிரயோகத்தால் விளங்கும்:

   युष्माकेन परीणसा (*ibid* 1, 166, 14)

7. सीदताबर्हिरुरुवः सदस्कृतम् (*ibid* 1, 85, 6)

8 त्वे हि कंपर्वतेनश्रितान्यप्रच्युतानि (*ibid* 2, 28, 8)

9. एवं त्वयि नान्यथेतोस्ति (ईशावा. 2)

10. युवोर्हि नः सख्या पित्र्याणि (ऋ. वे. 7, 72, 2)

    இந்த ரூபம் இதிஹாஸமொழிநிலையில் இறந்தது.

11. तन्नः प्रत्नं सख्यमस्तु युष्मे (*ibid* 6, 18, 5)

    இந்த ரூபம் இதிஹாஸமொழிநிலையில் இறந்தது.

12 मासानां प्रतिष्ठा युष्मासु (तै. ब्रा. का. 2, 15)

தன்னைத்தான்குறிபெயர்: தன்னைத்தான்குறிபெயர் வாக்கியத்தின் கர்த்தாவையே குறிக்க வழங்கப்படும். தாய்மொழியில் ஒரு ரூபமே தன்மை, முன்னிலை, படர்க்கை இம்மூன்று இடங்களிலும் வழங்கப்பட்டிருத்தல் கூடும். அவ்வழக்கம் இன்றும் வடமொழி, பால்டிக்ஸ்லாவோனிக் பாஷைகள் இவற்றில் பெரும்பான்மையும் உளது. கிரேக், லத்தீன் முதலிய மொழிகளில் பழைய ரூபம் படர்க்கையில் மாத்திரம் வழங்கப்பட, தன்மைமுன்னிலைகளில் வெவ்வேறாக வழங்கப்படுகின்றது. அதன் ப்ராதிபதிகம் தாய்மொழியில் *seu̯e*, *su̯e*, *se* ஆகும்: வைதிகமொழியில் स्व ஆகும்.

உடைமைப்பெயர்: இவை விசேஷணங்களைப்போன்றே வேற்றுமையுருபுகள் ஏற்றன.

சில விசேஷணங்கள் பெயர்போன்று வேற்றுமையுருமை ஏற்பதோடு ஸர்வநாமசப்தங்களைப் போன்றும் வேற்றுமையுருபை ஏற்றன. உ-ம். विश्वाय, विश्वस्मै.

ப்ராகிருதமொழிநிலே

இதிஹாஸமொழியில் இருந்த ஸர்வநாமசப்தங்கள் ப்ராகிருதமொழிநிலையில் ரூபத்தில் மாறுபட்டனவேயன்றி வகை முதலியவற்றில் மாறுபடவில்லை. நான்காம் வேற்றுமைரூபங்களும் இருமைரூபங்களும் இறந்தன. அவற்றின் ரூபங்கள் பின்வருமாறு:

ज என்ற ப்ராதிபதிகத்தின் ரூபங்கள்

புல்லிங்கம்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| மு. வே. | जो [1] | जे |
| இ. வே. | जं | जे |

1. सिणिद्धो जणो जो पुच्छिदो (वेणी. 2, 13,—)

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| மூ. வே. | जेण [1], जिणा | जेहिं |
| ஐ. வே. | जत्तो, जत्तु, जदो, जदु | जाहिंतो जासुंतो |
| ஆ. வே | जस्स[2], जास | जाणं, जाण, जेसिं |
| ஏ. வே. | जस्सिं [3], जस्सि, जम्मि जम्मि, जहिं, जत्थ | जेसु, जेसुं |

ஸ்திரீலிங்கம்

| | | |
|---|---|---|
| மு. வே. | जा | जाओ, जाउ, जीओ, जीउ |
| இ. வே. | जं | |
| மூ. வே. | जिणा, जाए, जाइ जीए, जीइ, जीअ, जीआ | जाहिं, जीहिं |
| ஐ. வே. | जादो, जादु, जीदो | जाहिंतो, जासुंतो जीहिंतो, जीसुंतो |
| ஆ. வே. | जस्सा, जासे, जिस्सा, जीसे जाए [4], जाइ, जीए, जीइ, जीअ, जीआ | जासां, जेसिं, जासिं, जाणं जाण, जीणं, जीण, जीसिं |
| ஏ. வே. | जाहे, जइआ | जासु, जासुं, जीसु, जीसुं |

நபும்ஸகலிங்கம்

| | | |
|---|---|---|
| மு. இ. வே. | जं [5] | जाइं, जाइ |

1. जेण पिअशङ्गमं पाविदम् (मृच्छ. 1, 32—)
2. जस्स कारणादो (*ibid* 2, 16—)
3. जस्सिं आसं ओलम्बिस्सम् (वेणी. 5, 22—)
4. जाए गुरुअणो एवं तुस्सदि (मालवि. 1, 5—)
5. जं सच्चम् (मृच्छ. 1, 55—)

## अस्मद्

| | இருமை | பன்மை |
|---|---|---|
| மு. வே. | अहं [1], हं, अहअं, अहम्मि | अम्हे, वअं [2] |
| இ. வே. | मं [3], ममं (अहम्मि) | अम्हे [4], णो |
| மூ. வே. | मे, मए, मइ, ममाइ [5] | अम्हेहिं [6] |
| ஐ. வே. | मत्तो, मइत्तो, ममादो ममादु, ममाहि | अम्हाहिंतो, अम्हासुंतो |
| ஆ. வே. | मे, मम, मज्झ, मह [7] | मज्झ, णो, अम्ह [8] अम्हाणं, अम्हे |
| ஏ. வே. | मइ [9], (मए), ममम्मि | अम्हेसु [10] |

1. अहं समासासइदव्वा (वेणी. 1, 25—)
2. अम्हे...... पडिहडिस्सामो (*ibid* 2, 2—)
   वअं भट्टिणीं णिओजेदुं (मालवि. 4, 15—)
3. ता अवहीरणावि एसा मं आसासअदि (वेणी. 1, 14—)
4. अम्हे वि ...... पविसामो (मालवि. 3, 12—)
5. विसुमरिदं मए (वेणी. 2, 8—)
   मइ कले (मृच्छ. 1, 23—)
6. अम्हेहिं चण्डं अहिशालिअन्ती (*ibid* 1, 28—)
7. पडिहीणं मम वअणं (वेणी. 1, 20—)
   णाहं पेक्खिदुं तुवरदि मे हिअअं (*ibid* 1, 14—)
   उदासीणेसु तुम्हेसु मह मण्णु (*ibid* 1, 17—)
   अवणेहि मे कुसुमाइं (*ibid* 1, 15—)
8. कधं अम्हाणं देवीए केसा संजमीअन्ति (*ibid* 1, 20—)
   तदोमुहं एव्व णो हिअअं (मालवि. 5, 14—)
9. एवं एव्व मइ णत्थि (*ibid* 3, 13—)
10. अम्हेसु संणिहिदेसु वि धारिणी ...... अणुमण्णेदि (*ibid* 5, 5—)

## युष्मद्

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| மு. வே. | तुमं [1], तं | तुज्झे, तुम्हे [2] |
| இ. வே. | तं, तुं, तुमं [3] | तुज्झे, तुम्हे [4], वो |
| மூ. வே. | तइ, तए, तुमए, तुमे, तुये [5] तुमाइ, ते, दे | तुज्झेहिं, तुम्हेहिं [6] तुम्मेहिं |
| ஐ. வே. | तत्तो, तइत्तो, तुमादो, तुमादु, तुमाहि | तुम्हाहिंतो, तुम्हासुंतो |
| ஆ. வே. | तुमा, तुह, तुज्झ, तुम्म, तुम्ह, ते, दे [7] | वो, भे, तुज्झाणं, तुम्हाणं [8] |
| ஏ. வே. | तइ, तुइ [9], तए, तुमए, तुमे, तुमम्मि | तुज्झेसु, तुम्हेसु [10] |

1. तुमं वि दाव मा विसुमरेहि (वेणी. 1, 17)
2. जाणह तुम्हे (*ibid* 4, 9—)
3. पहरिस्सदि तत्तहोदी तुमं अवरद्धम् (मालवि 3, 12—)
4. तुम्हे पसादेमि (मृच्छ. 1, 56—)
5. किं णाह दुक्करं तुए परिकुविदेण (वेणी. 1, 25—)
   सट्ठु दे जाणिदम् (मृच्छ. 2, —)
6. तुम्हेहिं समरादो आअच्छिअ अहं समासासइदव्वा (*ibid* 1, 25—)
7. अवणइस्सदि दे मण्णुं (*ibid* 1, 14—)
   अलं तवेदेण (मृच्छ. 1, 30)
   अहिआरो क्खु तुह (मालवि. 3—)
   तुज्झ न जाणे हिअअं (शाकु. 3)
8. कीस तुंहाणं अज्जवि केसा ण संजमीअन्ति (वेणी. 1, 19—)
   किदत्था दाणिं वो सिस्सा (मालवि. 1, 5—)
9. तुइ परिगणय सतिण्हम् (*ibid* 2, 4—)
10. उदासीणेषु तुम्हेसु मह मण्णु (वेणी. 1, 17—)

தன்மைப்பெயரும், முன்னிலைப்பெயரும் ஹிந்தியிலும் மராட்டியிலும் ஏழு வேற்றுமைகளிலும் பின்வரும் ரூபங்களைக் கொள்ளுகின்றன. இவற்றில் நான்காம் வேற்றுமையிலும் ரூபங்கள் உள்ளன.

## ஹிந்தி

### தன்மைப்பெயர்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| மு. வே. | मै, मैं ने | हम, हमने |
| இ. வே. | मुझको, मुझे | हमको, हमें |
| மூ. வே. | मुझ से | हम से |
| நா. வே. | मेरे लिये | हमारे लिये |
| ஐ. வே. | मुझ से | हम से |
| ஆ. வே. | मेरा, मेरी, मेरे | हमारा, हमारी, हमारे |
| ஏ. வே. | मुझ में, मुझपै, मुझपर | हम में, हमपै, हमपर |

### முன்னிலைப்பெயர்

| | | |
|---|---|---|
| மு. வே. | तू , तूने | तुम, तुमने |
| இ. வே. | तुझको, तुझे | तुमको, तुम्हें |
| மூ. வே. | तुझ से | तुम से |
| நா. வே. | तेरे लिये | तुम्हारे लिये |
| ஐ. வே. | तुझ से | तुम से |
| ஆ. வே. | तेरा, तेरी, तेरे | तुम्हारा, तुम्हारी, तुम्हारे |
| ஏ. வே. | तुझ में, पै, पर | तुम मे, पै, पर |

## மராட்டி

### தன்மைப்பெயர்

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| மு. வே. | मी | आह्मी |
| இ வே. | मी | |
| மூ. வே. | मीं, म्यां, मशीं, मजशीं | आह्मीं, आह्मांशीं |
| நா. வே. | मस, मला, मजला, मातें, मज | आह्मांस, आह्मांलातें, आमुतें |
| ஐ. வே. | मजहून | आह्मांहून |
| ஆ. வே. | माझा, माझी, माझें | आमचा, आमची, आमचें |
| ஏ. வே. | मझ्यांत | आमच्यान्त, आह्मांत |

### முன்னிலைப்பெயர்

| | | |
|---|---|---|
| மு. வே. | तूं | तुह्मी |
| இ. வே. | तूस, तुला, तुजला | तूतें, तुज, तुह्यांस, तुह्मांला, तुह्मांते |
| மூ. வே. | तूं, त्वां, तुशीं, तुजशीं, तुचां | तुह्मीं, तुह्मांशीं |
| நா. வே. | तूस, तुला, तुजला | तूतें, तुज, तुह्मांस, तुमांला, तुह्मांतें |
| ஐ. வே. | तुजहून, तुहून, तुझ्याहून | तुह्मांहूत, तुमच्यांहून |
| ஆ. வே. | तुझा, तुझी, तुझें<br>तुजा, तुजी, तुजें | तुमचा, तुमची, तुमचें |
| ஏ. வே. | तुझ्यांत, तूत | तुह्मांत, तुमच्यांत |

*இவற்றிலிருந்து வடமாகாணமொழிநிலையில் உள்ள தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர் இவற்றின் ரூபங்கள் வைதிகமொழியில் உள்ள தன்மைப்பெயர், முன்னிலைப்பெயர் இவற்றின் ரூபங்களோடு எவ்விதத்தில் ஒற்றுமைப்பட்டுள்ளன, எவ்விதத்தில் வேற்றுமைப்பட்டுள்ளன என்பது விளங்கும்.*

குணவாசகமான சொல்லை விசேஷணம் என்பர். அது தற்போது வடமொழியில் பெரும்பாலும் தான் தழுவும் பெயரோடு லிங்கம், வசனம், வேற்றுமை இவற்றில் ஒத்திருக்கும். தாய்மொழியின் தொடக்ககாலத்தில் லிங்காதிகளைக் காட்டாத கேவலப்ராதிபதிகமாகவே இருந்திருக்க வேண்டும் என்பர்.

விசேஷணங்கள் மூன்றுநிலையை உடையன எனக் கருதப் படுகின்றன. பிறவற்றோடு ஒற்றுமைப்படுத்தாது விசேஷ்யத்தின் குணத்தைக் குறிப்பது ஒன்று. இதனை ஆங்கிலத்தில் பாஸிடிவ்-டிகிரி [2] என்பர்.

ஒரு பொருளை மற்றொன்றோடு ஒற்றுமைப்படுத்தும் போது அவ்விரண்டன் தாரதம்யத்தைக் குறிக்கும் நிலை இரண்டாவது; இதனை ஆங்கிலத்தில் கம்பாரடிவ் டிகிரி [3] என்பர். மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட பொருள்களுள் தாரதமபாவத்தைக் குறிக்கும் நிலை மூன்றாவது; இதனை ஆங்கிலத்தில் ஸுபர்லடிவ்-டிகிரி [4] என்பர்.

சில விசேஷணங்கள் தாரதமபாவநிலையை ஏற்க வேண்டியது அவசியமில்லை. நன்மை, தீமை, இவற்றைக் குறிக்கும் விசேஷணங்கள் அப்பகுதிப்பாற் படும். சில தாரதமபாவங்களை மாத்திரம் காட்டலாம்; அவற்றிற்குப் பாஸிடிவ் டிகிரி அவசிய மில்லாமல் இருக்கலாம். வயதில் இளமை, முதிர்மை இவற்றைக் குறிக்கும் விசேஷணம் இப்பகுதிப்பாற் படும். அவ்வாறே சில காலம் இருந்து, பின்னர் விசேஷணங்களெல்லாம் மூன்று நிலை களையும் குறிக்கவேண்டுமென்று எண்ணி, ஒரு ப்ராதிபதிகத்தி லிருந்து வந்த ரூபம் ஒரு நிலையைக் குறிப்பதாகவும், மற்றொரு

1. விசேஷணம்=Adjective
2. Positive degree
3. Comparative degree.
4. Superlative degree

ப்ராதிபதிகத்திலிருந்து வந்த ரூபம் மற்ற நிலைகளைக் குறிப்பதாக வும் கருதி அவற்றை ஒன்றோடொன்று இயைபு படுத்தினர்.

உ-ம். अल्पः कनीयान् कनिष्ठः
वृद्धः ज्यायान् ज्येष्ठः

கம்பாரடிவ் டிகிரி, ஸுபர்லடிவ் டிகிரி இவற்றைக் குறிக்க மொழியில் பலவகை ப்ரத்யயங்கள் சேர்க்கப்பட்டிருத்தல் வேண்டும். கிரேக், லத்தீன், வைதிகமொழி இவற்றில் ஒவ்வொரு ப்ரத்யயம் ஒவ்வொன்றில் மிகுதியாக வழங்கப்பட்டும், ஏனைய சிற்சில இடங்களில் மாத்திரம் வழங்கப்பட்டும் காணப் படும்.

கம்பாரடிவ் டிகிரியைக் குறிக்க வைதிகமொழிநிலையில் यस्,[1] इस्, अर[2] என்பன மிகுதியாகவும், இதிஹாஸமொழி நிலையில் ईयस्[3], तर என்பன மிகுதியாகவும் வழங்கப்பட்டன. ஸுபர்லடிவ் டிகிரியைக் குறிக்க வைதிகமொழிநிலையில் इष्ठ என்பது மிகுதியாகவும் இதிஹாஸமொழிநிலையில் तम என்பது மிகுதியாகவும் வழங்கப்பட்டன. त, म, என்பன षष्ठ, सप्तम போன்ற ஆர்டினல் எண்ணுப்பெயர்களில் வழங்கப்பட்டன.

## நிபாதம்

நிபாதங்களை நான்கு வகையாகப் பிரிப்பர்: (1) வினையைத் தழுவன[4]; (2) வேற்றுமைப்பெயரைத் தழுவுவன[5]; (3) இரண்டு இனப்பொருளைக் குறிக்கும் பெயரைச் சேர்ப்பன வும் பிரிப்பனவும்[6]; (4) மனத்துள்ள சந்தோஷம், கோபம் முதலியவற்றைக் குறிப்பன.[7]

1. प्रेयस् 2. अवरः, उपरः 3. स्वादीयस्
4. Adverb 5. Preposition 6. Conjunction
7. Interjection

வினையைத் தழுவுவன: இவற்றுள் (1) சில வேற்றுமை யுருபேற்ற ரூபங்கள். அவை சிற்சில வேற்றுமையுருபுகளை ஏற்பதேயன்றி எல்லாவற்றையும் ஏற்பன அல்ல; (2) சில ப்ரத்யயம் ஏற்ற சுட்டுப்பெயர்த்தாதுக்கள்.

உ-ம். (1) மு. வே. परः, नमः [1], स्वस्ति [2]

இ. வே. कामम्, किम्, सुखम, रहः, अन्तरम्, चिरम्, नित्यम्, प्रत्यक्षम्, बाह्यम्, साम्प्रतम्, आशु, साधु

மூ. வே. चिरेण, क्षणेन, दिष्ट्या, सहसा, उच्चैः, शनैः

நா. வே. चिराय, अर्थाय

ஐ. வே. तात्, कस्मात्, आरात्, दूरात्, पश्चात्

ஆ. வே. चिरस्य, वस्तोः

ஏ. வே. अग्रे, अर्थे, ऋते, दूरे, स्थाने, सपदि, रहसि, आदौ

(2) अधि, ततः इतः, अतः, इह, कुह, अत्र, तत्र, कुत्र ......

வேற்றுமைப்பெயரைத் தழுவுவன:

உ-ம். (1) आ, अधि, अनु முதலியன.

मर्त्येष्वा, पृथिव्याम् अधि ओषधीः, मम चित्तम् अनु ......

(2) विना, ऋते முதலியன.

(3) अग्रे, अर्थे, कृते, साक्षात्, हेतोः முதலியன.

இனப்பொருளைச் சேர்ப்பனவும் பிரிப்பனவும்:

च, वा, तु, उ, हि

1. *Cf.* नमो भरन्त एमसि (ऋ॰ वे. 1, 1, 7)
नमस्याकल्मलीकिनं नमोभिः (*ibid* 2, 33, 8)
विधेम नमसा (*ibid* 4, 50, 6)

2. *Cf.* सचस्व नः स्वस्तये (*ibid* 1, 1, 9)
पर्षि णः पारमंहसः स्वस्ति (*ibid* 2, 33, 3)

ஸந்தோஷம் முதலியவற்றைக் குறிப்பன : இவற்றுள் (1) சில தாம் அறியாது வாயிலிருந்து வருவன ; (2) சில அநுகரணச்சொற்கள் ; (3) சில ரூபம் சிறிது மாறியும் மாறாமலும் உள்ள பெயர்ச்சொற்கள்.

(1) आ, हा, हाहा, अहह, हे, है, अहो ......
(2) फट्, बल्, किकिरा ......
(3) भोस्[1], अरे[2], रे[3], धिक्[4] कष्टम्, दिष्ट्या, स्वस्ति, सुष्ठु, साधु ......[5]

### வினைச்சொல்

### வைதிகமொழிநிலையும் இதிஹாஸமொழிநிலையும்

வினைச்சொல் முற்றுவினை, எச்சவினை என இருவகைப்படும்.

**முற்றுவினையின் தன்மை:** முற்றுவினை பலவற்றைக் குறிக்கின்றது. அவையாவன :—செய்கையின் விசேஷம்[6], செய்கை செய்யப்பட்ட காலம்[7], செய்வினையாந்தன்மை அல்லது செயப்பாட்டுவினையாந்தன்மை[8], கூறுவோன் மனத்திற்கொள்ளும் நிகழ்ச்சி, ஏவல்,

1. भवस् என்பதன் எட்டாம் வேற்றுமை.
2. अरि என்பதன் எட்டாம் வேற்றுமை.
3. अरे என்பதன் விகாரம்.
4. दिद् என்றதோடு இயைபுபட்ட ரூபம் ஆகலாம்.
5. भोस् முதலியன வைதிகமொழிநிலையில் ஸந்தோஷம் முதலியவற்றைக் குறிக்கவில்லை. இதிஹாஸமொழிநிலையிற் குறித்தன.
6. Nature of the action
7. Tense
8. Voice
செய்வினையாந்தன்மை = कर्तरि प्रयोगः
செயப்பாட்டுவினையாந்தன்மை = कर्मणि प्रयोगः

விருப்பம் இவை முதலிய ரீதி[1], செய்வோனின் இடமாகிய தன்மை, முன்னிலை, படர்க்கை இவற்றுள் ஒன்று[2], ஒருமை இருமை பன்மை இவற்றுள் ஒன்று[3], ஆகும். இவற்றுள் செய்கையின் விசேஷம் தாதுவாலும், ஏனையவெல்லாம் பெரும்பாலும் வினைவிகுதியாலும் குறிக்கப்படும். சிலவிடத்துச் செயப்பாட்டு வினையாந்தன்மை ய என்ற ப்ரத்யயத்தாலும், இறந்தகாலம் அ அல்லது ஆ என்ற ஆகமத்தாலும், தாதுவின் இரட்டித்தலாலும் குறிக்கப்படும். ஆதலின் ஒவ்வொரு முற்றுவினையிலும் தாதுவும் வினைவிகுதியும் இன்றியமையாதன: சிலவிடத்து அவற்றோடு அ அல்லது ஆ என்ற ஆகமமும், ய என்ற ப்ரத்யயமும், தாதுவின் இரட்டித்தலும் காணப்படும்; இம்மூன்றும் சேர்ந்தும் தனித்தனியாயும் முற்றுவினையில் இருக்கலாம். விகுதி ஒன்றிலேயே பல செய்திகள் அறியப்படுகின்றமையான், வைதிக மொழிநிலைக்கு முன்னரே பலவகையாக வினைகள் வழங்கப்பட்டு, வழக்கத்தாலும், கூறப்படும் ஸந்தர்ப்பத்தாலும், உச்சரிக்கப்படும் முறையாலும் அறியப்பட்டனவெல்லாம் காலக்ரமத்தில் விகுதியின் பொருளாகக் கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும். வைதிக மொழிநிலையிலேயே அவை ஒருவகையாக வரையறுக்கப்பட்டன என்றால், வேதகாலத்திற்கு முன்னர் எவ்வளவு காலம் அவை வழங்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது ஊஹித்தற்கு உரியது. ஆதலின் வினைவிகுதிகளைப்பற்றி விரிவாய் அறிதல் வேண்டும்.

## வினை விகுதி

**உற்பத்தி:** வினைவிகுதிகளின் உற்பத்தி எவ்வாறு என இன்றுவரை நிச்சயமாய் ஒருவரும் தீர்மானிக்கவில்லை. சிலர் ஸர்வநாமங்களே தாதுவிற்குச் சேர்க்கப்பட்டன என்று கூறினர். அவ்வாறு கூறியோர் மொழியின் தொடக்கத்தில் தாதுக்களே இருந்து, அவை ஒன்றுக்கொன்று சேர்க்கப்பட்டன என்ற கொள்கையைக் கொண்டவரேயன்றி, தொடக்கத்தில் வாக்கியங்களே வழங்கப்பட்டு பின்னர் இலக்கணவாசிரியர்களால்

1. Mood 2. Person 3. Number

அவை பதங்களாகவும், பதங்களும் பகுதி விகுதிகளாகவும்[1] பிரிக்கப்பட்டன என்ற கொள்கையைக் கொண்டவரல்லர். ஆகவின் அவர் தங்கூற்று பின்னோரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால் அவ்விகுதிகளின் உற்பத்தி எவ்வாறு எனப் பின்னோராற் கூறப் படவுமில்லை. பெயர்கள் வந்ததற்குப் பின்னரே ஸர்வநாமசப் தங்கள் வழங்கப்பட்டிருக்கவேண்டுமாதலால் வினைவிகுதிகளே ஒருவாறு ஸர்வநாமசப்தங்களாக வழங்கப்பட்டனவா என்பது ஆராய்தற்குரியது.

வகை: வினைவிகுதிகள் வைதிகமொழிநிலையில் இருவகைப் படும். அவற்றைப் பூர்ணவிகுதி, அபூர்ணவிகுதி என்றேனும், முழு விகுதி, குறைவிகுதி என்றேனும் கூறலாம்[2]. உதாரணமாக मि, सि, ति முதலியன பூர்ணவிகுதியாகும்; म्, स्, त् முதலியன அபூர்ணவிகுதியாகும். இவற்றுள் எவை முன்னர் வந்தன எவை பின்னர் வந்தன என்பதும், குறைவிகுதிகள் முழுவிகுதி களைக்காட்டிலும் எவ்வகையில் குறைவு பெற்றன என்பதும் அறியமுடியவில்லை. முழுவிகுதிகள் சில இடங்களிலும், குறை விகுதிகள் சிலவிடங்களிலும் காணப்படுகின்றன. முழு விகுதிகள் நிகழ்ச்சிக்குறிரீதியில்[3] நிகழ்காலம்[4] எதிர்காலம்[5] இவற்றிலும் ஆத்மனேபதவிகுதியேற்கும் நிகழ்விறப்புகாலத் திலும்[6] காணப்படுகின்றன. வியங்கோள்ரீதியில் வேதத் தில் இருவகைவிகுதிகளும் காணப்படுகின்றன. எஞ்சியவற்றுள் எல்லாம் குறைவிகுதிகளே காணப்படும்.

1. *Cf.* असत्यप्रकृतिप्रत्ययोपदेशेन सत्यस्य पदस्य व्युत्पादनं क्रियते
(कैयटम् under आद्यन्तौ टकितौ)
2. பூர்ணவிகுதி (முழுவிகுதி) = Primary ending.
அபூர்ணவிகுதி (குறைவிகுதி) = Secondary ending.
3. நிகழ்ச்சிக்குறிரீதி = Indicative mood.
4. நிகழ்காலம் = वर्तमानकाल: = Present tense
5. எதிர்காலம் = भविष्यत्काल: = Future tense.
6. நிகழ்விறப்புகாலம் = Perfect tense.

முழுவிகுதி, குறைவிகுதி இவற்றின் வேறுபாடு கிரேக், லத்தீன் முதலிய மொழிகளில் சிறுபான்மையும் வைதிகமொழியிலே பெரும்பான்மையும் காணப்படும். இவ்விகுதிகளே பரஸ்மைபதவிகுதிகள்[1] என்றும் ஆத்மனேபதவிகுதிகள்[2] என்றும் இருவகையாகப் பிரிக்கப்பட்டன. இப்பாகுபாடு தாய்மொழியிலே இருந்தது என்பர். செய்வினையில் இருவகை விகுதிகளும் வழங்கப்படுகின்றன; செயப்பாட்டுவினையில் ஆத்மனேபதிவிகுதிகளே வழங்கப்படுகின்றன. செய்வினையில் ஒரே தாது இருவகைவிகுதிகளையும் ஏற்குமாயின், செயலின் பயன் செய்வோனிடம் சென்றால் ஆத்மனேபதவிகுதியும், செயப்படுபொருளிற் சென்றால் பரஸ்மைபதவிகுதியும் வழங்கப்படுகின்றன. இதைப் பார்த்தால் ஆத்மனேபதம் பரஸ்மைபதம் என்ற குறிகள் அந்வர்த்தங்கள் என அறியலாம். இக்காரணம் பற்றியே பாணினியாசிரியர் செயலின் பயனைத் தன்னிடம் குறித்தால் ஆத்மனேபதவிகுதி வரும் என்றும்[3] ஏனைய இடத்தில் பரஸ்மைபதவிகுதி வரும் என்றும்[4] சூத்திரித்தனர். செயப்பாட்டுவினையில் ஏன் ஆத்மனேபதவிகுதி வழங்கப்பட்டது என்பது தெளிவாய் அறியப்படவில்லை. முதல்வேற்றுமையில் வழங்கப்பட்ட சொற்பொருளிடத்து செயலின் பயன் போகின்றமையால் அவ்வாறு வழங்கப்பட்டதோ என்ற ஐயம் உண்டாகின்றது. சில தாதுக்கள் இருவகைவிகுதிகளையும், சில பரஸ்மைபதவிகுதிகளை மாத்திரமும், சில ஆத்மனேபதவிகுதிகளை மாத்திரமும் பெறுகின்றன. வைதிகமொழிநிலையில் ஆத்மனேபத

1. பரஸ்மைபதவிகுதி = Active ending
2. ஆத்மனேபதவிகுதி = Middle ending.
3. स्वरितञित कर्त्रभिप्राये क्रियाफले (पा. अ. 1, 3, 72)
   உ-ம். ऋत्विजो यजन्ति
4. शेषात् कर्तरि परस्मैपदम् (*ibid* 1, 3, 78)
   உ-ம். यजमानो यजते

விகுதிகள் பெற்ற சில தாதுக்கள் இதிஹாஸமொழிநிலையில் பரஸ்மைபதவிகுதிகளை மாத்திரம் பெறுகின்றன. உ-ம்.

भी — भयन्ते विश्वा भुवना मरुद्भ्यः (ऋ. वे. 1, 85, 8)
जुहोत्यादयोऽनुदात्ताः परस्मैभाषाः (धातुपाठे)

प्रच्छ् — पृच्छे तदेनो वरुण (ऋ. वे. 7, 86, 3)
पृच्छादयोऽनुदात्ता उदात्तेतः परस्मैभाषाः (धातुपाठे)

வைதிகமொழிநிலையில் ஆத்மனேபதவிகுதி ஏற்றதற்கும் பின்னர் பரஸ்மைபதவிகுதி ஏற்றதற்கும் காரணம் யாது என்பது அறிஞரால் ஆராயத்தக்கது.

### பரஸ்மைபதவிகுதிகள்

தன்மையொருமை: தீமேடிக் உருபு ஏற்ற பகுதியின் பின்னர் வந்த முழுவிகுதி ō; தீமேடிக் உருபு ஏலாத பகுதியின் பின்னர் வந்த முழுவிகுதி mi. வைதிக மொழியும் வேறு சில மொழிகளும் मि ஐயே இரண்டிலும் வழங்கின.

உ-ம். வை. भरामि; கிரேக் ferō

உயிரின் பின்னர் m-உம், மெய்யின் பின்னர் m̥-உம் குறைவிகுதி ஆகும். ஆனால் வைதிகமொழி m̥-க்குப் பிரதியாக अम् ஐக் கொண்டது. அதற்குப் பின் வருவன காரணங்கள் ஆகலாம் என்பர்:—

(1) अहनत् என்பதின் அதிதேசத்தால் अहनम् போன்றன வந்திருக்கலாம்.

(2) நிகழ்விறப்புருபங்களாகிய आद्, आस्, இவற்றை மயக்கமறக் காட்ட आदम्, आसम् இவை வந்திருக்கலாம்.

(3) ஆத்மனேபதரூபமாகிய भरेय என்பதினின்று பிரித்துக் காட்ட भरेयम् என்பதை வழங்கியிருக்கலாம்.

வைதிகமொழியில் अः, आनि காணப்படுகின்றன; नि எவ்வாறு வந்தது எனத் தெரியவில்லை.

நிகழ்விறப்பில் குறைவிகுதி अ ஆகும்.

முன்னிலையொருமை: सि முழுவிகுதி ஆகும்; स् குறைவிகுதி ஆகும்; நிகழ்ச்சிக்குறிரீதியில் நிகழ்விறப்பில் थ ஆகும்.

படர்க்கையொருமை: ति முழுவிகுதி ஆகும்; त् குறைவிகுதி ஆகும்; சிலவிடத்து त् இன் இறுதியில் उ சேர்க்கப்படும்.

अ நிகழ்விறப்பில் குறைவிகுதி ஆகும்.

தன்மைப்பன்மை: मसि[1] मस् என்பன முழுவிகுதி ஆகும். வேதங்களில் வழங்கப்பட்ட मसि பிற்காலத்தில் இறந்தது. म குறைவிகுதி ஆகும். நிகழ்விறப்பில் வேதத்தில் சிலவிடத்து मा-உம் வரும்.

மஹாபாரதத்தில் சிலவிடத்து முழுவிகுதியும் குறைவிகுதியும் மாறியும் வரும்.

உ-ம். अपश्यामः; पश्याम; स्यावः

முன்னிலைப்பன்மை: முழுவிகுதி थ ஆகும்; குறைவிகுதி त ஆகும்; நிகழ்விறப்பில் अ ஆகும். வேதத்தில் இறுதியில் न சேர்க்கப்படும். உ-ம். दधातन[2]

படர்க்கைப்பன்மை: வைதிகமொழியில் अन्ति, अति என்பன முழுவிகுதியாகும். अन्तु, अतु என்பன குறைவிகுதியாகும். சிலவிடத்து उर्-உம் குறைவிகுதியாகும். நிகழ்விறப்பில் रे, इरे என்பன குறைவிகுதி ஆகும். அதிதேசத்தால் दुदुह्रे, जगृभ्रे முதலிய ரூபங்கள் வேதத்தில் வந்துள்ளன.

1. मिनीमसि द्यविद्यवि (ऋ. वे. 1, 25, 1)

2. आपो हि ष्ठा मयोभुवस्तान ऊर्जे दधातन (ऋ. वे. 10, 9, 1)

தொடங்கிய தாதுவிற்கு வரும் ஆகமம் அ என்றும், உயிரில் தொடங்கும் தாதுவிற்கு வரும் ஆகமம் ஆ என்றுங் கூறுவர். இந்த ஆகமம் தொடக்கத்தில் காலங் காட்டும் நிபாதமாக[1] இருந்திருக்கவேண்டும் என்றும், மெய்யில் தொடங்கும் தாதுவிற்கு முன்னர் வரும் ஆகமத்தின் பெயர் ஏகாச்சாகமம்[2] என்றும் உயிரில் தொடங்கும் தாதுவிற்கு முன்னர் வரும் ஆகமத்திற்குப் பெயர் காலங்காட்டுமோகமம்[3] என்றுங் கூறுவர். அது இறந்தகாலத்தைக் காட்ட வழங்கப்படுகின்றது. இண்டோ யூரோபியன்மொழிநிலையிலிருந்தே அது உதாத்தஸ்வரம் பெற்றது. அஃது எவ்வாறு வந்தது என மொழிநூல்வல்லோர் நிச்சயமாய்க் கூற இயலவில்லை; சிலர் ஸர்வநாமதாதுவாகிய ο இன் ஏழாம் வேற்றுமை எனக் கூறுவர்.

அவ்வாகமம் வைதிகமொழி, கிரேக், ஆர்மீனியன் இவற்றுள் நன்கு காணப்படுகின்றது. ஸந்தர்ப்பத்தால் இறந்தகாலம் தெரிந்தவிடத்து தாய்மொழியிலேயே அது வழங்கப்படவில்லை. ருக்வேதத்தில் ஆகமமில்லாத ரூபங்களே மிகுதியாகக் காணப்படுகின்றன.[4] பிராம்மணங்களிலும் இதிஹாஸங்களிலும் ஆகமங் கொண்ட ரூபங்களே மிகுதியாக உள்ளன; பின்னருள்ள நூல்களில் ஆகமமில்லாத ரூபங்களே இல்லை.

உபஸர்க்கத்தோடு கூட தாதுக்கள் வரின், அவ்வாகமம் அவ்விரண்டற்கும் இடையில் சேர்க்கப்படும்.[5] சிலவிடங்களில் உபஸர்க்கத்தோடு கூடிய தாதுவைக் கேவலதாது என மயங்கி,

1. Temporal adverb.
2. ஏகாச்சாகமம் = Syllabic augment.
3. காலங்காட்டுமோகமம் = Temporal augment.
   *Temporal*–Latin *temporalis*; French *tempus, temporis*–time, the fitting or appointed time. Gram. 'pertaining to a tense.'
4. गिरो यदि च त्मना भूत् (ऋ. वे. 1, 178, 3)
5. उदपतत्

உபஸர்க்கத்தின் முன்னர் ஆகமஞ் சேர்ந்த இடங்களும் உள.[1] சிலவிடத்து ஈரிடத்திலும் அது சேர்க்கப்பட்டது[2]. आ என்ற ஆகமம் உயிருடன் தொடங்கும் தாதுக்களோடு மாத்திரமன்றி, य, र, व, न, இவற்றோடு தொடங்கும் தாதுக்களோடும் காணப் படுகின்றது[3]. அவ்வாகமம் தாதுக்களின் தொடக்கத்தில் உள்ள इ, ई, उ, ऊ, ऋ இவற்றோடு சேரும்போது விருத்தியக்ஷரம் ஏகா தேசமாக வருகிறது.[4]

இந்த ஆகமம் இண்டோயூரோபியன்மொழிநிலையிலிருந்தே தீர்க்கமாக இருந்ததா, ஒருமையில் மாத்திரம் தீர்க்கமாயிருந்து அதிதேசத்தால் எல்லாவிடங்களிலும் தீர்க்கமாயிற்று என்பதில் கொள்கைவேறுபாடு உண்டு.

இரட்டித்தல்[5] : தாய்மொழியிலேயே இரட்டித்தல் உண்டு எனினும், அதற்கும் பெயர் வினை இவற்றிற்கும் இயைபு இருந்ததாகத் தோன்றவில்லை. பின்னர்ச் செயல் அடிக்கடி நிகழ்வது, மிகுதியாக நிகழ்வது முதலியவற்றைக் குறிக்கத் தாதுக்கள் இரட்டிக்கப்பட்டிருத்தல்வேண்டும். அதன் பின்னரே காலத்தைக் குறிக்கவும் வந்திருத்தல் கூடும். இரட்டிக்கப்பட்டதுள் முன்னருள்ளதைப் பாணினியாசிரியர் அப்யாஸம்[6] என்பர்.

அப்யாஸத்திலும் தாதுவிலும் இருக்கும் உயிர்களைக் கொண்டு தாய்மொழியில் நால்வகையாக இரட்டித்தல் இருந்தது என்பர்.

1. अपीडयत् ; असम्भ्रमत् ; अभिष्णक् (ऋ॰ वे. 10, 131, 5)
2. अप्रैषीत्
3. आयुनक् , आरिणक् , आवृणक् , आनट्
4. औनट् , औहत् , आर्च्छत्
5. Reduplication.
6. अभ्यासः = Reduplicator.

அவையாவன :—

(1) தாதுவிலும் அப்யாஸத்திலும் ஒரே ஒயிரோ, அஜ் விபரிணமத்தில் இயைபுபட்ட உயிர்களோ இருத்தல்.

i. தாது, அப்யாஸம் இவற்றின் முதலும் இறுதியும் மெய்யாக இருத்தல்[1]

உ-ம். बाध् — बद्धे    दर् — दर्दर्षि
जप् — जञ्जप्यते[2]    दह् — दन्दह्यते[3]
गम् — गनीगन्ति[4]

ii. தாதுவின் முதலும் இறுதியும் மெய்யாயிருக்க, அப்யாஸத்தின் முதல் மாத்திரம் மெய்யாயிருத்தல்.

உ-ம். रिष् — अरीरिषत्    दुष् — अदूदुषत्[5]

1. லத்தீன் *mur-murāre ; tin-tinnāre*.

2, 3. இங்கு அப்யாஸத்திலுள்ள அநுநாஸிகம் அதிதேசத்தால் வந்தது.

4. இங்கு அப்யாஸத்தின் பின்னர் ई சேர்க்கப்பட்டது.
पत् தாதுவிற்கு पप्तिम என்பது நேரிதான ரூபமாயிருக்க पेतिम என்பது அதிதேசத்தால் வந்தது.

5. शिश्रुः, अपिप्लवम् என்ற ரூபங்கள் இருப்பினும் इ, उ இவற்றைக் கொண்ட தாதுக்களின் அப்யாஸத்தில் முறையே इ, उ இருந்தது எனக் கொள்ளுதல் நேரிதேயன்றி जुहोति, अचुकुधत् என்பன जिहोति, अचिक्रुधत् என இருந்தன என்று கொள்ளவேண்டுவதில்லை என ப்ருக்மன் கூறுவர். அன்றியும் அப்யாஸத்தில் சிலவிடத்து அதிதேசத்தால் इ, उ வந்துள்ளன.
உ-ம். रिरेच. இ.யு. le-loiqe. ररेच என்பதே நேரிதானரூபம் அவ்வாறே चक्रोध, ययाज, ववाच என்று இருக்கவேண்டியிருக்க, இதிஹாஸமொழிநிலையில் चुक्रोध, इयाज, उवाच என்று உள்ளன.

iii. தாதுவும் அப்யாஸமும் உயிரில் தொடங்கி மெய்யில் முடிதல்.

உ-ம். अर् — अलर्ति        अम् — आममत्

தாது இருமெய்களில் முடிந்தால் அப்யாஸம் முன்னுள்ள மெய்யிலே முடியும்.

உ-ம். वर्त् — वरवर्तीति        अंश् — आनंश[1]

(2) தாதுவில் எவ்வகைப்பட்ட உயிர் இருப்பினும், அப்யாஸத்தில் தாய்மொழியில் *e*, அல்லது *ē* வே இருத்தல்.

உ-ம். बभूव — கிரேக் *pe-fōāzi*

तस्थिम—லத்தீன் *ste-timus*

सेदिम (பழைய ஆரியன் *sa-zd*)[2]

येते (பழைய ஆரியன் *i a-i t*)

சிலவிடத்து அப்யாஸத்தில் உயிர் நீண்டிருக்கும்.

உ-ம். दाधर्ति, दाधार, मामृजुः

1. अर्च् தாதுவின் நேரிதான ரூபம் आरर्च என இருக்கவேண்டியிருக்க, आनर्च என்று இருக்கின்றது. இது आनंश என்ற ரூபத்தின் அதிதேசத்தால் என்பர். இவ்வாறே चर्चूर्यते என்பதற்குப் பிரதியாக चञ्चूर्यते என இருக்கின்றது. இவ்வாறே லத்தீனிலும் *gin-grire* என்ற ரூபம் உளது.

2. பழைய ஆரியன் என்பது வைதிகமொழிநிலைக்கு முன்னர் வைதிகமொழியும் இரான்மொழியும் ஒன்றாயிருந்த நிலை.

(3) அப்யாஸத்தில் *i* அல்லது *ī*-உம், தாதுவில் அவற்றி விருந்து வேறுபட்ட உயிரும் இருத்தல்.

உ-ம். *sthā* तिष्ठति லத்தீன் *si-sto*
*bher* बिभर्ति [1]
*ĝen* अजीजनत् [2] லத்தீன் gi-gn-ō.

வைதிகமொழியில் வினைவிகுதியின் முன்னர் அ சேர்க்கப் படும் லுங்கில் [3] அப்யாஸத்தில் இகர-ஈகாரங்கள் காணப்படு கின்றன. நெட்டுயிரின் பின்னர் ஒரு மெய்யில் முடியும் தாது வினதும் பலமெய்களில் முடியும் தாதுவினதும் அப்யாஸத்தில் இகரமும், குற்றுயிரின் பின்னர் ஒரு மெய்யில் முடியும் தாதுவின் அப்யாஸத்தில் ஈகாரமும் காணப்படுகின்றன.

உ-ம். स्पृश् — अपिस्पृशत्  दीक्ष् — आदिदीक्षत्
जन् — अजीजनत्  पत् — अपीपतत्

உயிரில் தொடங்கும் தாதுக்களின் அப்யாஸத்தில் இகரமே காணப்படுகின்றது.

உ-ம். आप् — ईप्सति ; ऋध् — ईर्त्सति ; इ — इयेति

(4) மூலம் அறியப்படாத சில ரூபங்கள் வைதிகமொழி யிலும் கிரேக்கிலும் உள்ளன.

உ-ம். आशिशिषति, अनिनिषति

1, 2. बिभर्ति, अजीजनत् இவற்றிலுள்ள இகர-ஈகாரங்கள் भरीभर्ति, भरिभ्रति போன்ற இடங்களின் அதிதேசத்தால் வந்தன என்றும், பின்னருள்ள ரூபங்களிலுள்ள இகர-ஈகாரங்கள் வேற்றுமையுருபு என்றுங் கூறுவர்.

3. लुङ्=Aorist

**அப்யாஸத்திலுள்ள மெய்யின் தன்மை:** தாது ஒரே மெய்யில் தொடங்கினால், அப்யாஸமும் அம்மெய்யிலே தொடங்கும். ஆனால் அம்மெய் மஹாப்ராணமாய் இருப்பின் வைதிகமொழியிலும் கிரேக்கிலும் அல்பப்ராணமாக மாற்றப்பட்டது.

உ-ம். विभर्ति, चखान

தாது பல மெய்களில் தொடங்கினால் பெரும்பான்மையும் முதல் மெய்யே அப்யாஸத்தில் காணப்படும்.

உ-ம். प्रच्छ् — पप्रच्छ

ஆனால் தாது ஸ் ஓடு கூடிய ஸ்பர்சத்தில் தொடங்கினால் காதிக்மொழியில் அப்யாஸத்தில் இரண்டும் காணப்படும்; வைதிகமொழியிலும் கிரேக்கிலும் ஸகாரத்திற்கு லோபம் வரும்.

உ-ம். காதிக் — *stalda* — *stai-stald.*
வை. स्पृश् — पस्पर्श

வைதிகமொழியில் சில அபூர்வமான ரூபங்கள் காணப்படுகின்றன :—

(1) जभार[1] — இது बभार, जहार இரண்டின் மயக்கம் எனக் கொள்ளல் தகும்.

(2) सिसिचे—ஈண்டு இரண்டாவது स्, ष् ஆக மாறவில்லை.

(3) पिपान[2] — இது குடித்தல் என்ற பொருளையுங் கொண்ட पा என்ற தாதுவின் ரூபம். இதனையும், पिपते என்ற ரூபத்தையும் கொண்டு தாய்மொழியில் pi-pō-mi என்ற ரூபமே இருந்திருக்கவேண்டும் எனக் கூறுவர்.

1. यं सहस्रं मासो जभार (ऋ॰ वे॰ 4, 18, 4)
2. अयं पिपान इन्द्र इद्रयिम् (अ॰ वे॰ 9, 4, 2)

குடித்தல் என்ற பொருளில் पा என்ற ரூபமும்[1] पिब् என்ற ரூபமும்[2] வைதிகமொழியில் வழங்கப்பட்டிருக்க, இதிஹாஸ மொழியில் पिब् என்ற ரூபமே வழங்கப்பட்டது[3].

வினைகுறிரீதி[4]: வினைச்சொல்லின் உருவத்தால் அதனைக் கூறுவோன் மனத்துள் கொண்ட செயல்ரீதி உணரப்படும். அதனை வினைகுறிரீதி என்னலாம், இதனை வடமொழியில் आख्यातबोधितवक्तृविवक्षाप्रकारः என்னலாம். இந்த ரீதி இண்டோயூரோபியன்மொழியில் ஐந்துவகையாக இருந்தது என்பர். அவை நிகழ்ச்சிக்குறிரீதி[5], வேண்டுகோள்குறிரீதி[6], ஏவல்குறிரீதி[7], ஏவல்கண்ணுவியங்கோள்ரீதி[8], ஏவல்கண்ணிய வியங்கோள்ரீதி[9] ஆகும். இறுதியில் உள்ள ஏவல்கண்ணிய வியங்கோள்ரீதியைத் தனிரீதியாகக் கொள்ளவேண்டாம் என்பர் ரைட். செயலின்நிகழ்ச்சியைக் கூறுதலே கூறுவோனின் கருத்தாயின், அப்போது நிகழ்ச்சிக்குறிரீதியில் வினைச்சொல் இருக்கும்; தனது வேண்டுகோளைக் குறிக்கவேண்டின், வேண்டுகோள்குறிரீதியில் வினைச்சொல் இருக்கும்; தான் பிறரை ஏவ வேண்டின், ஏவல்குறிரீதியில் வினைச்சொல்

1. इमे सोमा अरंकृताः । तेषां पाहि (ऋ. वे. 1, 2, 1)
   पिबा मित्रस्य धामभिः (*ibid* 1, 14, 10)
   ते पिबन्तु जिह्वया (*ibid* 1, 14, 8)
3. தாய்மொழியில் *pi-b-e-t-i* என்ற ரூபத்தில் *b* என்பது *pi-b-dhi* என்பதிலிருந்து வந்திருக்கலாம் என்றும், *p*, *b* ஆக மாறிற்று எனக் கொள்ளல் வேண்டாம் என்றுங் கூறுவர்.
4. வினைகுறிரீதி = Mood.
5. Indicative mood.
6. Subjunctive mood (लेट्)
7. Imperative mood (लोट्)
8. Optative mood (लिङ्)
9. Injunctive mood.

இருக்கும் ; தனது விருப்பத்தைக் கூறவேண்டின் ஏவல்கண்ணாத வியங்கோள்ரீதியில் வினைச்சொல் இருக்கும் ; தன் விருப்பத்தைக் குறித்து ஏவ விரும்பின், ஏவல்கண்ணியவியங்கோள்ரீதியில் வினைச்சொல் இருக்கும்.

கூறுவோனின் விருப்பம், ஏவல், விருப்பங்கலந்த ஏவல் இவற்றைக் கேட்போன் தெளிவாய் அறிய இயலாமையான், தனிமொழிகளில் இவற்றில் மயக்கம் உண்டாயிற்று. வேண்டுகோள்குறிரீதிக்கும், ஏவல்கண்ணாவியங்கோள்ரீதிக்கும் உருவத்தாலோ பொருளாலோ மயக்கம் நேராத மொழிகள் கிரேக்கும் வைதிகமொழியுமே ஆகும். வைதிகமொழியிலும் அவ்விரண்டிற்கும் உள்ள மாறுபாடு காலக்ரமத்தில் குறைய ஆரம்பித்தது[1]. ஏவல்குறிரீதி, வேண்டுகோள்குறிரீதி, ஏவல்கண்ணாவியங்கோள்ரீதி, ஏவல்கண்ணியவியங்கோள்ரீதி இந்நான்கிற்கும் மயக்கம் நேர, இதிஹாஸமொழிநிலையில் வேண்டுகோள்குறிரீதியும், ஏவல்கண்ணியவியங்கோள்ரீதியும் இறந்தன. இதிஹாஸமொழியில் लोट् என்பது தன்மையில் लेट्-இன் உருவங்களைக் கொண்டது என்றும், முன்னிலை படர்க்கை இவற்றின் இருமைபன்மைகளில் ஏவல்குறித்தவியங்கோளின் ரூபங்களைக் கொண்டது என்றும் மாக்டானெல் கூறுவர்[2]. ரூபத்தில் ஏவல்குறிரீதிக்கும், ஏவல்கண்ணாவியங்கோள்ரீதிக்கும் மாறுபாடு இருப்பினும், பொருளில் அவ்விரண்டற்கும் கூட மயக்கம் நேர்ந்தது. ஆகலினன்றே அவ்விரண்டன் பொருளையும் ஒன்றாகவே படித்தனர் பாணினியாசிரியர்[3]. இவ்வாறே வேண்டுகோள்குறிரீதி பால்டிக்ஸ்லவோனிக் மொழிகள் முதலியவற்றில் இறந்தன என்பர். லத்தீன்மொழியில் வேண்டுகோள்குறிரீதி

1. लिङर्थे लेट् (पा. अ. 3, 4, 7)
2. A Vedic Grammar for students by A. A. MacDonell. p. 348.
3. विधिनिमन्त्रणामन्त्रणाधीष्टसम्प्रश्नप्रार्थनेषु लिङ् (पा. अ. 3, 3, 161)
लोट् च (*ibid* 3, 3, 162)

யில் உள்ள சொற்களும் ஏவல்கண்ணுதவியங்கோள்ரீதியில் உள்ள சொற்களும் இருப்பினும், வெகுகாலத்திற்கு முன்பே வழக்கில் அவ்விரண்டற்கும் மயக்கம் வந்தது.

ருக்வேதஸம்ஹிதையிலும், அதர்வவேதஸம்ஹிதையிலும் வேண்டுகோள்குறிரீதியில் உள்ள சொற்கள் மிகுதியாகவும், ஏவல்கண்ணுவியங்கோள்ரீதியில் உள்ள சொற்கள் குறைவாகவும் வழங்கப்பட்டன. ஆனால் பிராம்மணங்களில் பின்னர்க் கூறப்பட்டனவே மிகுதியாக வழங்கப்பட்டன.

வேண்டுகோள்குறிரீதியில் வினைவிகுதிக்கு முன்னர் अ அல்லது आ-உம்[1], அதன்பின்னர் பரஸ்மைபதத்தில் முழுவிகுதியேனும் குறைவிகுதியேனும் சேர்க்கப்படும்[2–3].

ஏவல்கண்ணுவியங்கோள்ரீதியில் வினைவிகுதியின் முன்னர் या அல்லது ई சேர்க்கப்படும். ஏவல்குறிரீதியில் ரீதியைக் குறிக்கக் குறி ஒன்றுமில்லை.

உ-ம். यातु[4]

ஏவல்கண்ணியவியங்கோளில், முன்னர் ஆகமமின்றிப் பின்னர்க் குறைவிகுதி சேர்க்கப்படும். ரூபங்களில் சிலவிடத்து நிகழ்ச்சிக்குறிரீதிக்கும் வேண்டுகோள்குறிரீதிக்கும் ஒற்றுமை இருக்கும். வேண்டுகோள்குறிரீதியில் சேர்க்கப்படும் अ-உம், ப்வாதியிலும், துதாதியிலும் சேர்க்கப்படும் விகரணமாகிய अ-உம் ஒன்றுபோலிருக்கும்.

1. लेटोऽडाटौ (*ibid* 3, 4, 94)
2. इतश्च लोपः परस्मैपदेषु (*ibid* 3, 4, 97)
3. तिष्ठाति वज्री मघवा (ऋ. वे. 4, 20, 2)
   देवो देवेभिरागमत् (*ibid* 1, 1, 5)
4. आ न इन्द्रो हरिभिर्यातु (ऋ. वे. 4, 20, 2)

**காலம்:** காலம் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்றுவகையாகும். ஒவ்வொரு ரீதியிலும் உள்ள வினைகள் ருக்வேதத்தில் இம்மூன்று காலத்தையும் குறித்திருக்கலாம் எனத் தோன்றுகின்றது. இவையன்றி இறப்பிறப்பு, நிகழ்விறப்பு இவ்விருகாலங்களையும் குறித்திருக்குமோ எனவும் ஐயம் உண்டாகின்றது. உதாரணமாகப் பாணினியாசிரியர் லிட்[1] கூறுவோன்காலத்தில் நிகழாததைக் குறிக்கும் என்பர்[2]. அவ்வாறாயின் தன்மைமுன்னிலைகளில் லிட் வழங்கப்படாது இருத்தல் வேண்டும். வேதத்திலோ லிட்டில் தன்மைமுன்னிலை ரூபங்கள் பல காணப்படுகின்றன[3]. இவற்றை நோக்கி அவரே லுங் லங், லிட் இவை மயங்கும் என்கிறார்[4]. அன்றியும் லிட் ரூபத்திற்கு அ என்ற ஆகமம் சேர்க்கப்பட்ட ரூபங்கள் உள. ஆகலின் ஆகமம் சேர்க்கப்படாத லிட்ரூபங்கள் இறப்பு நிகழ்வினையும், ஆகமம் சேர்க்கப்பட்ட லிட்ரூபங்கள் இறப்பிறப்பினையும் குறித்திருக்கலாம் எனத் தோன்றுகின்றது. பிற்காலத்தில் ஆகமம் சேர்க்கப்பட்ட லிட்ரூபங்கள் இறந்ததையும், ஆகமம் சேர்க்கப்படாத லிட்ரூபங்கள் படர்க்கையிலே மாத்திரம் வழங்கப்பட்டு வெகுகாலத்திற்குமுன் நடந்த செயல்களைக் குறித்தலையும், பார்த்து பாணினியாசிரியர் லிட் கூறுவோனது காலத்தில் நிகழாததைக் குறிக்கும் எனக் கூறியிருத்தல் வேண்டும். கூறுவோன் கூறும் நாளிலே நடந்த இறப்பினை லங் குறிக்காது எனப் பாணினியாசிரியர் கூறும் கூற்றும் வேதகாலத்தில்

1. लिट्
2. परोक्षे लिट् (पा. अ. 3, 2, 115)
3. क्रत्वः समहदीनता प्रतीपं जगमाशुचे (ऋ. वे. 7, 89, 3)
   यं यज्ञं चकृमा वयम् (*ibid* 2, 5. 8)
   त्वां हि मन्द्रतममर्कशोकैर्ववृमहे (*ibid* 6, 4, 7)
   प्रसद्यो अग्ने......यस्मै चारुतमो बभूथ (*ibid* 5, 1, 9)
4. छन्दसि लुङ्लङ्लिटः (*ibid* 3, 4, 6)

இருந்தது எனக் கூற இயலாது[1]. அவ்வாறாயின் லங்ப்ரயோகத்திற்கும் லுங்ப்ரயோகத்திற்கும் வைதிகமொழிநிலையில் பொருளில் என்ன பேதம் இருந்தது என்பது ஆராய்தற்பாலது.

ஆனால் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இவை பெரும்பாலும் ஸந்தர்ப்பத்தால் குறிக்கப்பட்டன என்றும், இறந்தகாலம் மாத்திரம் அ என்ற ஆகமம் இருந்தவிடத்து அதனால் குறிக்கப்பட்டது என்றும், பிற்காலத்திலே தனிமொழிகளில் வினைரூபங்கள் காலத்தைக் குறித்தனவாகக் கொள்ளப்பட்டன என்றும் மொழிநூல்வல்லோர் கூறுவர்.

வைதிகமொழிநிலையில் வினைரூபங்கள் காலத்தைக் குறித்தன எனவே இலக்கணவாசிரியர்கள் கொண்டுள்ளனர். அது பொருத்தமே ஆகும்.

பொதுவாக இண்டோயூரோபியன்மொழிகளில் வினைரூபங்களிலிருந்து செயலின் ரீதியும் காலமும் அறியப்பட, பாணினியாசிரியர் அவ்விரண்டையும் பிரித்துக் குறிக்கவில்லை. ஆனால் அவர் ரீதியையும் காலத்தையும் வெவ்வேறென அறியவில்லை எனக் கூறவும் இயலாது. லிங், லோட் இவற்றின் பொருளைக் கூறும்போது ரீதியை அறிந்தார் என்பது வெளிப்படை. லட், லங், லுங், ல்ருட் இவற்றின் பொருளைக் குறிக்கும்போது காலத்தை அறிந்தார் என்பது வெளிப்படை. இருப்பினும் அவர் கூறிய பத்து லகாரத்தில் லட், லங், லுங், ல்ருட்

1. अपश्यं सप्रथस्तमम् (ऋ. वे. 1, 18, 9)
समुषद्भिरजायथाः (*ibid* 1, 6, 3)
चक्रमिवाभवत् (*ibid* 2, 5, 3)
धिया यद्विश्वे अमृता अकृण्वन् (*ibid* 4, 1, 10)
இவ்விடங்களிலுள்ள லங்ப்ரயோகங்களே இதற்குச் சான்று ஆகும்.

இவை நிகழ்ச்சிரீதியில் மூன்று காலங்களையும் குறிக்கும். லிங், லோட் இவை காலத்தைக் குறிப்பதாகத் தோன்றவில்லை. லிட் வெகுகாலத்திற்குமுன் நிகழ்ந்த செய்தியைக் குறிக்கும் என்றனர். இவற்றை நோக்கின் வேதங்களில் காணப்படும் பல வினைரூபங்களுக்கு அவர் இலக்கணம் இயற்றவில்லை என்றும் அவர் வகுத்த லகாரங்கள் ரீதியையும் காலத்தையும் பிரித்துக் காட்டவில்லை என்பதும் நன்கு அறியப்படும்.

அன்றியும் பொருளை மனத்திற்கொண்டே அவர் லகாரங்களை வகுத்தனரேயன்றி வினைகளின் உருவத்தைக்கொண்டு வகுக்கவில்லை. அக்காரணத்தால் ஒரே உருவங்கொண்ட पस्पन्दे, जिहीते என்பன வெவ்வேறு லகாரத்தைச் சேர்ந்தன என்றும், अभूत् என்பது தன்னினும் வேற்றுருவங்கொண்ட बभूव என்பதற்குப் பிரதியாக வழங்கப்படலாம் என்றும் கொள்ளப்படுகின்றன.

இதனை நோக்கி வினைகளின் உருவத்தைக் கொண்டு ப்ருக்மன் லகாரங்களை வேறுவிதமாகப் பிரித்தனர் அவ்வாறு பிரித்ததற்கு அவர் மூன்று காரணங்களைக் கூறினர் :—

(1) லங் ஆகிய अभात् என்பதற்கும் லுங் ஆகிய अस्थात् என்பதற்கும் உருவம் ஒன்றே.

(2) ஒரு மொழியில் லங் எனக் கருதப்படும் ரூபங்களின் இனம் மற்றொரு மொழியில் லுங் எனக் கருதப்படுகின்றது.

உ-ம். अजनत् अदृशत् என்பன வைதிகமொழியில் லங் ரூபங்கள் ; அவற்றிற்கு இனமான *egeneto*, *edaxe* என்ற சொற்கள் கிரேக்மொழியில் லுங் ஆகக் கருதப்படுகின்றன.

(3) ஒரே ரூபமே ஒரே மொழியில் லங் ஆகவும், லுங் ஆகவும் கருதப்படுகின்றது.

உ-ம். अपात् என்பது पा[1] என்பதன் லங் ஆகவும், पिव् என்பதன் லுங் ஆகவும் வைதிகமொழியில் கருதப்படுகின்றது.

வைதிகமொழிநிலையில் நிகழ்ச்சிக்குறிப்பில் நிகழ்காலம், இறந்தகாலம், நிகழ்விறப்புக்காலம், இறப்பிறப்புக்காலம்[2], எதிர் காலம் இவற்றில் ரூபங்கள் காணப்படுகின்றன. இறந்தகாலத் தில் இருவகை ரூபங்கள் உள.

உ-ம். நிகழ்காலம் **गच्छति**[3], **पुनाति**[4], **कृणुते**[5]

இறந்தகாலம் :

உ-ம். (1) **अगच्छत्**[6], **अजायत**[7], **अकृणोत्**[8]
(2) **अस्थात्**[9], **अजनिष्ट**[10]

1. पा என்ற தாதுவிற்கு வைதிகமொழியில் குடித்தல் என்ற பொருளும் ரக்ஷித்தல் என்ற பொருளும் உண்டு. இரண்டு பொருளிலும் மிகுதியாய் ருக்வேதத்திற் பிரயோகங்கள் உள.

   इमे सोमा अरंकृताः । तेषां पाहि (ऋ. वे. 1, 2, 1)

   द्रुहो रिषः संपृचः पाहि सूरीन् (*ibid* 2, 35, 6)

   दक्षिणा पात्वंहसः (*ibid* 1, 18, 5)

   तिस्रो देवीः स्वधया बर्हिरेदमच्छिद्रं पान्तु (*ibid* 2, 3, 8)

2. இதனை Pluperfect என்பர்.
3. स इद्देवेषु गच्छति (ऋ. वे. 1, 1, 4)
4. पुनाति धीरो भुवनानि (*ibid* 1, 160, 3)
5. अश्वैर्विमोचनं कृणुते तत्त्वस्य (*ibid* 3, 30, 12)
6. अगच्छदु विप्रतमः सखीयन् (ऋ. वे. 3, 31, 7)
7. पुरां भिंदुर्युवाकविरमितौजा अजायत (*ibid* 1, 11, 4)
8. सुगान् पथो अकृणोत् (*ibid* 3, 30, 10)
9. समिद्धो अग्निर्निहितः पृथिव्यां प्रत्यङ् विश्वानि भुवना व्यस्थात् (*ibid* 2, 3, 1)
10. होताजनिष्ट चेतनः (*ihid* 2, 5, 1)

நிகழ்விறப்புக்காலம் :

உ-ம். जघन्थ [1], चकार [2], चक्रिरे [3]

இறப்பிறப்புக்காலம் :

உ-ம் अजग्रभम्, अजग्रभीत् [4], अचक्रिरन् [5]

எதிர்காலம் :

உ-ம். करिष्यसि [6], वासयिष्यसे [7, 8]

எதிர்காலம் பின்னர் இருவகையாகப் பிரிக்கப்பட்டன :— எதிர்வு அனைத்தையும் குறிப்பது ஒன்று ; பேசுவோன் பேசும் தினத்தில் நிகழும் எதிர்வைக் குறிக்காதது மற்றொன்று ; இவற்றுள் முன்னருள்ளதே ருக்வேதஸம்ஹிதையில் உள்ளது. பின்னருள்ளது பிராம்மணங்களில் வந்துளது. அதன் ரூபங்களில் சில இரு சொற்களாக இருந்து, பிறகு அவ்விரண்டும் ஒரு சொல் என்ற மயக்கத்தால், அதனையொட்டி மற்ற ரூபங்கள் வந்திருத்தல் வேண்டும். உதாரணமாக ருக்வேதஸம்ஹிதையில்

अवितासि सुन्वतो वृक्तबर्हिषः (8, 35, 1)
गन्तारा हि स्थः (1, 17, 2)

1. अभिवृत्रं ...... इन्द्रतवसा जघन्थ (*ibid* 3, 30, 8)
2. चकार गर्भं सनितुर्निधानम् (*ibid* 3, 31, 2)
3. रुद्रासो अधि चक्रिरे सदः (*ibid* 1, 85, 2)
4. य इमे रोदसी मही समीची समजग्रभीत् (*ibid* 8, 6, 2)
5. या इन्द्र प्रस्वस्त्वा सा गर्भमचक्रिरन् (*ibid* 8. 6, 5)
6. यदङ्ग दाशुषे त्वमग्ने भद्रं करिष्यसि (*ibid* 1, 1, 6)
7. यज्ञोभिर्वासयिष्यसे (*ibid* 9, 2, 4)
8. இதனைப் பாணினியாசிரியர் லுட் என்பர். மொழிநூல்வல்லோர் **Second future** என்பர்.

என்ற ப்ரயோகங்கள் இருக்கின்றன. இங்கு अविता, असि எனவும் गन्तारा स्थ: எனவும் இருக்க अवितासि என்றதை ஒரு பதம் என மயங்கி अवितास्थ:, अवितास्थ என்ற ரூபங்களும், अवितास्मि என்றதை ஒரு பதம் என மயங்கி अवितास्व:, अवितास्म: என்ற ரூபங்களும் வந்திருக்கவேண்டும். இந்த ரூபங்களுக்கு லுட் என்ற பெயரை இட்டு இவை கூறுவோன் பேசும் நாளில் நிகழும் எதிர்வைக் குறிக்காது எனப் பாணினியாசிரியர் கூறினர்[1].

வேண்டுகோள்ரீதியில் நிகழ்காலத்தில் करति[2], भवासि[3] முதலிய ரூபங்களும் எதிர்காலத்தில் वक्षति[4] முதலிய ரூபங்களும் உள்ளன. गमत्[5], योषत्[6] போன்ற ரூபங்களும் காணப்படுகின்றன. அவை இறந்தகாலத்தைக் குறித்ததாகத் தோன்றவில்லை.

ஏவல்குறிரீதியில் நிகழ்காலத்திலும் நிகழ்விறப்புக்காலத்திலும் ரூபங்கள் உள்ளன.

உ-ம். पिब[7], रक्षतात्[8], मुमुग्धि[9], जुहोत[10], जुहोतन[11]

1. अनद्यतने लुट् (पा. अ. 3, 3, 15)
2. अपां नपादाशुहेमाकुवित्ससुपेशसस्करति (ऋ. वे. 2, 35, 1)
3. विशश्च यस्या अतिथिर्भवासि (*ibid* 5, 3, 5)
4. स देवाँ एह वक्षति (*ibid* 1, 1, 2)
5. देवो देवेभिरागमत् (*ibid* 1, 1, 5)
6. न वा उ योषद्रुद्रादसुर्यम् (*ibid* 2, 33, 9)
7. पिबा मित्रस्य धामभिः (*ibid* 1, 14, 10))
8. बृहस्पते रक्षतादस्य योनिम् (*ibid* 4. 50, 2)
9. विश्वा द्वेषांसि प्रमुमुग्ध्यस्मत् (*ibid* 4, 1, 4)
10. जुहोत प्रचतिष्ठत (*ibid* 1, 15, 9)
11. सुसमिद्धाय शोचिषे घृतं तीव्रं जुहोतन (*ibid* 5, 5, 1)

ஏவல்கண்ணுவியங்கோள்ரீதியிலும் நிகழ்காலத்தி லும் நிகழ்விறப்புக்காலத்திலும் ரூபங்கள் உள்ளன.

உ-ம். स्याम [1], वदेम [2], दधीत [3], चक्षमीथाः [4]

ஏவல்கண்ணியவியங்கோள்ரீதியில் பின்னருள்ள ரூபங்கள் காணப்படும்.

உ-ம். नशन् [5], सचन्त [6], भूत् [7], ववृत्याः [8]

இவற்றுள் இதிஹாஸமொழிநிலையில் வேண்டுகோள் குறிரீதியும் ஏவல்கண்ணியவியங்கோள்ரீதியும், இறப்பிறப்புக் காலமும் இறந்தன எனலாம். நிகழ்விறப்புரூபங்களின் பொருளும் மாறுபட்டது. ஏவல்குறிரீதியை உண்மையாய்க் கவனித்தால், அதனில் முன்னிலையொருமைரூபமும் படர்க்கை யொருமைரூபமுமே இருத்தற்குப் பெரும்பாலும் தகுதி யுடைமையின், தற்போது ஏவல்குறிரீதியாய் வழங்குவதின் தன்மைரூபங்கள் வேண்டுகோள்ரீதியின் ரூபங்கள் என்றும் முன்னிலைபடர்க்கை இவற்றின் இருமைப்பன்மைரூபங்கள் ஏவல்கண்ணியவியங்கோளின் ரூபங்கள் என்றும் மாக்டானல் கூறினர்.

1. उभयासो जातवेदः स्याम (ऋ. वे. 2, 2, 12)
2. बृहद्वदेम विदथे सुवीराः (*ibid* 2, 1, 16)
3. चनो दधीत (*ibid* 2, 35, 1)
4. मा वृषभ चक्षमीथाः (*ibid* 2. 33, 7)
5. नारातयो विनशन्नानृतानि (*ibid* 2, 35, 6)
6. सचन्त धेनवः (*ibid* 2, 5, 5)
7. वर्धनी भूत् (*ibid* 10, 4, 7)
8. आ नो ववृत्याः सुविताय (*ibid* 1, 173, 13)

ப்ருக்மன் கூறும் வினைவகையைப்பற்றிக் கூறுதற்கு முன்னர் முதல்வினை [1], கிளைவினை [2] இவற்றைப்பற்றியும், தற்போது வழங்கப்படும் தாதுக்களைப்பற்றியும் சிறிது கூறுதல் தகும்.

முதல்வினையும் கிளைவினையும் : முதல்வினை தாதுவிற்கு अ, य முதலிய விகரணத்தையும் வினைவிகுதியையும் சேர்க்க உண்டாகும். கிளைவினை இருவகையில் ஆக்கப்படும் :—முதல் வினையைப்போன்று தாதுவிற்கு सन् முதலிய ப்ரத்யயத்தையும் வினைவிகுதியையுஞ் சேர்த்து ஆக்கப்படுவது ஒன்று; பெயர்க்கு வினைவிகுதியைச் சேர்த்து ஆக்கப்படுவது மற்றொன்று.

முதல் வகையில் கருத்தாவின் விருப்பம் [3], செயல், அடிக்கடி நிகழுந்தன்மை, நன்குநிகழுந்தன்மை [4], பிறவினையாந்தன்மை [5] இவற்றைக் குறிக்கப் பெரும்பாலும் ப்ரத்யயங்கள் சேர்க்கப்படும்; சிலவிடத்தில் அப்பிரத்யயம் லோபத்தையும் அடையும். அக்காரணம்பற்றி வடமொழியில் கருத்தாவின் விருப்பத்தைக் குறிக்கும் வினையை सन्नन्तक्रिया [6] என்றும், அடிக்கடி நிகழுந்தன்மை நன்குநிகழுந்தன்மை இவற்றைக் குறிக்கும் வினையை यङन्तक्रिया, यङ्लुगन्तक्रिया [7] என்றும், பிறவினையை ण्यन्तक्रिया [8] என்றுங் கூறுவர். இவ்வினைகளில் பெரும்பாலும் தாது இரட்டிக்கும். ஸந்நந்தக்ரியை முதலியவற்றில் விருப்பம் முதலியன

1. Primitive or primary verb.
2. Derivative or secondary verb.
3. धातोः कर्मणः समानकर्तृकादिच्छायां वा (पा. अ. 3, 1, 7)
4. धातोरेकाचो हलादेः क्रियासमभिहारे यङ् (*ibid* 3, 1, 22)
(पौनःपुन्यं भृशार्थश्च क्रियासमभिहारः)
यङोऽचि च (*ibid* 2, 4, 74)
5. हेतुमति च (*ibid* 3, 1, 26)
6. Desiderative verb.
7. Intensive, iterative, frequentative verb.
8. Causative verb.

முன்னர் ப்ரத்யயத்தாற் குறிக்கப்படாது ஸந்தர்ப்பம் முதலிய வற்றாலே குறிக்கப்பட்டது என்றும் பின்னரே ப்ரத்யயத்தாற் குறிக்கப்பட்டதாகக் கருதப்பட்டது என்றும் மொழிநூல்வல்லோர் கூறினர்.

இரண்டாவது வகையில் பெயர்க்கும் வினைவிகுதிக்கும் இடையில் ய என்ற ப்ரத்யயம் பெரும்பாலும் சேர்க்கப்படும். அவ்வினைகள் பல பொருளைக் குறிக்கும்.

உ-ம். पुत्रीयति[1], धनायति[2]

சிலவிடத்து ப்ரத்யயம் இன்றியும் வரும்.

உ-ம். अवगल्भते, क्लीबते[3]

மொழிசரிதத்தைக் கூறும் இலக்கணத்தில் மொழியில் வழங்கப்படும் ரூபங்களின் உற்பத்தியையும் காலக்ரமத்தில் நேர்ந்த ரூபமாறுபாட்டினையுங் கூறுதலாற் பயன் உண்டேயன்றி தற்போதுள்ள ரூபத்தை எவ்வாறு பகுத்துக் கூறுவது என்பதைப்பற்றிக் கூறுதலாற் பயன் இல்லாமையால் ப்ரூக்மன் வினையை முதல்வினை, கிளைவினை எனப் பிரித்தலாற் பயன் இல்லை என்பர் சிலர்.

**தற்போது தாதுக்களாக வழங்கப்படுவனவற்றின் தன்மை :** ஒவ்வொரு மொழியிலும் தொடக்கத்தில் வாக்கியங்களே உள்ளன ; காலக்ரமத்தில் இலக்கணவாசிரியர்கள் அவற்றைப் பதங்களாகவும், பதங்களைப் பகுதி விகுதியாகவும், பகுதியைத் தாது ப்ரத்யயம் ஆகவும் பிரித்தனர் என முன்னரே கூறப்பட்டது. அவர்கள் தாதுவாகக் கருதியவற்றை மேலும் பிரித்தற்கு இயலாது எனக் கொள்வது தவறாகும். பல இன

1. पुत्रमात्मन इच्छति
2. अशनायोदन्यधनाया बुभुक्षापिपासागर्धेषु (पा. अ. 7, 4, 34)
3. आचारेऽवगल्भक्लीबहोडेभ्यः क्विब् वा वक्तव्यः

மொழிகளின் ஆராய்ச்சியால் இலக்கணவாசிரியர் கொண்ட தாதுக்களை, தாது விசேஷப்ரத்யயம் இவற்றைக் கொண்டனவாகப் பிரித்தல் கூடும். உதாரணமாக treseti என்பதில் tres என்பது தாதுவாகக் கருதப்படுகின்றது. வைதிகமொழி तरल, லத்தீன் tr-emō, லிதுவேனியன் tr-imu, ஆங்கிலம் tremble இவற்றை ஒத்துப்பார்த்தால் tres என்பதில் tr என்பது தாது என்றும் es என்பது விசேஷப்ரத்யயம் என்றும் கூறல் தகும். வடமொழியில் ग्रह्, ग्रस्, ग्रथ्, இம்மூன்றும் பிடித்துக் கோள்ளுதல் என்ற செயலின் வெவ்வேறு வகையைக் குறித்தலின், இலக்கணவாசிரியர்கள் அவற்றுள் ग्र என்பது ஸாமான்ய தாது என்றும், ह्, स्, थ् என்பன விசேஷப்ரத்யயம் என்றும் பிரிப்பின் குற்றமாகாது. அவ்வாறே अण्, रण्, वण्, भण्, मण्, कण्, क्वण्, व्रण्, भ्रण्, ध्वण् இவையெல்லாம் ஒலிப் பொருளைக் கொண்ட தாதுக்கள் எனக் கொள்ளப்பட்டன; ஈண்டு अण् என்பது ஒலிஸாமான்யத்தைக் குறிக்கும் தாது என்றும், र्, व्, भ्, म्, क्, क्व्, व्र्, भ्र्, ध्व् இவை விசேஷப்ரத்யயம் என்றுங் கொள்ளல் தகும். அவ்வாறே अय् वय्, पय्, मय्, चय्, तय्, णय् இவற்றுள் अय् என்பது கதிஸாமான்யத்தைக் குறிக்கும் தாது என்றும் व्, प् முதலியன விசேஷப்ரத்யயம் என்று கொள்ளலாம் அவ்வாறே चम्, छम्, जम्, झम् என்பவற்றுள் अम् என்பது உண்டல் ஸாமான்யத்தைக் குறிக்கும் தாது என்றும் च्, छ्, ज्, झ् என்பன விசேஷப்ரத்யயம் எனவும் கொள்ளலாம். இவ்வாறு செய்யின் பாணினியாசிரியரின் தாதுபாடம் மிகக் குறையும். இவ்வாறு தமிழ்மொழிதாதுக்களாகிய குடி, குனி, குதி முதலிய தாதுக்களைப்பற்றி டாக்டர் கால்ட்வெல் அவரது நூலிற் கூறியது நோக்கத்தக்கது.[1]

1. அடு, அடங்கு, அடக்கு, அடி, அடை, அடர், அடுக்கு, அண்டு — இவற்றில் அட் என்பது அண்மையைக் குறிக்கும் ஸாமான்யதாது என்றும், உ, இ, ஐ முதலியன விசேஷப்ரத்யயங்கள் என்றும் கூறுவர். அவ்வாறே அணு, அணி, அணை, அணவு, அண்மு முதலியவற்றிலும் அண் என்பது ஸாமான்யதாது (generic root) என்பர்.

பாணினியாசிரியர் செய்த தாதுபாகுபாடு: தாதுக்கள் பெரும்பாலும் வினைவிகுதியை ஏற்பதற்குமுன் இடையில் ஒரு ப்ரத்யயத்தைக் கொள்ளும். அதற்கு விகரணம்[1] எனப் பெயர். அவ்வாறு ஒன்பது விகரணங்கள் உள. சில தாதுக்கள் விகரணம் ஒன்றையுஞ் சேர்க்காது நேரில் வினைவிகுதிகளை ஏற்கும். விகரணமின்மையை அவர் லுக்விகரணம்[2] என்பர். அக்காரணம்பற்றித் தாதுக்களை சப்விகரணம்[3], லுக்விகரணம்[4], ச்லுவிகரணம்[5], ச்யன்விகரணம்[6], ச்நுவிகரணம்[7], சவிகரணம்[8], ச்நம்விகரணம்[9], உவிகரணம்[10], ச்நாவிகரணம்[11], ஸ்வார்த்தணிஜந்தம்[12] என்பர். அத்தாதுக்களைக் கணக்கிட்டுக் கொடுக்கும் தாதுபாடத்தில் அந்தந்த விகரணங்கள் தொடங்கும் தாதுவைக் கொண்டும் அவற்றிற்குப் பெயர் கொடுத்தனர். அவை: ப்வாதிகள்[13], அதாதிகள்[14], ஜுஹோத்யாதிகள்[15], திவாதிகள்[16], ஸ்வாதிகள்[17], துதாதிகள்[18], ருதாதிகள்[19], தநாதிகள்[20], க்ரயாதிகள்[21], சுராதிகள்[22] ஆகும்.

இப்பாகுபாடு பெரும்பாலும் இதிஹாஸமொழிநிலையில் உள்ள தாதுக்களின் வழக்கினைக்கொண்டு பாணினியாசிரியரும் அவருக்கு முன் இருந்த இலக்கணவாசிரியருள் சிலரும் செய்திருக்கலாம் எனல் பொருந்தும். ஏனெனில் இவர்

1. விகரணம் = विकरण: = Conjugational sign
2. லுக்விகரணம் = लुग्विकरण:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3. | शब्विकरणा: | 4. | लुग्विकरणा: | 5. | श्लुविकरणा: |
| 6. | श्यन्विकरणाः | 7. | श्नुविकरणाः | 8. | शविकरणाः |
| 9. | श्नमूविकरणाः | 10. | उविकरणाः | 11. | श्नाविकरणाः |
| 12. | स्वार्थणिजन्ताः | 13. | भ्वादयः | 14. | अदादयः |
| 15. | जुहोत्यादयः | 16. | दिवादयः | 17. | स्वादयः |
| 18. | तुदादयः | 19. | रुधादयः | 20. | तनादयः |
| 21. | क्र्यादयः | 22. | चुरादयः | | |

*உவிகரணமாகப் படித்த कृ என்ற தாது ருக்வேதஸம்ஹிதையில் பெரும்பாலும் ச்நுவிகரணமாகவும் சிறுபான்மை லுக்விகரணமாகவும் வழங்கப்பட்டுளது.*

உ-ம். (1) कृणवाम [1], कृणु [2], कृणुहि [3], कृणुष्व [4], कृणुध्वम् [5], कृणोमि [6], कृणोषि [7], कृणुते [8]

(2) कृधि [9], कृतम् [10]

*அவ்வாறே गम् லுக்விகரணமாகவும், சப்விகரணத்தில் गच्छ् என்ற ஆதேசத்துடனும் ஆதேசமின்றியும் வழங்கப்பட்டுளது.*

உ-ம். (1) गहि [11], गतम् [12], गत [13]

1. स्वाहा वयं कृणवामा हवींषि (ऋ. वे. 10, 2, 2)
2. समृध्धो विश्पते कृणु (*ibid* 6, 2, 10)
3. अग्ना कृणुहि वीतये (*ibid* 1, 13, 2)
4. आ नः कृणुष्व (*ibid* 2, 2, 6)
5. हिरण्यरूपमवसे कृणुध्वम् (*ibid* 4, 3, 2)
6. नव्यं कृणोमि (*ibid* 3, 31, 19)
7. दम्पती समनसा कृणोषि (*ibid* 5, 3, 2)
8. अभिराविर्विश्वानि कृणुते महित्वा (*ibid* 5, 2, 9)
9. स तत्कृधीषितः (*ibid* 6, 5, 6)
10. अस्मान्त्सुजिग्युषस्कृतम् (*ibid* 1, 17, 7)
11. देवेभिरग्न आ गहि (*ibid* 1, 14, 3)
12. उप प्रयोभिरागतम् (*ibid* 1, 2, 4)
13. विश्वेदेवास आगत (*ibid* 1, 3, 7)

(2) गच्छति [1], गच्छन्ति [2], अगच्छत् [3]
(3) गन्तम् [4], गमेम [5], गमन्तु [6]

அவ்வாறே अश् சநுவிகரணமாயும் லுக்விகரணமாயும் வழங்கப்பட்டுளது.

(1) अश्नोति [7]
(2) अश्याम् [8], अश्याम [9], अशीय [10], आशत [11]

அவ்வாறே श्रु தாது சநுவிகரணமாயும் லுக்விகரணமாயும் வழங்கப்பட்டுள்ளது.

உ-ம். (1) शृणोमि [12], शृणवाम [13], शृणोत [14]
(2) श्रुधि [15], श्रोषि [16], श्रोतु [17], श्रुवन्तु [18]

1. स इद्देवेषु गच्छति (*ibid* 1, 1, 4)
2. आगच्छन्तीमवसा चित्रभानवः (*ibid* 1, 85, 11)
3. अगच्छदुविप्रतमः (*ibid* 3, 31, 7)
4. आनो गन्तं रिशादसा वरुणमित्र (*ibid* 5, 71, 1)
5. गमेम (*ibid* 5, 76, 5)
6. त आ गमन्तु (*ibid* 10, 15, 5)
7. नैनमंहो अश्नोति (*ibid* 3, 59, 2)
8. अभि पाथो अश्याम् (*ibid* 1, 154, 5)
9. अश्याम वाजम् (*ibid* 6, 5, 7)
10. घृणीवच्छायामरपा अशीय (*ibid* 2, 33, 6)
11. त उक्षितासो महिमानमाशत (*ibid* 1, 85, 2)
12. भिषक्तमं त्वा भिषजां शृणोमि (*ibid* 2, 33, 4)
13. आ ते कारो शृणवामा वचांसि (*ibid* 3, 33, 10)
14. ओषु स्वसारः कारवे शृणोत (*ibid* 3, 33, 9)
15. इमं मे वरुण श्रुधी हवम् (*ibid* 1, 25, 19)
16. महिनः श्रोष्यग्ने (*ibid* 6, 4, 7)
17. अदितिः श्रोतु मे हवम् (*ibid* 5, 46, 6)
18. त आगमन्तु त इह श्रुवन्तु (*ibid* 6, 49, 1)

भी என்ற தாது சப்விகரணத்தில் வழங்கப்பட்டது.
உ-ம். भयन्ते [1]

नम् தாது ச்யங்விகரணத்திலும் வழங்கப்பட்டது.
உ-ம். नमन्ते [2], नम्यन्ते [3]

रम् தாது ச்நாவிகரணத்தில் வழங்கப்பட்டது.
உ-ம். अरम्णात् [4]

भिद् சப்விகரணத்தில் வழங்கப்பட்டது.
உ-ம். भेदति [5]

मृ சப்விகரணத்தில் வழங்கப்பட்டது.
உ-ம். मरते [6]

तरेम என்பது तरुषेम [7] என வழங்கப்பட்டது.

दुह् என்பது சவிகரணத்தில் வழங்கப்பட்டது.
உ-ம். अदुहत् [8]

இவற்றைக்கொண்டே பாணினியாசிரியர் விகரணங்கள் வேதத்தில் மாறுபடும் எனக் கூறியிருத்தல் வேண்டும் [9].

1. शुष्मांचिदस्य पर्वता भयन्ते (*ibid* 2, 12, 13)
2. तस्मै विशः स्वयमेवानमन्ते (*ibid* 4, 50, 8)
3. नम्यन्तेऽस्मै कामाः (तै. 3, 3)
4. यः पर्वतान् प्रकुपिताँअरम्णात् (ऋ. वे. 2, 12, 2)
5 आण्डा शुष्मस्य भेदति (*ibid* 8, 39, 11)
6. जरसा मरते पतिः (*ibid* 10, 86, 11)
7. इन्द्रेण युजा तरुषेमं वृजम् (*ibid* 7, 48, 2)
8. इदं पृश्निरदुहत् (अ. वे. 2, 1, 1)
9. व्यत्ययो बहुलम् (पा. अ. 3, 1, 85)

இவற்றை நோக்கின் வைதிகமொழிநிலையில் தாதுக்கள் பலவகையாக வழங்கப்பட்டிருக்க, பின்னர் அவற்றின் ரூபங்கள் பல இறந்தும் பல மாறுபட்டும் இதிஹாஸமொழியில் வழங்கின என்பது நன்கு அறியப்படும்.

ப்ரூக்மனின் லகாரவிபாகம்: வினையின் பகுதி மூன்று வகையாகக் காணப்படுகின்றன. அவை கேவலதாதுப்பகுதி[1], ஸிச்ப்ரத்யயங்கலந்ததாதுப்தகுதி[2], இரட்டித்ததாதுப்பகுதி[3] ஆகும்.

இவற்றுள் கேவலதாதுப்பகுதி சிலவிடத்து நிகழ்ச்சிக்குறிரீதியில் விகுதிகளைச் சேர்த்தற்குமுன் இண்டோயூரோபியன் மொழியில் தன்மையொருமையில் ō-ஐயும், ஏனைய இடங்களில் o அல்லது e-ஐயும் கொள்ளும். வேண்டுகோள்குறிரீதியில் தன்மைப்பன்மைமுன்னிலைப்பன்மைகளிலும் ō உண்டு. ஏவல் கண்ணுவியங்கோள்ரீதியில் o-இன் பின்னர் விகுதி மெய்யில் தொடங்கினுல் இடையில் i-ஐயும் சேர்க்கும். இவற்றிற்குத் தீமேடிக்வினை[4] எனப் பெயரிட்டனர். இடையில்வந்த உயிரைத் தீமேடிக் உயிர் என்றனர்.

உ-ம். கிரேக்: நிகழ்ச்சிக்குறிரீதி

| | | | |
|---|---|---|---|
| தன்மையொருமை | *ferō* | வை. | भरामि |
| தன்மைப்பன்மை | *feromen* | வை. | भरामः |
| முன்னிலையொருமை | *efere-s* | வை. | भरसि |

1, Present stem (including imperfect and aiorst-present) = केवलधातुप्रकृतिकः

2. S-Aorist stem = सिज्विशिष्टधातुप्रकृतिकः

3. Perfect stem = अभ्यस्तधातुप्रकृतिकः

4. Thematic verb.

வேண்டுகோள்குறிப்பு

| | | | |
|---|---|---|---|
| தன்மைப்பன்மை | *ferō-men* | வை. | भरामहि ) भराम ) |
| முன்னிலைப்பன்மை | *ferē-te* | வை. | भराथ |

ஏவல்கண்ணுவியங்கோள்ரீதி

| | | | |
|---|---|---|---|
| முன்னிலையொருமை | *feroi-s* | வை. | भरेः |

சிலவிடத்து அக்கேவலதாதுப்பகுதி நீமேடிக் உயிரை ஏற்பதில்லை. அவற்றிற்கு அதீமேடிக்வினை[1] எனப் பெயரிட்டனர். இவ்வினை பெரும்பாலும் நிகழ்ச்சிக்குறிப்பில் தன் ரூபங்களில் அச்விபரிணமத்தைக் கொண்டது.

பரஸ்மைபதவிகுதியை ஏற்கும்போது ஒருமைகளில் பகுதியில் உதாத்தஸ்வரத்தைப் பெற்றும் இருமைபன்மைகளில் விகுதியில் அதனைப் பெற்றும் நிற்கும்.

உ-ம். द्वेष्मि, द्विष्वः, द्विष्मः

வேண்டுகோள்குறிப்பில் பகுதியே உதாத்தஸ்வரத்தை ஏற்கும்.

உ-ம். द्वेषति

ஏவல்கண்ணுவியங்கோளில் பரஸ்மைபதவிகுதியேற்கும் போது ஒருமைகளில் *iē*, *iiē* என்பனவற்றையும் ஏனையவற்றில் மெய்யில் தொடங்கும் விகுதிகளுக்குமுன் *ī*-ஐயும், உயிரில் தொடங்கும் விகுதிகளுக்குமுன் *ii* அல்லது *ī*-ஐயும் இடையில் ஏற்கும்.

உ-ம். द्विष्याम्, द्विषीम

1. Athematic verb.

ஆனால் இதிஹாஸமொழிநிலையில் அதிதேசத்தால் இருமை பன்மைகளிலும் [illegible] ஏ சேர்க்கப்பட்டது. பெரும்பாலும் ஒரே தாதுவிற்கு அதீமேடிக்வினைப்பகுதியோடு தீமேடிக் உயிர் சேர்த்த பகுதியும் காணப்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | வை. | वेत्ति | विदति |
| | ,, | कृणोति | कृण्वति |
| | ,, | मृणाति | मृणति |
| | கிரேக் | *i-stē-si* | तिष्ठति |

இவ்விரண்டு வகையும் படர்க்கைப்பன்மையில் ஒரே ரூபங் கொண்டன.

வைதிகமொழியில் தீமேடிக் பகுதி லட், லங், லோட், விதிலிங் இவற்றில் சப்விகரணம், ச்யங்விகரணம், சவிகரணம் ஸ்நந்தம், யஙந்தம், நாமதாது இவற்றிலும், ல்ருட்-இலும் காணப்படுகின்றது. ஆனால் வைதிகமொழியில் ஒரே தாதுவில் தீமேடிக்பகுகியுங் அதீமேடிக்பகுதியுங் காணப்படுகின்றன [1].

இதிஹாஸமொழிநிலையில் அவற்றுள் ஒன்றே காணப்படுகின்றது. அன்றியும் வைதிகமொழிநிலையில் அதீமேடிக் பகுதி

1. पिबा मित्रस्य धामभिः (ऋ. वे. 1, 14, 10)
तेषां पाहि (*ibid* 1, 2, 1)
स इद्देवेषु गच्छति (*ibid* 1, 1, 4)
देवेभिरग्न आगहि (*ibid* 1, 14, 2)
सूपायनो भव (*ibid* 1, 1, 9)
युवाभ्यां भूत्वश्विना (*ibid* 8, 26, 16

யைக் கொண்ட சில தாதுக்கள் இதிஹாஸமொழிநிலையில் தீமேடிக்பகுதியைக் கொண்டும், ஆங்குத் தீமேடிக்பகுதியையுங் கொண்டன; பின்னர் அதீமேடிக் பகுதியையுங் கொண்டன.

| | வை. நிலை | இதி. நிலை |
|---|---|---|
| உ-ம். | अरम्णात्[1] | अरमत |
| | भयन्ते[2] | बिभ्यन्ति[3] |
| | हृणीषे[4] | हरसि |

கேவலதாதுப்பகுதியின் பாகுபாடு: கேவலதாதுப்பகுதியை 32 வகையாக ப்ருக்மன் பிரித்தனர்.

அவை: (1) தாது மாத்திரம் பகுதியாக இருத்தல்.

உ-ம். இ.யூ. ei-mi வை. एमि

(2) தாதுவும் தீமேடிக்உயிரும் சேர்ந்து பகுதியாயிருத்தல்.

உ-ம். भरति, स्फुरति[5]

1. यः पर्वतान् प्रकुपिताँ अरम्णात् (ऋ. वे. 2, 12, 2)
2. शुष्माच्चिदस्य पर्वता भयन्ते (*ibid* 2, 12, 13)
3. இந்த ருபமும் வைதிகமொழிநிலையில் இருந்திருக்கலாம் என்பது, இ. யூ. மொழிநிலையில் *bhi-bhai-mi* என்ற ருபத்தை மொழிநூல்வல்லோர் கொள்ளுதலால் அறியப்படும்.
4. न हृणीषे (*ibid* 2, 33, 15)
5. भरति இல் உதாத்தம் தாதுவிலும், स्फुरति இல் தீமேடிக் உயிரிலும் இருத்தல் நோக்கத்தக்கது.

   दशति, गिरामि, हिनोति என்பன அதிதேசத்தால் உதாத்த ஸ்வரத்தில் மாறி दशति, गिरामि, हिन्वति என ஆயின என்பர்.

(3) அப்யாஸத்தில் இகர-உகரங்களைக் கொண்ட தாது பகுதியாயிருத்தல்.

உ-ம். இ.யூ. bhi-bhâi-mi வை. बिभेमि

வடமொழியில் படர்க்கைப்பன்மை நீமேடிக் உயிரைக் கொண்டது. உ-ம். बिभ्यति

(4) அப்யாஸத்தில் இகர-உகரங்களையும் நீமேடிக் உயிரைங் கொண்ட தாது பகுதியாயிருத்தல்.

உ-ம். तिष्ठति, पिबति, अतीतरत्, अपिप्रत

(5) அப்யாஸத்தில் இண்டோயூரோபியன்மொழியில் e கரத்தையும் வைதிகமொழியில் அகரத்தையும் கொண்ட தாது பகுதியாயிருத்தல்.

உ-ம். बभस्ति, अजक्षुः

(6) அப்யாஸத்தில் அகரத்தையும் நீமேடிக் உயிரையுங் கொண்ட தாது பகுதியாயிருத்தல்.

உ-ம். अवोचत्, ददति

(7) முழுமையும் இரட்டித்த தாது பகுதியாயிருத்தல்.

உ-ம். चर्कर्मि, जङ्घन्ति

(8) முழுமையும் இரட்டித்த தாது நீமேடிக் உயிரை ஏற்று பகுதியாயிருத்தல்.

உ-ம். जोहुवत्, आममत्

(9) கேவலதாது இ. யூ. மொழிநிலையில் i அல்லது ī-ஆல் தொடரப்பட்டதும், அப்யாஸத்துடன் அவ்வாறு உள்ளதும் பகுதியாயிருத்தல்.

உ-ம். ब्रवीति[1], गृहीथाः, अमीति, वमिमि, जज्ञिरे

(10) கேவலதாது ā, ē, ō இவற்றால் தொடரப்பட்டு பகுதியாயிருத்தல்.

உ-ம். இ. யூ. dr-ā-ti  வை. द्राति
வை. म्लाति  म्लायति
,, ध्याति  ध्यायति

(11) அப்யஸ்ததாது ā, ē, ō இவற்றால் தொடரப்பட்டு பகுதியாயிருத்தல்.

உ-ம். இ யூ. Ci-C-ā-ti  வை. जिगाति

(12) தாதுவோடு nā, nī, n சேர்ந்து பகுதியாதல். இவை வைதிகமொழியில சநாவிகரணம் ஆகும்.

உ-ம். गृणामि[2], गृणीमः[3]

1. ब्रूमः போன்றதன் அதிதேசத்தால் ब्रवीमि என்பது हितं वयस्यभावेन ब्रूमि (रामा. 4, 7, 14) போன்றவிடத்து ब्रूमि எனவும், ब्रवीति என்பதன் அதிதேசத்தால் ब्रूहि என்பது ब्रवीहि எனவும் வழங்கும்.
முன்னிலைப்படர்க்கையில் ஒரே ரூபங்களைக் கொண்ட आस् என்பது இம்முறையைக்கொண்டு இடையில் ई-ஐச் சேர்த்து பின்னர் மயக்கமின்றி आसीः आसीत् என வழங்குகின்றது.
2. गृणाति என்றவிடத்து உள்ள தாது गृ என்ற பெயரிலிருந்து வந்தது.
3, ṝ வைதிகமொழியில் ṛ ஆக மாறுதலான், கண்டு இகரம் நீண்டது என்பர்.

(13) தாதுவோடு *nu* சேர்ந்து பகுதியாதல்.

உ-ம். शृणोति[1]

(14) தாதுவோடு *nnu, enu, onu* இவற்றைச் சேர்த்துப் பகுதியாதல்.

உ-ம். कृपणंते[2]

(15) தாதுக்குள் நகாரத்தைக்கொண்டு பகுதியாதல். இவை வைதிகமொழியில் சநம்விகரணம் ஆகும்.

உ-ம். भिनद्मि

(16) தாதுக்கள் நகரத்தைக் கொண்டும் நீடேடிக் உயிரைச் சேர்த்தும் பகுதியாதல்.

| உ-ம். | இ. யூ. | வை. |
|---|---|---|
| | *leip* | लिम्पति |
| | *peik* | पिंषति |
| | *ueid* | विन्दति |
| | *seiq* | सिञ्चति |
| | *kueid* | स्विन्दते |
| | *jeuG* | युञ्जति |
| | *qert* | कृन्तति |

1. மொழிநூல்வல்லோர் शृणोति என்றவிடத்து தாதுவை शृ என்றும் பாணினியாசிரியர் शृणु என்றுங் கொள்வர்.
2. बधान என்றவிடத்துள்ள आन என்பதை 14-ம் வகையில் நீடேடிக் உயிரேற்ற லோட் என்றேனும், $\bar{a}na = \mathring{n} + na$ என்றேனுங் கொள்ளலாம்; ना என்பது, உதாத்தஸ்வரம் நீங்க, $\mathring{n}$ ஆதலும், न என்பது दधातन என்றவிடத்துள்ள न ஆகவும் கூடும்.

(17) தாதுவோடு *neu*, *nu* இவற்றைச் சேர்த்து பகுதியாதல். இவை வைதிகமொழியில் ச்நுவிகரணம் ஆகும்.

உ-ம். सुनोमि, तनोमि[1]

(18) தாதுவோடு *neu-o* அல்லது *nu-o* ஐச் சேர்த்து பகுதியாதல்.

உ-ம். चिन्वति, ऋण्वति, हिन्वति

(19) தாதுவோடு *s*, *es*, *os* இவற்றுள் ஒன்றைச் சேர்த்து பகுதியாதல்.

உ-ம். द्वेष्टि[2], वस्ते[3]

(20) தாதுவோடு *so*, *eso* இவற்றுள் ஒன்றைச் சேர்த்து பகுதியாதல்.

உ-ம். रक्षति[4], अर्षति[5]

1. ஈண்டு மொழிநூல்வல்லோர் त என்பதைத் தாதுவாகவும் பாணினியாசிரியர் तन् என்பதைத் தாதுவாகவும் கொண்டனர். ஆகலின் பாணினியாசிரியர் கொள்கையில் இது உவிகரணம் ஆகும்.
2. ஈண்டு மொழிநூல்வல்லோர் द्वि என்பதைத் தாதுவாகவும் பாணினியாசிரியர் द्विष् என்பதைத் தாதுவாகவும் கொண்டனர்.
3. ஈண்டு மொழிநூல்வல்லோர் व् என்பதைத் தாதுவாகவும் பாணினியாசிரியர் वस् என்பதைத் தாதுவாகவும் கொண்டனர்.
4. ஈண்டு மொழிநூல்வல்லோர் रज् என்பதைத் தாதுவாகவும் பாணினியாசிரியர் रक्ष् என்பதைத் தாதுவாகவும் கொண்டனர்.
5. ஈண்டு மொழிநூல்வல்லோர் अर् என்பதைத் தாதுவாகவும், பாணினியாசிரியர் ऋष् என்பதைத் தாதுவாகவும் கொண்டனர்.

(21) அப்யஸ்ததாதுவோடு *so*, *ǒso* இவற்றுள் ஒன்றைச் சேர்த்து பகுதியாதல்.

உ-ம். तिस्तीर्षते [1]

(22) தாதுவும் *sko*-உம் சேர்ந்து பகுதியாதல்.

உ-ம். இ. யூ. ǵem   வை. गच्छति [2]

,, u̯en   ,, वाञ्छति

,, ऋच्छति

,, अच्छति

(23) அப்யஸ்ததாது *sko* ஓடு சேர்ந்து பகுதியாதல். இதற்கு உதாரணம் கிரேக், லத்தீன் இவற்றில்தான் காணப்படுகின்றது. கிரேக். *didaxxō*.

(24) தாது *to* ஓடு சேர்ந்து பகுதியாதல்.

உ-ம். இ.யூ. dyu   வை. द्योतते, द्यु-तानः [3]

qei   चेतते, चितानः [4]

1. ईक्षते, ईप्सति, ईर्त्सति இவையெல்லாம் அப்யஸ்தரூபங்கள். पित्सति என்பது पिप्सति என்பதன் மாறுபட்ட ரூபமாய் இருக்கலாம். दिप्सति, लिप्सते என்ற ரூபங்களின் அதிதேசத்தால் हन् தாதுவிலிருந்து हिंसति என்ற ரூபம் உண்டாக, அதன் பன்மையுருவமாகிய हिंसन्ति என்பது வேற்றச்சுப்படுக்கப்பட, हिनस्ति என்ற ரூபம் புதிதாய் வந்தது என்பர்.
2. गच्छति என்பது முன்னருள்ள ரூபமாய் இருத்தல் வேண்டும். गम् தாது गच्छ् என்ற ஆதேசம் கொள்ளாமலும் இருப்பது வேதத்திலும் ராமாயணத்திலும் காணலாம்.

   உம். आगन्तम् (ऋ॰ वे॰ 5, 71, 1), गमेम (*ibid* 5, 16, 5)

   मा वशं द्विषतां गमम् (रामा॰ 2, 30, 19)

   ऋ என்பது ऋच्छ् என்ற ஆதேசம் கொள்ளாமலும் வேதத்தில் உளது. உ-ம். ऋणोति (*ibid* 1, 35, 9)

   वन् தாதுவும் அவ்வாறு உளது. உ-ம். वने (1, 69, 1)

3–4. ஈண்டு द्युत्, चित् என்பவற்றைத் தாதுவாகக் கொண்டனர் பாணினியாசிரியர்.

(25) தாது *dho*, *do* இவற்றில் ஒன்றோடு சேர்ந்து பகுதியாதல்.

உ-ம். வை. युः वै. योधति[1]
இ.யூ. qreu ,, अक्रुधत्[2]
तॄ ,, नर्दति[3]
,, खादति[4]

(26) தாது *iô* அல்லது *ṷô* இதனோடு சேர்ந்து பகுதியாதல். இவை இருவகைப்படும். ஒருவகையில் தாது உதாத்தஸ்வரம் பெறும்; மற்றொருவகையில் நிமேடிக் உயிர் அதனைப் பெறும்.

உ-ம். (i) रज्यति, नश्यति
(ii) म्रियते, हन्यते, क्रियते

செய்வினையே சிலவிடத்து செயப்பாட்டுவினைப்பொருளில் வருதலால்[5], தொடக்கத்தில் செயப்பாட்டுவினையைக் குறிக்கக் குறி ஒன்றும் இல்லாமல் இருந்திருக்கலாம். வைதிகமொழியில் செயப்பாட்டுவினையைக் குறிக்குமிடத்து य உதாத்தமாகவும், அல்லாதவிடத்து தாது உதாத்தம் பெற்றும் இருக்கிறது. இம் மாறுபாட்டிற்குச் செய்வினை செயப்பாட்டுவினையாய் இருத்தல் காரணமில்லை என்பது इयति, म्रियते என்ற செய்வினைகளில் य உதாத்தம் பெற்றிருப்பதே சான்று ஆகும்.

1. கலத்தல் என்ற பொருளில் यु என்ற தாது இருத்தலின் युध् என்பது यु + ध् எனக் கொள்ளப்பட்டது.
2. क्रूर என்ற ரூபத்தைப் பார்த்து क्रुध् என்பதை क्रु + ध् எனக் கொண்டனர்.
3–4. तरति, खनति என்ற ரூபங்களைக் கண்டு तर्द्, खाद् என்பனவற்றை तर् + द्, खा + द् எனக் கொண்டனர்.
5. प्र तद्विष्णुः स्तवते (ऋ. वे. 1, 154, 2) स्तवते = स्तूयते

இவை பெரும்பாலும் செயப்பாட்டுவினையாயிருத்தற்குக் காரணம் இவற்றுள் பெரும்பான்மை செயப்படுபொருள் குன்றியவினையாய் இருத்தலே என்பர்.

இதிஹாஸமொழியிலேயிற்கூட சிலவிடத்து செயப்பாட்டு வினை பரஸ்மைபதவிகுதிகளையும் ஏற்கின்றது. அவ்வாறே இரான்மொழியிலும் உள்ளது என்பர்.

உ-ம். हृश्यति Avest xwarye-iti.

ஒரே பொருளைக் கொண்ட दह्यति, दह्यते என்பன இருத்தலே, சில வினைகள் செயப்பாட்டுவினையுருவத்தில் பரஸ்மைபதவிகுதி ஏற்றதற்குக் காரணம் என்பர் [1].

1. ददामि, दद्मः போன்ற ரூபங்களின் அதிதேசத்தால் दद्यते என்ற ரூபம் வந்தது.

   निन्दति என்பது *ni-nd-e-ti* என்பதனை மூலமாகக் கொண்டிருக்கலாம்; அப்போது *nd* என்பது *nad* என்பதன் உதாத்தஸ்வரமேலாத ரூபமாய் இருக்கலாம். அவ்வாறாயின் निन्द्यते என்பது பின்னர் வந்த ரூபம் ஆகும்.

   dhȏ-iè-ti, dò-iè-tai என்பன धियति, दियते என ஆகவேண்டியிருக்க धयति, दयते என வழங்குகின்றன.

   ष्ठीवति என்பதன் அதிதேசத்தால் ष्ठीव्यति வந்தது என்பர். ष्ठीव्यति-இன் இனச்சொற்கள் கிரேக்கில் *pte'o*, ஆங்கிலத்தில் *spit*, ஐஸ்லாண்டிக்கில் spȳ. ஆங்கெல்லாம் பகரம் இருக்க வடமொழியில் தகரம் இருக்கின்றது. ஒருக்கால் स्कम्भ्, स्तम्भ् போன்று தாய்மொழியில் ககரங்கொண்ட ரூபமும் தகரங்கொண்ட ரூபமும் இருந்திருக்கலாம்.

   स्थयते என இருக்கவேண்டியிருக்க, स्थीयते என வழங்கப்படுகின்றது.

   याति என்றதனோடு दयते என்ற ரூபம் வழங்கப்பட, அதன் அதிதேசத்தால் दयित., स्ययति போன்ற ரூபங்கள் தோன்றின.

(27) அப்யஸ்ததாது io அல்லது iio ஒடு சேர்ந்து பகுதியாதல். இவ்வாறுள்ள வினைகள் வேதத்தில் சிறுபான்மை காணப்படுகின்றன.

உ-ம். नंनस्यते

(28) தாதுவோடு ā, ē, ō இவற்றுள் ஒன்றும் io-உம் சேர்ந்து பகுதியாதல்.

உ-ம். गृभायति, त्रायते[1]

(29) தாது நகாரத்தையும் io-ஐயும் கொண்டு பகுதியாதல்.

உ-ம். इषण्यति, भुरण्यति, चन्द्यते

(30) தாது ஸகாரத்தையும் io-ஐயும் கொண்டு பகுதியாதல். இப்பாகுபாட்டில் வந்த வினைகளில் சில நிகழ்காலத்திலும் சில எதிர்காலத்திலும் வரும்.

உ-ம். நிகழ்காலவினை : त्रस्यति, श्लिष्यति, घुष्यति[2]
எதிர்காலவினை : करिष्यति

எதிர்காலவினைகள் வேதத்தில் சிறுபான்மையே வழங்கப்பட்டது. இதிஹாஸமொழிநிலையில் வேண்டுகோள்குறிப்பீதியும் ஏவல்குறித்தவியங்கோள்குறிப்பீதியும் இறந்தமையால், எதிர்கால வினையே அவ்விடங்களிலெல்லாம் வழங்கப்பட்டது.

எதிரிறப்புக்காலத்தைக் காட்டும் अभविष्यत् போன்ற ரூபங்கள் வழக்கில் உள்ளன.

1. स संस्तिरो विष्टिरः संगृभायति (ऋ. वे. 1, 140, 7)
2. யகாரமின்றி त्रसति, श्रेषति, घोषति என்ற ரூபங்களும் இருக்கின்றன.

மகாபாரதத்தில் भविष्यन्तम्, करिष्या: என்ற ரூபங்கள் எங்கோயோ சில இடங்களில் காணப்படுகின்றன.

(31) நாமதாதுக்கள். இங்கு பெயரே பகுதி என்பது வெளிப்படை. இவை இண்டோயூரோபீயன்மொழியிலேயி விருந்தே வழங்கப்பட்டன. இவ்வகையில் உள்ள வினைக்கும், அதன் பகுதியாகிய பெயர்க்கும் பல ஸம்பந்தங்கள் இருந் திருத்தல் கூடும்.

ஆகலின் ஒவ்வோரிடத்தும் ஸம்பந்தத்தைப் பெயர்ப் பொருள் ஸங்கர்ப்பம் இவற்றிலிருந்தே அறிதல் தகும். வட மொழியில் ईयति என்பது விருப்பம், ஆசாரம் முதலிய பொருளில் வழங்கப்பட்டது[1]. இதிஹாஸமொழியில் ஆத்மனே பதவிகுதிகளும் சேர்க்கப்பட்டன.

உ-ம். पुत्रीयति, शङ्कचापायते, कवीयते......

(32) ணிஜந்ததாதுக்கள்.

உ-ம். बोधयति, दापयति, दीपयति[2]

1. सुप आत्मनः क्यच् (पा. अ. 3, 1, 8)
उपमानादाचारे (*ibid* 3, 1, 10)

2. दापयति, दीपयति, स्थापयति இவற்றின் இனச்சொற்களில் பகரம் இருத்தலால் இவையெல்லாம் சேர்தான ரூபங்கள் என்றும், ध्मापयति, क्षेपयति, अर्पयति, स्मापयति, मापयति, अध्यापयति இவை அவற்றின் அதிதேசத்தால் பகரங்கொண்டன என்றும் மொழிநூல்வல்லோர் கூறுவர். क्षययति, स्मापयति, प्रत्याययति என்ற ரூபங்கள் இருத்தலும் கவனிக்கத்தக்கது.

*Cf.* विस्माययन्विस्मितमात्मवृत्तौ सिंहोरुसत्त्वं निजगाद सिंहः
(रघु. 2, 33)

## ஸிச்ப்ரத்யயங்கலந்த தாதுப்பகுதியின் பாகுபாடு

ஸிச்ப்ரத்யயங்கலந்த தாதுப்பகுதியை மூவகையாகப் பிரிக்கலாம். அவை स् மாத்திரங் கலந்த பகுதி, इट्[1] கலந்த பகுதி, सिट् கலந்த பகுதி ஆகும்.

स् மாத்திரங் கலந்த பகுதி தீமேடிக் உயிரோடு கூடியும் கூடாமலும் இருக்கலாம்.

தீமேடிக் உயிரோடு கூடியதற்கு உதாரணம் अमृक्षत् अदृक्षत् போன்றன ஆகும்.

தீமேடிக் உயிரோடு கூடாது e series உள்ள தாதுக்கள் தன் ரூபங்களில் மூன்றுவகை அஜ்ஷிபரிணமத்தைக் கொண்டன.

(1) ஸிகழ்ச்சிக்குறிரீதியில் பரஸ்மைபதவிகுதியேற்கும் ஒருமைகள் இண்டோயூரோபீயன்மொழியில் ē-ஐயும், வடமொழியில் आ-ஐயுங் கொண்டன.

உ-ம். இ.யூ. uĝh — வை. अवाक्षम्
,, derk̂ — ,, अद्राक्षम्

வைதிகமொழியில் आ இருமைபன்மைகளிலும் அதிதேசத்தால் வந்தன.

உ-ம். अभाष्टीम्, अधाम[2] अजैष्म[3]

1. இ.யூ. ǝs
2. अधाम हविं आयस्यनाधृष्टो नृपीतये (ऋ. वे. 7, 15, 13)
3. अजैष्माद्यासनाम चाभूमानागसो वयम् (*ibid.* 8, 47, 18)

(2) நிகழ்ச்சிக்குறிப்பில் பரஸ்மைபதவிகுதியேற்கும் இருமைபன்மைகளும் ஆத்மனேபதவிகுதியேற்பனவும் e குறைந்துநிற்கும் நிலையைக் கொண்டன.

உ-ம். अवित्सि

(3) வேண்டுகோள்குறிப்பில் e உளது [1].

உ-ம். पक्षत, दक्षत्

நிகழ்ச்சிக்குறிப்பில் முன்னிலையொருமையும் படர்க்கையொருமையும் ஒரே உருவங் கொண்டன.

உ-ம். अजैः (अ-जैस्-स्)
अजैः (अ-जैस्-त्)
अरैक् (अ-रैक्ष्-स्)
अरैक (अ-रैक्ष्-त्)

ஒரே உருவத்தால் அவற்றின் பொருளில் மயக்கம் வர, சிலவிடத்தில் வினைவிகுதியின் முன்னர் ஈ சேர்க்கப்பட்டது.

உ-ம். अजैषीः, अजैषीत्

अभैः என்பதன் விகாரமாகிய भैः [2] என்ற ரூபம் மஹாபாரதத்துள்ளும் வழங்கப்பட்டுள்ளது. பின்னர் भैषीः என அதிதேசத்தால் மாறியது. अयासिषम् என்பதைச் சேர்ந்த

1. இ. ஐ. e வடமொழியில் अ ஆகும் அன்றோ. அவ்வகரம் வேண்டுகோள்குறிப்பின் அதிதேசத்தால் வைதிக மொழியில் ஆத்மனேபதவிகுதியேற்ற எல்லாவற்றிலும் போன்றிப், நிகழ்ச்சிக்குறிப்பி இவற்றிலும் பரவியது.
உ-ம். असंस्त, संसीमहि, ससीय

2. अर्जुनार्जुन मा भैस्त्वम् (म. भा. वन. 174, 12)
मा भैरिति धनञ्जयः (म. भा. आदि. 254, 4)

अयासीः अयासीत् என்பன अयासम् என்பதைச் சேர்ந்த अयाः என்பதை இறக்கச் செய்தன. அவ்வாறே अजैपीः, अजैपीत् என்பன अजैषम् என்பதைச் சேர்ந்தனவாகவும், अभार्षीः, अभार्षीत् என்பன अभार्षम् என்பதைச் சேர்ந்தனவாகவும் பின்னர் ஆயின. नी தாதுவிற்கு முன்னிலையொருமையிலும் படர்க்கையொருமையிலும் आनैः என்ற ரூபம் இருக்க, மயக்கத்தைப் போக்கப் படர்க்கையொருமையில் आनैत् என்ற ரூபம் வந்தது.

अक्रि, अक्रत இவற்றைச் சேர்ந்த अकृथाः, अकृत என்பன இலக்கணவாசிரியர்களால் अक्रुषि, अक्रुष्महि என்பனவற்றைச் சேர்ந்தனவாகக் கொள்ளப்பட்டன. இம்மயக்கத்திற்குக் காரணம் ஹலந்ததாதுக்கள் சிலவற்றில் முன்னிலையொருமையிலும் படர்க்கையொருமையிலும் இவ்விருவுருவும் ஒரே ரூபத்தைக் கொள்வதே ஆகும். உதாரணமாக अमुग्ध्वम् என்பதை मुच् , मुह् இரண்டிலிருந்தும் அடையலாம்.

इष् கலந்த பகுதியும் सिप् கலந்த பகுதியும் பொதுவாய் e கிரேடையும் சிலவிடத்து ē கிரேடையுங் கொண்டன.

உ-ம். अस्तारिषम् , असहिष्ट, असारिषम्

*izdhvam* என்பதிலிருந்து வந்த ईढ्वम् என்ற முன்னிலைப் பன்மைவிகுதி சிலவிடத்து அதிதேசத்தால் इढ्वम् என மாறியது.

सिप् கலந்த பகுதி வந்ததற்குக் காரணம் சில தாதுக்கள் ஈற்றில் स ஐச் சேர்த்துக்கொண்டது என்பர்.

உ-ம். भा–स–ति — अभासिष्ट
अ–ज्ञा–सम् — अज्ञासिषम्

முன்னிலையொருமையிலும் படர்க்கையொருமையிலும் வினை इष् , इत् என்பதில் முடியவிருக்க, ईस् , ईत् இலேயே முடிந்தன.

உ-ம். अस्तारीः, अस्तारीत्

## இரட்டித்த தாதுப்பகுதியின் பாகுபாடு

ஈண்டுத் தாதுக்கள் பெரும்பாலும் இரட்டித்தே நிற்கும். சில இரட்டிக்காமலும் இருக்கும். நிகழ்ச்சிக்குறிரீதியில் अ போன்ற வினைவிகுதியும் वस् இல் முடியும் विद्वस् போன்ற ரூபங்களும் இரட்டித்த தாதுப்பகுதியின் விசேஷங்கள் ஆகும். நிகழ்ச்சிக்குறிரீதியில் நிகழ்விறப்புக்காலத்தையும் இறப்பிறப்புக் காலத்தையும் இப்பகுதியிலிருந்து வந்த ரூபங்கள் குறிக்கும். இறப்பிறப்புக்காலத்தைக் குறிப்பது நீமேடிக் உயிரை ஏற்றும் ஏலாதும் நிற்கும்.

உ-ம். (1) अचक्रत्, अदद्हत
(2) अजग्रभीत्, अजग्मिरन्

ஏவல்குறிரீதியிலும் அவ்வாறு உள்ளன.

உ-ம். (1) मुमोचतम्, मुमोचत
(2) मुमुक्तम्, मुमुग्धि

வேண்டுகோள்குறிரீதியில் நீமேடிக் உயிரோடு உளது.

உ-ம். मुमोचत्

### இரட்டித்த பகுதியின் விசேஷங்கள்

(1) தாது மெய்யில் தொடங்கினால், அப்யாஸத்தின் இறுதியில் பெரும்பாலும் *e* உம், சிறுபான்மை *ē* உம் இருந்தன.

உ-ம். बभूव இரான் ba-vāv-a
ससूव
जागार

ஆனால் வடமொழியில் பெரும்பாலும் इ, उ இவற்றைக் கொண்ட தாதுக்களில் अ, आ இவற்றிற்குப் பிரதியாக इ அல்லது उ வந்தது.

உ-ம். दिद्वेष, रुरोच

*இதற்குக் காரணம் நிகழ்காலத்தில் இரட்டிக்கும் தாதுக்களின் அப்யாஸத்தில் அவ்வாறு இருந்தது ஆகலாம்.*

உ-ம். बिभेति, बिभ्यात्

(2) *தாது i, u இவற்றில் தொடங்கினால், ஆரியன் மொழியின் பண்டைக்காலத்தில் அப்யாஸத்தில் ia, ua இருந்தன.*

உ-ம். **ययाम, ववाम,** *இரான் ya-yal-a*

*பின்னர் வடமொழியில் அந்த தாதுக்கள் வேறு சில ரூபங்களில் इ, उ இவற்றைக் கொண்டனபோல் மீண்டும் इ, उ இவற்றுள் ஒன்றைக் கொண்டன.* **इज्यते, इष्टः** *என்பனவற்றைப் பார்த்து* **ययाज** *என்பது* **इयाज** *என்று ஆயிற்று.* **उच्यते, उक्तः** *என்பனவற்றைப் பார்த்து* **ववाच** *என்பது* **उवाच** *என்று ஆயிற்று அவ்வாறே* **ययते, ययजे** *என்பன* **येते**[1] **येजे** *என ஆயின.*

*ஆனால்* **ययाम, ववसे** *என்பன மாறவில்லை; அதற்குக் காரணம், அத்தாதுக்கள் ஓரிடத்தும் அவ்வாறு மாறாமையே எனக் கூறல் தகும். ஆயினும் சதபதப்பிராம்மணத்தில் ஓரிடத்தில்* **ववाम** *என்பதற்குப் பிரதியாக* **उवाम** *என இருக்கின்றது என்பர்.* **ययन्म, ययन्व:, जगन्व:** *என்பன* **येमिम, येमिव: जग्मिव:** *என மாறின.*

(3) *தாது உயிரில் தொடங்கினால் அப்யாஸம் இண்டோ-யூரோபியன்மொழியில் e ஆக இருந்ததாகக் கொள்ளலாம். ஆனால் வடமொழியில் ஒரு மெய்யில் முடியும் தாதுக்களின்*

1. पृतनासु येतिरे (ऋ. वे. 1, 85, 8)

அப்யாஸத்தில் आ உம், இருமெய்களில் முடியும் தாதுக்களில் आन् உம் இருக்கின்றன.

உ-ம். आस् — आस
अंश् — आनंश
अर्च — आनर्च, आनृचे [1]

(4) விசேஷப்ரத்யயங்கள் சேர்த்த தாதுக்களும் இரட்டித்த பகுதியாகின்றன.

உ-ம். चिकेत, तस्तम्भ, रराध, पप्रच्छ, जिज्यौ [2]

(5) நிகழ்காலத்தில் இரட்டிக்கும் தாதுக்கள் நிகழ்விறப்பிலும் இறப்பிறப்பிலும் மேலும் இரட்டித்தல் இல்லை.

உ-ம். सीदति [3] — सीदतुः
जागर्ति — जागार

பிற்காலத்தில் जजागार, बिभिक्षे [4] என்ற ரூபங்களும் தோன்றின.

1. स्कम्भनेभिः समानृचे (ऋ. वे. 1, 160, 4)

2. पप्रौ, तस्थौ என்றவிடத்து औ எவ்வாறு வந்தது எனத் தெரியவில்லை. पप्रा என்ற ரூபம் காணப்படுவதால், அதன் இறுதியில் उ சேர்க்கப்பட்டிருத்தல் கூடும் என்பர் சிலர்; ஆனால் உறுதியாய்த் தீர்மானத்திற்கு ஒருவரும் இன்னும் வரவில்லை.

पेतुः என்பது सेदुः என்பதன் அதிதேசத்தால் வந்தது என்பர்.

3. இ. ஐ. *si-zd-e-ti.*

4. भज् என்பதன் ஸந்நந்தம் भिक्ष् என்பது; அதிலிருந்து வந்தது बिभिक्षे என்பது.

(6) சில உபஸர்க்கங்களும் தாதுவும் சேர்ந்து ஒன்றெனக் கருதப்பட்டு, அவற்றிற்குத் தக்கவாறு அப்யாஸம் வந்தது.

உ-ம். पीड् — पिपीडे
नि-युज् — निनियोज (ऐतरेयब्राह्मणे)

(7) ஆரியன்மொழியில் தன்மையொருமையில் जजन போன்ற ரூபமும் படர்க்கையொருமையில் जजान போன்ற ரூபமும் இருந்திருக்க, பின்னர் இரண்டிலும் जजान என்ற ரூபம் வந்தது.

அதிதேசத்தால் சில ரூபங்கள் வடமொழியில் வந்தன :

सेदुः, येमुः என்பனவற்றின் அதிதேசத்தால் सेहुः, सेजुः, पेचुः, पेतुः, सेचे, तेने என்பன வந்தன.

ஒருமையில் வலிமையுற்றும் பன்மையில் வலிமை இழந்தும், பகுதி இருக்கவேண்டியிருக்க, பன்மையிலும் பகுதி வலிமையுற்று அதிதேசத்தால் வழங்கப்பட்டுளது.

| | நேரிதான ரூபம் | வழக்கிலுள்ள ரூபம் |
|---|---|---|
| உ-ம். | तस्तभुः | तस्तम्भुः |
| | बबधुः | बबन्धुः |
| | युयुपिम | युयोपिम |
| | विविषुः | विवेषुः |
| | बिभिदुः | बिभेदुः |
| | ववहतुः | ववाहतुः |
| | ननमिरे | ननामिरे |

विद्वस् போன்ற ரூபங்களில் தாது இரட்டிக்காது இருந்தும் चकृवस् போன்ற இரட்டித்த ரூபங்களும் தோன்றின.

## இரட்டிக்காத தாதுப்பகுதியின் உற்பத்தி

विद्वस् போன்ற ரூபங்களில் தாது இரட்டிக்காததை நோக்கி वेद्, विद्म முதலிய ரூபங்கள் இரட்டிக்காது வந்திருக்கலாம்.

இப்பகுதி கொண்ட வினைகளுள் இரட்டித்த பகுதி கொண்ட வினைகளிற் போல் அஜ்விபரிணாமத்தைக் கொண்டன சில. உ-ம். वेद[1], विद्म[2]

எல்லாரூபங்களிலும் e என்ற உயிரைக் கொண்டன சில.

உ-ம். शशंस, शशंसुः

தாதுவில் ē-ஐக் கொண்டன சில.

உ-ம். இ.யு. segh வை. साह्वः

உயிரில் தொடங்கி மெய்யில் முடியும் தாதுக்களுள் சில आ-ஐ எல்லா ரூபங்களிலும் கொண்டன. உ-ம். आज

## தொடரொருசொல்[3]

ஒவ்வொரு மொழியின் வரலாற்றிலும் முன்னர் இரண்டு மூன்று சொற்களால் ஆக்கப்பட்ட தொடர் ஒரு காலத்தில் ஒரே பொருளைத் தருவதாகக் கருதப்படப் பின்னர் அத்தொடர் ஒரே சொல்லாகக் கருதப்படுகின்றது[4]. அவற்றிற்குத் தொட

1. கிரேக் oiδe
2. கிரேக் id-men
3. Periphrastic formation.
4. ஆங்கிலத்தில் ***not with standing*** என்ற மூன்று சொற்கள் இப்போது ஒரே பொருளைக் குறிக்கும் ஒரு சொல்லாகக் கருதப்படுகின்றது; ஆனால் ***in spite of*** என்பது ஒரு பொருளைத் தருவதாக இன்று கருதப்படினும் ஒரு சொல்லாகக் கருதப்படவில்லை; சில ஆண்டுகளுக்குப் பின்னர்

ரொருசொல் எனப் பெயரிடலாம். அவ்வாறு வடமொழியில் இரண்டிடத்து வந்துள்ளது. எதிர்காலத்தைக் குறிக்க வந்தது ஒன்று; நிகழ்விறப்பைக் குறிக்க வந்தது மற்றொன்று.

எதிர்காலத்தொடரொருசொல் :

ருக்வேதஸம்ஹிதையில்

अविताऽसि सुन्वतो वृक्तबर्हिषः (8, 35, 1)

गन्तारा हि स्थः (1, 17, 2)

என்ற ப்ரயோகங்கள் உள. अविताऽसि என்பது अविता असि எனப் பதபாடத்திற் பிரிக்கப்பட்டுள்ளது. गन्तारा என்பது தனிச்சொல் என்பது வெளிப்படை. இவ்வாறு ஸம்ஹிதையில் இருக்க, பிராம்மணங்களில் अवितास्थः போன்ற ப்ரயோகங்கள் வர, அவை ஒரு சொல்லெனக் கருதப்பட்டன. இப்பிரயோகம் வந்ததற்குக் காரணம் என்ன என்பதை ஆராயவேண்டும். अवितास्मि, अवितास्मि போன்ற இடங்களில் இரண்டுசொற்களாகிய

அவை ஒரு சொல்லாகக் கருதப்படும் என்பதற்கு ஐயமில்லை. அவ்வாறே *up stairs, never the less* என்பன தற்போது ஒரு சொல்லாகக் கருதப்படுகின்றன; *shall go, will go, must go, may go* என்பன ஒருபொருளைக் கொண்டனவாகக் கொள்ளப்படினும் இன்னும் ஒரு சொல்லாகக் கருதப்படவில்லை. தமிழ்மொழியில் செய்யா நின்றான் என்பது வீரசோழிய-உரைகாரர்க்கு முன் இரண்டு சொற்களாகக் கருதப்பட்டாலும் நன்னூலாசிரியர்காலத்தில் ஒரு சொல்லாகக் கருதப்பட்டது. செய்யப் படும் (செய்தல் பொருந்தும்) போன்ற இருசொற்கள் தற்போது ஒரு சொல்லாகக் கருதப்படுகின்றன. சாத்தன் உடைய நூல்கள் என்னுமிடத்து சாத்தனுடைய என்பது ஒரு சொல்லாகக் கருதப்படுகின்றது; அவ்விடத்து முன்னர் வினையாலணையும்பெயராகிய உடைய என்பது இப்போது ஆறும்வேற்றுமையுருபாகக் கருதப்படுகின்றது.

अविता असि, अविता अस्मि என்பன ஒரு சொல்லாகத் தவறாய் எண்ணப்பட்டன. பின்பு अविता என்பதே தாதுவின் பகுதி எனவும் எண்ணப்பட்டது அதன்பின்னர் अवितास्मि ஐ ஒட்டி अवितास्वः अवितास्मः என்ற ரூபங்களும், अवितासि என்பதை ஒட்டி अवितास्थः अवितास्थ என்ற ரூபங்களும் தோன்றின. இவை பிராம்மணகாலத்தில் வந்தன. ஆகலின் अवितासि, अवितास्मि என்பன தொடரொருசொல்லிற்கு உதாரணம் ஆகும்.

நிகழ்விறப்புத்தொடரொருசொல் : विदांचकार, गमयामास, गमयांबभूव, गमयाञ्चकार போன்ற ரூபங்களில் विदां, गमयां என்பதைப் பாணினியாசிரியர் தனிச்சொற்களாகக் கொண்டனர்[1]. அவ்வாறே மஹாகவி காளிதாஸனது காலத்திலும் கருதப் பட்டது என்பது அவரது வழக்கால் அறியப்படுகின்றது[2]. அவர்க்குப் பின்னர் அவை ஒரு சொல்லாகக் கருதப்பட்டன. பழையநூல்களில் चकार என்பதே மிகுதியாகக் காணப்படுகின் றது. டேல்ப்ரீக்[3] என்பவர் विदां போன்றன ஆகாரவீற்றுப்பெய ரின் இரண்டாம்வேற்றுமை என்பர். லத்தீன், பழைய ஸ்லாவோ னிக் மொழிகளிலும் இவற்றிற்கு ஒத்த ரூபங்கள் உள்ளன. அவற்றோடு ஒத்துப்பார்த்து, विदां போன்றன चकार ஒடு வரும் போது இரண்டாம் வேற்றுமை என்றும், आस, बभूव இவற் றோடு வரும்போது மூன்றும் வேற்றுமை என்றும் மொழிநூல் வல்லோர் கூறுவர். அதற்குச் சான்றாக பழைய ஸ்லாவோனிக் *ramkam* என்ற சொல்லும் வடமொழியில் प्रतराम् என்ற சொல் லும் மூன்றும் வேற்றுமையாயிருத்தலைக் காண்பிக்கின்றனர்.

1. इजादेश्च गुरुमतोऽनृच्छः (पा. अ. 3, 1, 35) आमः (*ibid* 2, 4, 81) कृञ्चानुप्रयुज्यते लिटि (*ibid* 3, 1, 40)
2. प्रभ्रंशयां यो नहुषं चकार (रघु. 13, 36)
3. Delbrük.

அதிதேசத்தால் வினையின் ரூபம் மாறுதல்: *பகுதி மெலிதா யிருக்கவேண்டியவிடத்து வலிதாதல்:*

| *நேரிதான ரூபம்.* | | *வழக்கிலுள்ள ரூபம்.* |
|---|---|---|
| உ-ம்- | अधिम | अधाम |
| | अदिम | अदाम |
| | अस्थिम | अस्थाम |
| | सीम | स्याम [1] |
| | छिद्य | छेद्य |
| | ऊढ्वम् | वोढ्वम् |
| | जुहुत | जुहोत [2] |
| | युयुधि | युयोधि [3] |

*பகுதி வலிதாயிருக்கவேண்டியவிடத்து மெலிதாதல்:*

| | |
|---|---|
| एमि | इमि |
| वर्क् | अवृक् [4] |
| ददामि | दद्मि [5] |
| भवतम् | भूतम् [6] |
| भवेम | भूयाम [7] |
| ब्रवीमि | ब्रूमि [8] |
| करोमि | कुर्मि [9] |

1. स्यामेदिंद्रस्य शर्मणि (ऋ. वे. 1, 4, 6)
2. मित्राय हव्यं घृतवज्जुहोत (*ibid* 3, 59, 1)
3. विश्वा अभीतीरपसो युयोधि (*ibid* 2, 33, 3)
4. उत्केतुना बृहता देव आगन्नपावृक् (अ. वे. 13, 2, 9)
5. शरीरमिह सत्त्वानां दद्मि सागरवासिनाम् (रामा. 5, 55, 3)
6. इन्द्रा युवं वरुणा भूतम् (ऋ. वे. 4, 41, 5)
7. भूयामोषु त्वावतः ...... (*ibid* 4, 32, 6)
8. हितं वयस्यभावेन ब्रूमि (रामा. 4, 7, 14)
9. न त्वां कुर्मि दशग्रीव भस्म (*ibid* 5, 52, 28)

பகுதியில் இகரம் இருக்கவேண்டியவிடத்து ஈகாரமிருத்தல் :

अधिमहि  अधीमहि

मृणिमः  मृणीमः

பகுதியில் உகரம் இருக்கவேண்டியவிடத்து ஊகாரமிருத்தல் :

अभुवम्  अभूवम्

## எச்சவினை

எச்சவினை முற்றுவினையைப்போல் காலங் காட்டினும் அதனைப்போல் ரீதியையும் இடத்தையும் காட்டாது. அது பெயரெச்சவினை, வினையெச்சவினை என இருவகைப்படும். பெயரைத் தழுவும் எச்சவினை பெயரெச்சவினை ஆகும். வினையைத் தழுவும் எச்சவினை வினையெச்சவினை ஆகும்.

பெயரெச்சவினை நிகழ்காலம், இறந்தகாலம், எதிர்காலம் நிகழ்விறப்புக்காலம் இவற்றைக் குறிக்கும். நிகழ்காலம் எதிர் காலம் இவற்றைக் காட்டுவன பரஸ்மைபதவிகுதியேற்கும் தாதுக் களுக்கு ஒருவகையாகவும், ஆத்மனேபதவிகுதியேற்கும் தாதுக் களுக்கு வேறுவகையாகவும் இருக்கும். இவை பெயரைப் போல் வேற்றுமையுருபுகளை ஏற்கும். இவை லிங்கம், விபக்தி இவற்றில் தழுவும் பெயரோடு ஒத்திருக்கும்.

நிகழ்காலப்பெயரெச்சவினை :

உ-ம். राजन्[1], वर्धमानः[2], दधानः[3]

1. राजन्तमध्वराणाम् (ऋ. वे. 1, 1, 8)
2. वर्धमानं स्वे दमे (*ibid* 1, 1, 9)
3. कृष्णा रजांसि तविषीं दधानः (*ibid* 1, 35, 4)

இறந்தகாலப்பெயரெச்சவினை : உ-ம். स्नातः [1], दुग्धः [2]

எதிர்காலப்பெயரெச்சவினை :

உ-ம். करिष्यन्, करिष्यमाणः

நிகழ்விறப்புப்பெயரெச்சவினை :

உ-ம். विद्वान्, तस्थिवान् [3]

செயப்பாட்டுவினைப்பொருளில் வரும் कृतः என்றதன்மேல் वत् என்ற ப்ரத்யயம் சேர்த்து कृतवत् என்ற பெயரெச்சவினை வந்தது [4]. அது செய்வினைப்பொருளிலே வரும். இவற்றைத்

1, 2. तुभ्यं स्नाता अवता अद्रिदुग्धा मध्वः (ibid 4, 50, 3)

இவை ஸகர்மகவினையில் வந்தால் செயப்பாட்டுவினைப் பொருளை யும், அகர்மகவினையில் வந்தால் செய்வினைப்பொருளையும் காட்டும்.

3. स पाटलायां गवि तस्थिवांसं धनुर्धरः केसरिणं ददर्श (रघु. २, 29)

4. कृतवत् போன்ற எச்சம் திராவிடமொழிக்கலப்பால் வந்திருக்கலாம் என நார்வேதேசீயரான ஸ்டென்கொனோ (Sten konow) என்பவர் Indian Antiquary Vol. 32, December 1903 pp. 448–58 இல் எழுதியுள்ளார். அதற்கு அவர் கூறும் காரணங்கள் மூன்று : (1) அதற்கு இனமான எச்சம் வேறு இண்டோயூரோபீயன்மொழியில் இல்லை ; (2) வடமொழியிலும் பண்டையநூல்களில் அது இல்லை ; (3) செய்தவன் போன்ற சொற்கள் திராவிட மொழிகளில் மிகுதியாய் உள.

செய்தவன் போன்ற வழக்கு தமிழிலக்கியத்தில் பிற்பட்ட தாகலானும், செய்தான், செய்தானை போன்றவையே சங்கவிலக்கியங்களில் வழங்கப்படுகின்றமையானும் कृतवान् போன்ற சொற்கள் இதிஹாஸமொழிநிலைக்கு முன்னரே வடமொழியில் உபநிஷத்துக்களில் காணப்படுகின்றமை யானும் அவரது கூற்று ஆராய்தற்கு உரியது.

Cf. ददशिवान् (कठो. 1, 11)

தவிர்த்து कृत्यः, कर्तव्यः, करणीयः, दिप्सुः போன்ற பெயரெச்ச வினைகளும் உள.

வினையெச்சவினை: இவ்வினை செய்து என்ற பொருளில் कृत्वा என்றும், செய்ய என்ற பொருளில் कर्तुम् என்றும் இதிஹாஸமொழிநிலைக்குப் பின்னர் வழங்கப்படும். தாதுவின் முன்னர் உபஸர்க்கம் வரின் பிற்காலத்தில் त्वा என்பதற்குப் பிரதியாக य, त्य இவை வரும். உ-ம். उपगम्य, प्रणीय, उपेत्य.

ஆனால் உபஸர்க்கம் இல்லாதபோதுகூட य என்பதும், உபஸர்க்கம் இருக்கும்போதுகூட त्वा என்பதும் இதிஹாஸ மொழிநிலையில் வழங்கப்பட்டன [1].

कर्तुम् என்ற பொருளில் வைதிகமொழிநிலையில் பல ரூபங்கள் உள. இவற்றை ஒரே ஸூத்திரத்திற் குறிப்பர் [2] ஆசிரியர் பாணினியார்.

உ-ம். अवसे [3], गमध्यै [4], कर्तवे [5], गन्तवै, गन्तोः

1. शिरसा वन्द्य वैदेहीम् (रामा. 5, 39, 6)
वन्द्य पाण्डवम् (म. भा. द्रो. 83, 7)
अभिवन्द्याग्रतः स्थितम् (*ibid* 84, 2)
अभिवाद्य तु राजानम् (*ibid* 84, 9)
பிற்காலத்தில் अभिवाद्य என்பதே வழங்கப்பட்டது.
कन्दरात्तु विसर्पित्वा (रामा. 4, 6, 32)
नमस्कृत्वा गमिष्यामि (*ibid* 5, 13, 54)
वायसस्त्वां नमस्कृत्य (*ibid* 5, 67, 17)
2. तुमर्थे सेसेनसेअसेन्क्सेकसेनध्यैअध्यैन्कध्यैकध्यैन् शध्यै शध्यैन्तवैतवेङ्तवेनः (पा. अ. 3, 4, 9)
3. ह्वयामि मित्रावरुणाविहावसे (ऋ. वे. 1, 35, 1)
4. ता वां वास्तून्युश्मसि गमध्यै (*ibid* 1, 154, 6)
5. धत्त इन्द्रो नर्यपांसि कर्तवे (*ibid* 1, 85, 9)

இவ்வினையெச்சரூபங்களெல்லாம் வேற்றுமையுருபேற்ற பெயரின் ரூபங்களை ஒத்திருத்தலின், அவை ஒருகாலத்தில் எல்லா வேற்றுமையுருபுகளை ஏற்ற பெயர்ப்பகுதியிலிருந்து வந்திருத்தல் தகும் என்பர்.

## ப்ராகிருதமொழிநிலை

முற்றுவினை: ப்ராகிருதமொழிநிலையில் முற்றுவினைச் சொல் பலவற்றை இழந்தது. நிகழ்ச்சிக்குறிரீதியில் நிகழ்காலம் எதிர்காலம் இவற்றைக் குறிக்கும் வினைமுற்றுக்களும் ஏவல்குறிரீதியில் நிகழ்காலத்தைக் குறிக்கும் வினைமுற்றுக்களும் ஏவல்கண்ணுவியங்கோளில் நிகழ்காலவினைமுற்றுக்களுமே உள. எல்லாவினைகளும் அனேகமாய் சப்விகரணங்கள் ஆயின. பெரும்பாலும் ஆத்மனேபதவிகுதிகள் இறந்தன. இருமை ரூபங்கள் இல்லை.

நிகழ்ச்சிக்குறிரீதியில் நிகழ்காலத்தில் தன்மை முன்னிலை படர்க்கை இவற்றின் ஒருமையில் मि[1], सि[2], दि[3] அல்லது इ விகுதியும், பன்மையில் मो[4], मु, म, ह[5], अन्ति[6] இவையும் உள்ளன.

1. पिअं दे णिवेदेमि (वेणी. 1, 14—)
2. एव्वं विअलिअधीरभावा अतिमेत्तं संतप्पसि (*ibid* 2, 2—)
3. सोहणं भणादि सुवअणा सिविणअन्तो जणो किं ण क्खु प्पलवादि (*ibid* 2, 2—)
   अम्हो अपज्ञवो मे परिप्फुरइ (मालवि. 2, 4)
   पविसामो (*ibid* 3, 12—)
4. समं जेव्व गच्छम्ह (*ibid* 3—)
5. हंहो, जाणह तुम्हे (वेणी. 4, 9—)
6. कुसलपरिणामा होन्ति (*ibid* 2, 2—)

எதிர்காலத்தில் பெரும்பாலும் ஒருமையில் स्सम्, स्सामि[1], स्ससि[2], स्सदि[3] விகுதியும், பன்மையில் स्सामो[4], स्सध[5], स्सह, स्संति விகுதியும் உள்ளன.

ஏவல்குறிப்பில் ஒருமையில் मु, सु, हि[6], दु[7] அல்லது उ விகுதியும், பன்மையில் मो,[8] म, ह, ध[9], धं, अंतु[10] விகுதியும் வரும்.

ஏவல்கண்ணுவியங்கோள் ரீதியில் படர்க்கையொருமையில் ए மாத்திரம் உள்ளது[11].

செயப்பாட்டுவினையில் தாதுவோடு इअ அல்லது इज्ज சேர்த்து அதன்பின்னர் பரஸ்மைபதவிகுதிகள் சேர்க்கப்படும்[12] பிறவினையில் करेदि, करवेदि போன்ற ரூபங்கள் வரும்.

1. जइ एव्वं ता कहइस्सम् (*ibid* 2, 2—)
   महुअरिअं अण्णेसामि (मालवि. 3—)
2. जम्मन्तरे अणिहदपुत्तआ हुविसस्सि (वेणी. 4, 9—)
3. भादुसदं से पास्से भविस्सदि (*ibid* 5, —)
4. देवदासंकित्तणेण अ पाडिहडिस्सामो (*ibid* 2, 2—)
5. मा क्खु ...... अणवेक्खिदसरीरा संचरिस्सध (*ibid* 1, 26—)
6. अपच्छिमं करेहि पिदुणो वअणम् (*ibid* 5, 3—)
7. कहेदु पिअसही (*ibid* 2, 2—)
8. पेक्खामो उअरंभरिसंवादं (मालवि. 1, 15—)
9. अवहिदा होध (वेणी. 2, 2—)
   परित्ताअह, परित्ताअह (*ibid* 6, 28—)
10. सव्वहा अणुगेह्णन्तु एवं ववसिदं दे भादरो (*ibid* 1, 21—)
11. अच्चाहिदं भवे (*ibid* 6, 12—)
12. होन्ति त्ति सुणीअदि (*ibid* 2, 2—)

எச்சவினை : இதிஹாஸமொழிநிலையில் உள்ள எச்சவினை விகுதிகள் ப்ராகிருதமொழிநிலையிற் சிறிது மாறுபடுகின்றன. அம்மாறுபாடு பின்வருமாறு :

| இதிஹாஸமொழிநிலை | ப்ராகிருதமொழிநிலை |
|---|---|
| तुम् | तुम्, दुम्[1] |
| त्वा | इअ[2], तुण, उण |
| अत् | अन्त[3] |
| त | त, द, अ[4] |
| य | इअ[5], ज्ज |
| मान | माण[6] |

## வடமாகாணமொழிநிலை

முற்றுவினை : ஹிந்தியில் நிகழ்ச்சிக்குறிரீதியில் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம், நிகழ்விறப்பு, இறப்பிறப்பு இவற்றைக் குறிக்கும் ரூபங்களும் ஏவல்குறிரீதியில் முன்னிலையொருமைபன்மைரூபங்களும் மற்றுஞ் சில ரூபங்களும் உள. வினைவிகுதி காலம், ஆண் அல்லது பெண், ஒருமை அல்லது பன்மை இவற்றைக் குறிக்கும்; தன்மை முதலிய இடத்தைக் குறிப்பதில்லை. அக்காரணம்பற்றிப் பெரும்பாலும் மூன்றிடத்திலும் வினை ஒரே ரூபத்தைக் கொள்ளும்.

1. अज्जाए गन्धालीए पादवन्दणं कादुं गदा (वेणी. 1, 19—)
   णाहं पेक्खिदुं तुवरदि मे हिअअं (*ibid* 1, 14—)
2. उवविट्ठा भविअ सुणोमि (*ibid* 1, 14—)
3. सिविणअन्तो जणो ...... (*ibid* 2, 2—)
4. ण उण कुविदेसु (*ibid* 1, 17—)
   मए परिकुविअ भणिअं (*ibid* 1, 20—)
   देवी पुच्छिदा (मालवि. 1, 3—)
5. देवीं पेक्खिअ (वेणी. 1, )
6. तदा पडिणिवुत्तमाणा भाणुमदीए देवी दिट्ठा (*ibid* 1; 19—)

உதாரணமாக எழுதல் என்ற பொருள் கொண்ட लिख् என்ற தாது இறந்தகாலத்தில் ஆண்பாலொருமையில் आ விகுதியையும் பன்மையில் ए விகுதியையும், பெண்பாலொருமையில் ई விகுதியையும் பன்மையில் ईं விகுதியையும் பெறும்.

நிகழ்காலத்தில் ஆண்பாலொருமையில் ता என்ற விகுதியையும், பெண்பாலொருமையில் ती என்ற விகுதியையும் பெறும்; அதனோடு இறுதியில் தன்மையில் हूं-உம், முன்னிலை படர்க்கைகளில் है-உம் வரும். ஆண்பாற்பன்மையில் ते என்ற விகுதியையும் பெண்பாற்பன்மையில் तीं என்ற விகுதியையும் ஏற்கும். அவற்றின் இறுதியில் हैं வரும்.

எதிர்காலத்தில் ஆண்பாலொருமையில் தன்மையில் ऊंगा என்ற விகுதியையும் முன்னிலைபடர்க்கைகளில் एगा என்ற விகுதியையும், பெண்பாலொருமையில் ऊंगी என்ற விகுதியையும் முன்னிலைபடர்க்கைகளில் एगी என்ற விகுதியையும் பெறும். ஆண்பாற்பன்மையில் தன்மைபடர்க்கைகளில் एंगे என்ற விகுதியையும் முன்னிலையில் आगे என்ற விகுதியையும், பெண்பாற்பன்மையில் தன்மைபடர்க்கைகளில் एंगी என்ற விகுதியையும் முன்னிலையில் आगी என்ற விகுதியையும் பெறும்.

நிகழ்விறப்பில் लिख् தாதுவின் இறந்தகாலரூபத்தின் பின்னர் हू தாதுவின் நிகழ்காலரூபம் வரும்.

இறப்பிறப்பில் लिख् தாதுவின் இறந்தகாலரூபத்தின் பின்னர் हू தாதுவின் இறந்தகாலரூபமாகிய था, थे, थी, थीं வரும்.

எழுந்துகொண்டிருந்தேன் முதலிய பொருளில் வரும் लिख् தாதுவின் நிகழ்காலரூபத்தின் பின்னர் हू தாதுவின் இறந்தகாலரூபம் வரும்

ஸகர்மகதாதுவில் இறந்தகாலம், நிகழ்விறப்பு, இறப்பிறப்பு இவற்றில் தாதுவின் முன்னர் ने சேர்க்கப்படும்.

ஏவல்குறிரீதியில் முன்னிலையொருமையில் தாதுவிற்கு अ விகுதியும், பன்மையில் ओ விகுதியும் சேர்க்கப்படும்.

ணிஜர்த்தத்தில் தாதுவிற்கு आवा, अवावा சேர்க்கப்படும்.

எச்சவினை : त्वा ப்ரத்யயத்தின் பொருளில் उठ् தாது, उठकर, उठकरके என்ற ரூபத்தைக் கொள்ளும்.

மராட்டியில் முற்றுவினையில் நிகழ்ச்சிக்குறிரீதி, ஏவல்குறிரீதி, வியங்கோள்குறிரீதி முதலிய ரீதிகள் பல இருப்பதாயும் நிகழ்ச்சிக்குறிரீதியில் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் இவற்றைக் குறிக்க வெவ்வேறு ரூபங்கள் இருப்பதாயும் கூறுகின்றனர். விகுதிகள் ரீதி, காலம், இடம், ஆண் பெண் இரண்டுமல்லாதது இவற்றுள் ஒன்று, ஒருமை பன்மை இவற்றைக் குறிக்கும்.

நிகழ்காலம் :

| | ஒருமை | | | பன்மை | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண் | பெண் | அலி | ஆண் | பெண் | அலி |
| தன்மை | तों | तें, त्यें | तें | तों | तों | नों |
| முன்னிலை | तोस | तेस, त्येस, तीस | तेंस | तां | तां | नां |
| படர்க்கை | तो | ते, त्ये, ती | तें | तात | तात | तात |

இறந்தகாலம் :

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தன்மை | लों | लें, ल्यें | लें | ... | लों | ... |
| முன்னிலை | लास | लीस | लेंस | ... | लां | ... |
| படர்க்கை | ला | ली | लें | ले | ल्या | लीं |

எதிர்காலம் :

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| தன்மை | एन, इन | ऊं |
| முன்னிலை | शील | आल |
| படர்க்கை | एल, ईल | तील |

ஏவல்குறிரீதி :

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| தன்மை | ऊं | ऊं |
| முன்னிலை | अ | आ |
| படர்க்கை | ओं, ऊ | ओत, ऊत |

வேண்டுகோள்குறிரீதி :

| | ஆண் | பெண் | அலி | ஆண் | பெண் | அலி |
|---|---|---|---|---|---|---|
| தன்மை | आवा | आवी | आवें | आवे | आव्या | आवीं |
| முன்னிலை | आवास | आवीस | आवेंस | ओवेत, | आव्यात | आवींत |
| | | | | आवे | आव्या | आवीं |
| படர்க்கை | आवा | आवी | आवें | आवे | आव्या | आवीं |

எச்சவினை : त्वा என்பதன் பொருளில் ऊन என்பதும், ल्य என்பதன் பொருளில் तां, तांना, ऊं என்பனவும், अतृ என்பதன் பொருளில் त, ता என்பனவும், செய்வினையில் வரும். त என்பதன் பொருளில் ला, लेला என்பனவும், செயப்பாட்டு வினையில் வரும் त என்பதன் பொருளில் ला-வின் பின்னர் जाणें என்பதும் வரும்.

ஹிந்தி, மராட்டி இவற்றை நோக்கின் ஈண்டுத் திராவிட மொழிகளிற்போல் வினையில் ஆண் பெண் இவற்றைக் குறிக்க வெவ்வேறு விகுதிகள் சேர்க்கப்பட்டன என்பது வெளிப்படை. இவ்வாறு வைதிகமொழி, இதிஹாஸமொழி, ப்ராகிருதமொழி இவற்றில் இல்லை. ஹிந்தியை நோக்கின் நிகழ்விறப்பு, இறப்பிறப்பு இவற்றைக் குறிக்கத் தொடர்ச்சொல் வழங்கப் படுகின்றது. அஃதும் வைதிகமொழி முதலியவற்றிலிருந்து வேறுபடும் மாறுபாடு ஒன்றாகும்.

தற்போது வடநாட்டில் வழங்கும் மாகாணமொழிக ளனைத்தையும் படித்து, அவற்றைப் பிராகிருதமொழியோடு ஒப்பிட்டு, ஒவ்வொன்றிலும் எங்கெங்கு ப்ராகிருதமொழியோடு

அவை இயைபுபட்டு மேல் வளர்ந்தன என்பதையும், எங்கெங்கு வேற்றுமொழிகளிலிருந்து கடன்வாங்கின என்பதையும், எம்மொழிகளிலிருந்து கடன்வாங்கின என்பதையும் பின்வரும் மொழிநூல்வல்லோர் ஆராய்தற்கு உரியது. ஒவ்வொரு மொழியிலுள்ள இலக்கியங்களை நன்கு படித்தபின்னரே அதனைப் பற்றி நன்கு கூறுதல் பொருந்துமாகலானும், எனக்கு வட மாகாணமொழிகளிலுள்ள இலக்கியங்களிற் பயிற்சியின்மையானும், அவ்வவற்றில் எழுதப்பட்ட இலக்கணங்களைக் கொண்டே அவற்றைப்பற்றிக் கூற எனக்கு மனமில்லையாகலானும், அவற்றைப்பற்றி இந்நூலில் ஒன்றும் விரிவாய் யான் கூறவில்லை.

# தொடர்ப்பிரகரணம்

மக்கள் தங் கருத்தைத் தொடராலே வெளிப்படுத்தலான், உண்மையாய்த் தொடர்க்குத் தான் பொருள் உண்டேயன்றி, தனிச்சொற்களுக்கு இல்லை. இதனைக் கருத்திற் கொண்டே வடமொழியிலக்கணவாசிரியர் வாக்கியஸ்போடத்தையே பிரதானமாகக் கொண்டனர். தனிச்சொற்களுக்குப் பொருள் உள்ளதாகப் பின்னர் இலக்கணவாசிரியர்களாற் கருதப்பட்டது. அவ்வாறு இருப்பினும் இன்றும் கூறுவோன் தனிச்சொற்களை வழங்கின், அவனுடைய கருத்து கேட்போனுக்கு விளங்குவதில்லை. ஒன்றுக்கொன்று பொருளில் அவாவிநின்று, ஒன்றுக்கொன்று இயைபுபட தகுதியுடையவாய்க் காலதாமதமின்றிக் கூறப்படும் சொற்கூட்டத்தாலே தான் கூறுவோன் கருத்து கேட்போனுக்கு விளங்கும். அவாவுதலை आकाङ्क्षा என்றும், தகுதியை योग्यता என்றும், காலதாமதமின்றிக் கூறுதலை सन्निधिः என்றுங் கூறுவர். ஆகலின் ஒரு தொடராவது सन्निधिः, आकाङ्क्षा, योग्यता இவற்றைக்கொண்ட சொற்கூட்டம். தொடரில் சொற்கள் ஒருவகையான முறையிற் கூறப்பட வேண்டும். அக்காரணம்பற்றி முதலில் வடமொழித்தொடரில் சொற்களின் முறை எவ்வாறு என அறிதல் வேண்டும். பின்னர் இருசொற்களுக்கு ஆகாங்க்ஷை வேற்றுமைவழியாகவும் வேற்றுமையில்வழியாகவும் இருக்கலாம். வேற்றுமையில்வழி இருப்பின், அவை எழுவாயும் பயனிலையும் ஆய் இருக்கலாம்; அப்போது எழுவாய் பயனிலைகள் எவ்வாறு இயைபுபட வேண்டும் எனவும் ஈண்டுக் கூறல் வேண்டும். வேற்றுமைவழியாக இருப்பின், இருசொற்களுள் முன்சொல் வேற்றுமையுருபேற்று நின்று பின்சொல்லைத் தழுவவேண்டும்; அப்போது அவ்விரண்டற்கும் உள்ள ஸம்பந்தத்தை வேற்றுமையுருபு கூறும்; ஆகலின் வேற்றுமையுருபுகளின் பொருளையும் ஈண்டுக் கூறல் வேண்டும். வினை தன்பொருளைப் பல்வகைரீதியிற் கூறலாம். ஆகலின் வினைகளின் ரீதியைப்பற்றியும் அவற்றின்

பொருளைப்பற்றியும் ஈண்டுக் கூறல் வேண்டும். அவற்றைத் தவிர்த்து சில நிபாதங்கள் தொடரில் பல்வகைப்பொருளில் பல்விதமாக மற்ற சொற்களோடு இயைபுபடலாம்; அவற்றையும் ஈண்டுக் கூறல் வேண்டும்.

வாக்கியத்தில் சொல்முறை: செய்யுள்களிலிருந்து வாக்கியங்களிலுள்ள சொற்களின் முறை அறிதல் இயலாது; ஏனெனில் ஆங்குச் செய்யுளிலக்கணம் தவறுதிருக்கச் சொற்களின் முறை பிறழ்ந்திருக்கலாம். ஆகலின் சொல்முறையை அறிய ஸம்ஹிதை மிகுதியாய்ப் பயன்படா. அதனைப் பிராம்மணங்களிலிருந்தே அறிதல் வேண்டும்.

வடமொழியில் வாக்கியத்தின் தொடக்கத்தில் எழுவாயும் இறுதியில் பயனிலையும் இருத்தலே பொதுமுறையாகும்.

உ-ம். स एतेन प्रज्ञेनात्मनास्माल्लोकादुत्क्रम्यामुष्मिन्स्वर्गे लोके सर्वान् कामानाप्त्वा अमृतः समभवत् (ऐत. उ. 5, 3)

ஆனல் பயனிலையைச் சிறப்பித்துக் கூறவேண்டுமாயின் அவ்விடத்து பயனிலையைத் தொடக்கத்தில் வழங்குவது உண்டு.

உ-ம். उक्ता त उपनिषत् (केनो. 4, 7)

அவ்வாறே விதேயமும் தொடக்கத்தில் வரும்.

உ-ம். परोक्षप्रिया इव हि देवाः (ऐत. उ. 3, 14)

செயப்படுபொருள் வினையை ஒட்டி நிற்கும்.

உ-ம். येन वा वाचं व्याकरोति (ऐत. उ. 5, 1)

அது ஒரு வாக்கியத்தின் கருத்தாயின், வினையின் பின்னரும் வரும்.

உ-ம். इमाः सर्वाः प्रजाः सत आगम्य न विदुः सत आगच्छामह इति (छान्दो. 6, 10)

அதனைச் சிறப்பித்துக் கூறவேண்டின் அது தொடக்கத்திலும் வரலாம்.

உ-ம் एनं सर्वाणि भूतानि संवाञ्छन्ति (केनो. 4, 6)

அவ்வாறே எதனைச் சிறப்பித்துக் கூறவேண்டுமோ அதனை முற்கூறுதல் தகும்.

உ-ம். यया कया च विधया बह्वन्नं प्राप्नुयात् (तै. उ. 3, 10)
आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति (बृ. उ. 4, 5)
अन्नाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते (तै. उ. 3, 2)
शरीरे प्राणः प्रतिष्ठितः (*ibid* 3, 7)

ஒருபொருளின் விசேஷத்தைக் குறிக்கும் பெயர் அதன் இயற்பெயரின் பின்னர் வரும்.

உ-ம். अग्निर्होता कविक्रतुस्सत्यश्चित्रश्रवस्तमः (ऋ. वे. 1, 1, 5)

விசேஷணச்சொல் விசேஷ்யச்சொல்லின் முன்னரே இருக்கும்.

इह कर्मजितो लोकः क्षीयते (छान्दो. 8, 1, 6)

அவ்வாறே ஆறும்வேற்றுமைச்சொல்லும் தான் தழுவும் சொல்லின் முன்னரே இருக்கும்.

உ-ம். सङ्कल्पादेव अस्य सखायः समुत्तिष्ठन्ति (छान्दो. 8,2,9)
अग्ने रोहितं रूपम् (*ibid* 6, 4)

உபஸர்க்கம் பெரும்பாலும் வினையின் முன்னரே வரும்.

உ-ம். आगहि (ऋ. वे 1, 4, 3)

சிலவிடத்து பின்னரும் வரும்.

உ-ம். जयेम सं युधि स्पृधः (ऋ. वे. 1, 8, 3)

இவ்வாறு இதிஹாஸமொழிநிலையில் இல்லை.

*சிலவிடத்து அவற்றின் இடையில் சில சொற்களும் வரும்.*

உ-ம். एमाशुमाशवे भर (ऋ. वे. 1, 4, 7)

*இவ்வாறு இதிஹாஸமொழிநிலையில் இல்லை.*

*நிஷேதம் பிரதானமானால் அதனைக் குறிக்கும்* न *வாக்கியத்தின் தொடக்கத்தில் வரும்.*

உ-ம். न वा अरे पत्युः कामाय पतिः प्रियो भवति (बृ. उ. 4, 5)

*அவ்வாறு இல்லையேல் வினைக்கு முன்னரே* न *வரும்.*

உம். अन्नं न निन्द्यात् (तै. उ. 3, 7)

अथ, एवम्, हन्त *போன்ற நிபாதங்கள் வாக்கியத்தின் தொடக்கத்தில் வரும்.*

உ-ம். अथो अन्नेनैव जीवन्ति (तै. उ. 2, 2)
अथ य आत्मा स सेतुः (छान्दो. 8, 4)
एवमेव खलु सोम्य विद्धि (*ibid* 6, 11)
हन्ताहमेतद्भगवतो वेदानि (*ibid* 1, 8)

यत्, किम् *இவற்றின் ரூபங்கள் தொடக்கத்தில் வரும்.*

உ-ம். यत्तपो दानमार्जवमहिंसा सत्यवचनमिति ता अस्य दक्षिणाः (*ibid* 3, 17)
क तर्हि यजमानस्य लोकः (*ibid* 2, 24)
किमहं पापमकरवम् (तै. उ. 2, 9)
कुतस्तु खलु सोम्यैवं स्यात् (छान्दो. 6, 2)
कथमसतः सज्जायेत (*ibid* 6, 2)

*விதேயவிசேஷணம் விதேயத்தின் முன்னர் வரும்.*

உ-ம். बहु स्याम् (छान्दो. 6, 2)
तासां त्रिवृतं त्रिवृतम् एकैकामकरोत् (*ibid* 6, 3)

எண்ணுப்பெயர்கள் அவை தழுவும் பெயரின் முன்னரே வரும்.

உ-ம். भूतानां त्रीण्येव बीजानि भवन्ति (छान्दो. 6, 3)

எழுவாய்பயனிலைகளின் ஒற்றுமை: பொதுவாய் இடம்[1], எண்[2] இவற்றில் எழுவாயோடு பயனிலை ஒத்து இருக்கும்.

अहं मनुरभवम् (ऋ. वे. 4, 26, 1)
आवयं वज्रं घना ददीमहि (*ibid* 1, 8, 3)
त्वं जघन्थ नमुचिम् (10, 73, 7)
युवं च्यवानं जरसो मुमुक्तम् (*ibid* 7, 71, 5)
यूयमस्मान्नयत (5, 55, 10)
स देवाँ एह वक्षति (*ibid* 1, 1, 2)
त्वां वर्धन्तु नो गिरः (*ibid* 1, 5, 8)

தன்மையொருமையும் முன்னிலையொருமையும் எழுவாயா யிருக்க, பயனிலை தன்மையிருமையில் இருக்கும்.

உ-ம். अहं च त्वं च संयुज्याव (ऋ. वे. 8, 62, 11)

தன்மையொருமையும் படர்க்கையொருமையும் எழுவாயா யிருக்க, பயனிலை தன்மையிருமையாயிருக்கும்.

உ-ம். आयदिन्द्रश्च दद्वहे सहस्रं वसु रोचिषः
(*ibid* 8, 34, 16)

தன்மைப்பன்மையும் படர்க்கைப்பன்மையும் எழுவாயா யிருக்க பயனிலை சிலவிடத்து படர்க்கைப்பன்மையாய் உள்ளது.

உ-ம். अमी च ये मघवानो वयं च मिहं न सूरो अतिनिष्टतन्युः
(ऋ. वे. 1, 141, 13)

1. Person. 2. Number.

முன்னிலையொருமையும் படர்க்கையொருமையும் எழுவாயா யிருக்க, பயனிலை முன்னிலையிருமையாய் இருக்கும்.

உ-ம். वायविन्द्रश्च चेतथः सुतानां वाजिनीवसू (*ibid* 1, 2, 5)

போர்க்களத்தில் போர் செய்யும் இருகூட்டத்தாரைக் கூறுமிடத்து எழுவாய் பன்மையாகவும் பயனிலை இருமையாகவும் இருக்கும்.

உ-ம். यं क्रन्दसी संयती विह्वयेते परेऽवर उभया अमित्राः (*ibid* 2, 12, 8)

எழுவாய் நபும்ஸகப்பன்மையாயிருக்க, பயனிலை ஒருமையாய் இருத்தலும் உண்டு.

உ-ம். धृष्णवे धीयते धना (*ibid* 1, 81, 3)

பல ஒருமைப்பெயர்கள் எழுவாயாயிருக்க, பயனிலை ஒருமையில் இருத்தல் கூடும்; அப்போது ஒவ்வொரு பெயரும் தனித்தனியாய்ப் பயனிலையோடு அந்நுவயிக்கும் எனக் கொள்ளல் வேண்டும்.

உ-ம். मित्रस्तन्नो वरुणो रोदसी च द्युभक्तमिन्द्रो अर्यमा ददातु[1] (ऋ॰ वे 7, 40, 2)

எழுவாய் ஒருமையும் பன்மையுமாக இருப்பின், பயனிலை ஒருமையாகவும் இருப்பது உண்டு: பன்மையாயும் இருப்பது உண்டு.

உ-ம். आवदिन्द्रं यमुना तृत्सवश्च (ऋ॰ वे॰ 7, 18, 19)
इन्द्रो विदुरङ्गिरसश्च (*ibid* 10, 108, 10)

1. ஈண்டு रोदसी என்பது இருமையாயிருப்பினும், பூமி ஸ்வர்க்கம் இரண்டையும் தனித்தனியாய்க் குறிக்காது ஒன்றாகக் குறித்தலின் ஒருமைவினை ஏற்றது எனக் கொள்ளல் வேண்டும். அது இருமையாக मुत्रूहे दंपुष्येन रोदसी (ऋ॰ वे॰ 1, 160, 2) என்றவிடத்துக் கருதப்பட்டது.

எழுவாய் இருமையும் பன்மையுமாக இருப்பின், பயனிலை இருமையாகவும் இருப்பது உண்டு, பன்மையாகவும் இருப்பது உண்டு.

உ-ம். गिरयश्च दृळ्हा द्यावा च भूमा तुजेते (ऋ. वे. 1, 61, 14)
द्यावा च यत्र पीपयन्नहा च (*ibid* 7, 65, 2)

எழுவாய் ஒருமையும் இருமையுமாக இருப்பின் பயனிலை ஒருமையாகவோ பன்மையாகவோ தைத்திரீயஸம்ஹிதையில் உள்ளது.

உ-ம். व्यायमात्रौ पक्षौ च पुच्छं च भवति
तावश्विनौ च सरस्वती च अपां फेनं वज्रमासिञ्चन्

எழுவாய் ஒருமையும் பன்மையுமாக இருப்பின், பயனிலை பன்மையாகவே உளது.

உ-ம். देवाश्च वै यमश्च अस्मिन् लोकेऽस्पर्धन्त

எழுவாய் ஒருமையாயிருக்க சிறப்பு நோக்கிப் பயனிலை பன்மையாய் இருப்பதும் உண்டு.

உ-ம். इन्द्रं ...... दिवं यय (ऋ. वे. 8, 34, 1)

விசேஷணவிசேஷ்யங்களின் ஒற்றுமை : பெரும்பாலும் விசேஷணம் விசேஷ்யத்துடன் லிங்கம் வசனம் விபக்தி இவற்றில் ஒத்திருக்கும்.

உ-ம். आ कृष्णेन रजसा वर्तमानः (ऋ. वे. 1, 35, 2)
तेभिर्नो अद्य पथिभिः सुगेभिः (*ibid* 1, 35, 11)

ஐந்திலிருந்து பத்தொன்பது வரை குறிக்கும் எண்கள் தழுவும் விசேஷ்யம் எந்த விபக்தியிலிருப்பினும், தாம் முதல் வேற்றுமையுருவம் கொள்ளும்; அந்த விபக்தியின் உருவத்தை

யுங் கொள்ளும். இவ்வாறு ஸம்ஹிதையிற் காணப்படுகின்றது. பிராம்மணங்களிற் பின்னர்க் கூறப்பட்டதே காணப்படுகின்றது.

உ-ம். सप्त सिन्धून् (ऋ. वे. 1, 35, 8)
सप्त होतृभिः
पञ्च कृष्टिषु (*ibid* 2, 2, 10)
सप्तभिः पुत्रैः (*ibid* 10, 72, 9)
पञ्चसु जनेषु
पञ्चस्वधिकरणेषु (तै. उ. 1, 1)

இருபதுமுதல் உள்ள எண்ணுப்பெயர்கள் தாம் ஒருமை ருபங்கொண்டு பன்மைச் சொற்களைத் தழுவுகின்றன.

உ-ம். त्रिंशत् देवाः
त्रिंशतं योजनानि
त्रिंशता हरिभिः

சிலவிடத்து அவை விசேஷ்யமாகவும், விசேஷ்யம் ஆறும் வேற்றுமையாகவும் வழங்கப்பட்டன.

உ-ம். सहस्राणि गवाम्

ஸர்வநாமசப்தங்கள் விதேயத்தின் லிங்கம் வசனம் இவற் றோடு ஒத்திருக்கின்றன.

உ-ம. ये तुषाः सा त्वक्

வேற்றுமைகளும் அவற்றின் பொருளும் : முதல் வேற்றுமை எப்பொழுதும் தொழிலைச் செய்வோனையே குறிக்கும். अस्, भू முதலிய வினைகளோடு வழங்கப்படும் முதல் வேற்றுமைப் பெயர் கருத்தில் முற்றுப்பெறுமையால் அதன்பின்னரும் முதல் வேற்றுமைப்பெயர் வரலாம்.

உ-ம். मर्तो अस्तु प्रयस्वान् (ऋ. वे. 3, 59, 2)
स नः पितेव सूनवेऽग्ने सूपायनो भव (*ibid* 1, 1, 9)

இரண்டாம்வேற்றுமைப்பொருள் பொதுவாக கர்மம் அல்லது செயப்படுபொருள் ஆகும்[1].

உ-ம். यदङ्ग दाशुषे त्वमग्ने भद्रं करिष्यसि (ऋ· वे· 1, 1, 6)

அன்றியும் அடையும் பொருளையும், காலத்தின் அளவையும் தூரத்தின் அளவையும் குறிக்கவும் இரண்டாம்வேற்றுமை வழங்கப்படும்.

உ-ம். यमं ह यज्ञो गच्छति (ऋ· वे· 10, 14, 13)
शतं जीव शरदो वर्धमानः (*ibid* 10, 161, 4)
स भूमिं विश्वतो वृत्वा (10, 90, 1)

மூன்றாம்வேற்றுமை கருவி, உடனிகழ்ச்சி, கர்த்தா, ஹேது, அதன் வழியாக, அக்காலம் முடிய முதலிய பொருள்களில் வரும்[2].

உ-ம். यः शश्वतो मह्येनो दधानानमन्यमानाञ्-
शर्वा जघान (ऋ· वे 2, 12, 10)
देवो देवेभिरागमत् (*ibid* 1, 1, 5)
येनेमा विश्वा च्यवना कृतानि (*ibid* 2, 12, 4)
प्रतद्विष्णुः स्तवते वीर्येण (*ibid* 1, 154, 2)
सोमस्य पीत्या …… आगतम् (*ibid* 1, 46, 13)
आ कृष्णेन रजसा वर्तमानः (*ibid* 1, 35, 2)
पूर्वीभिर्ददाशिम शरद्भिः (*ibid* 1, 86, 6)

1. कर्मणि द्वितीया (पा· अ· 2, 3, 2)
2. कर्तृकरणयोस्तृतीया (*ibid* 2, 3, 18)
सहयुक्तेऽप्रधाने (*ibid* 2, 3, 19) हेतौ (*ibid* 2, 3, 23)

நான்காம்வேற்றுமை ஸம்பிரதானம் அல்லது கொள்வோனைக் குறிக்கும்[1].

உ-ம். यदङ्ग दाशुषे त्वमग्ने भद्रं करिष्यसि (*ibid* 1, 1, 6)

அதனைக்குறித்து என்ற பொருளிலும் வரும்.

உ-ம். सचस्वा नः स्वस्तये (*ibid* 1, 1, 9)

ஐந்தாம்வேற்றுமை அபாதானம் அல்லது செய்கை தொடங்கும் இடத்தையும் ஹேதுவையும் குறிக்கும்[2]; பயத்திற்கு ஹேதுவாய பொருளையுங் குறிக்கும். காட்டிலும் என்ற பொருளிலும் வரும்.

உ-ம். सूर्यस्य संदृशो युयोथाः (*ibid* 2, 33, 1)

मा नस्तस्मादेनसो देव रीरिषः (*ibid* 7, 89, 5)

भयन्ते विश्वा भुवना मरुद्भ्यः (*ibid* 1, 85, 8)

यस्य शुष्माद्रोदसी अभ्यसेताम् (*ibid* 2, 12, 1)

न वा ओजीयो रुद्र त्वदस्ति (*ibid* 2, 33, 10)

ஆறும்வேற்றுமை ஸம்பந்தத்தைக் குறிக்கும்[3].

உ-ம். नः स्वस्तये (ऋ. वे. 1, 1, 9)

ते पन्थाः (*ibid* 1, 35, 11)

वः शर्म (*ibid* 1, 85, 12)

विष्णोर्नुकं वीर्याणि (1, 154, 1)

1. चतुर्थी सम्प्रदाने (*ibid* 2, 3, 13)
2. अपादाने पञ्चमी (*ibid* 2, 3, 28)
3. षष्ठी शेषे (*ibid* 2, 3, 50)

*ஏழாம்வேற்றுமை* செயல் நிகழும் இடம் காலம் *முதலிய வற்றைக் குறிக்கும்*[1].

உ-ம். वर्धमानं स्वे दमे (ऋ. वे. 1, 1, 8)

चत्वारिंश्यां शरद्यन्वविन्दत् (*ibid* 2, 12, 11)

**நிபாதங்களும் வேற்றுமையுருபேற்ற சொற்களும்:** *வைதிக மொழிநிலையில் சில நிபாதங்கள் சிற்சில வேற்றுமையுருபேற்ற சொற்களோடு வரும்*[2]. *அவ்வழக்கம் பிற்காலத்திற் குன்றியது இரண்டாம்வேற்றுமைச்சொற்களே மிகுதியாய் அவற்றை ஏற்கும். அவை* अनु, उप, अति, अभि, प्रति, तिरस्, अन्तरा, अभितः, उपरि, सनितुः ……

உ-ம். वर्त्मान्येषामनु रीयते घृतम् (ऋ. वे. 1, 85, 3)

उप त्वाग्ने (*ibid* 1, 1, 7)

सरो न पूर्णमभितो वदन्तः (7, 103, 7)

स इद्राजा प्रतिजन्यानि विश्वा शुष्मेण तस्थावभि वीर्येण (*ibid* 4, 50, 7)

1. सप्तम्यधिकरणे च (*ibid* 2, 3, 36)
2. *இந்நிபாதங்களுள்* अनु, उप, अति *போன்றவற்றிற்கு இலக்கணவாசிரியர்* कर्मप्रवचनीयम् *என்ற குறியிட்டனர். அதற்குப் பொருள்* ये अप्रयुज्यमानस्य क्रियामाहुः ते कर्मप्रवचनीयाः *என்று மஹாபாஷ்யகாரர் கூறினர். இவை வேற்றுமையுருபாற் கூறப்பட்ட ஸம்பந்தத்தைத் தெளிவுப்படுத்துகின்றன என்றனர் பர்த்ருஹரி.*

क्रियाया द्योतको नायं न सम्बन्धस्य वाचकः ।
नापि क्रियापदाक्षेपी सम्बन्धस्य तु भेदकः ॥ (वाक्यपदीये)

மூன்று நான்கு இவ்வேற்றுமையுருபேற்ற சொற்களோடு கர்மப்ரவசனீயங்கள் பெரும்பாலும் வருதல் இல்லை. ஆனால் नमः, स्वस्ति இவைபோன்ற சொற்களோடு நான்காம்வேற்றுமை யுருபேற்ற சொற்களே வழங்கப்படும். ஈண்டு नमः, स्वस्ति என்பன முதல்வேற்றுமைப்பெயராய்ப் பின்னர் अस्तु, भवतु போன்ற வினைகளைப் பயனிலையாய்க் கொண்டிருத்தல் தகும். பின்னர் வினை வழங்கப்படாமல் இருக்க, இவற்றை அவ்யயங்களாகக் கொண்டிருத்தல் வேண்டும். இதற்குச் சான்று नमांसि, नमोभिः போன்ற சொற்களும், स्वस्तिम्, स्वस्तये, स्वस्तिभिः போன்ற சொற்களும் வேதங்களில் வழங்கப்பட்டமையே ஆகும்.

ऋते என்பது வேதத்தில் ஐந்தாம்வேற்றுமையுருபேற்ற சொல்லோடும், பின்னர் அதனோடும் இரண்டாம்வேற்றுமையுரு பேற்ற சொல்லோடும் வழங்கப்பட்டது.

உ-ம். यस्मान्न ऋते विजयन्ते जनासः (ऋ. वे. 2, 12, 9)

आधि போன்ற கர்மப்ரவசனீயம் ஏழாம்வேற்றுமையுரு பேற்ற சொற்களோடு வரும்.

உ-ம். वयो न सीदन्नधि बर्हिषि प्रिये (ऋ. वे. 1, 85, 7)

ஸதிஸப்தமியும் அநாதரேஷஷ்டியும்: ஒரு வாக்கியத்தில் ஒரே காலத்தில் நிகழ்ந்த இரு செயல்களைக் குறிக்கவேண்டின், ஒன்றினை முற்றுவினையாலும், மற்றொன்றினை எச்சத்தாலும் குறித்தல் வடமொழியியற்கை [1]. ஆங்கு எச்சத்தையும் அதன்

1. यस्य च भावेन भावलक्षणम् (पा. अ. 2, 3, 37)
षष्ठी चानादरे (*ibid* 2, 3, 38)
षष्ठी च, अनादरे என யோகவிபாகம் செய்தல் நன்று.

கருத்தாவைக் குறிக்கும் பெயரையும் ஏழாம்வேற்றுமையில் வேதங்களிலும்; ஏழாம்வேற்றுமை ஆறும்வேற்றுமை இவ்விரண்டிலும் இதிஹாஸமொழிகளிலும் வழங்குகின்றனர்.

உ-ம். यदीमेनाँ उशतो अभ्यवर्षीत्तृष्यावतः प्रावृष्यागतायाम्
(ऋ. वे. 7, 103, 3)

इन्द्रं प्रातर्हवामह इन्द्रं प्रयत्यध्वरे (*ibid* 1, 16, 3)

चतुर्दश हि वर्षाणि रामे प्रव्राजिते वनम्
प्रजा भागवतस्नेहास्थिरः पुत्रो भविष्यति ॥
(रामा. अयो. 9, 21)

इति प्रत्यर्च्य तान् राजा ब्राह्मणानिदमब्रवीत् ।
वासिष्ठं वामदेवं च तेषामेवोपशृण्वताम् ॥ (*ibid* 3, 3)

दृढं त्वभिहितश्चाहमर्जुनेन पुनः पुनः ।
मध्ये सर्वस्य सैन्यस्य वासुदेवस्य शृण्वतः ॥
(म. भा. द्रो. 111, 10)

इति वादिन एवास्य होतुराहुतिसाधनम् ।
अनिन्द्या नन्दिनी नाम धेनुराववृते वनात् ॥
(रघु. 1, 82)

இவ்வாறு ஸப்தமியும் ஷஷ்டியும் வழங்கப்படினும் வழக்கில் அந்த ஸப்தமியை ஸதிஸப்தமீ என வழங்குகின்றனரேயன்றி ஷஷ்டியை ஸதஷ்ஷஷ்டி என வழங்குவதில்லை.

அவ்வாறே இரண்டு வகையாலும் அநாதரவைக் குறித்தல் உண்டு.

உ-ம். रुदति पुत्रे प्रव्राजीत्
रुदतः पुत्रस्य प्रव्राजीत्

அவ்வாறு இருப்பினும் அநாதரேஷஷ்டீ என்ற வழக்கு உலகத்தில் உள்ளதேயன்றி அநாதரேஸப்தமீ என்ற வழக்கு இல்லை.

பிற்காலத்தில் இருசெயல்களின் ஏககாலநிகழ்ச்சியைக் குறிக்க ஸதிஸப்தமீயையும், அநாதரவைக் குறிக்க ஷஷ்டீயையும் வழங்கலாயினர்.

வேற்றுமைமயக்கம்: எல்லாமொழிகளிலும் தொடக்கத்தில் ஒரு வேற்றுமையுருபு பல பொருள்களிலும், ஒரு பொருள் பல வேற்றுமையுருபுகளாலும் வழங்கப்பட்டன என்பது அம்மொழிகளிலுள்ள பழைய இலக்கியங்களால் நன்கு அறியப்படும். இலக்கணவாசிரியர்கள் இலக்கணம் எழுதத்தொடங்கிய போது வழக்கின் மிகுதியை நோக்கி, ஒவ்வொரு வேற்றுமைக்கும் பொருளைக் கூறினர். ஆகலின் பின்னர் வந்த இலக்கணவிதிக்கு மாறாக முன்னர் இலக்கியங்களில் வழக்கு இருத்தல் இயற்கையே. இலக்கணங்கள் தோன்றிய பின்னரும் ஒரு கருத்தைப் பலர் பலவாறாக நினைக்கவும் கூறவும் இயலுமாகலான், பிற்காலத்தும் ஒரு வேற்றுமையுருபு அதன் பொருளிலிருந்தும் வேறுபட்டு வரலாம்.

இரண்டாம்வேற்றுமைப்பொருளில் ஆறாம்வேற்றுமை வழங்கப்பட்டது.

உ-ம். ईमहे इन्द्रमस्य रायः (ऋ. वे. 6, 22, 3)

मारुतस्य न आ भेषजस्य वहत (*ibid* 8, 20, 23)

इमे सोमा अरङ्कृताः । तेषां पाहि (*ibid* 1, 2, 1)

2. இரண்டாம்வேற்றுமைப்பொருளில் நான்காம்வேற்றுமை வழங்கப்பட்டது.

உ-ம். इन्द्रं वृत्राय हन्तवे (ऋ. वे 3, 37, 6)

मृळ जरित्रे (*ibid* 2, 33, 11)

மூன்றாம்வேற்றுமைப்பொருளில் ஆறாம்வேற்றுமை வழங்கப்பட்டது.

உ-ம். मादयध्वं मरुतो मध्वो अन्धसः (ऋ. वे. 1, 85, 6)

ஹேதுப்பொருளில் ஏழாம்வேற்றுமை வழங்கப்பட்டது.

உ-ம். मरुतः सुदानवो मदे सोमस्य रण्यानि चक्रिरे
(*ibid* 1, 85, 10)

நான்காம்வேற்றுமைப்பொருளில் மூன்றும்வேற்றுமை வழங்கப்பட்டது.

உ-ம். कण्वेभिर्धृष्णवाधृषद्वाजं दर्षि सहस्रिणम्
(*ibid* 8, 33, 3)

இதிஹாஸமொழிநிலையிலும் வேற்றுமைமயக்கம் காணப்படுகின்றது.

ஏழாம்வேற்றுமைப்பொருளில் நான்காம்வேற்றுமை வந்துளது.

உ-ம். गदां चिक्षेप सहसा धर्मपुत्राय मारिष
(म. भा. द्रो. 106, 36)

ஐந்தாம்வேற்றுமைப்பொருளில் ஏழாம்வேற்றுமை வந்தது.

உ-ம். रक्षणे धर्मराजस्य ध्रुवो हि विजयो मम
(*ibid* 111, 16)

ஐந்தாம்வேற்றுமைப்பொருளில் ஆறும்வேற்றுமை வந்துளது.

உ-ம். तव सर्वे हि बिभ्यति (रामा. 2, 29, 4)
बिभ्यतो रामबाणानाम् (*ibid* 5, 13, 7)

வேற்றுமைமயக்கமே பிற்காலத்து நேரிதான வழக்கெனக் கொள்ளப்பட்டது.

शी, स्था, आस् இவ்வினைகள் अधि என்ற உபஸர்க்கத்தோடு வரின் ஏழாம்வேற்றுமைப்பொருளில் இரண்டாம்வேற்றுமைப்

பெயர் வரும் [1]. அவ்வாறே ஆகும் नी தாது अभि, नि என்ற உபஸர்க்கங்களோடு வரின் [2]. அவ்வாறே वस् தாது उप, अनु, अधि, आ இவ்வுபஸர்க்கங்களுள் ஒன்றோடு வரின் [3].

இரண்டாம்வேற்றுமைப்பொருளில் ஆறும்வேற்றுமை வரும். உ-ம். मातुः स्मरति [4], सर्पिषो नाथते [5]

ஏழாம்வேற்றுமைப்பொருளில் ஆறும்வேற்றுமை வரும். உ-ம். पञ्चकृत्वोऽह्नो भोजनम् [6]

வேற்றுமையுருபேற்ற சொற்கள் அவ்யயம் ஆதல்: சில பெயர்கள் எல்லாவேற்றுமையிலும் வழங்கப்படாமல் சில வேற்றுமைகளிலும் மாத்திரம் வழங்கப்பட, நாளடைவில் அவை அவ்யயம் எனக் கருதப்பட்டன. அவை नमः, स्वस्ति, नक्तम्, चिरेण, चिराय, चिरात्, चिरस्य, पुरस् முதலியன ஆகும். இவற்றைப்பற்றி விரிவாய் முன்னரே கூறப்பட்டது.

## காலம்

நிகழ்காலவினை : நிகழ்ச்சிக்குறிப்பில் நிகழ்காலம் கூறுவோன் பேசுங்காலத்தைக் குறிக்கும்.

உ-ம் अग्निमीळे (ऋ. वे. 1, 1, 1)

1. अभिनिविशश्च... 

இரண்டு செயல் நிகழ்காலத்திலேயே நிகழ்ந்தால் அவற்றில் முன்னர்ச்செயலை இறந்தகாலத்தாற் குறிப்பதும் உண்டு.

உ-ம். पुरुत्रा वृत्रो अशयद् व्यस्तः ।...... अमुया शयानं मनोरुहाणा अतियन्त्यापः (*ibid* 1, 32, 7)

இவ்வழக்கு பிராம்மணங்களில் இறந்தது என்பர். पुरा என்ற சொல்லோடு கூடிய நிகழ்காலவினை அச்செயல்முன் தொடங்கி பேசுங்காலம்வரை நீடித்தது என்பதைக் குறிக்கும்.

உ-ம். क्व तानि नौ सख्या बभूवुः सचावहे यदवृकं पुराचित् (*ibid* 7, 88, 5)

पुरा, स्म இவற்றோடு கூடிய நிகழ்காலவினை இறந்தகாலத்தைக் குறிக்கும்.

உ-ம். संहोत्रं स्म पुरा नारी समनं वा अवगच्छति (ऋ· वे. 10, 86, 10)

பிராம்மணங்களில் பெரும்பாலும் पुरा இன்றி ह स्म மாத்திரம் காணப்படுகின்றது.

இதிஹாஸமொழியில் स्म மாத்திரம் வழங்கப்பட்டது[1].

உ-ம். ते स्म भीताः पलायन्ते (म· भा· द्रो· 93, 3)
न स्म सूर्यस्तदा भाति (*ibid* 98, 14)

சிலவிடத்து எதிர்காலப்பொருளிலும் நிகழ்காலவினை வரும்.

உ-ம். अहमपि हन्मि इति ह उवाच (शतपथ·)

1. लट् स्मे (पा· अ· 3, 2, 118)

இறந்தகாலவினை: செய்திருக்கிறான் என்ற பொருளில் நிகழ்விறப்பும் (லிட்), சமீபத்தில் நடந்தது என்பதைக் குறிக்க லுங்ஙும், காலத்தில் கருத்தின்றி முன் நிகழ்ந்ததைக் குறிக்க லங்ஙும் வேதத்தில் வந்தன என்னலாம்.

லிட்டிற்கு நிகழ்காலத்தோடும் ஸம்பந்தம் இருந்தமையால் ஓரிடத்தே லிட்டும் நிகழ்காலவினையும் சேர்ந்து வழங்கப்படும்.

உ-ம். प्र ये शुम्भन्ते ...... मरुतः चक्रिरे वृधे मदन्ति (ऋ॰ वे॰ 1, 85, 1)

ஸமீபகாலத்தில் நிகழ்ந்ததைக் குறித்த லுங்ஙிற்கு ஓர் உதாரணம்:

உ-ம். हिरण्याक्षः सविता देव आगाद्धद्रत्ना दाशुषे वार्याणि (ऋ॰ वे॰ 1, 35, 8)

காலத்திற் கருத்தில்லா லங்ஙிற்கு ஓர் உதாரணம்.

உ-ம். तेवर्धन्त स्वतवसः (ऋ॰ वे॰ 1, 85, 7)

சிலவிடத்து இம்மூன்றிற்கும் மயக்கமும் காணப்படும்.

எதிர்காலவினை: करिष्यति போன்ற வினை சிறுபான்மையே காணப்படுகின்றது. अविताःस्थः போன்ற வினை ஸம்ஹிதையில் இல்லை; பிராம்மணங்களில் வந்தது.

ஆனால் இறந்தகாலத்தைக் காட்டும் வினைகள் இதிஹாஸ மொழிநிலையில் பொருளில் மாறின என்பது பாணினியாசிரியர் ஸூத்ரங்களால் அறியப்படுகின்றது. இறந்தகாலஸாமான்யத்தைக் குறிக்க லுங்ஙும், கூறுவோனாற் பார்க்கப்பட்டதாயும் உலகத்தாரால் அறியப்பட்டதாயும் அனத்யதனமான இறந்த காலத்தில் நிகழ்ந்ததாயும் உள்ளதைக் குறிக்க லங்ஙும், அத்யந்தம் பரோக்ஷமான செயலைக் குறிக்க லிட்டும் வழங்கப்படும்

என்பது அஷ்டாத்யாயீஸூத்ரத்தாலும் மஹாபாஷ்யத்தாலும் அறியப்படுகின்றது [1].

ஏவல்குறிரீதி, வேண்டுகோள்குறிரீதி, ஏவல்கண்ணுதவியங்கோள்ரீதி, ஏவல்கண்ணியவியங்கோள்ரீதி இவற்றில் நிகழ்காலம் இறந்தகாலம் இவற்றைக் குறிக்க வழங்கப்பட்ட வினைகளின் பொருள் தெளிவாய் இருந்தகாலம் நீங்கி ஒன்றுக்கொன்று மயக்கம் வர, பல ரூபங்கள் பிராம்மணகாலத்திலே இறக்கத் தொடங்கி இதிஹாஸமொழிநிலையில் இறந்தன. ஏவல்கண்ணுதவியங்கோள்ரீதியில் நிகழ்காலரூபங்களும், ஏவல்குறிரீதியில் முன்னிலைபடர்க்கையொருமைரூபங்களும் வேண்டுகோள்குறிரீதி நிகழ்காலத்தன்மைரூபங்களும், அந்த ரீதியில் இறந்தகால முன்னிலைபடர்க்கையிருமைபன்மைரூபங்களே பிற்காலத்து தங்கின.

ஏவல்கண்ணுவியங்கோள்ரீதிநிகழ்காலரூபங்களை **विधिलिङ्** என்றும், மற்ற மூன்றையுஞ் சேர்த்து **लोट्** எனவும் வழங்கினர். **लिङ्**, **लोट्** என்பவற்றின் பொருளும் பாணினியாசிரியர் காலத்தே மயங்கின. ஆகலான் இரண்டிற்கும் ஒரே பொருள்களையே கூறினர் [2].

**எச்சவினை : आय्य, एण्य, अनीय, तव्य** இவற்றை ஈற்றிற் கொண்ட சொற்களுள் முதலிரண்டு வகையும் ருக்வேதஸம்ஹிதையிற் காணப்படுகின்றன. பின் வகை இரண்டும் அதர்வ

1. लुङ् (3–2–110) न चात्र अनद्यतनकालः विवक्षितः ; किं तर्हि ? भूत-कालसामान्यम् । अनद्यतने लङ् (3–2–111) परोक्षे च लोकविज्ञाते प्रयोक्तुर्दर्शनविषये लङ् वक्तव्यः । परोक्षे लिट् (3–2–115) परोक्षे लिडित्यत्र अत्यन्तापह्नवे च इति वक्तव्यम् ।

2. विधिनिमन्त्रणामन्त्रणाधीष्टसंप्रश्नप्रार्थनेषु लिङ् (पा. अ. 3, 3, 161) लोट् च (*ibid* 3, 3, 162)

வேதஸம்ஹிதையில் இரண்டு இடத்தும் இதிஹாஸமொழியிலுங் காணப்படுகின்றன.

உ-ம். पनाय्यमोजो अस्मे समिन्वतम् (ऋ. वे. 1, 160, 5)
तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि (*ibid* 3, 61, 9)
उपजीवनीयो भवति (अ. वे.)
न ब्राह्मणो हिंसितव्यः (अ. वे. 5, 18, 6)

त्वी, त्वाय, त्वा, त्य, य இவற்றை ஈற்றிற் கொண்ட எச்சவினைகளுள் முன்னர் இரண்டு வகையும் இதிஹாஸமொழிநிலையில் இறந்தன. त्य, य இவை பிற்காலத்து உபஸர்க்கத்தைக் கொண்ட வினைகளின் பின்னர் வரினும், ராமாயணத்திலும் மஹாபாரதத்திலும் தனிவினைகளின் பின்னர் அவை சிறுபான்மை வந்தன.

உ-ம். गूढ्वी तमो ज्योतिषा उषा अबोधि (ऋ. वे. 7, 80, 2)
स्त्रियं दृष्ट्वाय कितवं तताप (*ibid* 10, 34, 11)
युक्त्वा हरिभ्यामुप यासदर्वाक् (*ibid* 5, 40, 4)
यो हन्ति शत्रुमभीत्य (*ibid* 9, 55, 4)
पिबा निषद्य (*ibid* 1, 177, 4)
तच्छ्रुत्वा भूमिपालस्य वसिष्ठो द्विजसत्तमः ।
आदिदेश ......... (रामा. अयो. 3, 8)
प्रतिगृह्याब्रवीद्राजा तेभ्यः प्रियहितं वचः (*ibid* 3, 1)
अभिवाद्य तु राजानं ... ( म. भा. द्रो. 84, 9)
वरं प्रियतमं गृह्य (रामा. 5, 10, 40)
वन्द्य पाण्डवं ...... (म. भा. द्रो. 83, 7)

तुम् அர்த்தத்தில் வேதத்தில் வந்த ரூபங்களில் गन्तुम् போன்ற ரூபத்தைத் தவிர்த்து மற்றவை எல்லாம் இதிஹாஸமொழிநிலையில் இறந்தன. அவ்வெச்சவினைகளெல்லாம் பல

வேற்றுமையுருபேற்ற பெயர்களால் தழுவப்பட்டதைப் பின்னருள்ள உதாரணங்களிற் காண்க.

உ-ம் तमग्निमस्ते वसवो न्यृक्षण्वन्सुप्रातिचक्षमवसे कुतश्चित् (ऋ. वे. 7, 1, 2)

शिशीते शृङ्गे रक्षसे विनिक्षे (*ibid* 5, 2, 9)

अभूदु पारमेतवे पन्था (*ibid* 1, 46, 11)

आ नो नावा मतीनां यातं पाराय गन्तवे (*ibid* 1, 46, 77)

इन्द्र चोदय दातवे मघम् (*ibid* 9, 75, 5)

सद्यश्चिन्महि दावने (*ibid* 8, 46, 25)

प्र यद् भरध्वे सुविताय दावने (*ibid* 5, 59, 4)

अमित्रान् पृत्सु तुर्वणे (*ibid* 6, 46, 8)

इन्द्राय अर्कं जुह्वा समञ्जे वीरं दानौकसं वन्दध्यै (*ibid* 1, 61, 5)

विश्वस्मै सहसे सहध्यै (*ibid* 6, 1, 1)

युधये दस्युम् (*ibid* 5, 30, 9)

दृशये सूर्याय *ibid* (10, 14, 12)

प्र चतुष्पादित्यै (*ibid* 1, 124, 1)

अबोधि होता यजथाय देवान् (*ibid* 5, 1, 2)

इयेथ बर्हिरासदम् (*ibid* 4, 9, 1)

शकेम त्वा समिधम् (*ibid* 1, 94, 3)

त्राध्वं कर्तादवपदः (*ibid* 2, 29, 6)

युयोत नो अनपत्यानि गन्तोः (*ibid* 3, 54, 18)

अस्मभ्यं विश्वा आशास्तरीषणि (*ibid* 4, 37, 7)

---

# பொருட்பிரகரணம்

பொருள் என்றால் என்ன?: ஒருவன் ஒரு விஷயத்தைப் பற்றி மற்றொருவனுக்குக் கூறுகின்றான் என வைத்துக் கொள்வோம். அப்போது யாவை நிகழ்கின்றன என்பதை முன்னர் அறிதல் வேண்டும். ஒரு விஷயத்தைப்பற்றி ஒருவன் அறிகிறான்; தான் அறிந்ததைப் பிறனுக்குக் கூறச் சொற்களை ஒலிக்கின்றான்; ஒலிக்கப்பட்ட சொற்கூட்டத்தின் ஒலியைக் கேட்டு பிறன் அவ்விஷயத்தைப் பற்றி ஒருவாறு அறிகிறான். ஈண்டு விஷயம்[1], பேசுவோன்[2], சொற்றொடர்[3], கேட்போன்[4] ஆக நால்வர் இருக்கின்றனர். ஒவ்வொரு விஷயத்தையும் ஒருவன் முழுதும் அறிதல் இயலாது. உதாரணமாகச் சூரியன், சந்திரன் இவற்றைப் பற்றி நாம் பேசுகிறோம். அவை எவ்வாறு இருக்கின்றன என்பது நமக்கு முற்றிலுந் தெரியாது. அவை கனப்பொருளாயிருக்க, நமக்கு வட்டம்போல் தோன்றுகின்றன. ஒன்றின் கிரணத்தில் சூடும் மற்றொன்றின் கிரணத்தில் குளிர்ச்சியும் இருப்பதே நாம் நேரில் அனுபவிப்பன. அவை உருண்டைப்பொருளென வானநூலாசிரியர்கள் கூறுவதைக் கொண்டு, நாம் நேரிற்கண்ட உருண்டைப்பொருளைப்போல் அவற்றையும் நினைக்கிறோம். ஆகவின் நாம் அவற்றைப்பற்றி மனதிற்கொண்டதும் அவையும் ஒன்றாகா என்பது உணரப்படும். இவ்வியலில் சூரியன், சந்திரன் போன்றன விஷயம் என்ற சொல்லாலும், அவற்றைப்பற்றி நாம் மனத்திற்கொண்டன பொருள்[5] என்ற சொல்லாலும் வழங்கப்படும்.

இவ்வியலில் G. Stern இயற்றிய Meaning and Change of Meaning என்ற நூலே உபயோகிக்கப்பட்டது.

1. Referent
2. Speaker
3. Sentence in a language
4. Hearer
5. Meaning

அவற்றைப்பற்றி ஒருவன் பிறனுக்கு உணர்த்தவேண்டின், சொற்களையே அவன் வழங்கவேண்டும்; சொற்கள், தன் மனத்திலிருப்பதை ஏகதேசம் குறிக்குமேயன்றி முற்றிலும் குறிக்கா என்பது ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தால் அறிந்திருத்தல் கூடும். இச்சொற்களைக் கேட்டு மற்றொருவன் அவற்றைப்பற்றி ஒருவகையாக உணர்கின்றான். இங்குக் கூறுவோனும் கேட்போனும் தம் மனத்திற் கொண்டதே பொருள் ஆகும்.

அப்பொருள் ஒரு விஷயத்தைப்பற்றியது என்பதும், அதனைச் சொற்களாலே பெரும்பாலும் ஒருவர் பிறர்க்கு உணர்த்துகின்றார் என்பதும் அறியக்கிடக்கின்றன.

சில பொருள்கள் சிறப்பாக அறிவுறுத்தல்தன்மையைக்[1] கொண்டு இருக்கும்; சில சிறப்பாக மனநிலையுறுத்தல் தன்மையைக்[2] கொண்டு இருக்கும். ஆசிரியன் மாணவர்க்குப் பாடங் கற்பிக்கும் நிலையில் அவர் உணர்த்தும் பொருளில் அறிவுறுத்தல்தன்மை சிறந்து இருத்தலையும், குழந்தைகளைக் கொஞ்சும்போதும், பிறரிடம் வசைச்சொற்களை வழங்கும் போதும் மனநிலையுறுத்தல்தன்மை சிறந்து இருத்தலையும் நாம் காண்கிறோம்.

பிறனுக்கு ஒருவன் கருத்தை உணர்த்தும்போது தன் மனத்துள் தான் அதனை அறிதலும், அதனைப் பிறனுக்கு எவ்வாறு உணர்த்துவது என நினைத்தலும் ஆகிய இரண்டுமே உள எனப் பலர் கூறினர். மிகப் பெரியோர் தங்கருத்தைப் பிறர்க்கு உணர்த்தும்போது எவ்வாறு அதனை உணர்த்துவது எனச் சிறிதளவு நினைக்கின்றனரே யன்றி முற்றிலும் நினைப்பதில்லை என பெட்ஸ்[3], பர்க்காம்பு[4] இவ்விருவரும் கூறினர்.

1. Cognitive element = बोधकता
2. Emotive element = हर्षादिव्यञ्जकता
3. Betts
4. Burkamp

**மொழியின் பயன்** :[1] மக்கள் ஒருவரையொருவர் பலவற்றில் அறிவதற்கும், அறிந்து ஒன்றுபடுவதற்கும், வெளியுலகத்தோடு இயைபுபடுவதற்கும் மொழி சிறந்த ஸாதனம் ஆகும். தம்முடைய மனப்பான்மையையோ தம்முடைய கருத்தையோ வெளிப்படுத்தல் மாத்திரத்திலன்றி, பிறர் தம்முடைய கருத்தை அறியச்செய்தலிலும், அவர் அறிந்து அதற்கேற்ப நடத்தலிலும் மொழி பயன்படுகின்றது. மொழி எவ்வளக்கெவ்வளவு கூறுவோனுடைய கருத்தை நன்கு குறிக்கின்றதோ, அவ்வளக்கவ்வளவு அது பயன்படும்.

ஆகலின் ஒரு விஷயத்தை அறிபவன் தான் அறிந்ததைத் தனக்குள் சொற்களாற் சொல்ல ஆற்றலுடையவனாய் இருக்க வேண்டும் ; பின்னர்க் கேட்போன் தன் கருத்தை அறிதற்கேற்ற சொல்லாற் கூற ஆற்றலுடையவனாய் இருக்கவேண்டும் ; கேட்போன் அச்சொற்களால் கூறுவோனுடைய கருத்தை அறிய ஆற்றலுடையவனாய் இருக்கவேண்டும். இம்மூன்றனுள் ஒன்று குறைவுபடினும் கேட்போன் கூறுவோனது கருத்தை அறிய இயலாது.

**மொழியின் ஆற்றற்குறைவு** : ஒருவன் தன் மனத்துள்ள பொருள் அனைத்தையும் சொல்லால் உணர்த்துவது முடியாத காரியம். கூடியமட்டும் முக்கியமான கருத்தே சொல்லால் உணர்த்தப்படும் ; எஞ்சியவை எல்லாம் கேட்போன் ஸந்தர்ப்பத்தைக்கொண்டு அறியவேண்டியிருக்கும். அக்காரணம்பற்றியே கூறுவோன் சொல்லால் உணர்த்தும் பொருளுக்கும்[2] நிகண்டு கூறும் பொருளுக்கும்[3] மாறுபாடு உண்டு.

**பொருள்வகை** : கூறுவோனது கருத்தைக் கருதியபொருள்[4] என்றும், கேட்போன் கொண்ட கருத்தை உணர்ந்தபொருள்[5] என்றுங் கூறுவர்.

1. Function of speech
2. Actual meaning = वक्तृप्रयुक्तशब्दाधिगतोऽर्थः
3. Lexical meaning = निघण्ट्वधिगतोऽर्थः
4. Intended meaning.  5. Comprehended meaning.

விஷயத்தின் ப்ரவிருத்திநிமித்தத்தில்[1] பல அம்சங்கள் இருக்க, அவற்றுள் சிலவற்றைக் குறித்துக் கூறுவோன் உணர்த்தின் அப்பொருள் விஷயவிசேஷப்பொருள்[2] எனப்படும்; அவ்வாறின்றி விஷயத்தைப் பொதுவாய்க் குறிக்க உணர்த்தின், அப்பொருள் விஷயஸாமான்யப்பொருள்[3] எனப்படும். உதாரணமாகப் பார்வதியைக் காளிதாஸ மஹாகவி குமாரஸம்பவத்தில் மூன்றிடத்தில் வர்ணிக்கிறார். முதல் ஸர்க்கத்தில் பிறந்ததுமுதல் யௌவனம் அடைந்தது வரையில் அவள் எவ்வாறு இருந்தாள் என்பது வர்ணிக்கப்பட்டது[4]. ஈண்டு பார்வதி ஹிமவானுக்குப் பெண்ணாயிருக்குந் தன்மை ஒன்றையே கவி கருத்திற் கொண்டனர். மூன்றாம் ஸர்க்கத்தில் சிவபிரானுக்கு எதிரில் அவள் யுவதியாய் நிற்க, அவளை மன்மதன் தனக்கு உபகரணம் ஆக்கிய தன்மை ஒன்றையே கவி கருத்திற் கொண்டனர்[5]. ஏழாம் ஸர்க்கத்தில் கல்யாணமண்டபத்தில் மணப்பெண்ணாக இருந்தநிலை ஒன்றையே

1. प्रवृत्तिनिमित्तम् — सास्नालाङ्गूलखुरविषाणादिमत्त्वम् गोः प्रवृत्तिनिमित्तम्
2. Specialised meaning.
3. Referential meaning.
4. दिने दिने सा परिवर्धमाना लब्धोदया चान्द्रमसीव लेखा ।
   पुपोष लावण्यमयान् विशेषाञ्ज्योत्स्नान्तराणीव कलान्तराणि ॥ (1, 25)
   ... ... ... ... ... ...
   सर्वोपमाद्रव्यसमुच्चयेन यथाप्रदेशं विनिवेशितेन ।
   सा निर्मिता विश्वसृजा प्रयत्नादेकस्थसौन्दर्यदिदृक्षयेव ॥ (1, 49)
5. अशोकनिर्भर्त्सितपद्मरागमाकृष्टहेमद्युतिकर्णिकारम् ।
   मुक्ताकलापीकृतसिन्धुवारं वसन्तपुष्पाभरणं वहन्ती ॥ (3, 53)
   ... ... ... ... ... ...
   तां वीक्ष्य सर्वावयवानवद्यां रतेरपि ह्रीपदमादधानाम् ।
   जितेन्द्रिये शूलिनि पुष्पचापः स्वकार्यसिद्धिं पुनराशशंसे ॥ (3, 57)

கவி கருத்திற் கொண்டனர்[1]. ரகுவம்சத்தில் முதல் ச்லோகத்தில் கூறப்பட்ட பார்வதி அர்த்தநாரீச்வரமூர்த்தத்தில் உள்ளவளே குறிக்கப்படுகிறாள். 'பார்வதி என்னைக் காக்கட்டும்[2]' என்றவிடத்து பார்வதிஸாமான்யமே குறிக்கப்படுகிறாள்.

ஸந்தர்ப்பமின்றிச் சொன்மாத்திரத்தால் அறியப்படும் பொருளைக் கட்டுப்படுபொருள்[3] என்றும், கூறுவோன் சந்தர்ப்பம் இவற்றையுங் கொண்டு அறியப்படும் பொருளைச் சார்பறி பொருள்[4] என்றுங் கூறுவர். சாஸ்திரங்களிலுள்ள வாக்கியங்களால் உணர்த்தப்படும் பொருள் முன்வகைக்கும், உலகத்திலும் காவ்யங்களிலும் உள்ள வாக்கியத்தால் உணர்த்தப்படும் பொருள் பின்வகைக்கும் உதாரணம் ஆகும்.

சொற்களின் பகுதியால் உணர்த்தப்படும் பொருளைப் பகுதிப்பொருள்[5] என்றும், விகுதியால் உணர்த்தப்படும் பொருளை விகுதிப்பொருள்[6] என்றுங் கூறுவர்.

மொழிக்கும் மனக்கருத்திற்கும் உள்ள இயைபு : "மனத்தால் உணரப்படுவது அனைத்தும் சொல்லால் உணர்த்தப்படவில்லை. ஒரு விஷயத்தை முற்றிலும் அறிவிக்கச் சொல்லிற்கு ஆற்றல்

1. तां प्राङ्मुखीं तत्र निवेश्य तन्वीं क्षणं व्यलम्बन्त पुरोनिषण्णाः ।
भूतार्थशोभाह्रियमाणनेत्राः प्रसाधने संनिहितेऽपि नार्यः ॥ (7, 13)
... ... ... ... ... ...
क्षीरोदवेलेव सफेनपुञ्जा पर्याप्तचन्द्रेव शरत्त्रियामा ।
नवं नवक्षौमनिवासिनी सा भूयो बभौ दर्पणमादधाना ॥ (7, 26)
2 मामम्बा पुरवासिनी भगवती हेरम्बमातावतु ।
ஈண்டு ஹேரம்பனுக்குத் தாய் என்பது விசேஷமாகக் கவியாற் கருதப்படவில்லை.
3. Tied meaning = प्रवृत्तिनिमित्तमात्ररूपोऽर्थः
4. Contingent meaning = वक्तृप्रकरणादिविशिष्टनिमण्ड्वधिगतोऽर्थः
5. Basic meaning = प्रकृत्यर्थः
6. Relational meaning = विकृत्यर्थः

இல்லை. உதாரணமாகப் பசுவின் இலக்கணம் யாது என ஒருவன் வினவின், வால், குளம்பு, கொம்பு முதலியவற்றை உடையது என விடை கூறுகின்றனர். அவ்விடை முதலியவற்றை என்ற சொல்லின்றி இராது. அன்றியும் உலகத்திலுள்ள விஷயங்களை யெல்லாம் குறிக்கச் சொற்கள் உளவோ எனின், இல்லை. ஏனெனில் மக்களுக்கு எவ்விஷயங்கள் பயன்படுகின்றனவோ, எவ் விஷயங்களோடு அவர் நெருங்கிப்பழகுகின்றனரோ அவற்றையே அவர் அறிதல் கூடும்; அப்போது அவற்றைக் குறிக்கச் சொல்லை வழங்குகின்றனர். அக்காரணம்பற்றியே எல்லாமொழிகளிலும் சொற்கள் ஒரே வகையாக இரா. சில மொழிகளில் சில விஷயங்களின் இனவகைகளைக் குறிக்கச்சொற்கள் இருக்கும்; சில மொழிகளில் அவற்றைக் குறிக்கப் பொதுச்சொல்லையே வழங்குவர்.

ஒரு விஷயத்தைப்பற்றிக் கூறத் தொடங்கியவன் முதன் முதலில் அவ்விஷயத்தின் எந்த அம்சங்கள் அவ்விடத்திற்கு பொருத்தமானவை என ஆராய்ந்து, அவற்றைக் கேட்போனுக்கு நன்கு உணர்த்த எச்சொற்கள் பயன்படும் எனப் பொறுக்க வேண்டும். கேட்போன் அச்சொற்களைக்கேட்டு ஸந்தர்ப்பத் தோடு அவற்றின் கருத்தைப் பொருத்திக் கூறுவோனது பொருளை அறிய முயலவேண்டும்.

சொற்கள்முகமாய்க் கருத்தைக் கூறக்கூறக் கருத்து தெளிந்து செவ்விதாகின்றது; அப்போது மனத்தில் நன்கு பதிகின்றது; பின்னர் அதனை வழங்க, அது மிகவும பயன்படுகின்றது. ஆயினும் கருத்தை முற்றிலும் சொற்களால் உணர்த்த முடியாது. அன்றியும் தன் கருத்தைப் பிறர்க்கு உணர்த்த வழங்குஞ் சொற்களால் தான் கருதாததுகூட உணர்த்த நேரும். கேட்போனும் அச்சொற்களால் கூறுவோன் கருதியதற்கு மாறுன கருத்தினைக் கொள்ளலுந் தகும். இது கூறுவோன் முன்னர் யோசிக்காது திடீரென்று வழங்குஞ் சொற்களால் எளிதில் நேரும். சில ஸமயங்களில் ஸந்தர்ப்பத்திற்கு மாறுன பொருளைக் கேட்போன் கொள்ளவுங் கூடும்.

**படிப்போனும், கேட்போனும் கருத்தைக் கொள்ளும் விதம்:** ஒரு நூலைப் படிக்கும்போது நாம் ஒவ்வொரு சொல்லினும் ஒவ்வொரு எழுத்தையும் பார்த்துப் படிப்பதில்லை. ஒரு சொல்லின் தொடக்கத்தைப் பார்த்தே ஸந்தர்ப்பத்தைக்கொண்டு கருத்தைக் கொண்டுவிடுகிறோம். அவ்வாறே ஒருவர் பேசும்போது நாம் அவர் கூறும் சொற்களை எழுத்தெழுத்தாய்க் கவனிப்பது இல்லை. அவர் கூறும் விஷயமும் அவரது நோக்கமும் எவ்வளவுக்கெவ்வளவு நமக்கு முன்னர்த் தெரியுமோ, அவ்வளவுக்கவ்வளவு அவர் கூறுஞ் சில சொற்களைக் கவனித்தே அவருடைய கருத்தை ஊஹித்துவிடுகிறோம். அவருடைய சில சொற்களைக் கேட்டவுடன் அவர் பின்னர் யாது கூறப்போகிறார் எனவும் ஊஹித்துவிடுகிறோம். படிக்கும்போதும் கேட்கும்போதும் ஒவ்வொரு விகுதியையும் கவனிப்பது இல்லை. ஸாதாரணமாக இருவர் பேசிக்கொண்டிருக்கும்போது தொடக்கத்தில் ஒருவர் கூறுஞ் சொற்களை மற்றொருவர் கவனிப்பதில்லை; இடையிற் சிறிது கவனிப்பது உண்டு; இறுதியிற் கூறுஞ் சொற்களையே நன்கு கவனித்து அதிலிருந்து முழுக்கருத்தையும் அறிவது வழக்கம். நூல்களிலும் உலகவனுபவத்திலும் பயிற்சி மிகுதிப்பட, இவ்வூஹம் மிகுகின்றது. இதற்கெல்லாம் ஸந்தர்ப்பமே பெருந்துணையாய் இருக்கின்றது.

ஸந்தர்ப்பம் சொற்களாலும், பார்வையாலும், மனத்தாலும் அமைக்கப்படும்[1]. ஒரு வாக்கியத்தில் பெயர்வினைகளுக்கு அடைமொழிகள் வரின் அப்போது குறிக்கப்படும் விஷயத்திற்கு ஸங்கோசம் வரும். அடைமொழிகள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாகின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு பெயர்வினைகளாற் குறிக்கப்படும் விஷயம் குறுகும். வாக்கியத்திலுள்ள சொற்கள் ஒவ்வொன்றும் மற்ற சொற்களாற் குறிக்கப்பட்ட விஷயத்திற்கேற்றவாறே தம் விஷயங்களைக் குறிக்கும். விகுதிகளை வழங்காத மொழிகளில் சொற்களாற் குறிக்கப்பட்ட விஷயம் சொற்களின் முறைவேறுபாட்டால் வேறுபடுதல் உண்டு.

1. Context is of three kinds : *verbal*, *perceptual*, and *mental*.

குழந்தைகள் நமக்கு தங்கருத்தை உணர்த்தும்போது அவரை நாம் பார்த்துக் கேட்காவிடின், அவரது கருத்தை நன்கு அறிய இயலாது. சொற்களைக் கூறும்போது அவர் யாது செய்கின்றனர் என்பதைக் கவனித்தல் வேண்டும்.

கேட்போன், கேட்கும் விஷயத்தையும் கூறுவோனின் ஸ்வபாவத்தையும் தான் முன்பு அறிந்திருப்பின், கூறுவோன் அவ்விஷயத்தைப் புதிதாய் அறிந்தவனா வேறிடத்திற் கூறப்பட்டதைக் கூறுகின்றானா முதலியவற்றை அறிதல் கூடும். ஆகலின் கூறுவோன் கூறத்தொடங்கும்போதே தான் அவ்விஷயத்தைப் பற்றிக் கூறப்போகிறேன் எனக் கூறல் வேண்டுவது அவசியம்.

கூறுவோன் உணர்த்துங் கருத்தைக் கேட்போன் கொள்வது கிளியின் பேச்சுபோல் அன்று என்பது இதனால் விளங்கும். கூறுவோன் தன் கருத்தை உணர்த்தச் சொற்களைப் பொறுக்குவதும், பின்னர் அவற்றைக் கூறுவதும், கேட்போன் அவற்றைக் கேட்டு அவற்றை ஸந்தர்ப்பத்தோடு ஒட்டி, அவை கூறுவோனின் எக்கருத்தை விளக்கவந்தன என ஆய்ந்து கூறுவோன் கருத்தை அறிதலும், ஒருவன் கூற மற்றொருவன் கேட்கும்போது நிகழும் நிகழ்ச்சிகள். கூறுவோனுக்கும் கேட்போனுக்கும் நூலறிவு, உலகவனுபவம் முதலியன எவ்வளக்கெவ்வளவு ஒத்திருக்கின்றனவோ, அவ்வளக்கவ்வளவு ஒருவரது கருத்தினை மற்றொருவர் எளிதில் அறிதல் கூடும். கூறுவோன் கூறிய சொற்களைக் கேட்டு, கேட்போன் அவற்றால் உணர்த்தப்படும் கருத்தை அதற்கு இயைபுபட்டதும் தான் முன்னர் அறிந்ததும் ஆன கருத்தோடு பொருத்தி, கூறுவோனது கருத்தை உணர்கின்றான். ஆகலின் சொற்களின் பொருளை ஒருவன் தனிநிலையில் அறியினும், ஸந்தர்ப்பத்தை அறியாது அவற்றால் ஆக்கப்பட்ட வாக்கியத்தின் கருத்தை அறிய இயலாது.

**பொருள் மாறுகை:** ஒரு பாஷையில் வழங்குஞ் சொற்கள் நாளடைவில் எவ்வாறு ரூபத்தில் மாறுபாட்டினை அடைகின்றனவோ, அவ்வாறே பொருளிலும் மாறுபடுகின்றன. ஒரு சொல்லின் பொருள் மாறுபடுகின்ற இடமெல்லாவற்றுள்ளும்

விஷயமும் மாறுபடவேண்டும் என்ற நியதி இல்லை. ஆனால் விஷயம் மாறுபட்டவிடத்தும் சொல் பொருளின்கண் மாறுபாட்டை அடையலாம்.

ஆங்கிலமொழியை லக்ஷியமாகக் கொண்டு ஸ்டர்ன் பொருள்மாறுபாட்டினை எழுவகையாகப் பிரித்தனர். அவை: ஸப்ஸ்டிட்யூஷன், அநாலஜி, ஷார்ட்டனிங், நாமினேஷன், ட்ரான்ஸ்பர், பர்ம்யுடேஷன், அடிக்வேஷன் என்பன ஆகும்[1].

ஸப்ஸ்டிட்யூஷன்: இப்பொருள்மாறுபாட்டிற்குக் காரணம் விஷயத்தின் இயற்கைமாறுபடுதலும், விஷயத்தை வேறுபட்டு அறிதலும், விஷயத்தைக் குறித்த நோக்கம் வேறுபடுகையும் ஆம்.

(1) பண்டையநாளில் கப்பல் பாய்மரத்தோடு காற்றால் தள்ளப்பட்டு இருந்தது. அதனைக் குறிக்க ஆங்கிலமொழியில் *ship* என்ற சொல்லை வழங்கினர். பின்னர் பாய்மரத்தை நீக்கி, நீராவியாற் கப்பல் செல்லுமாறு கப்பலின் அமைப்பு மாற்றப்பட்டது. அப்போது அதனை வேறு சொல்லாற் குறிக்காது

1. ஸப்ஸ்டிட்யூஷன் = Substitution = भिन्नविषयकः = மாறுபடுவிஷயம்.
அநாலஜி = Analogy = अर्थातिदेशः = அதிதேசம்.
ஷார்ட்டனிங் = Shortening = एकदेशबोधकः = ஏகதேசபோதகம்.
நாமினேஷன் = Nomination = नामकरणम् = நாமகரணம்
ட்ரான்ஸ்பர் = Transfer = सदृशविषयबोधकः = ஒத்தவிஷயபோதகம்.
பர்ம்யுடேஷன் = Permutation = भ्रममूलकगुणान्तरकल्पनम् = ப்ரமத்தால் குணவேறுபடுக்கை.
அடிக்வேஷன் = Adequation = विशेषणविशेष्यव्यत्ययः = விசேஷணவிசேஷ்யவ்யத்யயம்.

*ship* என்ற சொல்லாலே குறித்தனர். ஆகலின் விஷயத்தின் மாறுபாட்டால் சொற்பொருள் மாறுபட்டதற்கு *ship* என்ற சொல் உதாரணம் ஆகும்.

பண்டையகாட்டில் शकटः என்ற சொல் ஒருவகை அமைப்புள்ள வண்டியைக் குறித்திருக்க, வேறு அமைப்புள்ள வண்டியைக் குறிக்கத் தற்போது धूमशकटः என்ற சொல்லை வழங்குகின்றனர். विष्णुरथः என்பதும் அவ்வாறே அதற்கு உதாரணம் ஆகும்.

அவைபோன்று பின்வருஞ் சொற்களும் உதாரணம் ஆகும்.

वेणुः = மூங்கில்.
= இசைவாத்தியமாக வழங்கப்பட்ட மூங்கில்.

दण्डः = கோல்.
= அரசின் குறியாகக் கருதப்படுங் கோல்.

अनुलोमा = மயிர் செல்கின்ற வழி.
= இயற்கைவழி.
= மேல்ஜாதிக் கணவனைக் கொண்ட கீழ்ஜாதி மனைவி.
= அவ்விருவர்க்கும் பிறந்த மகள்.

प्रतिलोमा[1] = மயிர்போகும்வழிக் கெதிர்வழி
= இயற்கைக்கு மாறுபட்ட வழி
= கீழ்ஜாதிக் கணவனைக் கொண்ட மேல்ஜாதிப் பெண்
= அவ்விருவர்க்கும் பிறந்த பெண்.

1. ஆங்கிலத்திலும் பல எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன:

Horn = விலங்கின் கொம்பு
= இசைக்கருவியாக வழங்கும் விலங்கின் கொம்பு.

Booking Office = தபால்வண்டியிற் செல்ல பெயரைப் பதிவு செய்யும் இடம்.
= பிரயாணச்செலவுப்பணம் செலுத்தும் இடம்.
= டிக்கெட்டுகள் விற்கும் இடம்.

Cook = சமையல் செய்யும் ஆண்
= சமையல் செய்யும் ஆண் அல்லது பெண்.

सब्रह्मचारी = உடன் வேதம் படித்தவன்[1]
= தோழன்[2].

(2) விஷயம் வேறுபடாமலிருக்க அதைப் பற்றிய நமது அறிவுமாறுதலால் சொற்களின் பொருளும் மாறுகின்றது. Solar system முன்போலவே இப்பொழுதும் இருப்பினும், அவற்றைப்பற்றிய அறிவு நமக்கு முன்னர் இருந்ததுபோல் தற்போது இல்லை. ஆகவின் solar system என்பதன் பொருள் தற்போது மாறியது என்னலாம். இதுபோன்று electricity, stone age என்பனவும் ஆம்.

(3) ஒரு விஷயத்தை முன்னர்ச் சிறந்ததாகவும் தற்போது இழிந்ததாகவும் நாம் கருதின் அதனைக் குறிக்குஞ் சொல்லும் பொருளில் மாறுபடுகிறது. உதாரணமாக छान्दस: என்ற சொல் வேதாத்தியயனஞ் செய்தவனைக் குறித்தது. பின்னர் அவனுக்கு லோகாநுபவம் குன்ற, லோகாநுபவமில்லாது வேதாத்தியயனஞ் செய்தவனைக் குறிக்க, தற்போது சோம்பேறியாய் இருக்கும் மூடனைக் குறிக்கலாயிற்று.

Artillery = போர்ப்படை
= அம்பெய்தும் பொறி
= மருந்து ஊட்டப்பட்ட துப்பாக்கி.

அவ்வாறே தமிழிலும் பல எடுத்துக்காட்டுகள் காணப்படுகின்றன:

ஓலை = இலை
= தென்னையின் இலை
காதணியாய் உபயோகிக்கப்பட்ட தென்னோலை அல்லது பனையோலை.

கொம்பு = கிளை
இசைக்கருவியாகிய கிளை.

கொழுநன் = கணவன்
கணவனின் உடன்பிறந்தான்.

1. समाने ब्रह्मणि व्रतं चरतीति सब्रह्मचारी (महाभाष्ये. 6-3-86)
2. व्यसनसब्रह्मचारिन् (मुद्राराक्षसे)

**அநாலஜி :** இது மூன்று வகைப்படும். அவை காம்பி னேடிவ் அநாலஜி [1], கார்ரிலேடிவ் அநாலஜி [2], ஃபொனேடிக் இண்டார்பியரன்ஸ் [3] என்பர்.

**காம்பினேடிவ் அநாலஜி :** ஒரு பொருளோடு இயைபு பட்டது பின்னர் அப்பொருளாகவே கருதப்படுவது காம்பினே டிவ் அநாலஜி ஆகும். பழைய ஆங்கிலத்தில் மிக விரைவாய்,[4] மிக சீக்கிரமாய் [5] என்ற பொருளில் raþer என்ற சொல் வழங்கப் பட்டது. மற்றொரு விஷயத்தைக்காட்டிலும் விரைவில் நடக் கும் விஷயம் முன்னர் நிகழுமாகையால் வெகுமுன்னர் என்ற பொருளில் தற்போது வழங்கப்பட, முன்னர் என்ற பொருளை rāþe என்ற சொல் கொண்டது. இதற்கு ஒத்ததாக வட மொழியில் व्यसनम् என்ற சொல்லைக் கூறலாம். அதிக ஊக்கம் என்ற பொருளில் அது முதலில் வழங்கப்பட [6], அதனோடு அதிகப்பற்று, துன்பம் இவை கூடநிற்க, இவையே தற்போது அச்சொற்பொருள் ஆயின.

**கார்ரிலேடிவ் அநாலஜி :** ஒரு விஷயம் ஒரு சொல்லால் குறிக்கப்பட, அதற்கு இனமான மற்றொரு விஷயமும் அச் சொல்லைப்போன்ற மற்றொரு சொல்லால் வழங்கப்படுகின்றது. அப்போது அச்சொல் பொருளில் மாறுபடுகின்றது. மேல் நாட்டில் காலெண்டரில் ஸெயிண்டுகளின் தினங்கள் சிவப்

1. Combinative analogy = सम्बद्धार्थातिदेशः = இயைந்த பொரு ளதிதேசம்.
2. Correlative analogy = एकजातीयातिदेशः = ஓரினப்படுத்து மதிதேசம்.
3. Phonetic interference = सदृशध्वनिमूलकभ्रमातिदेशः = ஒன்றுபடு ஒலிமூலகப்ரமாதிதேசம்.
4. More quickly.
5. Sooner.
6. विद्यायां व्यसनी (नीतिशतके 62)

பெழுத்தால் குறிக்கப்பட்டன. அக்காரணம்பற்றி அத்தினங்கள் *red letter days* என்ற சொல்லாற் குறிக்கப்பட்டன. அதிலிருந்து அவை நல்ல தினங்கள் என்ற பொருளைக் குறிக்கின்றன எனக் கருதப்பட்டு, கெட்டதினங்கள் *black letter days* என வழங்கப்பட்டன. வடமொழியில் மேகங்கள் நிறைந்திருக்கும் நாள் दुर्दिनम् என வழங்கப்பட்டது. பின்னர் கெட்டநாள் என்ற பொருளைக் குறிப்பதாகக் கருதப்பட நல்லநாள் सुदिनम् என்ற சொல்லாற் குறிக்கப்பட்டதோ எனத் தோன்றுகின்றது.

பொனெடிக் இண்டர்பியரன்ஸ்: ஒரு விஷயத்தைக் குறிக்கும் தொகைமொழியில் ஒருபகுதியின் உண்மைப்பொருளை அறியாது அதற்குப் பிரதியாக அதனையொத்த ஒலியைக் கொண்ட வேறு சொல்லை வழங்க, அச்சொல்லின் பொருளோடு இயைபுபடத் தொகைச்சொல்லின் பொருளை மாற்றிக்கொள்ளுதல் பொனெடிக் இண்டர்பியரன்ஸ் ஆகும். ஈண்டு விஷயத்தில் ஒரு மாறுபாடும் இல்லை. பழையஆங்கிலத்தில் *sam-blind* என்ற சொல் அரைக் குருடாயிருக்கின்ற விஷயத்தைக் குறிக்க வழங்கப்பட்டது; பின்னர் *sam* என்ற சொல்லின் பொருளை அறியாது, அதனிடத்தில் *sand-blind* என்ற சொல் வழங்கப்பட்டது. அதிலிருந்து கண்ணில் சிறு தூளிகள் பறப்பதுபோல் தோன்றுவதாகப் பொருள் கொண்டனர். உண்மையில் அரைக்குருடனின் கண்களில் அவ்வாறு ஒன்றும் இல்லையாம். அவ்வாறே *wilcuma* என்ற பழைய சொல், இஷ்டம் என்ற பொருளைக்கொண்ட *wil* என்றசொல்லாலும், விருந்தினன் என்ற பொருளைக் கொண்ட *cuma* என்ற சொல்லாலும் ஆன தொகைச்சொல்; முற்பகுதி நன்மையைக் குறிப்பது என்றும், பிற்பகுதி வருதல் என்பதைக் குறிப்பது என்றும் மயங்கி அச்சொல்லிற்குப் பிரதியாக *welcome* என்ற சொல் வழங்கப்பட, அதற்கு நல்வரவு என்ற பொருள் கொள்ளப்படுகிறது. ஈண்டும் விஷயத்தில் மாறுபாடு இல்லை.

சிலவிடத்து விஷயமும் மாறுபட்டுப் பொருளும் மாறுபடும். நாணமுள்ள என்ற பொருளில் *shamefast* என்ற சொல் வழங்கப்பட்டது; *fast* என்பதன் பொருளை அறியாது அவ்

விடத்து *faced* என்ற சொல்லை வழங்கினர். தற்போது நாணங்கொண்டமுகத்துடன் என்ற பொருளில் அது வழங்கப்படுகின்றது. நாணங்கொண்ட முகத்தையுடையானே அச்சொல்லாற் குறிக்கப்படுகின்றமையால் விஷயமும் மாறியது. அவ்வாறே இனிமையான என்ற பொருளில் *sweetard* என்ற சொல் வழங்கப்பட்டது ; *ard* என்ற விகுதி *sluggard* என்ற சொல்லினுள்ளதே என அறியாது, *sweetard* என்பதற்குப் பிரதியாக *sweet-heart* என்ற சொல் வழங்கப்பட்டது. இப்போது அதற்கு இனிய மனமுடையான் என்ற பொருள் கொள்ளப்படுகின்றது. விஷயமும் இனியமனத்தைக் கொண்டதாகக் கருதப்படுகின்றது. அவ்வாறே நகரச்சட்டம் என்ற பொருளில் வழங்கப்பட்ட *by-law* என்ற சொல்லில் உள்ள *by* என்பது உபஸர்க்கமாகக் கருதப்படுகின்றது.

ஷார்ட்டனிங் : சில சொற்களை மக்கள் முழுவதுங் கூறாது ஏகதேசத்தைக் கூறுகின்றனர். கொஞ்சநாள்வரை அவ்வேகதேசம் முழுச்சொல்லிற்குப் பிரதியாக வழங்கப்பட்டது என மக்கள் நினைக்கின்றனர் பின்னர் அவ்வேகதேசமே அவ்விஷயத்தைக் குறிக்குஞ்சொல் என மயங்கி, அதனையே வழங்குகின்றனர். அச்வின்தேவதைகளைக் குறிக்கத் தற்போது வழங்கப்படும் **दस्रौ, नासत्यौ** என்பன இங்கு நல்ல உதாரணம் ஆகும். வேதத்தில் இருவரையுங் குறிக்க **दस्रानासत्या** என்று சிலவிடத்திலும், **दस्रा** எனச் சிலவிடத்திலும், **नासत्या** எனச் சிலவிடத்திலும் கூறப்பட்டன [1]. அவ்விருவருடைய பெயர் **दस्र, नासत्य** என்பதை மறந்து பிற்காலத்து அவ்வழக்கு வந்தது.

1. दस्रा युवाकवः सुता नासत्या वृक्तबर्हिषः । आयातं रुद्रवर्तनी
(ऋ॰ वे॰ 1, 3, 3)
दस्रा हि विश्वमानुषङ्मक्षूभिः परिदीयथः (*ibid* 8, 26, 6)
नासत्या कुहचित्सन्तौ (*ibid* 1, 184, 1)
नासत्यश्चैव दस्रश्च यौ तु तावश्विनाविति (बृहद्देवतानुक्रमणी)

पुरुहूतमिन्द्रम्[1] என்ற ருக்வேதத்தொடரில் पुरुहूतम् என்பது பலரால் கூப்பிடப்பட்ட அல்லது பலதடவை கூப்பிடப்பட்ட என்ற பொருளைக்கொண்ட விசேஷணமாயிருப்பினும், இந்திரன் என்ற பொருளில் பிற்காலத்து வழங்கப்பட்டது. ஆகவின் இந்திரனைச் குறிக்குஞ் சொற்களில் ஒன்றாக पुरुहूतः என்பது அமரஸிம்ஹனால் வழங்கப்பட்டது. அவ்வாறே चतुर्भुजः என்பது தற்போது விஷ்ணுவைக் குறிக்கின்றது. अधरोष्ठः என்பது अधरः என்ற சொல்லாற் குறிக்கப்பட[2], பின்னர் अधरः என்பதே கீழுதடு எனப் பொருள் பெற்றது[3].

நாமிநேஷன்: புதிதாய்த் தோன்றிய விஷயத்திற்கோ, முன்னமே அறியப்பட்ட விஷயத்திற்கோ மனமறிந்து புதிதாய்ப் பெயரிடுதல் நாமிநேஷன் எனப்படும். புதிதாய் வரும் சொல்லின்கண் பொருள்மாறுபாடு தோன்றுவதற்கு இல்லையாயினும், முன்னர் ஒரு விஷயத்தைக் குறிக்க வழங்கிய பெயரைப் பின்னர் மற்றொரு விஷயத்திற்கு இடும்போது பொருள்மாறுபாடு இருக்குமன்றே. ஆங்குச் சிலவிடத்து அறிவுறுத்தல்தன்மை சிறந்த காரணம் ஆகும். சிலவிடத்து மனநிலையுறுத்தல்தன்மை சிறந்த காரணம் ஆகும். மொழிகளில் அலங்காரங்கள்[4] வந்தமைக்கு பின்னர்க் கூறப்பட்டதே காரணம் ஆகும்.

நாமிநேஷன் நிகழ்தற்குப் பல காரணங்கள் உள: மக்களின் மனம் ஒரு விஷயத்தைக் குறிப்பதில் பழைய வழியை விட்டு

1. अच्छा विवक्मि पुरुहूतमिन्द्रम् (ऋ. वे. 4, 20, 5)
2. पिबसि रतिसर्वस्वमधरम् (शाकु.)
3. இவ்வாறு ஆங்கிலத்திலும் உதாரணங்கள் உள்ளன:—
   Private soldier — Private.
   Bugle horn — Bugle
   Saloon car — Saloon.
   Weekly Journal— Weekly.
   Express train — Express.
4. अलङ्काराः = Figures of speech.

புதிய வழியைக் கண்டுபிடிப்பதில் ஆவலுடன் இருக்கிறது. அவ்வாறு வழியைக் கண்டு தான் மகிழ்கிறது; அவ்வழியில் சில சொற்கள் பொருளில் உயர்த்தப்படுகின்றன; சில இகழ்ச்சியை அடைகின்றன. சொற்களைக் கூறும் விதம் கேட்போனது மனத்தைக் கவரவேண்டும் எனவும் நினைக்கிறது.

விஷயங்களின் ஒற்றுமையாலும், ஒன்றுக்கொன்று இயைபு பட்டமையாலும் பொருள் மாறுபடும். கனமான பொருள்களைப் பூமியிலிருந்து தூக்கி உயர்ந்த இடத்திற்குக் கொண்டுவர உபயோகப்படும் யந்திரத்தை ஆங்கிலத்தில் *crane* என்பர்; அவ்வாறு கூறுதற்குக் காரணம் அது ரூபத்தில் நாரையை ஒத்திருப்பது என்பதே. உடலில் இரத்தத்தைக்கொண்டு சிறு குழிகளைச் சுற்றியிருக்கும் தோலை *wall* என்ற சொல்லாற் குறிப்பர்[1].

ஒரு நூலை அதனை இயற்றிய ஆசிரியரின் பெயரால் வழங்குவதும், ஒரு ஆடையை அது செய்யப்பட்ட இடத்தால் வழங்குவதும், நூலியற்றப்பட்ட தன்மையைக்கொண்டு நூலை வழங்குவதும் இவைபோன்றனவும் ஒன்றுக்கொன்று இயைபு பட்டமை காரணத்தால் வந்தன.

உ-ம். சிசுபாலவதத்தை[2] மாகம்[3] என்பதும், பங்களூர் சேலையைப் பங்களூர் என்பதும், வாக்யபதீயத்தை[4] ஹரிகாரிகா[5] என்பதும்[6].

1. Walls of the cell.
2. शिशुपालवधः
3. माघः
4. वाक्यपदीयम्
5. हरिकारिका
6. இவ்வாறு ஒவ்வொரு மொழியிலுங் காணலாம். ராமாயணத்தைக் கம்பன் என்றலும், ஷேக்ஸ்பியர் இயற்றிய நூல்களை ஷேக்ஸ்பியர் என்றலும் அவை போன்றவும் காணப்படும்.

பொருள்மாறுபாடு உடைய அலங்காரங்கள் ரூபகம்[1], உத்ப்ரேக்ஷை[2], வைபரீத்யமூலகலக்ஷணை[3], மங்கலப்படுத்திக் கூறல்[4] முதலியன ஆகும்.

உ-ம். सिंहो माणवकः,

वलित्रयं ...... कामस्य सोपानमिव प्रयुक्तम्

(குமா. 1, 39)

किमिवोपकृतं न तेन मम (விரோதியைக் குறித்துக் கூறும்போது)

पञ्चत्वं गतः[5]

ட்ரான்ஸ்பர்: தன் மனம் அறியாது இரண்டு விஷயங்களின் ஒற்றுமை காரணமாக ஒன்றனைக் குறிக்க வழங்குஞ் சொல்லை மற்றொன்றைக் குறிக்க வழங்குதல் ட்ரான்ஸ்பர் ஆகும்.

நாக்கிற்கு இன்பமாயிருப்பதைக் குறிக்க வழங்கப்பட்ட मधुरः என்ற சொல் காதிற்கு இனிப்பாயிருப்பதைக் குறிக்க வழங்கப்பட்டது: मधुरः स्वनः; கண்ணிற்கு இனிப்பாயிருப்பதையுங் குறிக்க வழங்கப்பட்டது: अहो आसां मधुरं दर्शनम्

பார்க்கச் சக்தியிழந்த கண்ணைக் குறித்த अन्धः என்ற சொல் பார்க்கப்பயனற்ற கண்ணாடியைக் குறிக்க வழங்கப்பட்டது:

உ-ம். निश्वासान्ध इवादर्शः

இவ்வாறு பிறமொழிகளிலும் காணலாம்[6].

1. Metonymy. 3. Irony.
2. Hyperbole. 4. Euphemism.
5. He joined the majority.
6. மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் (திருக்குறள் 6, 5) யாழினிது என்ப. (*ibid* 6, 6) Leaves of a book; sharp nose; light heart.

பர்ம்யுடேஷன் : ஒரு விஷயத்தில் இருதன்மைகள் இருக்க, ஒரு தன்மையைக் குறிக்க வழங்கப்பட்ட சொல் மற்றொரு தன்மையைக் குறிக்க வழங்கப்படின், அப்போது அச்சொற்குப் பொருள் மாறுபடுகின்றது. இம்மாறுபாட்டினைப் பர்ம்யுடேஷன் என்பர்.

ஒரு தன்மையைக் குறித்து ஒருவன் வழங்கிய சொல்லை மற்றொருவன் மற்றொரு தன்மையைக் குறித்ததாகத் தவறாக நினைத்து, தான் அச்சொல்லை அத்தன்மையைக் குறிக்க வழங்குகின்றான். அவ்விருதன்மையைக் கொண்ட பொருள் ஒன்றாயிருத்தலின் அவனைக் கேட்போருள் சிலர் பழைய பொருளிலேயே அச்சொல்லை வழங்குகின்றான் என நினைத்தல் கூடும்; சிலர் புதுப் பொருளைக் கொள்ளல் கூடும். புதுப்பொருளைக் கொண்ட மக்கள் அதிகரிக்க, காலக்ரமத்தில் புதுப்பொருளே கொள்ளப் படுகின்றது. **पतिः** என்ற சொல் பாதுகாப்பவன் என்ற பொருளில் வழங்கப்பட[1], பிறகு கணவன் என்ற பொருளைக் கொண்டது.

**दम्पती** என்ற சொல் வீட்டின் தலைவன்தலைவியரைக்[2] குறிக்க வழங்கப்பட, பிறகு கணவன் மனைவி இருவரையுங் குறிக்க வந்தது.

1. समान इन्द्र गोपतिः (ऋ. वे. 4, 30, 22) गोपतिः = गवां पालकः
   रायः पतयः स्याम (*ibid* 4, 41, 10)

2. कस्य नूनं परीणसो धियो जिन्वसि दम्पते (*ibid* 8, 731, 7)
   என்று அக்னி தம்பதி (வீட்டிற்குத் தலைவன்) எனக் கூறப் படுகின்றது. ஆகலின் दम्पती என்ற சொல்லிற்கு விக்ரஹம் पतिश्च पत्नी च पती, दमस्य पती दम्पती எனக் கூறவேண்டும். வீட்டின் தலைவனும் தலைவியும் கணவனும் மனைவியுமாய் இருந்ததால் காலக்ரமத்தில் அச்சொல் கணவனும் மனைவியும் என்ற பொருளை அடைந்தது.

**भार्या** என்பது காப்பாற்றத் தகுந்தவள் என்ற பொருளில் வழங்கப்பட, பின்னர் மனைவி என்ற பொருளில் வழங்கப்பட்டது [1].

**अमात्यः** என்பது ருக்வேதத்தில் பக்கத்திலிருப்பவனைக் [2] குறிக்க இப்போது மந்திரியைக் குறிக்கின்றது. **आशिस्** என்பது ருக்வேதத்தில் ஸ்தோத்திரத்தைக் குறிக்க [3], தற்போது பெரியோர் சிறியோர்க்குச் செய்யும் ஆசீர்வாதத்தைக் குறிக்கின்றது [4].

ஒரு மொழியில் ஒரு பொருளைக் குறிக்குஞ் சொல் மற்றொரு மொழியிற் கடன் வாங்கப்பட்டால் ஆங்குச் சிலவிடத்து

1. இவ்வாறே பழைய ஆங்கிலத்தில் *wif* என்பது பெண்ணைக் குறிக்க, இப்போது மனைவியைக் குறிக்கின்றது; தமிழில் பண்டைக்காலத்தில் பெண்டாட்டி என்பது பெண்ணைக் குறிக்கத் தற்போது மனைவியைக் குறிக்கின்றது.

2. स नो वेदो अमात्यमग्नी रक्षतु (ऋ. वे, 7, 15, 3)

3. सत्या भवन्त्वाशिषो नो अद्य (*ibid* 7, 17, 5)

   तस्याशिषोऽथ विधिवद् ब्राह्मणैस्समुदीरिताः (रामा. बाल. 15, 54)

4. वात्सल्याद्यत्र मान्येन कनिष्ठस्याभिधीयते ।
   इष्टावधारकं वाक्यमाशीः सा परिकीर्तिता ॥

   ஸ்தோத்திரத்தில் தனக்கு நன்மை செய்யவேண்டும் என இருத்தலின், நன்மையைச்செய்தல்தன்மை சிறக்க, சொல்லின் பொருள் மாறிற்று. இவ்வாறே உள்ளது வரிந்து என்ற தமிழ்ச்சொல்லும்; இவ்வாறே **boon** என்ற ஆங்கிலச் சொல்லும்; இவற்றைப்போன்றே கடவுள்ஸ்துதி என்ற பொருளைக்கொண்ட ***bead*** என்பது இப்போது ஜபமாலையின் மணியைக் குறிக்கின்றது.

மாறுபட்ட பொருளைக் கொள்ளுகின்றன." இவற்றையெல்லாம் அவை பர்ம்யுடேஷன்பாற் கொள்ளவேண்டும்.

| | வடமொழி | | தமிழ் |
|---|---|---|---|
| உ-ம். | निजम् | (தனது) | நிஜம் (உண்மை) |
| | लाभः | (அடையப் பட்டது) | இலாபம் (செலவிற்குமேல் உள்ள வரவு) |
| | नष्टः | (அழிந்தது) | நஷ்டம் (வரவிற்குமேல் உள்ள செலவு) |
| | अपराधः | (குற்றம்) | அபராதம் (பணதண்டனை) |
| | उद्योगः | (முயற்சி) | உத்தியோகம் (பணம் சம்பாதிக்குந் தொழில்) |
| | अवसरः | (தகுந்த ஸமயம்) | அவசரம் (விரைவு) |
| | पराक् | (பின்புறந் திரும்பாமை) | பராக்கு (கவனமின்மை) |

அடிக்வேஷன் : விஷயத்தின் ப்ரவ்ருத்திநிமித்தத்தில் முன்னர் ஒன்று சிறப்பாக விளங்க, பின்னர் மற்றொன்று சிறப்பாக விளங்கும். இது கூறுவோன் மனமறியாது வந்த மாறுபாடு. சிறப்பிலம்சம் சிறப்புடைத்தாகவும் சிறப்புடையம்சம் சிறப்பிலதாகவும் ஆகின்றமையால் பொருளில் மாறுபாடு வருகின்றது. இதற்கு அடிக்வேஷன் எனப் பெயர்.

நாமிநேஷன் கூறுவோன் மனமறிந்து வரும் மாறுபாடாகையாலும் இது மனமறியாது வரும் மாறுபாடாகையாலும் இது அதிலிருந்து மாறுபட்டது. இரண்டு விஷயங்களின் ஒற்றுமை காரணமாக ட்ரான்ஸ்பர் வருகின்றமையாலும், இது ஒற்றுமை காரணமாக வாராமையாலும் இது அதிலிருந்து மாறுபட்டது. பர்ம்யுடேஷனோடு இது ஒற்றுமைப்பட்டிருப்பினும் இதற்கும் அதற்கும் இரண்டு வேற்றுமைகள் உள்ளன :—பர்ம்யுடேஷனில் விஷயம் சொற்றொடர். ஈண்டு விஷயம் தனிச்சொல். ஈண்டு பின்னர்ச் சிறப்பித்துவரும் தன்மை தொடக்கம் முதல்

சொல்லாற் குறிக்கப்பட்டவற்றுள் ஒன்றாகும்; பர்ம்யூடேஷனில் பின்னர் வந்தது முன்னர்ச்சொல்லாற் குறிக்கப்பட்டவற்றுள் ஒன்றன்று.

அடிக்வேஷன் முன்னர்க் கூறப்பட்ட வேறுபாடுகள் வந்த பின்னரும் வரலாம்; அவை வாராதபோதும் வரலாம்.

அவை வாராதபோது வரும் அடிக்வேஷன் இருவகைப் படலாம் :—விஷயத்தில் சிறப்பிலதாகத் தோன்றிய அம்சம் பின்னர்ச் சிறப்புடைத்தாகத் தோன்றுமது ஒன்று; விஷயம் பலவாக இருக்க, அவற்றின் சிலவே சிறப்புடையனவாகத் தோன்றுவது மற்றொன்று. முன்னதைப் பொருட்குணச்சிறப்பு[1] என்றும், பின்னருள்ளதைப் பொருள்வ்யக்திச்சிறப்பு[2] என்றுங் கூறலாம்.

**பொருட்குணச்சிறப்பு :** ஸாமான்யீகரணம்[3], ப்ரசம்ஸீ-கரணம்[4], அப்ரசம்ஸீகரணம்[5] என மூவகைப்படும்.

**ஸாமான்யீகரணம் :**

**உ-ம்.** तैलम्[6] = எள்ளிலிருந்து எடுத்த எண்ணெய்.
= எந்த விதையிலிருந்தும் எடுக்கப்பட்ட நைப்புப் பொருள் (*Cf.* सर्षपतैलम्)

1. பொருட்குணச்சிறப்பு = Specialisation of meaning = अर्थगतगुणश्रेष्ठीकरणम्
2. பொருள்வ்யக்திச்சிறப்பு = Particularisation of meaning = अर्थव्यक्तिश्रेष्ठीकरणम्
3. सामान्यीकरणम् = Generalisation.
4. प्रशंसीकरणम् = Appreciative specialisation.
5. अप्रशंसीकरणम् = Depreciative specialisation.
6. தமிழில் எண்ணெய் என்ற சொல்லும் அவ்வாறே முதலில் எண்ணிலிருந்து எடுக்கப்பட்ட ஸ்நேஹப்பொருளைக் குறிக்க, தற்போது எல்லாஸ்நேஹப்பொருளையுங் குறிக்கின்றது. பழந்தமிழில் உள்ள எண் என்ற சொல் தற்போது எள் என வழங்குகின்றது. *Cf.* கடுகெண்ணெய் பண்டைய எண்ணெய் என்பதற்குப் பிரதியாக தற்போது நல்லெண்ணெய் என்ற சொல் வழங்கப்படுகின்றது.

गोष्ठः = மாடுகட்டுமிடம்.
= விலங்கு கட்டுமிடம் (*Cf.* अश्वगोष्ठः)
कुशलः = தர்ப்பை அறுக்கும் ஆற்றலுள்ளவன்.
= ஆற்றலுள்ளவன் (*Cf.* नीतिकुशलः)[1]
भक्ष् = கெட்டிப்பொருளைத் தின்னுதல்.
= தின்னுதல்.[2]
प्रवीणः = வீணை வாசிப்பதிற் சிறந்தோன்
= வித்தையிற் சிறந்தோன்
मधुरः[3] = நாவிற்கு இனிது.
= இந்திரியத்திற்கு இனிது[4].
पादः = மனிதன், விலங்கு இவற்றின் கால்.
= மலை, மரம் இவைபோன்றவற்றின் அடி.
= செய்யுளின் கால்பாகம்.
निष्णातः = நன்கு ஸ்நானஞ் செய்தவன்.
= வித்தை முதலியவற்றில் ஆழ்ந்த பயிற்சியுடையோன்[5].

1. यथा प्रवीणः, कुशलः, प्रतिलोमः, अनुलोम इत्यवयवार्थाभावः (कैयटे. under 1, 1, 9)
2. भक्ष्यं भोज्ये (पा. अ.)
भक्ष्यमभ्यवहार्यम् (वार्त्तिकम्)
अब्भक्षः, वायुभक्षः (महाभाष्ये)
3. मधुरमासां दर्शनम्
मधुरः स्वनः
मधुरो गन्धः
4. தமிழில் இனிது என்ற சொல்லும் அவ்வாறே. ஆங்கிலத்தில் **sweet** என்ற சொல்லும் அவ்வாறே.
*Cf.* மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் (திருக்குறள்)
யாழினிது என்ப. (*ibid.*)
5. निष्णातोऽपि हि वेदान्ते साधुत्वं नैति दुर्जनः (भामिनीविलासे)
லத்தீன் — ***Salarium*** = சிறுகூலியாய்க் கொடுக்கும் உப்பு.
= வேதனம்.
லத்தீன் — ***Pecunia*** = ஆடுமாடு - ஜர்மன் **vieh** - விலங்கு.
= பணம்.

ப்ரசம்ஸீகரணம் :

உ-ம். रविकिरणानुगृहीतानि कमलानि कमलानि என்றவிடத்து இரண்டாவது कमलानि என்பதன் பொருள் சிறந்த தாமரைகள் என்பது.

वाल्मीकिव्यासकालिदासाः खलु कवयः என்றவிடத்து कवयः என்பதன் பொருள் சிறந்த கவிகள் என்பது[1].

அப்ரசம்ஸீகரணம் : குணம் மிகுந்து இருப்பவரிடத்தும் குற்றங் காண்பது மனிதரின் இயற்கையாகலின் சில சொற்கள் பொருளின்கண் இகழ்ச்சியை அடைகின்றது. இதனை அப்ரசம்ஸீகரணம் என்னலாம்.

உ-ம். ग्राम्यः = கிராமத்தைச் சேர்ந்தது[2].
= கிராமத்தில் வசிப்பவன்[3].
= கிராமத்தில் வளர்க்கப்பட்டது
= நாகரீகமற்றது[5].
= ஆபாஸமானது[6–7]

1. இவ்வாறே ஆங்கிலத்திலும் உதாரணங்கள் உள்ளன :—
Lord — (hlāf-weard) = ரொட்டிதட்டுபவன்
= பிரபு.
Fond — முட்டாளான
— அன்புள்ள.
2. मनुस्मृतौ (6, 3 ; 7, 120)
3. ग्राम्यजनोऽल्पव्ययेन मिष्टमश्नाति
4. ग्राम्यकुक्कुटः (महाभाष्ये 1, 1, 1)
5. ग्राम्यभाषा (ग्राम्यस्य भाषा)
6. ग्राम्यभाषा (ग्राम्या च सा भाषा च)
7. ஆங்கிலத்தில் *vulgar* என்ற சொல்லும் இவ்வாறே.

खट्वारूढः = கட்டிலில் ஏறியவன்
= வேதாத்யயனஞ் செய்து கிருஹஸ்தன் ஆனவன்[1]
= கிருஹஸ்தன்
= வியபிசரிப்பவன்
= போக்கிலி
पुण्यजनः = புண்யஞ்செய்கிறவன்
= ராக்ஷஸன்
साधुः = மேலான குணமுள்ளவன்[2]
= கையாலாகாதவன் (பேச்சுமொழியில்)[3]
शुम्भन्ते = அலங்கரித்துக்கொள்கிறார்கள்
शुम्भः = முட்டாள் (பேச்சுமொழியில்)
देवानां प्रियः = தேவர்களுக்கு அன்பன்[5]
= முட்டாள்

1. अधीत्य स्नात्वा गुरुभिरनुज्ञातेन खट्वा आरोढव्या । य इदानीमतोऽन्यथ करोति स उच्यते, खट्वारूढोऽयं जाल्मः — नातिव्रतवान् (महाभाष्ये)
2. स साधुः श्रियमनघां प्रत्यर्पयिष्यति (रघु. 13, 56)
3. இவ்வாறே ஆங்கிலத்தில் உதாரணங்கள் உள்ளன :—

| | | |
|---|---|---|
| *Silly* — (A. saxon-*saelig*) | = | Happy, inoffensive. |
| Mod. Eng. | = | Foolish, imprudent. |
| *Churl* — Old Eng. | = | Peasant. |
| Mod. Eng. | = | Ill-bred or niggardly fellow. |
| *Knave* — A. sax. *cnafa* | = | Youth. |
| Mod. Eng. | = | Rogue. |
| *Cunning* — Old Eng. | = | Skill. |
| Mod. Eng. | = | Skill in deceit. |

தமிழிலும் அவ்வாறு உதாரணங்கள் உள :—

பழிச்சுதல் = புகழ்தல் நாற்றம் = நல்ல வாசனை
= வைதல் = தீயவாசனை

4. प्र ये शुम्भन्ते जनयो न (ऋ. वे. 1, 85, 1)
5. இங்கு देव சப்தத்திற்கே முட்டாள் என்பது பொருள் எனக் கையடர் கூறுகின்றார். देवशब्दः मूर्खवाची, मूर्खाणां च प्रिया मूर्खा एव भवन्ति (कैयट under 2-4-56)

பொருள்வ்யக்திச்சிறப்பு :

| | | | |
|---|---|---|---|
| உ-ம். | वीरः | = | மனிதன்[1] |
| | | = | மகன்[2] |
| | | = | ராஜகுமாரன்[3] |
| | | = | வீரன்[4] |
| | पङ्क्तिः | = | ஐந்து கொண்ட வரிசை[5] |
| | | = | வரிசை |
| | | = | ஐந்து பாதம் கொண்ட சந்தஸ் |
| | | = | பத்து[6] |
| | निर्वाणः | = | காற்றில்லாத இடம்[7] |
| | | = | அணைதல் |
| | | = | பிறப்பின்மை[8] |
| | भार्या | = | காப்பாற்றப்படும் பெண் |
| | | = | பணிவி |
| | पङ्कजः | = | மண்ணிற் பிறந்தது |
| | | = | தாமரை |

1. स यो वीरो न रिष्यति (ऋ. वे. 1, 18, 41)
   Latin *vir* = man ; A saxon *wer-wulf*.
2. यतो वीरः कर्मण्यः ......जायते (ऋ. वे. 3, 4, 9)
3. एषो हि वीरो बहुभुक् सदैव (म. भा. 1, 186, 7
4. कश्च वीर्यवान् (रामा. बा. 1, 2) *Cf.* Eng. *virility.*
5. अथर्ववेदे
6. *Cf.* पङ्क्तिरथः, पङ्क्तिग्रीवः
7. निर्वाणोऽवाते (पा. अ. 8, 2, 50)
8. बौद्धमते

भिक्षुः = ஸந்நியாஸி
= பௌத்தஸந்நியாஸி[1]

வேறுவகைப்பொருள்வேறுபாட்டின் பின்னர் அடிக்வேஷன் வந்ததற்கு உதாரணம் :

உ-ம். वेणुः = மூங்கில்
= இசைக்கருவியாக வழங்கும் மூங்கில் (ஸப்ஸ்டிட்யூஷன்)
= மூங்கிலால் செய்யப்பட்ட ஒருவகை இசைக்கருவி.
= ஒருவகை இசைக்கருவி (ஸப்ஸ்டிட்யூஷன்)

1. இவ்வாறு பிறமொழிகளிலும் உதாரணங்கள் உள.

| | | |
|---|---|---|
| Latin | — *Felis* | = பெண்விலங்கு<br>= பெண்பூனை |
| Greek | — *Alogon* | = பேச்சற்றது<br>= குதிரை |
| German | — *Muth* (Mod.) | = ஆன்மா, புத்தி<br>= தைரியம் |
| English | — Deer | = வேட்டைக்குரிய விலங்கு<br>= மான் |
| | — Fowl | = பறவை. *Cf.* German *vogel* = bird<br>= முட்டையிடும் பறவை |
| | — Hound | = நாய்<br>= வேட்டைநாய் |

दण्डः = கோல்
= அரசுக்குறியாய் வழங்கும் கோல்.
(ஸப்ஸ்டிட்யூஷன்)
= கோலால் வழங்கப்படும் தண்டனை
(அடிக்வேஷன்)
= தண்டனை (ஸப்ஸ்டிட்யூஷன்)[1]

பொருளை மறைத்துக் கூறுதற்கு வழங்கப்படும் பிரயோகங்கள் ஒவ்வொரு மொழியிலும் உண்டு.

உதாரணமாக ந்யாயசாஸ்திரம் எனக் கூறுது சிவாநந்தலஹரியில்,— घटो वा मृत्पिण्डोऽप्यणुरपि च धूमोऽग्निरचलः पटो वा तन्तुर्वा என வழங்கப்பட்டது.

தமிழ்: நெய் = விதையிலிருந்து எடுக்கப்படும் நெய்ப்புப் பொருள்.
= உருக்கிய வெண்ணெய்
பொன் = உலோகம்
= தங்கம்.
படர்தல் = ஓரிடமிருந்து வேற்றிடஞ் செல்லுதல்.
(மக்கள், விலங்கு, செடி இவற்றிற்குப் பொது)
சேட்புலம் படரின்... (புறநா. 15)
இவ்வழக்கு தற்போது செடிக்கே வழங்கப்படுகிறது.

1. ***Fast*** என்ற சொல் ***faste*** என்ற சொல்லிலிருந்து அநாலஜியால் வேகமான என்ற பொருளைக் கொண்டது.
Fast trot (analogy)
Fast fight ; fast thinking (adequation)
Swedish word—*apelsinta lare* (orange-speaker)—a word coined by the journalists in the Swedish Diet to denote unimportant speakers who need not be reported and whose speeches gave the reporters an opportunity to put down their pencils and refresh themselves with an orange (nomination). Then it was used to denote *unimportant speaker* (without humorous intention).

## பொருள்வ்யக்திச்சிறப்பு

வ்யாகரணசாஸ்திரம் எனக் கூறுது பஜகோவிந்தத்தில் डुकृञ् करणे எனக் கூறப்பட்டது.

பத்தாவது நாள் என்பதை अवतारदिनम् எனக் கூறுவது உண்டு[1].

உலகவழக்கில் பிரமசாரி எனக் கூறுதற்கு आमायन्तुः எனக் கூறுவது உண்டு[2].

அர்த்தநாரீச்வரர் என்பதைக் காளிதாஸமஹாகவி नील-लोहितः என்ற சொல்லாற் குறித்ததைப் பின்னருள்ள செய்யுளிற் காண்க:

> ममापि च क्षपयतु नीललोहितः
> पुनर्भवं परिगतशक्तिरात्मभूः (शाकुन्तले.)

வடமொழிவரலாறு முற்றும்.



ஆங்கிலத்திலும், 'அடங்காத மனைவியைத் தடியால் அடிக்காவிடின் துன்பம் அடையவேண்டும்' என்ற பொருளில்

He that fetches a wife from Shrewsbury (marries shrew) must carry her to Straffordshire (use the stick) or else live in Cumberland (in sorrow).

1. விஷ்ணு பத்து அவதாரம் எடுத்ததால் பத்து என்ற பொருளில் अवतार என்பது வழங்கப்படுகின்றது. இது ஒருவர் இறந்த பத்தாவது நாளைக் குறிக்கவே வழங்கப்படும்.

2. இதற்குக் காரணம் தைத்திரீயோபநிஷத்தில் आमायन्तु ब्रह्म-चारिणः स्वाहा என்ற வாக்கியத்தில் आमायन्तु என்பதன் பின்னர் ब्रह्मचारिणः என வந்ததே ஆகும்.

# வடமொழி, ப்ராகிருதமொழி, வடமாகாணமொழி இவற்றிலுள்ள சிறப்புச்சொல்லகராதி

[ எண் பக்கத்தைக் குறிக்கும் ]

## अ

आ

इ





S.L.—45

ऋ



ए



ऐ, ओ, औ

क

## के, कै, को, कौ



## ख, खा, ग्



## ग

## गा



## गि, गी, गु



## गृ, गो, गौ

ज्



ज

जा



जि



जी

## जु, जे



## जो, झ, ज्ञा, डु



## ण्, ण, णा, णि, णे, णो



## त्

## त



## ता

## ति



## ती



## तु

## तू, तृ



## ते, तै, तो

द

दा



दि

## दी, दु



## दू, दृ



## दे

## ना



## नि, नी, नू, नृ, ने, नै

प्



प

## पा



## पि



## पी, पु

## पू



## पृ



## पे, पौ



## फ, फु, ब्र, ब

## बा, बि



## बु, बृ, बो



## भ्र, भ

म्, मं

## मा



## मि

## मी



## मु



## मू, मृ, मे, मै

## य



## या



## यु

## यू, ये, यो, यौ



## र



## रा

## रि



## रु, रू, रे, रो



## ल



## ला, लि, ले, लो, लौ



## व्, व

## वा

## वि





S.L.—49

## वी, वृ, वे, वै, वो



## श्र, श

## शा, शि, शी, शु



## शू, शृ, शै, शो, शौ



## ष, षे, षो



## स्

## सा



## सि

## सी, सु



## सू



## सृ, से, सै, सो, सौ



## ह

## हा, हि, हु, हृ, हे, है, हो

# தமிழ்மொழிச் சிறப்புச்சொல்லகராதி

## அ



## ஆ

## இ



## உ, ஊ



## எ



## ஏ, ஐ

ஒ, ஓ



க், க



கா, கி, கு



கெ, கே, கொ, கோ

## ந், ந, நா, நி, நூ, நெ, நே



## ப், ப, பா, பி, பு, பூ, பெ, பே, போ, பௌ

ம், ம, மி, மு, மூ, மெ, மொ



ய, யா, யோ



ரீ, ரு, ரூ, ரோ

**ல், ல, லி, லு, லோ**



**வ், வ, வா, வி, வீ, வெ, வே**



**ஜி, ஜு, ஷா, ஸ, ஸ, ஸ், ஹ, ஹா**

## ஆங்கிலச் சிறப்புச்சொல்லகராதி

### A



### B



### C

**D**



**E**



**F**



**G**

**N**



**O**



**P**

## R



## S

## T



## U, V



## W, Y, Z





## BOOKS OF THE AUTHOR

1. Lectures on Patañjali Mahābhāṣya Vol. i (*āhnikas* 1 to 3)
2. Do. Vol. ii (*āhnikas* 4 to 6) to be sent to press.
3. History of Sanskrit Literature in Tamil.
4. History of Sanskrit Language in Tamil.
5. *Toṉiviḷakkū* (Tamil rendering of Dhvanyālōka)
6. A study of Kālidāsa's Kumārasambhava Canto i.
7. Comparative Grammar of the Tamil Language.
8. *Tolkāppiyam-Eḻuttatikāram*-with Tamil commentary.
9. Do. with English commentary.
10. *Tolkāppiyam-Collatikārakkuṟippū.*
11. *Tolkāppiyam-Collatikāram*-with English commentary.
12. *Tolkāppiyam-Poruḷ-atikāram-Akattiṇaiiyal* and *Puṟattiṇaiiyal*-with English commentary.
13. Do. *Kaḷviyal*, *Kaṟpiyal* and *Poruḷiyal* —in press.
14. Do. *Meyppāṭṭiyal* etc. —to be sent to press.
15. *Tirukkuṟaḷ-Aṟattuppāl* with *Bālar-urai.*
16. *Tirukkuṟaḷ-Poruṭpāl* and *Kāmattuppāl* with *Bālar-urai.*
17. *Tamiḻmoḻinūl*
18. Historical Tamil Reader.
19. An Enquiry into the Relationship of Sanskrit and Tamil.
20. History of Grammatical Theories in Tamil and their relation to Grammatical Literature in Sanskrit.
21. Sangam Classics and Vedic Religion in Tamil. —to be sent to press.

---

Nos. 1, 3, 4, 11 and 18 are Annamalai University Publications.

No. 19 is Travancore University Publication.

Nos. 9, 12, 13 and 20 — Published in the Journal of Oriental Research.

Nos. 5, 8, 15 and 17 — Published under the patronage of the Maṭhādhipatis of Tiruppanandal Mutt.

No. 16 — Published by the Kāmakōṭi Publishing House, Madras.